بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

- இயற்கையின் அதிசயங்கள்
- க்ரைம்
- தகவல் பரிமாற்றம்
- தாவரங்களின் உலகம்
- பூச்சிகளின் உலகம்

## மாயப் புத்தகம்



கிழக்கில் சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தது.
ஈரான். பழமையான சின்ன வீட்டின் சிறிய புத்தக ஸ்டான்டில் கனத்த சிகப்பு அட்டை போட்ட புத்தகம்.
கம்பளி கோர்ட் போட்ட வயோதிகர் எடுத்துப் படிக்கிறார் .
பக்கத்தில் உள்ள அவரது 11 வயதுப் பேத்தியின் காதில் அதன் வார்த்தைகள் விழுகிறது .
பேத்தி கண்ணை இலேசகாக திறந்து பார்த்தப் போது
ஆங்காங்க ஒளியால் படைக்கப்பட்ட சின்ன சின்ன பட்டாம் பூச்சிகள் அவரைச் சுற்றி சுற்றி பறந்து கொண்டிருந்தன.
அதில் கொஞ்சம் பெரிய பட்டாம் பூச்சி அவரது தோள்பட்டையில் அமர்ந்து சிறகை விரித்து மடக்குகிறது .
அதை அந்த வயோதிகர் பார்த்த மாதிரியே தெரியவில்லை.
பேத்தி தன் தாத்தாவின் வாய் அசைவை கூர்ந்து கவனிக்கிறாள். அசைவிலிருந்து வார்த்தைகள் பூக்களாக துள்ளி விழுகிறது. இதையும் தாத்தா பார்த்த மாதிரி தெரியவில்லை .
புத்தகத்தின் ஒரே ஒரு பக்கத்தை அதிக நேரமாக படித்துக் கொண்டிருக்கிறார். நிச்சயமாக அவர் புத்தகத்தின் வார்த்தைகளை இப்போது படிக்கவில்லை.ஆனால் அவரது மனம் எங்கேயோ எதையோ சிந்திக்கிறது.
பனிப் புகை விரிப்பில் சின்ன சின்ன பொம்மையளவில் அழகான அழகான இளம் பெண்கள் கூடியாடுவதும், தங்களது இலேசான இளஞ்சிவப்பான உடலை எளிதாக தூக்கிக் கொண்டு பறப்பதும் பேத்தி காண்கிறாள் .
தனக்குக் கூட அழகான பட்டுத்தி தலையில் கிரீடம் கூட வைக்கப்படுகிறது . தன்னை யாரோ அலங்கரிக்கிறார்கள் என்பது மட்டும் தெரிகிறது.
இது கனவாக இல்லை என்பதை உறுதிப்படுத்தி, கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்க்கிறாள். பறந்து வந்த சின்னப் பெண் ஒருத்தி தன் மடக்கிய கை மீது அமர்ந்திருக்கிறாள் எங்கே கை அசைத்தால் அவள் பறந்து விடுவாளோ என்று அசைக்காமல் பார்த்துக் கொண்டே இருக்கிறாள் பேத்தி .
தாத்தா அந்த சிவப்பு புத்தகத்தை மூடி , புத்தக ஸ்டான்டில் வைத்ததும் எல்லாம் மறைந்து போகிறது.
பேத்தி அந்த புத்தகத்தை எடுத்துப் படிக்க ஆசைப்படுகிறாள். அதன் பக்கங்களை புரட்டுகிறாள். அதில் உள்ள வார்த்தைகளைப் படிக்கிறாள் . சுற்றுமுற்றும் பார்க்கிறாள்.பட்டாம் பூச்சியோ , பொம்மையளவு இளம் பெண்ணோ எதுவும் பறந்து வரவில்லை .
மாறாக, மலைகள் பெயர்க்கப்படுகிறது.கடல்கள் கொதித்து ஆவியாகிறது . சினை ஒட்டகமொன்று கட்டிப் போடாமல் தறிக்கெட்டு ஓடி வருகிறது. வானம் கொஞ்சம் கொஞ்சமாக மடித்து வைக்கப்படுகிறது .
இவள் படித்துக் கொண்டிருந்த சிவப்பு புத்தகத்தின் வார்த்தைகளில் உள்ள ஒவ்வொரு எழுத்துக்களும் வானை நோக்கி பறக்கிறது . அந்த புத்தகம் சொல் ஏதும் இல்லாத வெற்றுப் புத்தகமாகி விடுகிறது !
பேத்தி சாயம் போன அந்த புத்தகத்தை ஸ்டான்டில் மெதுவாக வைக்கிறாள்.
இப்பொழுது சூரியன் மேற்கில் உதயமாகிக் கொண்டிருக்கிறது !

ரஹ்மத் ராஜகுமாரன் .

ஒரு கட்டுரை எழுத எவ்வளவு நேரம் ஆகும் ?





நேற்று இரவு மேலப்பாளைய அரசன் ஸ்வீட்டில் கணவர் - மனைவி சகிதமாக வந்த தம்பதியர் (என் நட்பு வட்டத்தில் உள்ளவர்கள்தான் பெயரை குறிப்பிட வேண்டாம் என்ற வேண்டுகோள். ஆனால் புகைப்படம் எடுத்துக் கொண்டார்கள் )

" தாவரங்களின் உலகம், பூச்சிகளின் உலகம், அடுத்து வேறென்ன உலகங்கள் பற்றி எழுதுவீர்கள்? " மனைவி கேட்டார்.

" நீங்களே சொல்லுங்களேன் " என்றேன்.

" பெண்களின் உலகம் ' எழுத முடியுமா? " என்றார் மனைவி. கணவரின் புன்முறுவலுடன், அதில் 5 % வெறுப்பு ஒட்டியிருந்ததை கவனிக்க முடிந்தது .

" அதற்கென்ன இன்ஷா அல்லாஹ் எழுதுகிறேன் - அதற்கு முன் பறவைகளின் உலகம், மிருகங்களின் உலகம், ஊர்வன , நீந்துபவன உலகங்கள் என்று பெரிய லிஸ்ட் இருக்கு " என்றேன் .

" ர.ரா உங்க இஷ்டத்திற்கு எழுதுங்கள். இருந்தாலும் கட்டுரைகள் எழுதுவது எப்படி என்று ஒரு தொடர் பதிவு ஆரம்பியுங்களேன் " என்றார் கணவர்

" ஒரு கட்டுரை எழுத எவ்வளவு நேரம் ஆகும்? என்றார் மனைவி .

" இரண்டரை மணி நேரம் அதுவும் நடுநிசி இரவு " என்றேன்.

" எப்படி முடியும்? " என்றார்கள்

" பகல்ல உங்க வீட்டு டிவியை அடிக்கடி சுவிட்ச் ஆப்பில் வையுங்கள். படிக்கும் புத்தகங்களில் முக்கிய குறிப்புகளை கோடிட்டு வையுங்கள் . நெட்டில் அது பற்றிய விபரங்களை வலை வீசுங்கள்.குர்ஆன் , ஹதீஸ் பக்கம் போய் இது பற்றி விபரங்களை சேகரியுங்கள் பின் அத்தனை குறிப்புகளையும் வரிசைப்படுத்துங்கள். பின் எழுத ஆரம்பியுங்கள் .எழுதினதை பல தடவைப் படித்துப் படித்து சிறு திருத்தம், வியப்பான சேதிகள் இருக்கிறதா ? இருக்கிறது. அப்போ ok . இப்போ நீங்கதான் ர.ரா " என்றேன் .

" வாவ் " என்றார் மனைவி. அந்த 'வாவ்' வில் அவள் படிப்பின் நாகரீகம் தெரிந்தது.

" இதற்கு பல நாட்களாகுமே ஒரு கட்டுரை எழுத " என்றார் கணவர்.

" பழக்கமாகி விட்டால், அது வழக்கமாகி விடும். இஷ்டப்பட்டு செய்யும்போது அது கஷ்டமாக தெரியாது" என்றேன்.

டிவி தான் இலக்கியத்தின் முதல் எதிரி . சிந்தனைக்கு மிகப் பெரும் தடைக்கல்

பெண்கள் அதிகமாக டிவி சீரியலில் பார்ப்பதாக ஓர் ஆய்வு சொல்கிறது. இந்த தமிழ்ப் பெண் எழுத்தாளர்கள் இலக்கியத்திற்கு அதிகம் முக்கியத்துவம் கொடுப்பதாக இன்னொரு தகவல் ...

உமா மகேஸ்வரி ,எம். பகீரதி, கிருத்திகா , குட்டி ரேவதி சந்திரவதனா,சந்திரா இரவீந்திரன், சல்மா,சித்தி ஜூனைதா பேகம் ,சுகிர்தராணி, சு. தமிழ்ச்செல்வி, சே. கல்பனா,தமிழ்நதி

தி. பரமேசுவரி, நளாயினி தாமரைச்செல்வன், பாமா,

தாட்சாயணி, மதுமிதா, ரஜினி பெத்துராஜா,

லீனா மணிமேகலை, வேதா இலங்காதிலகம்,ஜெயந்தி சங்கர்,

ஈழவாணி, மித்ரா அழகுவேல்.

நாகூரைச் சேர்ந்த சித்தி ஜூனைதா பேகம் என்ற பெண்மணிதான் முதல் தமிழ் முஸ்லிம் பெண் எழுத்தாளர். இவர் எழுதிய முதல் சிறுகதை**, 1929ஆம்** ஆண்டு தாருல் இஸ்லாம் இதழில் வெளிவந்தது.. அவர்கள் காலத்தில் வானொலி பெட்டிக் கூட தெருவுக்கு ஒன்றுதான் இருந்த காலம்

ரஹ்மத் ராஜகுமாரன் .

+919486909903 /// +919443446903

**இயற்கையின் அதிசயங்கள் -1 (கடல்)**

## THE GLOBAL CONVEYOR BELT

The global conveyor belt is a system of ocean currents that transport water around the world. While wind primarily propels surface currents, deep currents are driven by differences in water densities in a process called thermohaline circulation. Density depends on both the temperature (thermo) and salinity (haline) of the water. Along this conveyor belt, heat and nutrients are moved around the world in a leisurely 1000-year cycle.

As it transports heat, the global conveyor belt keeps Earth's climate stable. However, scientists have recently noticed a slowdown in ocean circulation. With climate change and rising temperatures, the process may slow down even more and bring extreme temperatures to different regions around the world.




OCEAN WATER FLOW




1 At the poles, cold ocean water becomes saltier and denser from evaporation and ice formation. The cold, salty, dense water sinks and slowly spreads.

2 Because there are no continents to block the water, the current can flow freely around Antarctica. Some water moves into the Indian Ocean while another current travels to the Pacific Ocean.

3 Deep water surfaces in a process called upwelling.

4 The warm surface current flows north toward Greenland, completing the cycle.

NATIONAL GEOGRAPHIC

தொடங்குமிடம் எது? முடியுமிடம் எது? என்று எதுவுமற்று இந்த உயிர்க்கோளத்தை சுற்றி வியாபித்திருக்கும் நீர்க்கோளம்தான் கடல். இன்றைய காலகட்டத்தில் எதனுடைய தோற்றத்தையும் அறிவியலால் அறியும் நாம், அதன் துணைகொண்டே கடல் தோன்றியதையும் அறிகிறோம்.

சுமார் 380 கோடி ஆண்டுகளுக்கு முன்பு வரை இந்த உலகத்தில் வாயுக்களே நிறைந்திருந்தன. பூமியின் வெப்பநிலை 212 டிகிரி பாரன்ஹீட்டுக்கு வந்தபோது வாயுக்கள் தண்ணீராக மாறி பூமியின் பள்ளங்களில் நிறைந்து கொண்டன. இதுவே கடல் தோன்றிய முறை.

ஆர்ப்பரிக்கும் கடல் அலையை பார்ப்பது ஒருவித பரவசம் தான். காலை மற்றும் மாலை நேரங்களில் கடற்கரையில் கடலின் அழகை ரசித்தபடி நடந்து செல்வது மகிழ்ச்சியானது. இந்நிலையில் கடலின் அருகில் வசிப்பது, மனநிலைக்கு ஆரோக்கியமானது என ஆய்வில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இங்கிலாந்தின் எக்ஸ்டர் பல்கலைக்கழகம் நடத்திய ஆய்வில், கடலோரத்தில் வசிப்பவர்களுக்கு, பதட்டம் மற்றும் மன அழுத்தம் போன்ற மனநிலை பாதிப்புகள் வருவதில்லை. கடற்கரை என்பது உளவியலுக்கு ஒரு பாதுகாப்பான மண்டலம் போல விளங்குகிறது என தெரிவிக்கப்பட்டுள்ளது.

நீரின்றி அமையாது உலகு எத்தனை சத்தியமான வார்த்தைகள் !

இந்தப் புவிப் பரப்பின் மொத்தப் பகுதியில் 71% தண்ணீர்.இதில் 97.2 %கடல். அதாவது புவிப் பரப்பில் 70% கடல். உலக நாடுகளின் மொத்த கடற்கரையில் நீளத்தைக் கூட்டினால், மொத்தம் 3,12 ,000 மைல்கள்.

உலகின் பெரிய கடல் பசிபிக் பெருங்கடலை எடுத்துக்கொண்டால், உலகின் மொத்த பரப்பில் மூன்றில் ஒரு பகுதியைக் கொண்டது (16.92 கோடி சதுர கிலோமீட்டர்) பசிபிக் கடலில் உள்ள தீவுகளின் எண்ணிக்கை மட்டும் 25,000.

உலகத்திலேயே சின்னப் பெருங்கடலான ஆர்டிக் பெருங்கடலை எடுத்துக்கொண்டால், புவியின் கடல்நீரில் வெறும் 1% மட்டுமே அதில் இருக்கிறது. ஆனாலும் உலகில் உள்ள ஆறுகள், நன்னீர் ஏரிகள் அனைத்திலும் உள்ள நீரின் அளவை விட 25 மடங்கு அதிகம்.

தாவரங்களுக்கு அப்பாற்பட்டு, மனித இனத்துக்கு உணவையும், புரதத்தையும் வாரித்தருவது கடல்தான். ஒவ்வோர் ஆண்டும் 750 லட்சம் டன்கள் வரையிலான மீன்களை, மனித இனத்திற்குக் கடல் தருகிறது. உலகம் முழுக்க வளர்க்கப்படும் ஆடு, மாடு, பன்றி, கோழி, வாத்து என அத்தனையும் கூட்டினாலும் மீன்வளத்தின் பக்கத்தில் கூட அதன் கூட்டுத்தொகை வராது.

நமது சங்ககாலங்களில் இருந்தே கடல் என்பது முக்கியமான ஒன்றாக இருந்துவருகிறது. கடலில் இருந்து கிடைக்கும் முத்தும் பவளமும், ஆடம்பரமான பொருள்களென்று மன்னரின் சிம்மாசனத்தையும் அரண்மனை கருவூலத்தையும் அலங்கரித்துள்ளன. கடற்படை வைத்திருந்ததையே மிகப்பெரிய பெருமையாகவும், பாதுகாப்பாகவும் உணர்ந்து வைத்துள்ளனர் நமது முன்னோர்கள். இதே கடல்தான் பலவகைகளில் மனிதனுக்கும் இந்த உலகிற்கும் உதவி வருகிறது. மீனவர்களுக்கு வாழ்வாதாரமாகவும், வணிகத்தின் மூலம் பல்வேறு தொழில்புரிபவர்களுக்கு சரக்குகளை கொண்டு வரும் போக்குவரத்திற்கும், பொழுதுபோக்கு மற்றும் சுற்றுலா எனவும் இந்தக்கடல் பலருக்கும் பலவிதங்களில் உதவிகரமாய் இருக்கிறது.

وَهُوَ الَّذِىْ سَخَّرَ الْبَحْرَ لِتَاْكُلُوْا مِنْهُ لَحْمًا طَرِيًّا وَّتَسْتَخْرِجُوْا مِنْهُ حِلْيَةً تَلْبَسُوْنَهَا وَتَرَى الْفُلْكَ مَوَاخِرَ فِيْهِ وَلِتَبْتَغُوْا مِنْ فَضْلِهٖ وَلَعَلَّكُمْ تَشْكُرُوْنَ

அவன்தான் நீங்கள் மீன்களைப் (பிடித்துச் சமைத்துப்) புசிக்கவும், நீங்கள் ஆபரணமாக அணியக்கூடிய பொருள்களை எடுத்துக்கொள்ளவும் கடலை (உங்களுக்கு) வசதியாக்கித் தந்தான். (பல இடங்களுக்கும் சென்று வர்த்தகத்தின் மூலம்) இறைவனின் அருளை நீங்கள் தேடிக்கொள்ளும் பொருட்டு (கடலில் பயணம் செய்யும்பொழுது) கப்பல் கடலைப் பிளந்துகொண்டு செல்வதை நீங்கள் காண்கிறீர்கள். (இதற்காக இறைவனுக்கு) நீங்கள் நன்றி செலுத்திக் கொண்டிருப்பீர்களாக! (அல்குர்ஆன்: 16:14)

இந்த பூமியின் இயற்கைச் சமநிலையிலும், பருவநிலை மாற்றத்திலும் கடலின் பங்கு இன்றியமையாதது. கடலின் அருகில் வாழ்பவராயினும், கடலை விட்டு நீண்ட தூரத்தில் வாழ்பவராயினும் தான் சுவாசிக்கும் மூச்சிலும், அனைத்து இடங்களிலும் பெய்கின்ற மழையிலும் கடலின் பங்கு இன்றியமையாதது. கார்பனை உள்ளிழுத்து, நாம் சுவாசிக்கும் ஆக்சிஜனை வெளியிடுவதில் கடலும் முக்கிய பங்காற்றுகிறது.

நிலத்தில இருக்கிற உலகம்தான் மனிதனின் கண்ணுக்கு தெரிகிறது. நிலத்திலுள்ள உலகத்தைப் போலப் பல உலகம் கடலுக்குள் இருக்கிறது என்கிறார் மீனவன் நண்பர்கள். உண்மைதான் கடலில் இருக்கும் பெருமலைகளின் நீளத்தை கூட்டினாலே ஐயே 40 ஆயிரம் மைல்களை தாண்டும் .

ஹவாயில் உள்ள மௌனா கீ மலையைக் கடல் மட்டத்தில் நின்று பார்த்தால் 13 ஆயிரத்து 680 அடி உயரத்துக்கு தெரியும். கடலடித் தரையிலிருந்து அதன் உயரமோ 33 ஆயிரத்து 474 அடி

உலகிலுள்ள எரிமலையின் வெடிப்புகளில் 90% கடலில்தான் நடக்கின்றன. தெற்கு பசிபிக் கடலில் மட்டும் சுமார் 1,133 எரிமலைகள் நெருக்கமாக அதுவும் உயிர்ப்புடன் இருக்கின்றன.

கடலுக்குள் ஒவ்வொரு கணமும் எண்ணற்ற மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. ஒரு புறம் பசிபிக்கடல் சுருங்கிக் கொண்டிருக்கிறது. மறுபுறம் அட்லாண்டிக் கடல் விரிந்து கொண்டே இருக்கிறது.

10 ஆயிரம் ஆண்டுக்கு முன் கடல் நீர் மட்டம் இப்போது இருக்கும் நீர் மட்டத்தை விட 330 அடி கீழே இருந்ததாக விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். கடந்த நூறு ஆண்டுகளில் மட்டும் கடல் நீர் மட்டம் 10 முதல் 25 செ.மீ வரை உயர்ந்திருக்கிறது. இது மேலும் அதிகரிக்கும் என்கிறார்கள்.

உலகின் இரு துருவங்கள் உட்பட எல்லாப் பகுதிகளிலும் பனி உருகினால் கடல் பொங்கி நீர் மட்டும் இப்போது இருப்பதை விட மேலும் 200 அடி உயரும் என்கிறார்கள் விஞ்ஞானிகள்.

பரந்து விரிந்த கடல்தான் மனிதவாழ்விற்கு பொக்கிஷமாக இருந்து வருகிறது. நாமும் நமது தலைமுறையினரும் நன்றாக வாழ நாம் பாதுகாக்க வேண்டிய இயற்கை வளத்தில் கடல் முக்கிய இடத்தில் இருக்கிறது.

**இயற்கையின் அதிசயங்கள் 2**




வூலி மமூத் **(Woolly Mammoth)** என்கிற இன்றைய யானைகளுடன் தொடர்புடைய விலங்கினம், அதன் வாழ்நாளில் எவ்வளவு தூரம் பயணித்தது என்பதை அறிய, அவுயிரினத்தின் மிகப் பெரிய தந்தத்திற்குள் இருக்கும் வேதியியலை விஞ்ஞானிகள் பகுப்பாய்வு செய்துள்ளனர்.

பனி யுகத்தில் வாழ்ந்த வூலி மம்மூத் விலங்கு பூமியை சுமார் இரு முறை சுற்றி வருவதற்கு சமமான தொலைவு பயணித்ததாக ஆராய்ச்சி காட்டுகிறது. அதாவது 70 ஆயிரம் கி.மீ நடந்த பனி யானைகளின் ராட்சத தந்தங்களின் ஆச்சர்ய வரலாறு பதிந்துள்ளது .

ப்ளீஸ்டோசீன் **(Pleistocene)** எனப்படும் வரலாற்றுக்கு முந்தைய குளிர் காலத்தில் வடக்கு அட்ச ரேகைகளில், இந்த வூலி மமூத்கள் வாழ்ந்து வந்தன.

இந்த பழங்கால உயிரினங்கள் எவ்வளவு நடமாடின என்பதை இந்த நவீன கால ஆராய்ச்சி வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது.

"இது பருவகாலத்துக்கு இடம்பெயர்ந்தவைகளா என தெளிவாகத் தெரியவில்லை" என்கிறார் அலாஸ்கா ஃபேர்பேங்க்ஸ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த இந்த ஆய்வின் இணை முன்னணி எழுத்தாளர் முனைவர் மேத்திவ் வூலர்.

"அலாஸ்காவின் பல பகுதிகளை அதன் வாழ்நாளில் சில சமயங்களில் பார்வையிட்டுள்ளது அந்த மிகப் பெரிய உயிரினம். அலாஸ்கா என்கிற பகுதி எத்தனை பெரியது என நீங்கள் நினைக்கும் போது மிக ஆச்சரியமாக இருக்கிறது." என்கிறார் அவர்.

வூலி மமூத்தின் தந்தங்கள் மர வளையங்களைப் போல இருந்தன, மர வளையங்கள் அந்தந்த காலகட்டத்தின் தட்பவெப்ப சூழ்நிலையை பதிந்து வைத்திருப்பதைப் போல இந்த மமூத் யானைகளின் தந்தங்களின் அவைகளின் வாழ்க்கை வரலாறு பற்றிய தகவல்களைப் பதிவு செய்துள்ளன.

வூலி மமூத்கள் உயிருடன் இருந்தபோது சில ரசாயனக் கூறுகள் அதன் தந்தத்தில் சுரந்தன. அது அவ்விலங்குகள் எங்கு சென்றன என்பதை வரைபடத்தில் சுட்டிக் காட்டுகிறது.

இந்த இரண்டு விஷயங்களையும் ஒன்றோடொன்று இணைப்பதன் மூலம், ஆராய்ச்சியாளர்கள் 17 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அலாஸ்கா பகுதியில் வாழ்ந்த ஒரு ஆண் வூலி மம்மூத்தின் பயண வரலாற்றை ஆய்வு செய்தனர். அதன் எச்சங்கள் வட மாநிலத்தின் ப்ரூக்ஸ் மலைகளின் அருகே காணப்பட்டன.

"பிறந்த நாள் முதல் இறக்கும் நாள் வரை, அந்த உயிரினங்களிடம் ஒரு நாட்குறிப்பு உள்ளது, அது அதன் தந்தங்களில் எழுதப்பட்டுள்ளது" என அலாஸ்கா பல்கலைக்கழக அருங்காட்சியகத்தின் இயக்குனர் மற்றும் இவ்வாய்வின் இணை ஆசிரியர் முனைவர் பேட் ட்ரூக்கன் மில்லர் கூறினார். மனிதனின்

செயலைப் பற்றிய விவரிவான தினசரிக் குறிப்பைத்தான் அவனுடைய கழுத்தில் மாட்டியிருக்கிறோம் என்று குர்ஆனில் குறிப்பிடுகிறான்.

وَكُلَّ اِنْسَانٍ اَلْزَمْنٰهُ طٰٓٮِٕرَهٗ فِىْ عُنُقِهٖ وَنُخْرِجُ لَهٗ يَوْمَ الْقِيٰمَةِ كِتٰبًا يَّلْقٰٮهُ مَنْشُوْرًا

ஒவ்வொரு மனிதனின் செயலைப் பற்றிய (விரிவான தினசரிக் குறிப்பை அவனுடைய கழுத்தில் மாட்டியிருக்கிறோம். மறுமை நாளில் அதனை அவனுக்கு ஒரு புத்தகமாக எடுத்துக் கொடுப்போம். அவன் (அதனை) விரித்துப் பார்ப்பான். (அல்குர்ஆன் : 17:13)

ஆனால் இங்கு மமூத் யானைகளின் தந்தங்களில் அதன் வாழ்நாள் குறிப்பு எழுதப்பட்டு அதை விஞ்ஞானிகளால் படிக்க முடிகிறது என்பது வியப்பான விஷயமல்லவா ?

"பொதுவாக இயற்கை அன்னை எந்த ஒரு உயிரினத்துக்கும் வாழ்க்கையின் இத்தகைய வசதியான மற்றும் வாழ்நாள் முழுவதும் பதிவு செய்யும் வசதியை வழங்குவதில்லை." ஆனால் வூலி மமூத் உயிரினங்கள் தங்கள் தந்தங்களில் வாழ்நாள் முழுவதும் புதிய அடுக்குகளை சீராகச் சேர்த்தன. தந்தங்கள் நீள வாரியாகப் பிரிக்கப்பட்டபோது, இந்த வளர்ச்சிப் பட்டைகள் அடுக்கப்பட்ட ஐஸ்கிரீம் கூம்புகள் போல இருந்தன. அது அந்த உயிரினத்தின் இருப்புக்கான காலவரிசைப் பதிவை வழங்குகிறது என்கிறது விஞ்ஞானம் .

ஆனால் இறைவன் தன் படைப்பினங்களில் எந்த ஒரு மிகச் சிறிய படைப்பினத்தைப் பற்றிய செய்தியை தன் "லவ்ஹுல் மஹ்ஃபூள் " என்ற பதிவு புத்தகத்தில் தெளிவாக பதிந்துள்ளதாக இறைவன் .

وَمَا مِنْ دَآبَّةٍ فِى الْاَرْضِ وَلَا طٰۤٮِٕرٍ يَّطِيْرُ بِجَنَاحَيْهِ اِلَّاۤ اُمَمٌ اَمْثَالُكُمْؕ مَا فَرَّطْنَا فِى الْـكِتٰبِ مِنْ شَىْءٍ ثُمَّ اِلٰى رَبِّهِمْ يُحْشَرُوْنَ

பூமியில் ஊர்ந்து திரியக் கூடியவைகளும், தன்னுடைய இரு இறக்கைகளால் (ஆகாயத்தில்) பறக்கக் கூடியவைகளும் உங்களைப் போன்ற (உயிருள்ள) படைப்புகளே (சமுதாயங்களே) அன்றி வேறில்லை. (இவைகளில்) ஒன்றையுமே (நம்முடைய பதிவுப்) புத்தகத்தில் (லவ்ஹுல் மஹ்ஃபூளில்) குறிப்பிடாது நாம் விட்டுவிடவில்லை. பின்னர் (ஒரு நாளில்) இவைகளும் தங்கள் இறைவனிடம் கொண்டு வரப்படும். (அல்குர்ஆன் : 6:38)

1.7 மீட்டர் நீளமான தந்தத்தில் உள்ள ஸ்ட்ரோன்டியம் மற்றும் ஆக்ஸிஜனின் வேதியியல் கூறுகளின் வெவ்வேறு வகைகள் அல்லது ஐசோடோப்புகளை ஆய்வு செய்வதன் மூலம் ஆராய்ச்சியாளர்கள் விலங்குகளின் பயணத்தை ஒன்றாக இணைத்தனர்.

அலாஸ்கா முழுவதும் ஐசோடோப்பு மாறுபாடுகளை முன்னறிவிக்கும் வரைபடங்களுடன் இவை பொருத்தப்பட்டன.

மமூத் விலங்குகள் தன் 28 ஆண்டு கால வாழ்நாளில் அலாஸ்கா நிலப்பரப்பில் 70 ஆயிரம் கிலோ மீட்டர் பயணித்திருப்பதாக கண்டறிந்தனர். பூமியின் சுற்றளவு 40 ஆயிரம் கிலோ மீட்டர் தான் என்பது கவனிக்கத்தக்கது.

இந்த அற்புத உயிரினங்களின் அழிவுக்கான தடயங்களை இந்த ஆய்வு வழங்குகிறது.

மிகவும் பரந்து விரிந்த விலங்குகளுக்கு, கடந்த பனி யுகத்தின் முடிவில் மம்மூத்களின் விருப்பமான புல்வெளி காடுகள் ஆக்கிரமிக்கப்பட்டது அந்த யானைக் கூட்டங்கள் மீது அழுத்தத்தை ஏற்படுத்தியிருக்கும்.

உணவுக்காக அந்த உயிரினங்கள் உலாவும் தூரத்தை அது மட்டுப்படுத்தியது. மேலும் அவை வேட்டையாடப்படும் அபாயத்தில் வைத்தது.

ஒரு சர்வதேச குழு இப்பணிகள் மற்றும் ஆராய்ச்சிகள் குறித்து ஓர் அறிவியல் சஞ்சிகையில் பிரசுரமாக்கியுள்ளது.

மமூத் யானைகளின் தந்தங்களில் அதன் வாழ்வியலின் செய்திகள் பதிந்திருக்கிறது என்றால் மனிதன் மரித்து மண்ணோடு மண்ணாக மக்கிப் போன பின் எது மிஞ்சப் போகிறது ? என்று மனிதன் எண்ணிக் கொள்ளலாம் ஆனால் இறைவனோ குர்ஆனில் ...

قَدْ عَلِمْنَا مَا تَنْقُصُ الْاَرْضُ مِنْهُمْ وَعِنْدَنَا كِتٰبٌ حَفِيْظٌ

(மரணித்த) பின் அவர்களின் தேகத்தை மண் தின்று அழித்துக் கொண்டிருப்பதை நிச்சயமாக நாம் அறிவோம். (எனினும், நாம் விரும்பிய நேரத்தில் மரணித்த அவர்களை உயிர் கொடுத்து எழுப்பி விடுவோம்.) அன்றி, (அவர்களின் செயல்களைப் பற்றிய) பாதுகாக்கப்பட்ட பதிவுப் புத்தகம் நம்மிடத்தில் இருக்கின்றது. (அதில் ஒவ்வொன்றும் வரையப்பட்டுள்ளது.)   (அல்குர்ஆன்:(50:4)

ரஹ்மத் ராஜகுமாரன்.

**இயற்கையின் அதிசயங்கள் 3**

இரும்பு மழையாகப் பெய்யும் ஒரு புதிய கோள் - விண்வெளி அதிசயம்




மழையையும் இறக்கினோம்-(78:14,6:99)   இரும்பையும் இறக்கினோம்.-(57:25)

மேற்கண்ட வசனத்தில், இன்று பூமியில் நாம் காணும் இரும்பை இறக்கியதாக அல்லாஹ் கூறுகின்றான்.அரபியில் "**அன்ஸல்னா' (Anzalna)** என்ற சொல்லுக்கு "இறக்குதல்" என்று பொருள். இந்த பொருளிலேயே மழையையும் இறக்கினோம் என்கிறான்.

வானில் எப்படி இரும்பு உருவானது ?   விண்வெளியில் முக்கியமாகச் சொல்லக்கூடிய இரண்டு

விதமான திடப்பொருட்கள் உண்டு. ஒன்று எரிந்து கொண்டிருக்கும் திடப்பொருள். மற்றது எரியாமல் இருக்கும் திடப்பொருள். எரியாமல் இருப்பவற்றை நாம் கோள்கள் என்கிறோம். நம் பூமியும் ஒரு கோள்தான். இவற்றுடன் துணைக் கோள்கள் என்று சொல்லப்படும் சந்திரன்களும் உண்டு.

ஆனால் எரிந்து கொண்டிருப்பவற்றை நட்சத்திரம் என்கிறோம். பூமிக்கு மிக அண்மையில் இருக்கும் நட்சத்திரம் நம் சூரியன்தான். சூரியன் ஒரு நட்சத்திரம் என்பதைப் பலர் சிந்திப்பதே இல்லை. நம் சூரியன், பால்வெளிமண்டலம் **(Milkyway Galaxy)** என்னும் நட்சத்திரக் கூட்டத்தில் ஒரு நட்சத்திரமாக இருக்கிறது. இந்தப் பால்வெளி மண்டலத்தில் மட்டும் 200

முதல் 400 பில்லியன் நட்சத்திரங்கள் உள்ளன என்று குத்துமதிப்பாகக் கணித்துள்ளனர்.

நட்சத்திரத்திரம் எரிவதற்கு அடிப்படைச் சக்தியாக இருப்பது ஹைட்ரஜன் (H). நட்சத்திரத்தின் உட்கருக்குள் **(Core)** இருக்கும் ஹைட்ரஜன் 'நியூக்ளியர் பியூஸன்'(NuclearFusion**)** காரணமாக ஹீலியமாக (He) மாறும். இப்படி மாற்றமடையும் போது பிரமாண்டமான சக்தி வெளிவரும். இரண்டு அணுக்கருக்கள் ஒன்றாக இணைந்து, வேறொரு அணுவாக மாறுவதையே

'நியூக்கிளியர் பியூஸன்' என்கிறார்கள். தமிழில் 'அணுக்கருப் பிணைப்பு' என்று சொல்லலாம்.

ஹைட்ரஜன், ஹீலியமாக மாறும்போது உருவாகும் சக்தியால் ஏற்படும் கதிர்வீச்சையே ஒளியாகவும், வெப்பமாகவும் வெளியே அனுப்புகிறது நட்சத்திரம். ஒரு கட்டத்தில் உட்கருக்குள் இருக்கும் ஹைட்ரஜன் அனைத்தும் ஹீலியமாக மாறும் நிலை வரும். அப்போதும் 'அணுக்கருப் பிணைப்பு'

தொடர்ந்து நடைபெறுவதால் ஹீலியம், கார்பனாக(C) மாறத் தொடங்கும். ஹைட்ரஜன் எப்படி ஹீலியமாக மாறியதோ, அதேபோல ஹீலியமும், கார்பனாக மாற ஆரம்பிக்கும்.

இப்போதும் அதிகளவு சக்தி வெளிவரும். ஹைட்ரஜன்,ஹீலியமாக மாறுவதற்கு எட்டு மில்லியன் வருடங்கள் எடுக்கலாம்.

ஆனால், ஹீலியம் முழுவதும் கார்பனாக மாறுவதற்கு சுமார்

அரை மில்லியன் வருடங்களே போதுமானது. இத்துடன்

'அணுக்கருப் பிணைப்பு' முடிந்து விடுவதில்லை. தொடர்ந்து கார்பன் நியானாகவும்(Ne), நியான் ஆக்சிஜனாகவும் (O),

ஆக்சிஜன் சிலிக்கானாகவும்(Si), சிலிக்கான் இரும்பாகவும்(Fe) படிப்படியாக மாறுகின்றன.

இன்று பூமியில் உள்ள இரும்பு பூர்வீக பூமிக்கு

சொந்தமானதல்ல. விண்வெளியில் இருந்தே இம்மண்ணுக்கு வந்தது என்றார்கள். இதற்கு உதாரணமாக எகிப்தை ஆண்ட பாரோ மன்னர்கள் வைத்திருந்த உலகின் முதல் இரும்பு ஆயுதம் விண்ணிலிருந்து வீழ்ந்த விண்கற்களில் இருந்த இரும்பின் மூலம் உண்டாக்கப்பட்டது என்றார்கள்.

புத்தம் புது பூமி வேண்டும், நித்தம் ஒரு வானம் வேண்டும்... தங்க மழை பெய்ய வேண்டும்" என்று ஒரு சினிமா பாடலை நீங்கள் கேட்டிருக்கலாம். அப்படி ஒரு புத்தம் புதிய கோள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதில் தங்க மழை எல்லாம் இல்லை. ஆனால், இரும்பு மழை பெய்கிறது என்பதை விண்வெளி வீரர்கள் வியந்து பார்த்திருக்கிறார்கள்.

இது ஹாலிவுட் திரைப்படம் அல்ல. நமக்கு தெரியாமல் தீவிரமாக செயல்படும் மற்றொரு உலகில் நடைபெறும் இயற்கை நிகழ்வு இது.

வாஸ்ப் 76பி என்று அறியப்படும் இந்த கோள், அதனுடைய நட்சத்திரத்தை சுற்றி வரும்போது, அதன் பகல் பகுதி வெப்பநிலை 2,400 டிகிரி செல்ஷியஸ் ஆக இருக்கிறது. இந்த வெப்பநிலை உலோகங்களை ஆவியாக்கும் தன்மை கொண்டது.

இரவு நேரப் பகுதியில் இந்தக் கோளின் வெப்பநிலை 1400 டிகிரியாக குறைந்துவிடுகிறது. இந்த வெப்பநிலையில், பகல் நேரத்தில் ஆவியான உலோகங்கள் இறுகி மழையாகப் பெய்கின்றன.

இது ஒரு வினோதமான சூழல் என்று ஜெனீவாவை சேர்ந்த டாக்டர் டேவிட் ஹெரேயின்ச் விளக்கம் தருகிறார்.

தண்ணீர் துளிகளுக்கு பதிலாக இரும்பு துளிகளின் சாரால் அடிப்பது எப்படி இருக்கும் என நினைத்து பாருங்கள் என்று பிபிசியிடம் பேசிய டாக்டர் டேவிட் ஹெரேயின்ச் தெரிவித்தார்.

நேச்சர் என்ற சஞ்சிகையில் இந்த கோள் குறித்த கண்டுபிடிப்புகளை சுவிஸ் ஆராய்ச்சியாளர்கள் வெளியிட்டுள்ளனர்.

வாஸ்ப் - 76பி என்ற இந்த கோள் குறித்து முழு ஆய்வு மேற்கொள்ள ஐரோப்பிய தெற்கு ஆய்வகம் எக்ஸ்பிரசோ என்ற கருவியை சிலியில் பொருத்தி எப்படி பயன்படுத்தியது என்று விளக்குகிறது.

இந்த கோள் பூமியில் இருந்து 640 ஒளியாண்டு துரத்தில் உள்ளது. வாஸ்ப் 76பி தனது நட்சத்திரத்திற்கு மிக அருகில் உள்ளது. வாஸ்ப் 76பி தன்னை தானே சுற்றிக்கொள்ள 43 மணி நேரமாகிறது. இந்த கோள் எப்போதும் தனது நட்சத்திரத்தை ஒரு புரத்தில் இருந்து மட்டுமே பார்க்க முடியும். நம் பூமியின் நிலவும் இதையே தான் செய்கிறது, நிலவின் ஒரு புறத்தை மட்டுமே நாம் பார்க்க முடியும்.

உண்மையில் இந்த கோளில் நிலவும் அதி வெப்பத் தன்மையால் மேகங்கள் காணப்படுவதில்லை. வளிமண்டலத்தில் உள்ள அனைத்து மூலக்கூறுகளும் தனித்தனி அணுக்களாக சிதறுகின்றன.

இங்கு நிலவும் வெப்ப நிலை மாற்றங்களால் மணிக்கு 18,000 கிலோமீட்டர் வேகத்தில் கடுமையான காற்று வீசும் என டாக்டர் டேவிட் ஹெரேயின்ச் கூறுகிறார்.

எக்ஸ்பிரசோ ஸ்பெக்ட்ரோமீட்டரைப் பயன்படுத்தி கடுமையான இரும்பின் வெப்பநிலையை அங்கு கண்டுபிடித்துள்ளனர். இரவு நேரம் நிலவும் ஒரு புறத்தில் 1400 டிகிரி செல்ஷியஸ் வெப்பநிலையில் இரும்பு ஆவி செறிவடைந்து மேகமாகவும், மழையாகவும், துளிகளாகவும் மாறுகிறது. மழையாகவும் துளிகளாகவும் வெளிவருபவை கோளின் ஆழமான பகுதிக்கு சென்று சேர்ந்தால் இந்த எக்ஸ்பிரஸோ கருவியால் அதை ஆராய முடியாது என்று ஹெரேயின்ச் கூறுகிறார்.

வியாழனை விட வாஸ்ப் 76பி இரண்டு மடங்கு பெரிய கோள். பிரிட்டனின் வாஸ்ப் தொலைநோக்கி திட்டம் நான்கு வருடங்களுக்கு முன்பு இந்த கோளை கண்டுபிடித்ததால் இந்த பெயர் வைக்கப்பட்டுள்ளது.

இந்த கோள் தனது நட்சத்திரத்திற்கு அருகில் இருந்து, அனைத்து விதமான இயற்பியல் ஆராய்ச்சிக்கு உகந்த நிலையில் உள்ளதாக டாக்டர் டேவிட் ஹெரேயின்ச் கூறுகிறார்.

இந்த நட்சத்திரத்தாலோ அல்லது நட்சத்திரத்தில் இருந்து வரும் கதிர்வீச்சாலோ வெப்பம் அதிகரித்து, இந்த கோள் அதி வெப்பச் சூழலை கொண்டுள்ளது.

ஆக வானிலுள்ள எல்லா கோள்களிலும் இரும்பு திருக்குர்ஆன் கூறுவது போல வானத்திலிருந்தே இறங்குகிறது

ரஹ்மத் ராஜகுமாரன்

**Rahmath Rajakumaran**

வானிலிருந்து பூமிக்கு நான்கு பரக்கத்துகளை (மறைவான அருள் ) இறக்கியருளியிருக்கின்றான்.

உப்பு , தண்ணீர் . நெருப்பு , இரும்பு

" இரும்பையும் நாம் இறக்கினோம் " குர்ஆன் ( 57 : 25)

இரவில் மொட்டை மாடியில் படுத்துக் கொண்டு வானத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தால் , பிரகாசமான ஒளிக்கோடுகள் தோன்றி மறைவதைப் பார்க்கலாம் . இவற்றை எரி நட்சத்திரம் Meteor என்பார்கள். ஆனால் இவை விண்மீன்கள் அல்ல என்பது 2000 ஆண்டுகளுக்கு முன்பே கிரேக்கர்களுக்கு தெரிந்திருக்கிறது .

ஏனெனில் எவ்வளவு எரிநட்சத்திரங்கள் விழுந்தாலும் வானிலுள்ள விண்மீன்களின் எண்ணிக்கை குறையவில்லை என்பதை அவர்கள் கண்டார்கள் .

பண்டைய காலத்து மக்கள் அவ்வாறு பூமியில் வந்து விழுந்த விண் எரிகற்களைச் சேகரித்தனர். அவை சின்னச் சின்ன இரும்பு கட்டிகளாக இருந்தன. கிருஸ்து பிறப்பதற்கு 3000 வருடங்களுக்கு முன்பே விண் எரிகற்களிலிருந்து எடுக்கப்பட்ட இரும்பைக் கொண்டு கருவிகள் செய்யப்பட்டதாக ஆய்வில் தெரிய வருகிறது.

விண்கற்கள் கூட்டங்கள் நிறைந்த வான்வெளியில் பூமி சுழன்று செல்லும் போது , பூமியில் விண்கற்களின் பொழிவுகள் அதிகமாக தோன்று

கின்றன .இந்த விண்கற்கள் வால் நட்சத்திரங்களிலிருந்து விடுதலைப் பெற்ற துண்டுகளாகவும் இருக்கின்றன. இரவு வானத்தை 1 மணி நேரத்திற்குள் 6 விண்கற்களாவது எரிந்து விழுவதை நீங்கள் காண்பீர்கள் .

கடல் பரப்பில் கடலுக்குள் மட்டுமே வருஷத்திற்கு 5 லட்சம் டன் இரும்பும் நிக்கலும் கலந்த விண்கற்கள் விழுவதாக அண்மைக்கால அறிவியல் புள்ளி விபரம் கூறுகிறது .

ஆமா ... வருஷத்திற்கு 5 லட்சம் டன் இரும்பும் நிக்கலும் விழுந்தால் , பூமியின் பாரம் கூடி தாங்காமல் வெடித்து விடாதா ?

" விடாது "

சொல்றேன். பூமியின் சொந்த எடையை எந்த தராசு மூலம் எடை போடுவது ?..

புவி ஈர்ப்பு விதி

F = G . m1. m2 / d (Square) படி

5.893 க்குப் பிறகு இருபத்தோரு சைபர்கள் போட்ட கிலோ கிராம் நம் பூமி .

ஒவ்வொரு வருஷம் 5 லட்சம் டன் இரும்பும் நிக்கல் கணக்கில் வந்தாலும் பூமியிலிருந்து எங்கே போகுது ..? விஞ்ஞானத்திற்கு தெரியவில்லை .

உங்களுக்குத் தெரியுமா ?

ஹஜ்ஜின் போது 40 லட்சம் ஹாஜிகள் 21 கற்கள் பொறிக்கி எடுக்கிறோமே, இந்த பொடிக் கற்கள் முஸ்தலிபாவிற்கு எங்கிருந்து வருகிறதோ ... அந்த இடத்திற்கு 5 லட்சம் டன் இரும்பும் நிக்கலும் இடம் மாற்றம் செய்யப்பட்டிருக்கலாம். யாருக்குத் தெரியும் ?

இந்த இரண்டிற்கும் இடையே உள்ள தொடர்பு அல்லாஹ்வே அறிவான் . நான் சொல்ல என்ன இருக்கிறது ?

( குர்ஆன் கூறும் உலோகங்கள் என்ற தொடர் பதிவிலிருந்து ...)

ர.ரா

## இயற்கையின் அதிசயங்கள் 4

பாலைவனத்தில் கற்கள் நகரும் மர்மம் என்ன?



அமெரிக்காவில் கலிபோர்னியா மாகாணத்தின் தென் பகுதியில் ஓரிடத்தில் பாறைகள் தாமாக இடம் பெயர்ந்து செல்கின்றன. 100 ஆண்டுகளுக்கும் மேலாக இது பெரும் புதிராக இருந்து வந்துள்ளது. அவை இடம் பெயரும் மர்மத்துக்கு இப்போது விடை கண்டுபிடித்திருக்கிறார்கள்.

பாறைகள் இவ்விதம் இடம் பெயரும் இடத்தின் பெயர் "ரேஸ்டிராக் பிளாயா" என்பதாகும். இது மரணப் பள்ளத்தாக்கு எனப்படும் பாலைவனத்தின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. பெயர் தான் ரேஸ்டிராக்கே தவிர இங்கு ரேஸ் எதுவும் நடப்பதில்லை.

ரேஸ்டிராக் பிளாயா பகுதி.  ஒரே சம தரையாகஅமைந்துள்ளதைக் கவனிக்கவும்அதை ஒரு பாலைவனம் என்றும் சொல்லலாம். ஆனால் மணல் கிடையாது. என்றோ வற்றிப்போன ஏரியின் படுகை என்றும் வருணிக்கலாம். கண்ணுக்கெட்டிய தூரம் வரை செடி கொடி கிடையாது. புல் பூண்டு கிடையாது. விலங்குகளும் இல்லை. மனித நடமாட்டமும் கிடையாது.

ஆனால் இங்குமங்குமாக சிறிய பாறைகள் கிடக்கின்றன. வெடிப்பு விட்ட தரையில் அந்தப் பாறைகள் சட்டென்று கண்ணில் புலப்படும். பல பாறைகளின் எடை சுமார் 13 கிலோ. 300 கிலோ எடை கொண்ட பாறைகளும் உண்டு.

பல பாறைகள் நகர்ந்துள்ளதால் ஏற்பட்ட தடங்கள்

வானிலிருந்து எடுக்கப்பட்ட படம்.ஓரிடத்தில் கிடக்கின்ற பாறை பின்னர் பார்த்தால் இடம் மாறியிருக்கும். அந்தப் பாறை நகர்ந்து சென்ற தடம் தெரியும். இவை “கால் முளைத்த” பாறைகள்.ஒன்றல்ல பல பாறைகள் நகர்ந்து சென்ற தடம் தெளிவாகத் தெரிகிறது. தடத்தை வைத்துச் சொல்வதானால் சில பாறைகள் 1500 அடி அளவுக்கு நகர்ந்துள்ளன.

அந்தப் பாறைகளை யார் நகர்த்தியிருப்பார்கள் ? காற்றில் உருண்டு சென்றிருந்தால், இப்போது தெரிகின்ற தடம் ஏற்பட வாய்ப்பில்லை. யாராவது கயிற்றைக் கட்டி இழுத்துச் சென்றால் மட்டுமே பாறை நகர்ந்து சென்ற தடம் ஏற்பட முடியும்.

ஒரு பாறை எவ்வளவு தூரம் நகர்ந்து வந்துள்ளது என்பதைக் கவனிக்கவும்.அப்படி யாரேனும் இழுத்துச் சென்றிருந்தால் அவரது காலடித் தடமும் மண்ணில் பதிவாகியிருக்கும். ஆகவே பாறைகள் தானாகத் தான் நகர்ந்து சென்றிருக்க வேண்டும். அல்லது ஏதோ ஒன்று அவற்றை நகரச் செய்திருக்க வேண்டும்.

1900 ஆம் ஆண்டிலிருந்தே இந்த மர்மம் குறித்து பல்வேறு கருத்துகள் கூறப்பட்டு வந்துள்ளன. எதிலும் மர்மத்தைக் காண விரும்புகிறவர்களோ இது வேற்றுலகவாசியின் வேலையாக இருக்கலாம் என்று கூறினர்.

ஒரே நேர்கோட்டில் நகர்ந்து வந்துள்ள பாறை ஆனால் இந்தப் பாறைகள் நகருவதை கடந்த காலத்தில் யாருமே நேரில் கண்டதில்லை. காமிராவிலும் இது பதிவாகியது இல்லை.

இந்த நிலையில் தான் நிபுணர் ஜேம்ஸ் நாரிஸ் அங்கு தானியங்கி காமிராவைப் பொருத்தி விட்டு வந்தார். அது விட்டு விட்டு அவ்வப்போது படம் எடுக்கின்ற காமிராவாகும்.

அந்த காமிரா சரியாக செயல்படுகிறதா என்று சோதிக்க அண்மையில் அவர் ரேஸ்டிராக் பிளாயாவுக்குச் சென்றார். அவருடன் ரிச்சர்ட் நாரிஸும் சென்றார்.

அங்கு அவர்கள் ஒன்றல்ல சுமார் 60 பாறைகள் தாமாக நகர்வதைக் கண்ணால் கண்டனர். அவை நகர்ந்த போது லேசான சத்தமும் கேட்டது.பாறைகளை நகர்த்தியது வேறு எதுவுமல்ல. நீரில் மிதக்கின்ற பனிக்கட்டி வில்லைகள்தான். தண்ணீர் எங்கிருந்து வந்தது?

பாறைகள் எப்படி நகருகின்றன என்பதை பின்னர் ஜேம்ஸ் நாரிஸ் விவரித்தார்.

ஜோடியாக நகர்ந்து வந்துள்ள பாறைகள்பாறைகள் நகருவதில் பெரிய மர்மம் எதுவுமில்லை. அந்த இடத்தில் மழை என்பது அபூர்வம். வருஷத்தில் இரண்டு அங்குலம் மழை பெய்தால் உண்டு. குளிர் காலத்தில் இப்படி மழை பெய்தால் களிமண் பூமி என்பதால் இரண்டு மூன்று செண்டிமீட்டர் அளவுக்குத் தண்ணீர் தேங்கி நிற்கும்.

அது கடும் குளிர் வீசுகின்ற பகுதியாகும். ஆகவே தேங்கும் தண்ணீரின் மேற்புறம் உறைந்து போகும். உறைந்த பனிக்கட்டி சில்லு சில்லுகளாக நீரில் மிதக்கும். தேங்கும் தண்ணீர் குறைவு என்பதால் பாறைகளின் மேற்புறம் தண்ணீருக்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும்.

அந்தப் பகுதியில் குளிர்காலத்தில் தென்மேற்கிலிருந்து வட கிழக்கு நோக்கி மணிக்கு சுமார் 140 கிலோ மீட்டர் வேகத்தில் கடும் காற்று வீசும். இதன் விளைவாக மிதக்கும் பனிக்கட்டி சில்லுகள் பாறைகள் மீது மோதும். இவை மெல்லியவைதான். ஆனால் கெட்டியானவை.

தேங்கும் தண்ணீர் காரணமாக நீருக்கடியில் உள்ள களிமண் தரை சறுக்கிச் செல்வதற்கு உகந்த அளவில் இருக்கும். கடும் காற்று பனிக்கட்டி சில்லுகளைத் தாக்கும் போது அவை பாறை மீது மோத பாறைகள் சறுக்கியபடி நகருகின்றன. காற்று விட்டுவிட்டு அடிக்கும் போது ஒவ்வொரு தடவையும் பனிக்கட்டி சில்லுகள் மோதும் போது பாறை சில மில்லி மீட்டர் நகரலாம்.

பின்னர் வெயில் காரணமாக தண்ணீர் ஆவியாகி விடும். பாறைகள் நகர்ந்த இடம் காய்ந்து தெளிவான தடமாகத் தெரியும்.

குளிர்காலமாக இருக்க வேண்டும். மழை பெய்ய வேண்டும். மிதக்கும் பனிக்கட்டி சில்லுகள் இருக்கவேண்டும்.கடும் காற்று வீச வேண்டும். இப்படியாக பல நிலைமைகளும் ஒன்று சேரும் போது தான் பாறைகள் நகருகின்றன. மேலும் இந்தப் பகுதியானது சிறிது கூட மேடுபள்ளம் இன்றி நூல் பிடித்தது போல சமதரையாக இருப்பதும் பாறைகள் நகருவதற்குக் காரணமாக உள்ளது.

பாறைகள் நகரும் சூழ்நிலைகள் உண்டானாலும் அந்தத் தடவை மிகச் சிறிது தூரமே நகரலாம். வேறு சில சமயங்களில் அதிக தூரம் நகரலாம். அல்லது தொடர்ந்து மூன்று ஆண்டுகள் பாறைகள் அதே இடத்தில் காணப்படலாம். ஆகவே பாறைகள் இடம் பெயருவது என்றோ எப்போதோ நடைபெறுவதாக இருக்கிறது.ஆகவேதான் இது யார் கண்ணிலும் படாமல் இதுவரை மர்மமாக இருந்து வந்துள்ளது.

இதுவரை நகரும் பாறையைப் பற்றி விஞ்ஞானம் கூறியதைப் பார்த்தோம் . ஓடும் பாறையைப் பற்றி மெஞ்ஞானம் கூறுவதை கேளுங்கள் . சொல்றேன்.

இஸ்ரவேலர்கள் ஒருவரை ஒருவர் பார்த்தவர்களாக, நிர்வாணமாகவே குளிப்பார்கள். மூஸா(அலை) அவர்கள் தனித்தே குளிப்பார்கள்.

இதனால் 'அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸா விரை வீக்கமுடையவர். எனவே அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை' என இஸ்ரவேலர்கள் கூறினார்கள்.

ஒரு முறை மூஸா(அலை) அவர்கள் குளிப்பதற்காகச் சென்றபோது, தங்களின் ஆடைகளை ஒரு கல்லின் மீது வைத்துவிட்டுக் குளிக்கச் சென்றார்கள். அவர்களின் ஆடையோடு அந்தக்கல் ஓடிவிட்டது. உடனே மூஸா(அலை) அவர்கள் அதைத் தொடர்ந்து 'கல்லே! என்னுடைய ஆடை!' என்று சப்தமிட்டுச் சென்றார்கள்.

அப்போது, இஸ்ரவேலர்கள் மூஸா(அலை) அவர்களின் மர்மஸ்தலத்தைப் பார்த்துவிட்டு 'அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸாவிற்கு எந்தக் குறையுமில்லை' என்று கூறினார்கள்.

மூஸா(அலை) அவர்கள் தங்களின் ஆடையை எடுத்துக் கொண்டு அந்தக் கல்லை அடிக்க ஆரம்பித்தார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

'அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸா(அலை) அவர்கள் கல்லைக் கொண்டு அந்த கல்லின் மீது ஆறோ ஏழோ அடி அடித்தார்கள்' என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

ஸஹீஹ் புகாரி : 278.

ரஹ்மத் ராஜகுமாரன்

**இயற்கையின் அதிசயங்கள் 5**

கற்சிலையாக மாறும் உயிரினங்கள்



வடக்கு தான்சானியாவில், “நெட்ரான் ஏரி” என்று அழைக்கப்படும் ஒரு ஏரி உள்ளது. அந்த ஏரியில் கால் வைக்கும் பறவைகள், விலங்குகள் என அனைத்தும் எல்லாம் கல்லாக மாறும்.

வடக்கு டான்சானியாவின் தி என்ட்ரான் ஏரியின் கடற்கரைக்கு நிக் பிராண்ட் என்ற புகைப்படக் கலைஞர் வந்த போது, அதிர்ச்சியடைந்ததாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

ஏரியின் கரையில் கால்நடைகள் மற்றும் பறவைகளின் சிலைகள் காணப்பட்டது. அந்த சிலைகள் உண்மையான இறந்த பறவைகளுக்கு சொந்தமானது. உண்மையில், ஏரி நீருக்குச் செல்லும் விலங்குகள் மற்றும் பறவைகள் சிறிது நேரத்தில் கற்களாக மாறுகின்றன்.

இதுகுறித்து பிராண்ட் கூறிய போது “ஏரியின் மிகவும் பிரதிபலிக்கும் தன்மை உயிரினங்களை தவறாக ஈர்த்து, வழிநடத்தியதை விட அவைகள் இறந்துவிட்டால் ,எப்படி உணர முடியும் என்பது யாருக்கும்

நிச்சயமாகத் தெரியாது, இதன் விளைவாக விலங்குகள் தண்ணீரின் ஆபத்து தெரியாமலேயே விழுந்தன" என்று தெரிவித்துள்ளார்.

ஆனால் இதற்கு பின்னணியில் அறிவியல் காரணங்களும் இருக்கிறது.

அந்த தண்ணீரில் உப்பு மற்றும் சோடாவின் அளவு மிக அதிகமாக உள்ளது. இதுதான் இந்த பறவைகளின் இறந்த உடலைப் பாதுகாக்கிறது.

இந்த ஏரி நீரில் காரத்தின் அளவு ph9 முதல் pH 10.5 வரை, அதாவது அம்மோனியாவாக காரமானது. ஏரியின் வெப்பநிலையும் 60 டிகிரியை எட்டும்.

மேலும் அந்த ஏரியின் தண்ணீரில் எரிமலையின் சாம்பலும் கரைந்துள்ளது . இதுதான் எகிப்திய மம்மிகளைப் பாதுகாக்கப் பயன்படுத்தப்பட்டது என்றும் கருதப்படுகிறது.

............................ x ............................... ..... ... ....... x .. ....................

தாம் பிறந்த சமூகத்திற்கு அன்றி வேறு ஒரு சமூகத்திற்கு நபியாக வைக்கப்பட்டவர்கள் நபி லூத் (அலை) அவர்கள்.

ஸதூம் என்ற நகரமும் அதைச் சுற்றி நான்கு அழகிய நகரங்கள் கொண்ட பூமிக்கு நபியாக அனுப்பப்பட்டார்கள்

அங்குள்ள ஆண்கள் " லிவாத் ".என்னும் ஆண் புணர்ச்சியாளர்களாக (Homo sex) இருந்தனர்.மொத்தம் நான்கு லட்ச குடும்பத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் பதின்மர் இந்த கேடு கெட்ட செய்கைகளில் ஈடுபட்டனர் என்று முஜாஹிது (ரஹ் ) அவர்கள் கூறுகின்றார்கள். இப்போது அந்த பூமியை ஜோர்டான் என்றழைக்கப்படுகிறது .

அந்த 5 நகரங்களை அழிப்பதற்கு இறைவன் மலக்குமார்களை அழகான கவர்ச்சிகரமான இளைஞர்கள் கோலத்தில் லூத் (அலை) அவர்களிடம் விருந்தினர்களாக அனுப்பி வைத்தான் .

கடற்கரை ஓரங்களில் மிக அழகாக இருந்த அந்த நகரங்களை இறைவன் மலக்குமார்களை கொண்டு தலைகீழாகப் புரட்டினான். அதில் எந்த ஜீவராசிகளும் வாழமுடியாத மிகுந்த உப்பு கொண்ட சாக்கடலாக மாற்றினான் .

ஏன் இத்தனை இவ்வளவு உப்பு ?

லூத் நபியின் மனைவி வாலிஹா அக்கேடுகெட்ட மக்களுக்கு சாதமாக இருந்து, தன் வீட்டிற்கு அழகான இளைஞர்கள் வந்திருப்பதை வெளியே போய் சொல்வதற்கு, 'வந்திருக்கும் விருந்தினருக்கு விருந்து சமைக்க உப்பு இல்லாததால், உப்பு வாங்கி வருவதாக' - பொய் சொல்லி வெளியே வந்து, உப்பு சாக்கில் துப்புக் கொடுத்தாள். அதனால் சாக்கடலில் அத்தனை உப்பு .

அந்த நகரங்களை ஏன் புரட்டி போட்டு அழித்தான் ?

ஆண் புணர்ச்சியாளர்கள் ஓர் ஆணை புணரும் போது, புரட்டி போட்டு எப்படி நடந்து கொள்வார்களோ அப்படி அந்நகரங்களும் புரட்டப்பட்டது.

"(விருந்தினராக வந்த வானவர்கள்) கூறினார்கள்: 'மெய்யாகவே நாம் உம்முடைய இறைவனின் தூதர்களாகவே இருக்கின்றோம்; நிச்சயமாக அவர்கள் உம்மை வந்தடைய முடியாது; எனவே இரவின் ஒரு பகுதி இருக்கும்போதே உம் குடும்பத்துடன் (இவ்வூரை விட்டுச்) சென்றுவிடும்! உம்முடைய மனைவியைத் தவிர, உங்களில் யாரும் திரும்பியும் பார்க்க வேண்டாம். குர்ஆன் (11:81)

"திரும்பிப் பார்ப்பின் கல்லாய் சமைந்து விடுவீர்கள் " என்று மலக்குமார்கள் கூறியதாக பைபிளில் அதிகமாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் இது திருக்குர்ஆனில் கூறப்படவில்லை.

வானவர் ஜிப்ரயில் (அலை) தம் சிறகை வீசினார்கள் . பெரும் சப்தத்துடன் நிலம் அதிர்ந்தது. அந்த சப்தத்தைக் கேட்டு லூத் (அலை) அவர்களின் மனைவி திரும்பிப் பார்த்து,

"என் இனத்தவரே...! என் இனத்தவரே...! "என்று அலறினாள். அடுத்தகணம் அவள் கல்லுருவானாள்.

அக் கற்சிலையிலிருந்து மாதந்தோறும் மாதவிடாய் வந்துகொண்டிருப்பதாக இமாம் ஸுஹைலி (ரஹ்) அவர்கள் கூறினார்கள் . (நபிமார்கள் வரலாறு - அப்துற் றஹீம்)

ஆனால் ' தப்ஸீரெ ஸாஹிதி ' யில் அவள் அங்கேயே உப்பினால் செய்யப்பட்ட கல் தூணாக மாறிவிட்டாள் என்று கூறப்பட்டுள்ளது.

ரஹ்மத் ராஜகுமாரன்

**இயற்கையின் அதிசயங்கள் 6**

கற்களாக மாறிய மனிதர்கள்



அந்தக்கால மாயாஜால சினிமா படங்களை பார்த்திருப்பீர்கள் மனிதனைக் கல்லாக மாற்றும் காட்சிகள் சர்வ சாதாரணமாக வரும்.

நிஜமாகவே மனிதர்களை கல்லாக மாற்ற முடியுமா ? என்றால்

'முடியாது' என்றுதான் விஞ்ஞானம் சொல்லும். காரணம் மனிதன் அமீனோ ஆக்சைடுகளால் உருவானவன். கல், பாறை சிலிக்கான்களால் உருவாகியது என்று விஞ்ஞானம் விதிகள் பேசும் .

ஆனால் இயற்கையின் பேரழிவு மனிதர்களை கல்லாக மாற்றிய சம்பவம் இவ்வுலகில் நடந்திருக்கிறது.

இத்தாலியில் நேப்பிள்ஸ் **(Naples)** நகரத்திலிருந்து, தென் கிழக்குப் பகுதியில் சுமார் 23 கிலோமீட்டர் தொலைவில் அமைந்த பண்டைய நகரம் பாம்பெய் **(Pompeii),** ஹெர்குலானியம் **(Herculaneum)** என இரு அழகான நகரங்களின் அருகே மவுண்ட் வெசுவியஸ் **(Mount Vesuvius )** என்கிற எரிமலை இருக்கிறது.

கிபி 79-இல் இந்த வெசூவியஸ் எரிமலை வெடிப்பின் காரணமாக வெளியான எரிமலைச் சாம்பல் மற்றும் இறுகிய தீக்குழம்புகளினுள் அகப்பட்டு பொம்பெயி நகரம் 4 முதல் 6 மீட்டர் வரை புதையுண்டு போனது. 20 ஆயிரத்திற்கும் மேலானவர்கள் எரிமலை சாம்பலில் சிக்கி இருக்கலாம்

ஊரெங்கும் நெருப்பு குழம்பு வழிந்தோடியது. அந்த இரு நகரங்களையும் மூடி, வெளி உலகுக்கு இப்படி நகரங்கள் இருந்தன என்ற சுவடுக் கூட தெரியாமல் ஆக்கியது.

அதன் பின்னர் கிட்டத்தட்ட 18 ஆம் நூற்றாண்டளவிலான காலப்பகுதி வரையில் அதாவது 1738 ஆம் ஆண்டு தற்செயலாகக் கண்டறியப்படும் வரையில் இந்நகரம் தொலைந்து போயிருந்தது.

12 அடுக்குகளாக இருந்த மண் பாறை படிவங்களை தோண்டி எடுத்த போது, அங்கே மனிதர்கள், விலங்குகள், குழந்தைகள், பெண்கள்... என எல்லோருமே கல்லாக மாறி இருந்தனர். இன்னும் இத்தாலிய அவைகளை அருங்காட்சியகத்தில் அவைகளை வைக்கப்பட்டுள்ளன

அதன் பின்னர் நடந்த ஆய்வுகள் உரோமப் பேரரசு மிக உயர்வான நிலையிலிருந்த காலப்பகுதியில் மக்களின் வாழ்க்கை, பண்பாடுகள் எவ்வாறிருந்தன என்பது தொடர்பில் மிகக் கூடிய தகவல்களை அளித்துள்ளன.

மனிதர்கள் இறப்பிற்குப் பின் தங்கள் உடல்கள் அழியாமல் பாதுகாத்து வைத்திருந்தால் , மீண்டும் பிரிந்த உயிர் உடலுக்கு திரும்பும் என்ற நம்பிக்கையில் உடல் சிதையாமல் இருக்க, எகிப்து நாட்டில் அரசர்கள் முக்கிய பிரஜைகள் தங்களை மம்மிகளாக உருவாக்கினர்.

இப்படி மம்மிகளாக வடிவமைத்து,பாதுகாக்க சில இரசாயன தைலங்களும் எரிமலை சாம்பலும் தேவைப்பட்டன .

வடக்கு தான்சானியா நாட்டில் , “நெட்ரான் ஏரி” என்று அழைக்கப்படும் ஒரு ஏரி உள்ளது. அந்த ஏரியில் கால் வைக்கும் பறவைகள், விலங்குகள் என அனைத்தும் எல்லாம் கல்லாக மாறும். அந்த ஏரியின் தண்ணீரில் சில வேதியல் பொருட்களும் எரிமலையின் சாம்பலும் கரைந்துள்ளது என்பது கண்டுப் பிடிக்கப்பட்டுள்ளது (முந்தைய பதிவை பார்க்கவும்)

கற்கள் , இரும்பு போன்றவற்றிற்கு உயிர் இல்லை என்பது பொதுமக்களின் கருத்தாக இருப்பதால், தமது உடலையும் மரணத்திற்குப் பின் இரும்பாகவோ, கல்லாகவோ மாற்றிவிடலாம் என்று அதற்குரிய யுக்திகளை தேடி அலைகின்றனர்.

"உயிர் இல்லாதென நீங்கள் கருதுகிற கல்லாகவோ, இரும்பாகவோ நீங்கள் ஆகிவிடுங்கள். அப்படி நீங்கள் ஆனாலும் உங்களுக்கு மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படும் என்று குர்ஆன் கூறுகிறது.

قُلْ كُوْنُوْا حِجَارَةً اَوْ حَدِيْدًا

(நபியே!) நீர் கூறும்: “நீங்கள் கல்லாகவோ, இரும்பாகவோ ஆகுங்கள். (அல்குர்ஆன் : 17:50)

اَوْ خَلْقًا مِّمَّا يَكْبُرُ فِىْ صُدُوْرِكُمْ فَسَيَـقُوْلُوْنَ مَنْ يُّعِيْدُنَا قُلِ الَّذِىْ فَطَرَكُمْ اَوَّلَ مَرَّةٍ فَسَيُنْغِضُوْنَ اِلَيْكَ رُءُوْسَهُمْ وَيَقُوْلُوْنَ مَتٰى هُوَ قُلْ عَسٰٓى اَنْ يَّكُوْنَ قَرِيْبًا

“அல்லது மிகப் பெரிதென உங்கள் நெஞ்சங்களில் தோன்றும் வேறொரு படைப்பாய் ஆகுங்கள்;” (எப்படியானாலும் நீங்கள் நிச்சயமாக எழுப்பப்படுவீர்கள்).

“எங்களை எவன் (மறுமுறையும் உயிர் கொடுத்து) மீட்டுவான்?” என்று அவர்கள் கேட்பார்கள்.

“உங்களை எவன் முதலில் படைத்தானோ, அவன் தான்!” என்று (நபியே!) நீர் கூறும்;

அப்போது அவர்கள் தங்களுடைய சிரசுகளை உம் பக்கம் சாய்த்து, (பரிகாசமாக) அது எப்போது (நிகழும்)? என்று கேட்பார்கள்.

“அது வெகு சீக்கிரத்தில் ஏற்படலாம்” என்று கூறுவீராக! (அல்குர்ஆன்: 17:51)

பாம்பெய் , ஹெர்குலானியம் மக்களை கல்லாக இறைவனே மாற்றி, உடல் சிதையாமல் மீண்டும் உயிர்ப்பிப்பதற்கு உதாரணமாக இந்நிகழ்வுகளை அத்தாட்சியாக்கி உள்ளான் போலும் .

அடுத்து, எந்த நாட்டு மக்களை எங்கு எப்போது இரும்பாக இறைவன் மாற்றி இருக்கிறானோ என பயத்தோடு உலகின் நிகழ்வுகளை கவனம் செலுத்த வேண்டியதுள்ளது.

ரஹ்மத் ராஜகுமாரன் .

**Rahmath Rajakumaran**

யுனெஸ்கோ உலக பாரம்பரியக் களமான இது இப்போது ஆண்டுதோறும் கிட்டத்தட்ட இரண்டரை மில்லியன் சுற்றுலாப் பயணிகளைக் கவரும் ஒரு இத்தாலிய சுற்றுலாத் தலமாகக் காணப்படுகிறது.

யுனெசுக்கோ உலகப் பாரம்பரியக் களம் பொம்பெயி மாநகரமாக இருந்திருக்க வேண்டும் தொல்லியல் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்

இலத்தீன் மொழியில் "பொம்பெயி" என்பது பலவும் எனப் பொருள் கொள்ளும். எனினும், “ஓசுக்கன் மொழியில் ஐந்து என்பதைக் குறிக்கும் பொம்பே என்பதிலிருந்தே இது தோன்றியிருக்கலாம். இச்சொல் பொம்பெயி நகரின் அமைவுக்கு அடிப்படையான ஐந்து சிறு கிராமங்கள் அல்லது அங்கு முதலில் குடியேறிய ஐந்து குடும்பங்கள் என்பதைக் குறிக்கலாம்.” என தியடோர் கிராவுசு குறிப்படுகிறார்.

தொல்லியல் ஆய்வுகள்

கி.பி 79-ல் வெசுவியஸ் மலையில் ஓர் எரிமலை சீற்றம் ஏற்பட்டது. அதில் வெளிப்பட்ட எரிமலைக் குழம்பில் பாம்பேய் நகரம் மூழ்கிப் போனது. அப்பகுதி இன்று அகழ்வாய்வாளர்களின் சொர்க்கமாக இருக்கிறது. டிசம்பர், 2020-இல் பொம்பெயி நகரத்தை அகழ்வாய்வு செய்த போது, 'ஃப்ரெஸ்கோஸ்' என்றழைக்கப்படும், ஈரமான சுண்ணாம்புக் கல் மீது வரையப்படும் ஒரு வகையான ஓவியங்கள் மற்றும் சுடுமண் பாத்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.மேலும் இந்நகத்தின் கண்டுபிடிக்கப்பட்ட ஓவியத்தில் காணப்படும் படங்கள் மூலம் இந்நகரத்தின் துரித உணவகத்தில் வழங்கப்பட்ட உணவுகளாக இருக்கலாம் என நம்பப்படுகிறது. பன்றி இறைச்சி, மீன், நத்தை, மாட்டிறைச்சி போன்ற இறைச்சிகள் பயன்படுத்தியதற்கான தடயங்கள் இந்த பகுதியில் கண்டெடுக்கப்பட்ட பாத்திரங்களில் காணப்படுகின்றன.

நவம்பர் 2020 மாத ஆய்வில் பாம்பேய் தொல்பொருள் ஆய்வில் எரிமலைச் சாம்பலில் கிடைத்த ரோமப் பேரரசின் ஆண்டான் - அடிமை உடல்கள் கண்டுபிடிக்கப்பட்டன.எரிமலைச் சாம்பலில் புதைந்து கிடக்கும் பாம்பேய் நகரத்தின் மூன்றில் ஒரு பகுதி, இன்னும் ஆராய்ச்சி செய்யப்படாமல் இருக்கிறது.

இத்தாலியில் பண்டைய ரோமப் பேரரசு கால நகரமான பாம்பேய்க்கு அருகில் ஒரு விழாக்கால தேரைத் தொல்லியல் ஆய்வாளர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். நான்கு சக்கரங்களைக் கொண்ட இந்தத் தேர், பழங்கால குதிரை லாயத்துக்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்டு இருக்கிறது. இந்தக் குதிரை லாயத்தில் இருந்துதான் கடந்த 2018-ம் ஆண்டு மூன்று குதிரைகளின் எச்சங்களை வெளியே எடுத்தார்கள். பண்டைய பாம்பேய் நகரின் வடக்கு எல்லையில் உள்ள சிவிட்டா கைலியனா எனும் பழங்கால மாளிகையின் முற்றத்தில் இந்தத் தேர் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**இயற்கையின் அதிசயங்கள் 7**

(வெட்டவெளியில் காணாமல் போனவர்)




மொரிசியஸ் தீவில் யாரும் நம்ப முடியாத ஒரு நிகழ்ச்சி நடந்திருக்கிறது.

1977 அக்டோபர் 17ஆம் நாள் ஜகதமுராரி என்னும் ஒரு விவசாயி மொரீஷியஸ் தீவின் புறநகர்ப் பகுதியில் வாழ்பவர். இவர் தன் பண்ணையை நோக்கி போய்க்கொண்டிருந்தார். இவர் வீட்டின் பக்கத்தில் குடியிருக்கும் ஜட்ஜ் வில்லியம்ஸன் என்பவர் இவரை ஒரு கப் டீ அருந்தி விட்டுப் போகும்படி அழைத்தார்.

ஜட்ஜின் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தார் முராரி . ஜட்ஜும் , அவரது மனைவியும், கேர் , ஷப்னம் என்னும் பெயர் கொண்ட அவர் பிள்ளைகளும் முராரி நடந்து வருவதைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள். கொஞ்ச தூரம் நடந்து வந்த முராரி திடீரென்று மாயமாய் மறைந்து விட்டார்.

அவர் மறைவதற்கு அருகில் மரங்களோ புதர்களோ இல்லை. வெட்டவெளி. முராரி எங்கே போய்விட்டார் என்று உடனே எல்லோரும் ஓடிப்போய் பார்த்தார்கள். அவர் பூமிக்குள் புதைந்ததாகவும் தெரியவில்லை. இதுவரையில் அவர் எப்படி மறைந்தார் என்று யாருக்கும் புரியவில்லை.

அவர் உயிருடன் இந்த பிரபஞ்சவெளியில் இருக்கிறார். திரும்பி வருவார் என்ற நம்பிக்கையில் அவர் மனைவி தினமும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். இறந்தவர்களுக்கான சடங்குகளைச் செய்ய மறுக்கிறார். கேட்டதற்கு, முராரி நிச்சயம் திரும்ப வருவார் என்கிறார்.

இது சாத்தியமா ? சாத்தியம் என்கிறது விஞ்ஞானம்.

**" Through The Wormhole " - Morgan Freeman** எழுதிய " புழுத்துளை வழியே " என்கிற புத்தகம் மிகவும் சுவாராசியமானது. மனித கற்பனைகளையெல்லாம் மீறிய சமாச்சாரங்கள் சரளமாக பேசப்படுகிறது .

புழுத்துளை இரண்டு இடங்களை இணைக்கும் ஒருவிதமான மாய பாலம் . அந்த இரண்டு இடங்களுக்கும் இடையே இருக்கும் தூரம், மனித மனதால் கற்பனையே செய்யமுடியாத ஒரு மிகப்பெரிய தூரமாகக் கூட இருக்கலாம். அல்லது அடுத்த பிரபஞ்சத்தைக் கூட தொடலாம். ஆனாலும் புழுத் துளை இருப்பது முற்றிலும் உண்மை .

இன்னும் சொல்லப்போனால்,ஸ்டீபன் ஹாக்கிங்கின் கருத்துப்படி தற்போது நம்மைச் சுற்றிலும் எக்கச்சக்கமான wormhole கள் என்னும் புழுத் துளைகள் இருந்து கொண்டே இருக்கின்றன என்கிறார் ஹாக்கிங். அப்படியென்றால் எளிதில் இதுபோன்று எங்கு வேண்டுமானாலும் செல்லலாமே ?

முடியாது . இங்குதான் பிரச்சனையே இருக்கிறது தற்போது இருக்கும் wormhole கள் அளவில் மிக மிகச் சிறியவை. எந்த அளவு என்றால், ஒரு சென்டிமீட்டரில், ட்ரில்லியனில் ட்ரில்லியனில் பில்லியன் பாக அளவே

இவை இருக்கின்றன. இதை வைத்துக்கொண்டு எதுவுமே செய்யமுடியாது. இவ்வளவு சிறிய வஸ்துக்களுக்குள் எப்படி மனிதன் நுழைய முடியும்?

இவை எங்கே இருக்கின்றன? க்வாண்டம் மெகானிக்ஸில் " Quantum Foam " என்ற ஒரு பதம் உண்டு. அதாவது எந்தப் பொருளுக்குள்ளும் அடிப்படையாக இருக்கும் ஒரு துகள். சரி , இதனை எப்படி அளப்பது? மனிதர்களால் அளக்கக்கூடிய அளவைகளில் இதுவரை இருப்பதிலேயே மிகச் சிறிய அளவு ஒன்றை, Planck Length என்று அழைப்பார்கள். இதை எண்ணிக்கையில் சொல்லவேண்டும் என்றால், 0.00000000000000000000000000000000001 என்று அதனைக் குறிக்கலாம் (டெஸிமல் பாயிண்ட்டுக்குப் பின்னர் 34 ஸைஃபர்கள்). எனவே, இத்தனை சிறிய ஒரு வஸ்துவை நாம் wormhole ஆக உபயோகிக்க முடியாது. கூடவே, இவை உருவானவுடனே அழிந்துவிடுபவை.

இதனால்தான் – இப்படிப்பட்ட குழப்படிகள் நேரலாம் என்பதால்தான், காலப்பயணம் என்பது சாத்தியம் இல்லாத ஒன்று என்றும் விஞ்ஞானிகளால் சொல்லப்படுகிறது.

...ஆனால் மெஞ்ஞானத்தில் சாத்தியப்பட்டிருக்கிறது. அதாவது குவாண்டம் இயல் என்பது நுணுக்கத்திலும் நுணுக்கமான விஷயம் பற்றி விஞ்ஞானத்தால் இன்னும் முடியாவிட்டாலும் மெய்ஞ்ஞானம் அது பற்றி பேசுகிறது தெளிவாகப் பேசுகிறது.

ஜூனைதுல் பாக்தாதி (ரஹ்) அவர்களின் சீடர் ஈராக் தஜ்லா நதியில் சுபுஹ் தொழுகைக்கு பாங்கு கூறியதும் குளிக்கச் செல்கிறார் . ஆடையை கரையில் வைத்து விட்டு ஒரு முங்கு போட்டார் .அவ்வளவுதான் அவர் கண்டம் விட்டு கண்டம் தாண்டி வேறு ஒரு நாட்டில் உள்ள ஆற்றிலிருந்து வெளியேறுகிறார் . ரொம்ப காலமாக அங்கே வாழ்கிறார் . தொழுகிறார் .பல காலமாக நோன்பு நோற்கிறார் .

ஒருநாள் அங்கே யதார்த்தமாக குளிப்பதற்கு அங்குள்ள நதியில் ஒரு முங்கு போடுகிறார் அவ்வளவுதான் அவர் முன்பு குளித்த ஈராக் தஜ்லா நதியில் அதே நாளில் எழுகிறார் .அவர் கரையில் வைத்த துணி கூட அப்படியே இருந்தது. இன்னும் சுபுஹ் தொழகை கூட நடக்கவில்லை .உடனே குளித்து விட்டு தொழுகையில் கலந்து கொள்கிறார் .

இது பற்றி தன் ஷைகான ஜூனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் கூறிய போது " சில சமயம் சாதகருக்கு கூட இப்படியான ஒரு அந்தஸ்து கிடைக்கிறது அதில் கொஞ்ச காலத்தில் பல காலம் வணங்கும் பாக்கியமும் வாய்ப்பும் கிடைக்கிறது .

இந்நிகழ்வு விஞ்ஞானத்தில் சாத்தியமாகிறதா ... என்றால் சாத்தியம்.

எங்கும் விரிந்த அண்டவெளியில் சதாசர்வ காலமும் வெற்றிடத்தில் அணுவுக்குள் அணுவின் நுண்துகள் தோன்றி மறைந்தபடி உள்ளன ஒன்றுமே இல்லாத சூன்யத்தில் இருந்து திடீரென்று ஒரு துகளும் அதன் எதிர் துகளும் ஒரே இடத்தில் தோன்றி ஒன்றுடன் ஒன்று கலந்து பின் ஒன்றை ஒன்று வெட்டிக் கொண்டும் ஒன்றுமே இல்லாத சமநிலையை அடைகிறது .இந்த சமநிலையில் "புழுத் துளை" (warmHole) ஏற்படுகிறது

பூமியில் குறுக்கு வழியில் பயணிப்பது போல் காலத்திலும் ஒரு குறுக்கு வழி உண்டு அதுதான் இந்த புழுத் துளை.

புழுத் துளை வழியாக இன்னொரு காலத்திற்குள் பிரவேசிக்கலாம் முன்பொரு காலத்தில் வாழ்ந்த மக்களோடு வாழலாம் . உங்களின் பாட்டனாரைக் கூட பார்க்கலாம் .

ஜூனனதுல் பாக்காத் சீடருக்கு இந்த புழுத்துளை வழியாக ஒரிரு நொடிப்பொழுதில் பயணத்திருக்கிறார் .மொரீஷியஸ் தீவின் முராரி ஒரு யுகப் பொழுது பயணிக்கிறரோ என்னவோ!

காலம் ஒரு மாய நதி. அது இரு கரைகள் இல்லாமல் கூட நகர்கிறது .சில சமயம் மண்ணிலிருந்து கிளம்பி விண்ணை நோக்கிக் கூட பாய்கிறது !

**இயற்கையின் அதிசயங்கள் 8**

சுழற்காற்று எனும் சூறாவளி




மேற்கிந்தியத்தீவுகளில் சூறாவளி (Hurricane) என்றும், ஐக்கிய அமெரிக்காவில் சுழன்றடிக்கும் சூறாவளி (Tornado) என்றும், ஜப்பான் சீன கடற்கரைப்பகுதிகளில் சூறாவளிப் புயல் (Typoon)என்றும், மேற்கு ஆஸ்திரேலியக் கடற்கரைப் பகுதிகளில் வில்லி வில்லி (Willy Willy) என்றும் இந்தியப் பெருங்கடல் பகுதியில் புயல் (Cyclone) எனப்படுகிறது.

சுழல் காற்று என்பது காற்றின் கொந்தளிப்பால் மேகத் துண்டுகளின் மீது மோதி சுழன்று வானத்திலிருந்து கீழே பூமிக்கு வருகிறது.

இடி மேகத்தின் அடிப்பாகத்தில் ஒரு முண்டு போல் உருவாகி கீழே இறங்கும் போது வளர்ந்து வடிகட்டும் புனல் வடிவை அடைகிறது.

ஆரம்பத்தில் இது தோன்றும் அறிகுறியிலிருந்து, இது சுழற் காற்றாக வளர்ச்சி அடைய மூன்று மணி நேரம் பிடிக்கிறதாம் மிக நுட்பமான கருவிகளைப் பயன்படுத்திபோது கூட ஒரு சுழல் காற்று உருவாவதற்கு 45 நொடிகளுக்கு முன்னதாக கூட கணிக்க முடிவதில்லையாம். இப்படி உருவான சுழல்காற்று தன் வால் பகுதியினால் நிலத்தை தொடும்போதுதான் அழிவை உண்டாக்குகிறது.

சாதாரணமாக ஒரு சுழல் காற்றின் இயல்பான குணம் அது சுழலும்போது எழுப்பும் உறுமல் ஒலியே ஆகும். 1000 சிங்கங்களின் கர்ஜனை போல் அதன் உறுமல் சப்தம் இருக்கும் என்கிறார்கள் அறிவியலாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

மனிதர்களால் செய்யப்படும் விளைவுகளால் செயற்கைச் சூழ்நிலையின் காரணமாகவும் சுழற்காற்றுகள் ஏற்படுவது உண்டு.1945 இல் இரண்டாவது உலகப்போரின் இறுதியில் அமெரிக்கா ஜப்பானில் ஹிரோஷிமா, நாகசாகி இடங்களில் அணுகுண்டு வெடித்தபோது, ஹிரோஷிமாவை ஒரு சுழல் காற்று பாதித்தது.

அணுகுண்டு வெடிப்புக்குப் பிறகு நகரங்களில் ஏற்பட்ட மிகுந்த வெப்பத்தால் அது உருவாகியது .அருகில் இருந்த நதியின் தண்ணீரை சுழற்காற்று மேலே தூக்கிக் கொண்டு சென்று அந்த உடனேயே நீராவியாக மாற்றி தண்ணீரை கீழே கொட்டி நெருப்பை அணைத்தது.

ஒரு சமயம் தில்லியில் சுழல்காற்று அடுத்த சமயம் ஒரு விஞ்ஞானி வழக்கத்திற்கு மாறாக அந்த இடத்தில் மிக அதிகமாக கதிர்வீச்சு இருப்பதை பதிவு செய்தார். இதற்குரிய காரணத்தை ஆய்வு செய்தபோது வானவெளிகளுக்கு அப்பால் அதிக கதிர்வீச்சைப் பயன்படுத்தி பறக்கும், பறக்கும் தட்டின் மிக வேகமான நகர்வும் காரணமாகலாம் என்கிறார்.ஆக சுழற்காற்றுக்கும் அணுக்கதிர் வீச்சுக்கும் தொடர்பு இருக்கிறது

பம்பாயில் உள்ள வானிலை ஆராய்ச்சி நிலைய இயக்குனர் டாக்டர் முக்கர்ஜி ஒரு நிகழ்ச்சியைக் கூறினார்.

"சுழல்காற்று ஓரிடத்தில் அடித்த சமயம். அதன் நகரும் பாதையிலிருந்து கடந்து போக இயலாததால் தரையில் படுத்துக் கிடந்த ஒருவரை அந்தச் சுழற்காற்று அவர் இருந்த இடத்திலிருந்து தரைக்கு மேலே தூக்கி வீசியதை நேருக்கு நேர் பார்த்ததாக கூறுகிறார் . பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்த அவர் உண்மையில் சுழற்காற்றின் மையத்தை புனல் வடிவ அமைப்பின் கீழ் பாகத்தில் குறுகிய பகுதியில் வழியாக நேரில் பார்த்தாராம்.பலத்த காயங்களுடன் தப்பினர்.

அரபு பாலைவனத்தில் தென்மேற்கில் அர்ருப்உல் காலீ எனும் பகுதிக்கும் ஹலரமௌத் எனும் ஊருக்கும் மத்தியில் அமைந்துள்ள பகுதியைத்தான் மக்கள் "அஹ்காஃப் " என்று கூறுகின்றனர்.அம்மக்கள் ஆது சமுதாயத்தவர்கள் அவர்களுக்கு வந்த நபி ஹூது (அலை)

ஆது மக்கள் வாழ்ந்த பூமி மூன்று பாகங்களிலும் மலையால் சூழப்பட்டு இருந்தது. நான்காவது பாகத்தில், " நாங்கள் ஏழு லட்சம் பேர்களும் மலைபோன்று நின்று கொள்வோம். அதன் பின் காற்று வந்து, எங்கே நுழைந்து, எங்களை எப்படி அழிக்கப் போகிறது என்று எகத்தாளமாக அவர்களின் நபியாகிய ஹூத் (அலை) அவர்களிடம் கூறினார்கள் ஆது மக்கள்.

அன்று ஷவ்வால் மாதத்தின் இறுதிப் புதனாக இருந்தது. மறு புதன் வரை காற்று 8 நாட்கள் தொடர்ந்து அடித்தது.

ஆது மக்கள் மீது வீசிய காற்று முதலில் மாட்டின் மூக்குத்துளை அளவிற்கு வெளிப்பட்டது . அப்பொழுது காற்றின் அதிபதியான வானவர் மீக்காயீல் (அலை) அவர்கள் இறைவனை நோக்கி," இந்த அளவு காற்று வீசினால் பூமி இடம் மாறிபின் முழுவதும் அழிந்து விடும் " .

எனவே காற்றை மோதிர வளைய அளவிற்கு வெளிப்படுமாறு இறைவன் பணித்தான். சில வரலாற்று ஆய்வாளர்கள் ஊசி துளை அளவு என்கிறார்கள்.

தெருவிலே சென்று கொண்டிருந்த கன்றுகாலிகளை வானிலே வெட்டுக்கிளியை போல் பறக்க விட்டு பின்னர் மலையில் மோதி கொன்றொழித்தது காற்று. தெருவிலே சென்ற ஆது மக்களையெல்லாம் வானில் பட்டம் போன்று பறக்க விட்டு சற்று பின் நிலத்தில் தூக்கியடித்து அழித்தொழித்தது காற்று .ஆது மக்கள் சுழற்காற்றால் அழிக்கப்பட்டதாக திருக்குர்ஆன் கூறுகிறது

அவர்கள் மீது, அதை ஏழு இரவுகளும், எட்டுப் பகல்களும் தொடர்ந்து வீசச் செய்தான்; எனவே அந்த சமூகத்தினரை, அடியுடன் சாய்ந்துவிட்ட ஈச்சமரங்களைப் போல் (பூமியில்) விழுந்து கிடப்பதை (அக்காலை நீர் இருந்திருந்தால்) பார்ப்பீர். (குர்ஆன் : 69:7)

சூறாவளியைப் பற்றி இன்பகரமானச் செய்தி,1940 ல் ஒரு சுழற்காற்றானது அடித்த வேகத்தில் பூமியின் அடியில் புதையுண்டிருந்த பணப்பெட்டியை வெளியில் தூக்கிக் கொண்டு வந்து, ருஷ்ய விவசாயின் மேல் வெள்ளி கோபக்குகளாக ( ருஷ்ய நாணயங்களாக ) பொழிந்தது.

ரஹ்மத் ராஜகுமாரன்.

## இயற்கையின் அதிசயங்கள் 9

ஈர்ப்பு விசை



யானை முதல் பூனை வரை , நாம எல்லாரும் எப்படி நிலத்தில் நிலையாக நிற்கிறோம்? நடக்கிறோம்?

உலகம் உருண்டை. அது சுற்றிக்கொண்டிருப்பதாக இருந்தும் எப்படி நாம கீழே விழாமல் நிலையாக இருக்க முடிகிறது? பூமியை விட்டு வெளியே பறந்து போய்விடாமல் எப்படியிருக்கிறோம்?

நிலா எப்படி பூமியைச் சரியாக 28 நாள்களில் சுற்றி வருகிறது? இது எல்லாவற்றுக்கும் ஒரே பதில் புவியீர்ப்பு விசை.

ஒரு பொருள் இன்னொரு பொருளை தன்னகத்தே தக்கவைக்க ஒரு சக்தியைப் பயன்படுத்தும். அதற்குப் பெயர்தான் விசை. ஒரு காந்தம் இரும்பு மேல் செலுத்தும் விசையைக் காந்த விசை என்று சொல்லுவோம். அதே இந்தப் பூமி அதன் மேலே இருக்கும் பொருள்கள் மேல் ஏற்படுத்தினால் அதற்குப் பெயர் புவிஈர்ப்பு விசை. அவ்வளவுதான்.

பூமிக்கு ஈர்ப்பு விசை இயற்கையிலேயே உள்ளது.எல்லா பொருட்களையும் தன்னை நோக்கி இழுக்கும். அதனால்தான் வானத்தை நோக்கிக் ஒரு பொருளைப் போட்டால்,அது பூமியில் விழுகிறது.

பூமியின் மேற்பரப்பில் கடல், ஏரி, குளங்கள் போன்ற பல நீர்நிலைகள் உள்ளன. அவை எதுவும் பூமியின் சுழற்சி வேகத்தில் சிதறி விடுவதில்லை. அவ்வாறு சிதற விடாமல் தடுப்பது இந்த புவியீர்ப்பு சக்திதான்.

பூமியின் ஈர்ப்பு சக்தி என்பது மிகவும் முக்கியமானது. அந்த ஈர்ப்பு சக்தியினால்தான் பூமியிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் எடை உண்டாகிறது.

இது உண்மையா ? பூமியின் ஈர்ப்பு சக்தி இல்லையென்றால், பொருள்களுக்கு எடை இருக்காதா என்ற ஐயப்பாடு எழலாம்.

உண்மைதான் ! பூமியின் ஈர்ப்பு சக்தியினாலேயே பொருள்களுக்கு எடை உண்டாகிறது. இந்த ஈர்ப்பு சக்தி பூமியின் ஒரு குறிப்பிட்ட உயரத்துக்கு மேல் சென்று விட்டால் இருக்காது .வானத்தில் உயர்ந்து செல்ல செல்ல பொருளின் எடை குறைந்துவிடுகிறது. பூமிக்கு ஈர்ப்பு சக்தி இருப்பது போன்று சூரியனுக்கும் உள்ளது ஏனைய கிரகங்களுக்கும் உள்ளது அதனால் தான் வானவெளியில் ஒவ்வொரு கிரகங்களும் தத்தம் பாதையை விட்டு விலகாமல் ஒழுங்கான நிலையில் சூரியனைச் சுற்றி வருகின்றன.

اَلشَّمْسُ وَالْقَمَرُ بِحُسْبَانٍ

சூரியனும் சந்திரனும் (அவைகளுக்கு இறைவன் ஏற்படுத்திய) கணக்கின்படியே (செல்கின்றன). (அல்குர்ஆன் : 55:5)

இந்த ஈர்ப்பு சக்தி பூமியின் ஒரு குறிப்பிட்ட உயரத்துக்கு மேல் சென்று விட்டால் இருக்காது .வானத்தில் உயர்ந்து செல்ல செல்ல பொருளின் எடை குறைந்துவிடுகிறது என்பது உண்மை. ஆனால் மஹஷர் வெளியில் மீஸான் தராசில் நன்மை,தீமை எடை போட அங்கே ஈர்ப்பு விசை கண்டிப்பாக இருக்கும்.

நன்மை தீமைகள் நிறுக்கப்படும்போது,சிலருக்கு இரண்டும் சமமாக இருக்கும் . காசை சுண்டி பூவா ? தலையா ? போட்டு பார்க்கும் போது காசு பூவையும் காட்டாமல் , தலையையும் காட்டாமல் நெட்டுக்கு நின்றால் எதை எடுத்துக் கொள்வது ?

இந்த மாதிரி நிலை மீஸானில் எடை போடும் போது , தராசின் முனைமுள் எந்தப் பக்கமும் சாயாமல் நட்ட நடுவில் நின்று விடும் .

அப்போது அவர்கள் தம்தம் நன்மை தட்டுக் கனப்பதற்காக ஒரேயொரு நன்மை இல்லாமல் தயங்குவார்கள் .

அல்லாஹுதஆலா அந்த ஒவ்வொருவரையும் பார்த்து...,

"ஜனங்களிடத்தில் போய் ஒரே ஒரு நன்மையைக் கேட்டு வாங்கு, அதைக் கொண்டு நான் உன்னை சுவர்க்கம் நுழைய செய்கிறேன் "

உடனே அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் போய்க் கேட்பார்கள்.

" ஒரே ஒரு நன்மை! .ஒரே ஒரு நன்மை !"

அப்போது எல்லோரும், "ஒரு சிறு நன்மையானாலும் அது எங்களுக்கு வேண்டியது . ஆகையால் தரமாட்டோம்" என்று சொல்லி விடுவார்கள் . பின்பு அங்கே ஒருவன் ஒரே ஒரு நன்மையைக் கேட்டு அலைபவர்களை பார்த்து , அவர்களில் ஒருவரைக் கூப்பிட்டு ...,

" என் பட்டோலையில் நான் செய்ததாக ஒரே நன்மைதான் உண்டு. அதைக் கொண்டு நான் என்ன சுவர்க்கமா செல்ல முடியும் ? ஆகையால் அதை ஹதியாவாக உனக்கு கொடுத்து விடுகிறேன் . எடுத்துக் கொள் .நீயாவது சுவர்க்கம் செல் "

உடனே அதைப் பெற்றுக் கொண்டு மீஸான் பக்கம் திரும்பி ஓடோடி வருவார் அவரிடம் அல்லாஹு தஆலா , " உனக்கு ஒரே ஒரு நன்மையை ஹதியாவாகக் கொடுத்தவனை அழைத்து வா " என்று கூறுவான் .

அவன் வந்ததும் .., அந்த ஒரே ஒரு நன்மையைக் கொடுத்தவனிடம் அல்லாஹு தஆலா : " என்னுடைய கொடை உன்னுடைய கொடையைப் பார்க்கிலும் மஹா பெரியது என்பதை நீயும் அறிந்து கொள்ள, ஒரே ஒரு நன்மையைக் கொடுத்த நீயும், அதை ஹதியாவாகப் பெற்ற பெற்ற அவனும் சுவர்க்கத்திற்குள் நுழையுங்கள் "

ரஹ்மத் ராஜகுமாரன்

## இயற்கையின் அதிசயங்கள் 10

(உலகின் அதிசய நீரூற்று - ஜம் ஜம்)



ஜம் ஜம் நீர் பசியைப் போக்கும்; நோயைக் குணப்படுத்தும்; பிரார்த்தனையை நிறைவேற்றும்!

மக்காவில் தெளிவான அத்தாட்சிகள் உள்ளன என்று இவ்வசனம் (3:97) கூறுகிறது.

இப்ராஹீம் நபி அவர்கள் தமது மனைவி ஹாஜர் அவர்களையும், மகன் இஸ்மாயீலையும் மக்கள் குடியிருக்காத வெட்ட வெளியில் இறைவனின் கட்டளைப்படி குடியமர்த்தினார்கள். குழந்தை இஸ்மாயீல் தண்ணீரின்றி தத்தளித்தபோது வானவர் ஜிப்ரீல் வந்து அந்த இடத்தில் அடித்து ஒரு நீரூற்றை ஏற்படுத்தினார். அது தான் ஜம்ஜம் எனும் கிணறாகும். அந்த இடம் தான் பின்னர் ஊராக வளர்ந்த மக்கா நகராகும்.

இந்தக் கிணறு மாபெரும் அற்புதமாகவும், இஸ்லாம் உண்மை மார்க்கம் என்பதை நிரூபிக்கும் சான்றாகவும் இருக்கிறது.

இந்தக் கிணறு 18 அடி அகலமும், 14 அடி நீளமும் கொண்டதாகும்.இந்தக் கிணற்றில் தண்ணீரின் ஆழம் எப்போதும் சுமார் ஐந்து அடியாகும்.

இந்தக் கிணற்றில் இருந்து ஒவ்வொரு விநாடியும் தண்ணீர் இறைக்கப்பட்டுக் கொண்டே உள்ளது. வருடத்தின் எல்லா நாட்களிலும் மக்கள் அங்கே குழுமுகிறார்கள். ஹஜ் காலத்திலும், ரமளான் மாதத்திலும் தினமும் சுமார் 30 லட்சம் மக்கள் அங்கே குழுமுகிறார்கள். அனைவருக்கும் இந்தக் கிணற்றில் இருந்து தான் குடிநீர் வினியோகிக்கப்படுகிறது

ஜம் ஜம் தண்ணீரின் வரலாறு நபி இஸ்மாயீல் (அலை) பிறந்த காலத்திலிருந்து தொடங்குகிறது. ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக தோன்றி இன்று வரை சுரந்துகொண்டிருக்கும் ஊற்று அது. முதன்முதலாக அது பூமியில் பீறிட்டு வெளியாகி ஓடத் தொடங்கியபோது, இஸ்மாயீலின் தாய் ஹாஜர் (அலை) அவர்கள் ‘ஜம் ஜம்’ என்று சொல்லிக்கொண்டே அதை ஓட விடாமல் பாத்திக் கட்டித் தடுத்தார்கள். ஜம் ஜம் என்றால், 'நில் நில்' எனப் பொருள். அதுவே இதன் பெயராக ஆகிவிட்டது.

பெருக்கெடுத்துச் சுரக்கும் அந்த ஊற்று நீரைத் தமது கைகளால் தடுத்து அணை கட்டினார் ஹாஜர். அது பின்னர் ஒரு கிணறாக மாறியது. இன்றும் அந்தக் கிணற்றிலிருந்து தொடர்ச்சியாக இயந்திரங்கள் மூலம் நீர் எடுக்கப்படுகிறது. லட்சக்கணக்கான மக்கள் அதைக் கேன்களில் எடுத்துக்கொண்டு உலகம் முழுதும் செல்கிறார்கள். கோடிக்கணக்கான மக்கள் அதைப் புனிதமாகப் பருகி இறையருளைத் தேடுகிறார்கள்.

ஹாஜர் (அலை) அந்த ஊற்றுக்குப் பாத்தி கட்டியபோது `மக்கா' எனும் நகரமே உருவாகி இருக்கவில்லை. மரம் செடிகொடிகளோ மனிதர்களோ இல்லாத பொட்டல் வெளிப் பாலைவனம் அது. பூமியின் முதல் இறையில்லமான கஃபா ஒரு மேடு போல் அங்கிருந்தது. அதற்கு அருகில்தான் நபி இப்ராஹீம் (அலை)

அவர்கள் தமது மனைவி ஹாஜரையும் கைக்குழந்தை இஸ்மாயீலையும் இறைக்கட்டளைப்படி தன்னந்தனியே விட்டுச் சென்றார்கள்.

அவர் போன பிறகு கைவசம் இருந்த உணவும் தண்ணீரும் தீர்ந்துவிட்ட ஒரு சமயத்தில் குழந்தை அழுகின்றது. ஹாஜர் (அலை) தமக்கு அருகில் இருந்த ஸஃபா, மர்வா ஆகிய இரண்டு மலைக் குன்றுகள் மீதும் ஏறி இறங்கி, எங்காவது தண்ணீர் தென்படுகிறதா என்று தவிக்கிறார்கள். அந்தக் குன்றுக்கும் இந்தக் குன்றுக்குமாக ஏழு தடவை ஏறி இறங்கிவிட்டார்கள்.

குழந்தை இஸ்மாயீல் (அலை) அவர்கள் பசியில் துடித்தபடி கால்களை உதைத்துக்கொண்டு பாலைவன மணலில் கிடந்த அந்தத் தருணத்தில்தான் அவர்களின் கால்களுக்கு அடியிலிருந்து ஊற்றுப் பிறந்தது. இறை உதவி வந்துவிட்டது.

ஹாஜர் (அலை) அதைக் கண்டு மகிழ்ந்து அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தியபடி அந்த ஊற்றை நோக்கி ஜம் ஜம் (நில் நில்) என்றவாறு பாத்தி கட்டினார்கள்.

`ஹாஜர் அப்போது அதைத் தடுத்து பாத்திக் கட்டாமல் விட்டிருந்தால், இந்த ஊற்று மறுமைநாள் வரை உலகம் முழுவதும் ஓடக்கூடிய ஆறாக ஆகியிருக்கும்' என்று ஒரு நபிமொழியில் கூறப்பட்டுள்ளது. (ஸஹீஹுல் புகாரீ)

இந்தத் தண்ணீரின் சிறப்புகளை நபிமொழிகளில் அதிகம் காண முடிகிறது. மற்ற நீரெல்லாம் தாகம் தீர்ப்பதற்கே பயன்படும். ஆனால், ஜம் ஜம் பசியைப் போக்கும்; நோயைக் குணப்படுத்தும்; பிரார்த்தனை ஏற்கப்படக் காரணமாக அமையும்.

நபிகளார் (ஸல்) கூறினார்கள்: இந்தத் தண்ணீர் அருள் வளம் (பரக்கத்) நிரம்பியதாகவும் உணவாகவும் நோய்களுக்கு நிவாரணமாகவும் இருக்கின்றது.

அபூதர் (ரலி), ஸஹீஹ் முஸ்லிம் 6513, தயாலிஸி 459)

மற்றோர் அறிவிப்பில், 'பூமியில் உள்ள எல்லா நீரை விடவும் இந்த நீர் சிறந்தது' என்றும் கூறப்பட்டுள்ளது.

இப்னு அப்பாஸ் (ரலி), தப்ரானீ 11167, அஸ்ஸஹீஹா 1056)

நபித்தோழர் அபூதர் கிஃபாரீ (ரலி) கூறுகிறார்:

நான் மாதத்தின் முப்பது நாள்களும் ஜம் ஜம் நீரைத்தான் அருந்துவேன். நான் இந்த நீரைத் தவிர வேறு உணவு எதையும் உட்கொள்ள மாட்டேன். அதனால் நான் மிகவும் குண்டாகிவிட்டேன். என் வயிற்றில் சதை வைத்துவிட்டது. அதனால் என் வயிற்றில் பசியே உணராமலிருந்தேன்). (ஸஹீஹ் முஸ்லிம் 6513)

இதைப் பருகும்போது செய்யப்படும் பிரார்த்தனை ஏற்கப்படும் என்பதைப் பின்வரும் நபி மொழி உணர்த்துகிறது.

அதாவது, நீங்கள் அதனை நிவாரணத்துக்காகப் பருகினால் நிவாரணத்தைப் பெறுவீர்கள். நீங்கள் அதனை அல்லாஹ்விடமிருந்து பாதுகாவல் தேடுவதற்காகப் பருகினால், அல்லாஹ்விடமிருந்து பாதுகாவல் பெறுவீர்கள். நீங்கள் அதைத் தாகத்துக்காகப் பருகினால் தாகம் தீர்க்கப்படுவீர்கள்.

இப்னு அப்பாஸ் (ரலி), முஸ்தத்ரக் ஹாகிம் 473/1, லயீஃபு இப்னுமாஜா 4972)

நபியவர்கள் தோல் பைகளில் ஜம் ஜம் நீரை எடுத்துச்சென்று, அதை நோயாளிகளுக்கு அருந்தக் கொடுப்பவர்களாக, அந்த நோயாளிகள் மீது ஊற்றுபவர்களாக இருந்தார்கள்.

உர்வா இப்னுல் சுபைர் (ரலி), பைஹகீ 9768, அஸ்ஸஹீஹா 883)

இவ்வாறே அன்னை ஆயிஷாவும் இந்த நீரை எடுத்துச் செல்பவராக இருந்தார். அவரிடம் இது குறித்துக் கேட்கப்பட்டபோது, 'நபியவர்களும் இவ்வாறே எடுத்துச் செல்பவர்களாக இருந்தார்கள்' என்று கூறினார்.

(ஜாமிவுத் திர்மிதீ 963)

நபியவர்கள் இந்த நீரை மிகவும் விரும்புவார்கள். மதீனாவில் இருந்தபோது இந்த நீரைக் கேட்டு மக்காவுக்கு ஆள் அனுப்புவது அவர்களின் வழக்கம்.

சுஹைல் இப்னு அம்ருக்குப் பின்வருமாறு கடிதம் எழுதினார்கள், 'எனது இந்தக் கடிதம் உமக்கு இரவில் கிடைத்துவிட்டால், நீ பகல்பொழுதை அடைவதற்குள் ஜம் ஜம் நீரை அனுப்பிவிட வேண்டும். கடிதம் பகலில் கிடைத்தால், மாலைப்பொழுதை அடைவதற்குள் நீரை அனுப்பிவிட வேண்டும். தாமதம் செய்துவிடாதே' என்று குறிப்பிடுகிறார்.

சுஹைல் இரண்டு தண்ணீர்ப் பைகள் நிறைய நீரை நிரப்பி அவற்றை ஓர் ஒட்டகத்தில் வைத்து அனுப்பி வைத்தார். (பைஹகீ 202/5)

மேற்கண்ட ஹதீஸ்களிலிருந்து இந்த நீர் நோய்களுக்கு நிவாரணமாகக் கொடுக்கப்படுகிறது என்பதை அறிந்துகொள்ளலாம். இந்த நீரை எந்த நோக்கத்துக்காக ஒருவர் குடிப்பாரோ அந்த நோக்கம் அவருக்கு நிறைவேறும்.

இந்த நீரின் சிறப்பு அதன் இடத்தோடு தொடர்புடையதல்ல. அதன் நீருக்கே உரியதாகும். இதனால்தான் நல்லோர்கள் ஹஜ்ஜிலிருந்து திரும்பும்போது நபியவர்களைப் பின்பற்றி இந்த நீரைத் தங்கள் ஊர்களுக்குக் கொண்டு செல்கிறார்கள்.

இந்த விஷயங்களுக்கு மட்டுமின்றி நோய்களுக்குக் குறிப்பான மருந்தாகவும் இந்த நீர் புகட்டப்படுகிறது. உதாரணமாக, நபியவர்கள் காய்ச்சலுக்கு மருந்தாக நீரைப் புகட்டியிருக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'காய்ச்சல் நரகத்தின் மூச்சுக் காற்றாகும். எனவே, அதனைத் தண்ணீராலோ ஜம் ஜம் நீராலோ குளிர்ச்சியாக்குங்கள்'.

இப்னு அப்பாஸ் (ரலி), ஸஹீஹுல் புகாரீ 3261

ஜம் ஜம் நீரை அவர்மீது தெளிக்க வேண்டும், அல்லது அவரது ஆடையில் தெளித்துச் சிகிச்சை செய்ய வேண்டும்.

அஸ்மா பின்த் அபூபக்கர் (ரலி.) அவர்களிடம் காய்ச்சல் கண்ட பெண்மணி யாரேனும் கொண்டுவரப்பட்டால், அவருக்காகப் பிரார்த்தனை செய்வார். தண்ணீரை எடுத்து அப்பெண்ணின் ஆடையிலும் உடலிலும் ஊற்றுவார். அவர் கூறுவார், 'நபியவர்கள் தண்ணீர் மூலம் காய்ச்சலைக் குளிர்ச்சியடையச் செய்யுமாறு எங்களை ஏவினார்கள்'

(ஸஹீஹுல் புகாரீ 5724, ஸஹீஹ் முஸ்லிம் 2211) என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதிலிருந்தே இதன் மகத்துவத்தை அறிந்து கொள்ளலாம்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**இயற்கையின் அதிசயங்கள் 11**

மாயத் தோற்றம்.



வெயில் காலங்களில் கானல் நீரை அடிக்கடி பார்த்திருப்பீர்கள். கானல் நீர் என்பது, நம் கண்கள் செய்யும் பிழையா, கற்பனை செய்யும் பிழையா என்றால் இரண்டுமில்லை. கானல் நீருக்குக் காரணம் இயற்பியல் நடத்தும் இயற்கையின் மாய விளையாட்டுதான்.

இந்தக் கானல் நீர் எப்படித் தோன்றுகிறது?

பொதுவாகப் பாலைவனங்களில் மட்டும்தான் கானல் நீர் தோன்றுவதாக நாம் நினைக்கிறோம். அப்படியல்ல; சூரியனின் வெப்பம் தகிக்கும் எல்லா இடங்களிலும் இந்தக் கானல் நீர் தோன்றும்.

வெப்பம் மிகுந்த தார்ச்சாலைகளில்கூடத் தண்ணீர் பரவி ஓடுவது போன்ற காட்சியை நீங்கள் பார்த்திருக்கலாம். தார்ச்சாலையில் ஏதோ தண்ணீர் லாரி தண்ணீரைக் கொட்டிச் சென்றிருக்கலாம் என்றுகூட நாம் நினைத்திருப்போம். அருகில் சென்று பார்க்கும்போதுதான் தெரியும், அத்தனையும் மாயம் என்று.

நல்ல மதிய வெயில் நேரத்தில் தார்ச்சாலையில் நடந்து செல்லும்போதும், வாகனங்களில் செல்லும்போதும்கூடத் தண்ணீர் ஓடுகிற (பொய்) தோற்றத்தைப் பார்க்க முடியும்.

சரி, இயற்கை நம்மை எப்படி இப்படி ஏமாற்றுகிறது?

தரையை ஒட்டிய பகுதியில் அழுத்தம் குறைவான காற்று அடுக்கும், இந்த அழுத்தம் குறைவான காற்று அடுக்கிற்கு மேலே அதிக அழுத்தமுள்ள காற்று அடுக்கும் உருவாகும்போது மணல் தரையானது கண்ணாடி மாதிரியான தன்மையைப் பெற்று விடுகிறது.

அதாவது அழுத்தம் குறைவான காற்றடுக்கின் மீது அதிக அழுத்தம் உள்ள காற்று அடுக்கு வரும்போது, இந்தக் கானல் நீர், தெரிகிறது. நாம் தரையைப் பார்க்கிற கோணமும், கானல் நீர் தோற்றத்திற்கு முக்கிய பங்கு வகிக்கிறது.

இப்படியும் சொல்லலாம், பொருட்களிலிருந்து வரும் ஒளிக்கதிர்கள் தரையில் பட்டு வளை கோணத்திலேயே எதிரொளிக்கின்றன. நாம் பார்க்கிற கோணம் செங்குத்தாகவோ, நேர்க்கோட்டுக் கோணமாகவோ இருந்தால், கானல் நீர் தோன்றுகிறது.

தார்ச்சாலைகளில் கானல் நீர் காணப்படுவதற்கும், வெப்பமும், கோணமும்தான் காரணம். தார்ச்சாலைகள் கறுப்பாக இருப்பதால் அதிகமாகச் சூடாகின்றன. கறுப்பான பொருட்கள் அதிக வெப்பத்தை ஈர்க்கும் என்பது தெரிந்த விஷயம்தான்.

தார்ச்சாலைகளில் மேற்பரப்பில் அதிக வெப்பம் உருவாகிக் காற்றின் எடை குறைகிறது. இந்தக் குறைவான காற்று அடுக்கின் மேல் சற்றுக் கூடுதலான அழுத்தம் கொண்ட காற்று அடுக்கு உருவாகிறது. எனவே கானல் நீர் தோன்றுவதற்கான காற்றடுக்கு சூழல் தார்ச்சாலைகளில் அடிக்கடி உருவாகிவிடுகிறது.

மிக முக்கியமான விளக்கம் ஒன்று இங்கு தேவைப்படுகிறது.

கானல் நீர் தோன்றுவதற்குத் தரையை ஒட்டிய அடியடுக்கில் அழுத்தம் குறைந்த, எடை குறைந்த காற்று இருக்கிறது. இந்த அடுக்கிற்கு மேல்தான் எடை அதிகமான அழுத்தம் அதிகமான காற்று அடுக்கு இருக்கிறது. இது ஆச்சரியமான விஷயம்.

எடை அதிகமான காற்று எப்படி எடை குறைந்த காற்றுக்கு மேலே இருக்க முடியும்? நல்ல கேள்வி! முக்கியமான கேள்வி! காற்று இயங்கிக்கொண்டே இருக்கிறது. அடர்த்தி அதிகமாக இருக்கும் காற்று சூடாக்கப்பட்டு மேலே செல்வது என்பது தொடர்ச்சியாக, சுழற்சியாக நடந்துகொண்டே இருக்கிறது. எனவே பாலைவன மணல் மேற்பரப்பில், தார்ச்சாலைகளின் மேற்பரப்பில், கீழ் அடுக்கில் அடர்த்தி குறைவான காற்று குறைந்த அளவில் இருந்துகொண்டே இருக்கும்.

இப்போது புரிகிறதா? அதிகமான வெப்பம், காற்று அடுக்கில் ஏற்படுத்தும் அழுத்த மாறுபாடு, நாம் தரையைப் பார்க்கிற கோணம் ஆகியவைதான் கானல் நீருக்குக் காரணம்.

இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் …

“செயல்களில் நஷ்டமடைந்தோரைப் பற்றி நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” என்று கேட்பீராக!

இவ்வுலக வாழ்க்கையில் அவர்களின் முயற்சி வீணாகி விட்டது. அவர்களோ தாங்கள் அழகிய செயல் புரிவதாக நினைக்கின்றனர். அல்குர்ஆன் (18:103, 104)

இவர்கள் செய்கின்ற இந்த வணக்கங்களை கானல் நீர் என்று கீழ்கண்ட வசனம் கூறுகின்றது. இந்தக் கானல் நீரை தண்ணீராகக் காண்பவர்கள் மாபெரும் நஷ்டவாளிகள்!

وَالَّذِيْنَ كَفَرُوْۤا اَعْمَالُهُمْ كَسَرَابٍ بِقِيْعَةٍ يَّحْسَبُهُ الظَّمْاٰنُ مَآءً حَتّٰۤى اِذَا جَآءَهٗ لَمْ يَجِدْهُ شَيْــٴًـــا وَّ وَجَدَ اللّٰهَ عِنْدَهٗ فَوَفّٰٮهُ حِسَابَهٗ ‌ؕ وَاللّٰهُ سَرِيْعُ الْحِسَابِ ۙ

அன்றியும், எவர்கள் இறை மறுப்பவராக இருக்கிறார்களோ, அவர்களுடைய செயல்கள் பாலைவனத்தில் (தோற்றமளிக்கும்) கானல் நீரைப் போலாகும்;

தாகித்தவன் அதைத் தண்ணீரென்றே எண்ணுகிறான் - (எது வரையெனில்) அதற்கு (அருகில்) அவன் வரும்பொழுது ஒரு பொருளையும் (அங்கே) காணமாட்டானே (அது வரை);

ஆனால், அங்கு அவன் அல்லாஹ் (அவனுக்கு விதித்திருக்கும் முடி)வை(யே) காண்கின்றான்; (அதன் படி அல்லாஹ்) அவன் கணக்கைத் தீர்க்கிறான்; மேலும், அல்லாஹ் கணக்குத் தீர்ப்பதில் துரிதமானவன். (அல்குர்ஆன்: 24:39)

ரஹ்மத் ராஜகுமாரன்

## இயற்கையின் அதிசயங்கள் 12

தவறாது சுழலும் பூமி



இந்த பூமி உருண்டை வடிவமானது. இது தன்னைத்தானே சுற்றிக் கொண்டு சூரியனையும் சுற்றி வருகிறது; அதனால் ஏற்படுவதே இரவும் பகலும் .

ஒரு சமயம் சூரிய ஒளி ஒருபக்கமாக விழும் அந்த பகுதி வெளிச்சமாக இருக்கும் அதையே பகல் என்கிறோம்.

அதே சமயம் பூமியின் மறு பக்கத்தில் சூரிய ஒளி விழாது அதனால் அப்பக்கத்தில் இருட்டாக இருக்கும். அதையே இரவு என்கிறோம்.

இவ்வாறு உருண்டையாக இருப்பதால், ஒரு பக்கம் பகலாகும் மறுபக்கம் இரவாகும் இருக்கிறது.அத்துடன் பூமி தன்னைத்தானே சுழற்றி வருவதால் ஒளிபடும் பகுதியும் ஒளிப்படாத பகுதியும் மாறிமாறி ஏற்படுகிறது. இதனால் ஒரே நாளில் பகலும் இரவும் மாறி மாறி ஏற்படுகிறது.

நமது பூமியிலிருந்து சூரியனைப் பார்க்கும்போது, சூரியன் கிழக்கில் உதித்து மேற்கில் மறைகிறது போன்று தோன்றும்.

ஆனால் உண்மையில் சூரியன் நகரவில்லை. பூமிதான் மேற்கிலிருந்து கிழக்காக சுழன்று வருகிறது. இவ்வாறு சுழலும்போது பூமியின் ஒவ்வொரு பகுதியும் வெளிச்சத்திற்கு வருவதும், இருளுக்குச் செல்வதுமான அதிசயம் நிகழ்கிறது.

பூமியின் சுழற்சியின் தன்மையால் இன்னும் பல அதிசயங்களும் நிகழ்கின்றன.

பூமி நேராக இல்லை. அதன் அச்சில் 23.5 டிகிரிக்கு சாய்ந்த நிலையிலேயே சூரியனைச் சுற்றி வருகிறது.

இவ்வாறு சாய்ந்து இருப்பதால், பூமியின் வட துருவம் சூரியனை நோக்கிச் சாய்ந்திருக்கும். இதே நிலை ஆறு மாதங்கள் நீடிக்கும். அதாவது ஜூன் மாதம் முதல் நவம்பர் மாதம் வரை இருக்கும்.இந்த ஆறு மாதங்களிலும் பூமியில் வட துருவ பகுதியில் கோடை காலமாக இருக்கும்.

அப்பகுதியில் சூரியன் மறைவதே இல்லை. அந்த ஆறு மாதங்களும் பகலாகவே இருக்கும். இரவைக் காண முடியாது.

அதேசமயம் வட துருவத்திற்கு எதிரான தென்துருவம் சூரியனுக்கு எதிர்புறம் மறைந்திருக்கும். அப்பகுதியில் மேற்கூறிய ஆறு மாதங்கள் வரை இரவாகவே இருக்கும். குளிர்காலமாக இருக்கும்.ப கலைக் காண முடியாது.

அடுத்து டிசம்பர் முதல் மே மாதம் வரைக்குமான ஆறு மாதங்கள் தென் துருவம் சூரிய நோக்கியும், வடதுருவம் எதிர் பருவத்திலும் மாறியிருக்கும்.

அச்சமயம் தென்துருவம் கோடை காலமாக பகல் பொழுதாகவே இருக்கும். வடதுருவம் அதற்கு நேர்மாறாக இரவாகவே இருக்கும்.

பூமிக்கு இப்படியொரு நீண்ட பொழுதுகளை இறைவன் கியாமத் நாளின் போது ஏற்படுத்துவான் என்பதாக நபி மொழியும் கூறுகிறது .இதையே குர்ஆனில் ,

قُلْ اَرَءَيْتُمْ اِنْ جَعَلَ اللّٰهُ عَلَيْكُمُ النَّهَارَ سَرْمَدًا اِلٰى يَوْمِ الْقِيٰمَةِ مَنْ اِلٰـهٌ غَيْرُ اللّٰهِ يَاْتِيْكُمْ بِلَيْلٍ تَسْكُنُوْنَ فِيْهِ‌ اَفَلَا تُبْصِرُوْنَ

(பின்னும் நபியே!) நீங்கள் கேளுங்கள்: "பகலை இறுதி நாள் வரையில் உங்களுக்கு நீண்டிருக்கும்படி அல்லாஹ் செய்துவிட்டால், நீங்கள் இளைப்பாறக் கூடிய இரவை உங்களுக்குக் கொண்டு வரக்கூடிய இறைவன் அல்லாஹ்வையன்றி வேறொருவன் இருக்கின்றானா?" (இதனை) நீங்கள் (படிப்பினை பெறும் கண் கொண்டு) பார்க்க வேண்டாமா? (அல்குர்ஆன்: 28:72)

وَمِنْ رَّحْمَتِهٖ جَعَلَ لَـكُمُ الَّيْلَ وَالنَّهَارَ لِتَسْكُنُوْا فِيْهِ وَلِتَبْتَغُوْا مِنْ فَضْلِهٖ وَلَعَلَّكُمْ تَشْكُرُوْنَ

(அவ்வாறின்றி) நீங்கள் இளைப்பாறுவதற்கு இரவையும் (பல இடங்களுக்குச் சென்று வாழ்க்கைக்குத் தேவையான) அவனுடைய அருளை நீங்கள் தேடிக்கொள்ளும் பொருட்டுப் பகலையும் உங்களுக்கு அவன் உற்பத்தி செய்திருப்பதற்கு அவன் கிருபைதான் காரணம். இதற்கு நீங்கள் அவனுக்கு நன்றி செலுத்துவீர்களாக! (அல்குர்ஆன்: 28:73)

வடதுருவம், தென்துருவம் தவிர பூமியின் இதர இடங்களில் கூட பகலும் இரவும் சம அளவில் இருப்பதில்லை. பூமியின் பூமத்திய ரேகை பகுதியில் மட்டுமே இரவும் பகலும் சமமாக இருக்கும்.

ஆனால் ஒவ்வோர் ஆண்டிலும் மார்ச் 21, செப்டம்பர் 21 ஆகிய நாட்களில் மட்டும் இரவும் பகலும் சம அளவில் இருக்கும்.

இயற்கையின் இந்த கால அளவை கணக்கிட்டுதான் வருடத்தில் ஒரு நாள் சூரிய ஒளியை ஒரு குறிப்பிட்ட இடத்தில் உள்ள கட்டிடத்தில் விழும்படி செய்ய முடியுகிறது .அப்படி செய்யப்பட்டதுதான் கன்னியாகுமரியிலுள்ள மகாத்மா காந்தியின் மண்டபத்தின் அபூர்வ ஒளி

கன்னியகுமரியில் மகாத்மா காந்தியின் மண்டபம் 12 பிப்ரவரி 1948 ம் ஆண்டு மகாத்மா காந்தியின் அஸ்தி கடலில் கரைப்பதற்கு முன் வைக்கப்பட்டிருந்த இடத்தில் கட்டப்பட்டது ஆகும். இது ஒரிசா மாநில கட்டிடக்கலையைச் சார்ந்து கட்டப்பட்டது ஆகும்.

இந்த மண்டபத்தில் அமைக்கப்பட்டுள்ள துளை வழியாக காந்தியின் பிறந்த தினமான அக்டோபர் 2 அன்று அவரது அஸ்தி வைக்கப்பட்டிருந்த இடத்தில் சூரிய கதிர்கள் விழுமாறு அமைக்கப்பட்டுள்ளது. இந்த மண்டபத்தின் மத்திய கோபுரமானது காந்தி இறந்த போது அவருடைய வயதை குறிக்கும் வகையில் 79 அடியில் அமைக்கப்பட்டுள்ளது.

இது ஒன்று போதாதா பூமி நொடிப்பொழுதும் தவறாது சுழன்று கொண்டிருக்கிறது என்பதற்கு ஆதாரம்

وَسَخَّرَ لَـكُمُ الشَّمْسَ وَالْقَمَرَ دَآٮِٕبَيْنِ‌ وَسَخَّرَ لَـكُمُ الَّيْلَ وَالنَّهَارَ

(தவறாது) ஒழுங்காக நடைபெற்று வருமாறு சூரியனையும் சந்திரனையும் உங்களுக்குப் பயனளிக்கக் கூடிய விதத்தில் (படைத்து) அமைத்தான். (மாறி மாறி) வரக்கூடிய இரவு பகலையும் உங்களுக்காக (அமைத்து அதில்) பயனடைய வகை செய்தான். (அல்குர்ஆன் : 14:33)

ரஹ்மத் ராஜகுமாரன் .

**இயற்கையின் அதிசயங்கள் 13**

நீரூற்றுகள்



நாம் பல இடங்களில் நீர்வீழ்ச்சிகளைக் கண்டுள்ளோம். செங்குத்தான உயரமான பகுதியிலிருந்து மழைநீர் திரண்டுவிடும் இதையே அருவி என்றும் கூறுவர். இத்தகைய அருவிகள் பெரும்பாலும் மலைப்பகுதிகளில்தான் இருக்கும்.

நீர்வீழ்ச்சியில் மேலிருந்து நீர் திரண்டு விழுகிறது. இதற்கு மாறாக நிலத்திலிருந்து நீர் ஊற்றாக வெளியேறுவதும் உண்டு. இதையே கிணறு மற்றும் ஊற்றுநீர் ஆகும். இந்த நீர் குளிர்ச்சியாக இருக்கும்.

ஆனால் நிலத்திலிருந்து சூடான நீர் வெளியேறுவதை சில இடங்களில் காணமுடிகிறது. இதையே வெந்நீர் ஊற்று என்பர்.

இத்தகைய வெந்நீர் ஊற்றில் உலகப் புகழ்பெற்றது அமெரிக்காவில் வயோமிங் என்னும் பகுதியில் எல்லோஸ்டோன் தேசிய பூங்காவில் உள்ளது. இந்த வெந்நீர் ஊற்றுக்கு ஓல்டு பெய்த் புல் (old Faithful geyser ) வெந்நீர் ஊற்றாகும் .

இந்த வெந்நீர் ஊற்று சுமார் ஒரு மணி நேரத்திற்கு ஒரு முறை 106 முதல் 185 அடி உயரத்திற்கு பீச்சுகிறது. ஐந்து நிமிடம் பீச்சியதும் அடங்கிவிடும். மீண்டும் ஒரு மணி நேரம் கழித்துதான் நீர் பீச்சும். இந்த வெப்ப நீர் ஊற்று 129 டிகிரி செல்சியஸ் வெப்பநிலையில் உள்ளது. ஒரு நாளைக்கு 3700 முதல் 4000 கேலன்கள் நீர் பீச்சப்படுகிறது .

அதே தேசிய பூங்காவில் இன்னொரு இடத்திலும் பொங்கும் நீரூற்று உள்ளது .இருந்தாலும் இது ஓல்ட் பெய்த் புல் நீரூற்றைப் போல் இடைவிடாது பொங்குவதில்லை. மூன்று வாரங்களுக்கு ஒரு முறை மட்டுமே பொங்குகிறது. இருந்தாலும் பொங்கும் வேகம் பிரமிக்கத்தக்க வகையில் உள்ளது. அது 240 அடி உயரத்திற்கு மேலே எழும்புகிறது.

அமெரிக்காவில் மட்டும் தான் இந்த அதிசய வெந்நீர் ஊற்றா ? இல்லை . பூமியில் சில இடங்களில் இயற்கையாகவே நீரூற்றுகளை காணலாம். அவற்றில் சில இடங்களில் மட்டும் ஊற்றுநீர் கொதித்துக் கொண்டிருக்கும்.

இத்தகைய வெந்நீர் ஊற்றுகளில் எரிமலைகள் அதிகமுள்ள பகுதிகளில் காணலாம். அமெரிக்காவை தவிர ஜப்பான்,

ஐஸ்லாந்து, நியூசிலாந்து , இத்தாலி ஆகிய இடங்களிலும் உள்ளன. நீரூற்றுகளைப் பற்றி குர்ஆனில் ...

நபி மூஸா (அலை) அவர்களின் சமூகத்தினரான இஸ்ரவேலர்கள் அல்லாஹ்வின் கட்டளைக்கு வழிப்பட மறுத்ததனால், ' தீஹ் ' என்ற இடத்தை நாற்பது ஆண்டுகள் சுற்றவைத்து அவர்களைத் தண்டித்தான்.

இத்தண்டனைக் காலத்தில் நீர்த் தட்டுப்பாடு அவர்களுக்கு ஏற்பட்டது. நபியவர்களிடம் சென்று முறையிட்டனர். தங்களிடமுள்ள கைத் தடியால் பாறையைத் தட்டினார்கள். அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுக்கள் ஒலித்தோடின.

அப்போது இஸ்ரவேலர்கள் மத்தியில் பன்னிரண்டு கோத்திரத்தினர் காணப்பட்டனர். ஒவ்வொருவரும் ஒரு நீர் நிலையை தனதாக்கிக் கொண்டனர். இந் நிகழ்வை திருக்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

“மூஸா தம் கூட்டத்தவருக்கு நீர் புகட்டத் தேடிய போது நாம் (அவரிடம்) நீர் உம்முடைய (கைத்) தடியால் இக்கல்லில் அடிப்பீராக! “எனக் கூறினோம். (அவரடித்தார்) உடனே அதிலிருந்து 12 ஊற்றுக்கள் ஒலித்தோடின. ஒவ்வொரு கூட்டத்தினரும் தாங்கள், அருந்தும் (நீர்த்) துறையை அறிந்து கொண்டனர். (அல்குர்ஆன் - 02 :60)

"வாதி அர்பையின் " என்று அறியப்படும் இந்த பள்ளத்தாக்கில் இந்த கல்லில்தான் மூஸா (அலை) அவர்கள் அடித்தார்கள். அந்த ஊற்றுக்களில் நீர் வடிந்த அடையாளங்கள் இன்றும் காணலாம்

இந்தியாவில் இமயமலையிலுள்ள பத்திரிநாத் ஆலயம் அருகிலும் வெந்நீர் ஊற்றுகள் உள்ளது.

இந்த அதிசயத் தக்க வெந்நீர் ஊற்று ஏற்படுவதற்கு பூமியே காரணமாகிறது என்கிறது விஞ்ஞானம் .பூமியின் உட்பாகம் வெப்பம் மிகுந்திருக்கும். அதனால் அவ்விடத்தில் உள்ள பாறைகள் கூட உருகி குழம்பாகவே இருக்கும்.

எரிமலைகள் அதிகமுள்ள இடங்களில் இப்பாறைக் குழம்பு தலைக்குக் கீழே மிக அருகில் இருக்கும்.

அவ்விடங்களில் அதன் மேற்புறத்தில் சேரும் தண்ணீர் கொதித்து ஆவியாகும் .அவ்வாறு வெளியேறும் ஆவியின் அழுத்தத்தினால் அங்கு இருக்கக்கூடிய துளை அல்லது வெடிப்பின் வழியாக நிலத்திற்கு மேல் நீர் பீறிட்டு வரும்.

அங்கு நீர் உள்ளவரை வரும் . அதன்பின் நின்று விடும் மீண்டும் நீர் சேர்ந்ததும் பீரிட்டு வரும்.

நீர் வீழ்ச்சியில் நீராடுவது போன்று குளிர்ந்த நீரூற்றிலும் நீராடுவர். இந்த நீரூற்று நீரில் சமையல் செய்வதும் உண்டு. .

பூமியிலிருந்து வெளிவரும் இந்நீர் ஊற்றுகளில் தாது உப்புகள் கலந்து உள்ளன. பல நோய்களை குணமாக்க இது பயன்படும்.

ஐயூப் (அலை , அவர்கள் நோய்வாய்ப்பட்டு படுத்திருக்கும்போது, ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபியவர்களின் கையை பிடித்து தூக்கி, " அல்லாஹ்வின் உத்திரவை கொண்டு எழுந்து நில்லும் " என்று கூறினார்.

أُرْكُضْ بِرِجْلِكَ هٰذَا مُغْتَسَلٌ بَارِدٌ وَّشَرَابٌ

“உம்முடைய காலால் (பூமியைத்) தட்டும்” (அவ்வாறு தட்டவே ஒரு நீருற்றுப் பொங்கி வந்ததும்) “இதோ குளிர்ச்சியான குளிக்குமிடமும், பானமும் (உமக்கு) இருக்கின்றன” (என்று சொன்னோம்). (அல்குர்ஆன் :38:42)

அவ்விதமே அவர்கள் எழுந்து நின்றனர் பின்னர் அவர்களை நோக்கி, " உம்முடைய வலக்காலை மண்ணிலே அடியும் "என்று கூறினார் .அவ்விதமே அவர்கள் அடித்தனர். அவர்களின் காலில் கீழிருந்து ஒரு வெந்நீர் ஊற்று தோன்றியது. அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்களை நோக்கி, " இதோ நீர் குளிப்பதற்கான நீர் இதில் குளித்து தூய்மை பெறும் "என்ற இறைச்செய்தியை கூறினர்.

அவ்விதமே நபியவர்கள் அதிலே குளித்தார்கள். அதன்பின் 40 அடி நடந்து சென்றதும், "உம்முடைய இடது காலை மண்ணில் அடியும்!" என்று கூறினார் ஜிப்ரீல் (அலை) அவர்கள்.

அவ்விதமே நபியவர்களும் அடிக்க, அவர்களின் காலின் கீழிருந்து குளிர் நீரூற்று கிளம்பியது. அந்த தண்ணீரை கையினால் அள்ளி தம் வயிறு நிரம்ப அருந்தினார்கள்.

என்ன வியப்பு ! அல்லாஹ்வின் பேரருளால் நபியவர்களின் உடல் உள்ளும் புறமும் புடம்போட்ட பொன்போல் பொலிற்று விளங்கியது.

சிரியாவில் உர்துன் மாநிலத்தில் நாபா என்னும் ஊருக்கு அருகில் இந்த நீரூற்றுகள் உள்ளது என்றும், அதன் அருகில் ஐயூப் அவர்களின் பள்ளியும் உள்ளது என்றும் மஸ்வூதி கூறுகிறார் .

"அய்னே ஐயூப்" என்ற பெயருடன் அந்த நீர் சுனைகள் இன்னும் இருப்பதாக இஸ்லாமிய கலைக்களஞ்சியம் கூறுகிறது. அதில் நோயாளர்கள் வந்து குளித்து நோய் நீங்க பெறுவதாக ரௌஸதுஸ் ஸபாவில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ரஹ்மத் ராஜகுமாரன்

**இயற்கையின் அதிசயங்கள் 14**

வானவில்லின் வர்ணங்கள்




وَمَا ذَرَاَ لَـكُمۡ فِى الۡاَرۡضِ مُخۡتَلِفًا اَلۡوَانُهٗ ‌ؕ اِنَّ فِىۡ ذٰ لِكَ لَاٰيَةً لِّقَوۡمٍ يَّذَّكَّرُوۡنَ

இன்னும், பூமியில் அவன் படைத்திருப்பன பல விதமான நிறங்களையுடைய (செடி கொடிகள், பிராணிகள், பறவைகள், போன்ற)வையுமாகும்; நிச்சயமாக இதில் (அல்லாஹ்வின் அருள் கொடைகளை நன்றியுடன்) நினைவு கூறும் மக்களுக்கு(த் தக்க) அத்தாட்சியுள்ளது. (அல்குர்ஆன் : 16:13)

தன் படைப்புகளுக்கு பலதரப்பட்ட வர்ணங்களை கொடுத்திருந்தாலும் அதிலும் சிறப்புக்குரியது வானவில்லாகும் .

மழைத் துளிகளின் உள்ளே சூரிய ஒளிக்கதிர்கள் ஊடுருவிச் செல்லும்போது வானவில் தோன்றுகிறது. வானவில்லில், ஊதா (Violet), கருநீலம் (Indigo), நீலம் (Blue), பச்சை (Green), மஞ்சள் (Yellow), ஆரஞ்சு (Orange), சிவப்பு (Red) ஆகிய ஏழு நிறங்கள் உள்ளன. இதை நினைவில் வைத்துக் கொள்ளச் சுருக்கமாக 'விப்ஜியார்' (VIBGYOR) என்கிறோம்.

வானவில்லில் ஏழு நிறங்கள் உள்ளன என்பதைக் கண்டுபிடித்தவர் ஐசக் நியூட்டன் (Isaac Newton).

அடிப்படை நிறங்கள் ஏழு என விஞ்ஞானம் கூறுவதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் அல்குர்ஆன் இதனை சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளது.

அரபு மொழியில் நிறத்தைக்கு குறிக்க “லவ்ன்” என்ற பதமும் அதன் பன்மை வடித்தில் நிறங்கள் என்பதைக் குறிக்க “அல்வான்” என்றும் பயன்படுத்தப்படுகின்றது. அல்குர்ஆனில் நிறங்கள் “அல்வான்” என மொத்தமாக ஏழு தடவைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வானவில் எப்போதும் ஏழு நிறங்களோடுதான் தோன்றும் என்பதில்லை. காலை, மாலை வேளைகளில் தோன்றும் வானவில்லில் மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு நிறங்கள் மட்டுமே தோன்றும். ஊதா, கருநீலம், நீலம், பச்சை ஆகிய நிறங்கள் தோன்றாது.

பன்னிரண்டு வெவ்வேறு வகையிலான வானவில்கள் இருப்பதாக சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஃபிரான்ஸ் நாட்டு வானிலை ஆய்வு மையத்தைச் (நேஷனல் மீடியோரோலாஜிகல் ரிசர்ச் சென்டர் - National Meteorological Research Center) சேர்ந்த 'ஜீயான் ரிகார்' (Jean Ricard) என்ற வளி மண்டல அறிவியலாளர் ( Atmospheric Scientist) இதைக் கண்டுபிடித்து இருக்கிறார்.

வானவில்லில் நிறங்கள் தெளிவாகத் தெரிவது மழைத் துளிகளின் அளவைப் பொறுத்தது. அதன் நிறங்களை நிர்ணயிப்பதில் பெரும்பங்கு வகிப்பது தொடுவானத்துக்கும் சூரியனுக்கும் இடைப்பட்ட தூரம்தான்.

சூரியன் தொடுவானத்துக்கு மிகவும் அருகில் இருக்கும்போது தோன்றும் வானவில்லில் சிவப்பு நிறம் மட்டுமே காணப்படும். தொடுவானத்திலிருந்து சூரியன் சற்று மேலே, எழுபது டிகிரி கோணத்தில் இருக்கும்போது தோன்றும் வானவில்லில் சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள் ஆகிய மூன்று நிறங்களும் தோன்றுகின்றன.

சில நேரம் வானவில்லின் அருகிலேயே சற்று மங்கிய நிலையில் இன்னொரு வானவில் இருக்கும்.

ஒளியானது மழைதுளியினுள் நுழைந்து வெளியேறும் முன்பு இரண்டு முறை பிரதிபலிப்படையும் போது இரட்டை வான வில்லானது உண்டாகிறது.

மங்கிய நிலையில் தெரியும் இரண்டாவது வானவில்லின் நிறங்கள், பளிச்சென்று தெரியும் வானவில்லின், நிறவரிசையின் தலைகீழ் வரிசையாக இருக்கும்.

இரண்டாவதாக உருவாகிய வானவில்லில் ஊதா நிறம் வெளியேயும், சிவப்பு நிறம் உட்புறமும் இருக்கிறது. அதாவது தண்ணீரில் நம்மை நாமே பார்ப்பதுபோல.

வானவில் அரை வட்டமல்ல. முழுவட்டம்தான். அரைவட்டமாக இருப்பதே இவ்வளவு பெரிதாகத் தெரிகிறதே, முழுவட்ட மென்றால் எவ்வளவு பெரிதாக இருக்கும் என்று எண்ணுகிறீர்களா? அதைப்பார்த்தால் தெரிந்துவிடுகிறது. அவ்வளவுதான்.

வானவில்லை முழுவட்டமாகப் பார்க்க முடியுமா?

நிச்சயமாக முடியும். வானவில் தோன்றுகிற சூழலில், விமானத்தில் பயணம் செய்தபடியே பார்த்தால், வானவில் பெரி...ய்ய முழுவட்டமாகத் தெரியும்.

ஒருவர் பார்க்கும் வானவில்லும் அருகில் இருப்பவர் பார்க்கும் வானவில்லும் வேறு வேறானவை என்பது உங்களுக்குத் தெரியுமா ?

ஏனெனில் ஒவ்வொரு மழைத்துளியும் சூரிய ஒளியைச் சிதறச் செய்து வானவில்லை உண்டாக்கக் கூடியவை.

எனவே நாம் பார்க்கும் மழைத்துளியால் சிதறடிக்கப்பட்ட வானவில் வேறு. அருகில் இருப்பவர் பார்க்கும் மழைத்துளியால் சிறதறடிக்கப்பட்ட வானவில் வேறு. ஆக ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வானவில்.

" நான் பார்த்த வானவில்லை நீ பார்க்கவில்லை.

நீ பார்த்த வானவில்லை நான் பார்க்கவில்லை "

சூரியன் அடிவானில் இருந்து மழைத்துளி காற்றில் இருந்தால் வானில் உயரத்தில் வானவில் தோன்றும். சூரியன் உயரத்தில் இருந்து மழைத்துளி காற்றில் இருக்கும்போது வானவில் அடிவானில் தோன்றும்.

நம்மால் வானவில்லை தொட முடியாது. ஏனெனில் அது பிரதி பிம்பம். ஆகவே அதனைக் காணத்தான் முடியும்.

வெப்பமண்டலங்களில் நீர்நிலைகளின் அருகில் வானவில்லை அடிக்கடிக் காணலாம்.

சூரிய குடும்பத்தில் புவியில் மட்டுமே வானவில்லானது தோன்றுகிறது. ஹவாய் தீவுகளே உலகில் அதிக வானவில் தோன்றும் இடமாகும்.

பொதுவாக வண்ணங்களைப் பற்றி...

நபியவர்கள் வெள்ளை நிறத்தை அதிகம் விரும்பினார்கள், கருப்பு நிறத்தையும் காவி நிறத்தையும் தவிர்ந்துகொள்ளுமாறு கூறினார்கள்.

விஞ்ஞானம் அடிப்படையில் 7 நிறங்கள் உள்ளதாகக் கூறுகிறது. அல்குர்ஆன் நிறம் என்ற வார்த்தையை 7 இடங்களில் பயன்படுத்தியுள்ளது.

சுவனம் பசுமையானது என்று கூறும் இஸ்லாம் அதன் நிறமான பச்சை நிறம் அல்குர்ஆனில் 8 இடங்களில் பிரயோகிக்கப்பட்டுள்ளது. நபியவர்கள் சுவனத்தின் வாயில்கள் 8 என்றும் கூறியுள்ளார்கள்.

அதேபோன்று கருப்பு நிறம் அல்குர்ஆனில் 7 இடங்களில் வந்துள்ளது. நரகின் நிறமும் கருப்பு என்பதாக நபியவர்கள் கூறினார்கள். அதன் வாயில்களின் எண்ணிக்கையும் 7 என்று அல்குர்ஆன் கூறுகின்றது.

மஞ்சள் நிறம் 5 தடவைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அல்குர்ஆனில் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ள நிறம் வெள்ளையாகும்.

صِبْغَةَ اللّٰهِ ‌ وَمَنْ اَحْسَنُ مِنَ اللّٰهِ صِبْغَةً وَّنَحْنُ لَهٗ عٰبِدُوْنَ

“(இதுவே) அல்லாஹ்வின் வர்ணம் (ஞான ஸ்னானம்) ஆகும்; வர்ணம் கொடுப்பதில் அல்லாஹ்வைவிட அழகானவன் யார்? அவனையே நாங்கள் வணங்குகிறோம்” (எனக் கூறுவீர்களாக). (அல்குர்ஆன் : 2:138)

ரஹ்மத் ராஜகுமாரன்

**இயற்கையின் அதிசயங்கள் 15**

பூகம்பம்



உலகில் முதல் முறையாக ‘பூமராங் பூகம்பம்’ என்ற புதிய நிகழ்வை கடலுக்கடியில் விஞ்ஞானிகள் நிலநடுக்க அளவைமானி தரவு மூலம் கண்டுப்பிடித்து அதிர்ச்சி அடைந்துள்ளனர்.

2016-ம் ஆண்டு அட்லாண்டிக் கடலில் மேற்கு ஆப்பிரிக்காவின் லைபீரியா பகுதிக்கு அருகே கடலின் அடி தரையில் அதிசய பூகம்பம் ஏற்பட்டது. இது ரிக்டர் அளவுகோலில் 7.2 ஆக இருந்தது.

இந்த பூகம்பத்தின் விசேடங்களை தென் அமெரிக்க மற்றும் ஆப்ரிக்க டெக்டானிக் பிளேட்களை ஆராய்ந்த போது முதலில் நிலநடுக்க அதிர்வலை வடகிழக்கு நோக்கி விரைவுகதியில் சென்றது, ஆனால் திடீரென திரும்பிய பூகம்ப அதிர்வலை எங்கு உருவானதோ அதே இடத்துக்கு அதே வேகத்தில் வந்தது தெரியவந்துள்ளது.

வெளியேறிய அலை மீண்டும் எந்த ஒரு புற தாக்கமும் இன்றி தான் தோன்றிய இடத்துக்கே திரும்பியதால் இதற்கு ‘பூமராங் பூகம்பம்’ என்று விஞ்ஞானிகள் பெயரிட்டுள்ளனர்.

அதிர்வலை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு வேகமாகச் செல்லும் போதே பயங்கர சேதங்களை ஏற்படுத்தும் இந்நிலையில் உருவான இடத்திலிருந்து ஒரு திசை நோக்கிச் செல்லும் அதிர்வலை மீண்டும் உருவான இடத்துக்கே திரும்பும் பூமராங் பூகம்பம் நிலப்பகுதியை ஒட்டி உருவானால் கற்பனைக்கு எட்டாத சேதங்களை ஏற்படுத்தும் என்று விஞ்ஞானிகள் அச்சம் தெரிவித்தனர்.

பொதுவாக பூகம்பங்களில் ஆற்றல் வெளிப்பாட்டு அதிர்வலை நாம் பேப்பரை குறுக்காக நறுக்குவது போல் ஒரேதிசையில்தான் செல்லும், ஆனால் இந்த பூகம்பத்தினால் உருவான தூசி மண்டலம் நேராக பயணித்து பிறகு உருவான இடத்திற்கே மீண்டும் வந்தது. இது பூமராங் பூகம்பம். இது அடிக்கடி ஏற்படுமா அல்லது அரிதான நிகழ்வா என்பதெல்லாம் ஆராயப்பட்டு வருகின்றன.

நியூயார்க்கிலிருந்து லண்டன் செல்லும் தூரத்தை இந்த அதிர்வலை வேகம் 18.5 நிமிடங்களில் கடக்கக் கூடிய வேகம் கொண்டது என்கின்றனர் விஞ்ஞானிகள்.

ஏற்கெனவே கூம்பு வடிவத்தில் செல்லும் அதியாற்றல் அதிர்வலைகளால்தான் மேற்பரப்புகளில் அனைத்தும் தூக்கிப் போடப்பட்டு கடும் சேதம் ஏற்படுகிறது, இதில் போன வழியே அதே பாணியில் அது திரும்பி வந்தால் என்ன ஆகும் என்று விஞ்ஞானிகள் அதிர்ச்சியடைந்துள்ளனர்.

இது குறித்த ஆய்வுகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. பூகம்பங்கள் ஒவ்வொன்றும் மிகவும் சிக்கலானவை என்பது வழக்கம்தானே தவிர அரிதானது அல்ல என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர்.

இமாலயத்தில் ரிக்டர் அளவுகோலுக்கும் எட்டாத பூகம்பங்கள் நிகழ்வது போல் இதுவும் ஒரு புது நிகழ்வாகப் பார்க்கப்படுகிறது.

பூகம்பம் ஏற்படுவதற்குரிய ஆயிரம் காரணங்களை விஞ்ஞானிகள் சொன்னாலும் இறைவன் சொல்லும் காரணம் இதோ :

ஹழ்ரத் ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மத்யனைச் சார்ந்தவர்கள். இவர்களது வமிசவழி நபி இப்றாஹிம் அலைஹிஸ்ஸலாம் அவர்களது இரண்டாவது தலைமுறையோடு தொடர்பு கொண்டது.

'மத்யன்' என்பது ஒரு நகரின் பெயராகும். மத்யன் இப்னு இப்றாஹிம் என்பவரால் இது நிர்ணயிக்கப்பட்டது. மத்யன் என்ற சமுதாயத்தினரை நேர்வழிப்படுத்த அல்லாஹ் ஹழ்ரத் ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்களை நியமனம் செய்தான்.

'ஐக்கா' என்பது ஒரு காட்டின் பெயராகும். இதில் வாழ்ந்து கொண்டிருந்த மக்களைச் சார்ந்தவர்களாக ஹழ்ரத் ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இருந்தார்கள்.

மத்யன்வாசிகள் அனைவரும் இறைமறுப்பாளர்களாக இருந்தார்கள். அளவையிலும், நிறுவையிலும் மோசடி செய்பவர்களாகவே இவர்கள் இருந்தனர். வீதிகளில் அமர்ந்து கொண்டு சாமான்களை வாங்க வருபவர்களை இடைமறித்து ஹழ்ரத் சுஜப் அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சந்திக்க வேண்டாம் என்றும் அவர்களது உபதேசங்களுக்குச் செவிமடுக்க வேண்டாமென்றும் கூறி வந்தனர்.

ஹழ்ரத் சுஜபு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அந்த மக்களுக்கு விக்கிரக ஆதாதனை செய்ய வேண்டாமென்றும், அளவையிலும், நிறுவையிலும் மோசடி செய்ய வேண்டாம் என்றும் தடுத்துக் கூறி, தாம் அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்த நபியென்றும், தம் பேரில் விசுவாசம் கொண்டு அல்லாஹ்வை மட்டும் வணங்கி வரவேண்டும் என்றும் போதித்து வந்தார்கள்.

ஆனால் அந்த மக்களோ இவர்களது பேச்சுக்கோ, போதனைக்கோ செவி சாய்க்காது இவர்களைக் கேலி செய்ததோடு, இவர்களையும் இவர்களை பின்பற்றுபவர்களையும் ஊரை விட்டு வெளியேற்றப் போவதாகவும் பயமுறுத்தினார்கள்.

ஆனால் நபி அவர்கள் கொஞ்சம் கூட அஞ்சாது, பகல் முழுவதும் அல்லாஹ்வின் ஏகத்துவத்தை எடுத்துரைப்பதிலும் பாவச் செயல்களை விட்டு விலகுமாறு வேண்டுவதையும், இரவில் அவர்கள் வணக்கங்களில் ஈடுபடுவதிலும் தங்களுடைய நேரங்களை செலவழித்தார்கள்.

அந்த மக்கள் ஷுஐப் நபி அவர்களின் வணக்க முறைகளை கேலி செய்து எங்கள் மூதாதையர்கள் செய்து வந்த வணக்கவழிபாடுகளை நாங்கள் விட்டுவிடுவோம் என்று நினைத்து விடாதீர்கள் என்றனர்.

நபியவர்கள் எவ்வளவோ நல்லுபதேசங்கள் செய்தும் அவர்கள் திருந்துவதாக தெரியவில்லை. நபியவர்களின் முயற்சிகள் பயனற்றுப் போய்விட்டன.

ஹழ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முன்தோன்றி, 'இந்த மக்கள் திருந்த மாட்டார்கள்.எனவே இவர்களை அழித்துவிட அல்லாஹ் முடிவு செய்து விட்டான். ஆகவே தாங்கள் தங்கள் மீது விசுவாசம் கொண்ட முஸ்லிம்களையும், தங்களின் உபதேசத்திற்குக் கட்டுப்பட்ட உற்றர் உறவினர்களையும் அழைத்துக் கொண்டு இந்த ஊரை விட்டு வெளியேறி விடுங்கள்.நாளை விடிவதற்கு முன்னதாகவே அல்லாஹ்வின் வேதனை இவ்வூரார் மீது இறங்கி இவர்கள் அனைவரும் அழிந்து போய் விடுவார்கள்' என்று கூறினார்கள்.

உடனே ஹழ்ரத் சுஜபு அலைஹிஸ்ஸலாம் அவர்களும் அவர்களைச் சார்ந்தோரும் ஊரை விட்டு வெளியேறினார்கள்.

பொழுது இன்னும் சரியாகப் புலரவில்லை. அந்த ஊர்வாசிகள் தத்தம் படுக்கைகளை விட்டுக்கூட எழுந்திருக்கவில்லை. அவர்கள் நித்திரையில் இருக்கக் கூடிய நிலையிலேயே ஹழ்ரத் ஜிப்ரயீல்

அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அந்த ஊருக்கு நேர் மேலாக ஆகாயத்திலிருந்தவாறு ஒரு பயங்கரமான குரல் எழுப்பினார்கள்.

அவ்வளவுதான். அந்த ஊர் இருந்த பகுதியின் பூமியில் பெரும் அதிர்ச்சி ஏற்பட்டது. இடியோசை போன்று இருந்த அந்த ஓசையின் அதிர்ச்சியின் காரணமாக அந்த ஊர் மக்கள் அனைவருமே மடிந்து போனார்கள்.

இரவில் தூங்கிய அவர்களில் யாருமே காலையில் எழுந்திருக்கவில்லை. மத்யன் வாசிகளின் நிலை இறுதியில் இப்படிப் பரிதாபமான முடிவைக் கண்டது. இதைப் பற்றி அல்லாஹ் தனது திருமறையில்:

وَلَمَّا جَآءَ اَمْرُنَا نَجَّيْنَا شُعَيْبًا وَّالَّذِيْنَ اٰمَنُوْا مَعَهٗ بِرَحْمَةٍ مِّنَّا وَاَخَذَتِ الَّذِيْنَ ظَلَمُوا الصَّيْحَةُ فَاَصْبَحُوْا فِىْ دِيَارِهِمْ جٰثِمِيْنَۙ

(தண்டனைக்குரிய) நம் கட்டளை வந்த போது, ஷுஐபையும் அவருடன் ஈமான் கொண்டவர்களையும் நமது ரஹ்மத்தை கொண்டு நாம் காப்பாற்றினோம்; அநியாயம் செய்தவர்களை (பேரிடியின்) முழக்கம் பிடித்துக் கொண்டது; அவர்கள் தம் வீடுகளில் இருந்தவாறே காலையில் (இறந்து) கிடந்தனர். (அல்குர்ஆன்: 11:94)

كَاَنْ لَّمْ يَغْنَوْا فِيْهَا اَلَا بُعْدًا لِّمَدْيَنَ كَمَا بَعِدَتْ ثَمُوْدُ

அவ்வீடுகளில் அவர்கள் (ஒரு காலத்திலும்) வாழ்ந்திராதவர்கள் போல் ஆகிவிட்டனர். தெரிந்து கொள்ளுங்கள்: ஸமூது (கூட்டத்தார் சாபக்கேட்டினால்) நாசமானது போன்று, மத்யனுக்கும் நாசம்தான்!

(அல்குர்ஆன்: 11:95)

ரஹ்மத் ராஜகுமாரன்

**இயற்கையின் அதிசயங்கள் 16**

(த்ரீ கோர்ஜஸ் அணையும், அல் அரிம் அணையும்)







பூமி சுற்றும் வேகத்தைக் குறைக்கும் உலகின் மிகப்பெரிய சீனா அணை .

உலகின் மிகப்பெரிய அணையான சீனாவின் த்ரீ கோர்ஜஸ் அணை வெள்ளத்தால் உடைந்து மிகப்பெரிய பாதிப்பை ஏற்படுத்தவிருப்பதாக தகவல் வெளியாகியுள்ளது.

இந்த அணையின் நீளம் 2.2 கி.மீ. உயரம் 185 மீ. இந்த அணையின் கொள்ளளவு 39.3 கன கி.மீ. 2,250 கோடி டாலர் செலவில் 17 ஆண்டுகள் 40,000த்திற்கும் மேற்பட்டோர் பணி செய்து இந்த அணையைக் கட்டி முடிந்தனர்.

இப்போது இந்த அணையால் பல நகரங்கள் மூழ்கும் அபாயம் ஏற்பட்டுள்ளது. சீனாவில் கடந்த ஒரு மாதமாக கனமழை பெய்து வருவதால் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது.

த்ரீ கோர்ஜஸ் அணையில் வழக்கமான நீர்மட்ட அளவை விட பல மடங்கு நீர்மட்டம் உயர்ந்துள்ளது. இதனால் அணைக்கு வரும் நீர் அப்படியே திறக்கப்பட்டுள்ளது. எனினும் அணை உடையும் நிலை ஏற்பட வாய்ப்புள்ளதால் பல லட்சக்கணக்கான மக்கள் வெளியேற்றப்பட்டுள்ளனர்.

இந்த அணையைப் பற்றிய இன்னொரு தகவல் வியப்பளிக்கக் கூடியது. த்ரீ கோர்ஜஸ் அணை கட்டப்பட்டதால் ஒரே இடத்தில் மிக அதிகமான அளவு தண்ணீர் தேங்குவதால் பூமியின் வேகம் 0.06 மில்லி செகண்ட் குறைந்தது என நாசா உள்ளிட்ட விஞ்ஞானிகளின் ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

ஒரு பொருள் நிலையாகவோ, இயக்கத்திலோ இருக்கும்போது அதன் நிலையை மாற்றும்படி விசையைச் செலுத்தினால், அந்த விசையை அப்பொருள் எதிர்க்கும். இது இயற்பியலில் நேரியல் மந்தநிலை (Linear Inertia) எனப்படுகிறது.

பொருட்களின் சடத்துவ திருப்புத் திறனைப் பொறுத்து (Moment of Inertia) இயங்கும் வேகம் மாறுபடும். புவி சுழலும்போது புவிப் பெருந்திரள் (Mass) அச்சுக்கு அருகில் சுழலும்போது வேகமாகவும், புவிப் பெருந்திரள் அச்சை விட்டு தள்ளிச் சுழலும்போது மெதுவாகவும் சுழலும்.

மிகப்பெரியதான த்ரீ கோர்ஜஸ் அணையில் நிறைந்துள்ள நீரின் நிறை 40 லட்சம் கோடி கிலோகிராம் என்பதாலும், இந்த அணை கடல் மட்டத்திலிருந்து 181 மீட்டர் உயரத்தில் இருப்பதாலும் பூமியின் Moment of Inertia அதிகமாகி புவி சுழலும் வேகம் 0.06 மில்லி செகண்ட் குறைவதாகக் கண்டறியப்பட்டுள்ளது.

பூமியின் நிறையோடு ஒப்பிடுகையில் இந்த அணை நீரின் நிறை மிகக் குறைவானது என்பதால் இதனால் பெரிய மாறுதல் எதுவும் நிகழ்வதில்லை. பல்வேறு காரணிகளால் புவி சுழலும் வேகம் மாறுபாடுகளைச் சந்திக்கும் என்பதால் இதனால் பாதிப்பு எதுவுமில்லை எனவும் சீன விஞ்ஞானிகளால் விளக்கப்பட்டுள்ளது.

திருக்குர்ஆனிலும் ஓர் அணைக்கட்டு உடைந்து போனது பற்றிய உண்மை வரலாற்றை கூறுகிறது .

ஏமன் நாட்டின் தலைநகரான ஸன்யாவில் இருந்து 55 மைல் வடகிழக்கில் "ஸபா " என்னும் நகர் உள்ளது . இங்கு அரசாட்சி செய்த அரசர்களில் சிலர் ஏக தெய்வக் கொள்கை உடையவர்களும், சிலர் இணை வைத்து வணங்குபவர்களும் இருந்தனர் . இந்த ஸபா நகரில்தான் சூரத்து நம்லில் கூறப்படும் பல்கீஸ் அரசி வாழ்ந்த ஊர். ஞாபகமிருக்கா ?

மழைத் தண்ணீரை தேக்குவதற்காக உறுதியான அணைக்கட்டு ஒன்றை இவர்களில் ஆட்சி செய்த ஓர் அரசர் கட்டினார் . இது பல மைல் நீளம் உள்ள அணைக்கட்டு இவ்வணையில் இருந்து பல நதிகளையும் 12 வாய்க்கால் களையும் வெட்டி விவசாயம் ,தோட்டம் இவைகளுக்கு தண்ணீர் பாயுமாறு செய்யப்பட்டிருந்தது .

நகரின் எப்புறம் நோக்கினும் அங்குள்ள ஒவ்வொரு வீதியின் இருபுறமும் வனப்புமிக்க தோட்டங்களும் பல தோற்றத்தோடு கூடிய நந்தனமும் விவசாய நிலங்களும் காட்சியளித்தன

அவ்வூரில் உள்ளவர்கள் தங்கள் பக்கத்து தெருக்களுக்கு செல்லும்போது தலையில் வெறும் கூடையை வைத்துக் கொண்டு தோட்டத்தின் ஊடே செல்லும் போது, மரத்தின் பழங்கள் உதிர்ந்து கூடையில் விழுந்து நிறைந்து விடும். அந்த அளவிற்கு செழிப்பான நகரம் .

அவ்வூர் காற்று ஒரு வித்தியாசமானது. அது கொசு,புழு முதலியவைகளும் பாம்பு, தேள் போன்ற விஷ ஜந்துக்கள் இவ்வூரில் வாழமுடியாது. இதனால் பழம் மற்றும் உணவுப் பொருட்கள் பூச்சிகளின் தொந்தரவால் கெட்டுப்போகாது .

சரி ஸபாவுக்கு வருவோம். ஸபா வாசிகளுக்கு விவசாயம் மற்றும் பழம் உணவுப் பொருட்களை கொண்டு இறைவன் நிரம்ப அருள் செய்திருந்தான். இம்மக்கள் இறைவனுக்கு நன்றி செலுத்தாமல் புறக்கணித்தனர். ஏமன் தேசத்து 13 ஊர்களில் இருந்து 13 நபிமார்களை இறைவன் ஸபாக்கு அனுப்பினான்.

நபிமார்களை இம்மக்கள் பொய்ப்பித்து " எவ்வித அருட்கொடையையும் எங்கள்மீது இருப்பதாக நாங்கள் அறியவில்லை. இத்தனை சுக போகங்கள் அனைத்தும் தங்களது சுய முயற்சியால் ஏற்பட்டது" என்று கூறி, "உங்களது இறைவனுக்கு இயலுமானால், எங்களுக்கு உரிய அந்த அருட்கொடையை தடுத்து கொள்ளுமாறு கூறுங்கள் " என்றனர்.

இறைவனும் அவர்கள் விட்ட சவாலை ஏற்றுக்கொண்டு, பூனை அளவு பெரிய பெரிய எலிகளை கொண்டு எந்த அணையால் செழிப்பானதோ அந்த அணையின் அடித்தளத்தில் துவாரங்களைப் போட வைத்தான் .

அணையில் மழை பொழிந்து .நீர் நிறைந்தது . இரண்டு மலைகளுக்கு இடையில் அமைந்த அவர்களது ஊர் அணை உடைந்து, அம்மக்களையும் அவர்களது தோட்டங்களையும் நீரில் மூழ்கடித்தோம் என்கிறான் இறைவன் .

சிலர் மலை ஏறி தப்பினாலும், அவர்கள் சிதறி நாலாபக்கமும் ஓடினார்கள். மலைமீது ஏற முடியாதவர்களை வெள்ளம் அடித்துக் கொண்டு போயிற்று இதையே குர்ஆனில் அல்லாஹ்

فَاَعْرَضُوْا فَاَرْسَلْنَا عَلَيْهِمْ سَيْلَ الْعَرِمِ وَبَدَّلْنٰهُمْ بِجَنَّتَيْهِمْ جَنَّتَيْنِ ذَوَاتَىْ اُكُلٍ خَمْطٍ وَّاَثْلٍ وَّشَىْءٍ مِّنْ سِدْرٍ قَلِيْلٍ

ஆனால் அவர்கள் (இப்போதனையைப்) புறக்கணித்தார்கள்; ஆகவே, அல் அரிம் (என்னும் பெரும் அணையை உடைக்கும்) கடும் பிரவாகத்தை அவர்கள் மீது அனுப்பினோம்,

இன்னும் (சுவை மிக்க கனிகளைக் கொண்ட) அவர்களுடைய இரு தோப்புகளை கசப்பும் புளிப்புமுள்ள பழங்களுடைய மரங்களும், சில இலந்தை மரங்களும் உடைய இரு தோட்டங்களாக மாற்றினோம். (அல்குர்ஆன் : 34:16)

சுவையான உன்னதமான கனிகளை உடைய சோலைகள் ஒரு பெருவெள்ளம் ஏற்பட்டதால் நீரால் அழிந்து, தித்திப்பான சுவையுடைய பலதரப்பட்ட பழமரங்கள் சாதாரண கசப்பும் ,புளிப்பும் கொண்ட இழந்தை மரங்களாக மாற்றப்பட்டுவிட்டது என்பது விஞ்ஞான ரீதியாக பெரும் வியப்பை ஏற்படுத்தியுள்ளது.

காரணம் ஆப்பிள் ஆரஞ்சு மாதுளை அல்லது மாங்கனி எதுவானாலும் நீரால் அழிந்த பின்னர் அவைகள் துளிர்க்குமே தவிர கசப்பும்,புளிப்பும் கொண்ட இழந்தை பழங்களாக அவை மாறுமா ? ஆனால் ஸபாவில் மாறி விட்டது .

இருந்தாலும், ஜெர்மன் நாட்டு தோட்டக்கலை வல்லுநர்கள் ஆய்வு செய்து இம்மண்ணின் மூலமரபணு கூட மாற்றம் செய்யப்பட்டு விட்டது என்று கருத்து தெரிவித்தார்கள் .

எமன் நாட்டில் உள்ள இந்த ஸபா நகரத்திற்கு பிரஞ்சு நாட்டின் பிரபல வரலாற்று ஆசிரியரான மாராப் என்பவர் சென்று ,தோட்டங்களை கண்டு, அதன் கனிகளை சுவைத்து பார்த்து அது திருமறைக் குர்ஆனில் விவரிக்கப்பட்டுள்ளது போலவே புளிப்பும்,கசப்புமாக இருக்கின்றது என்பதை தமது சரித்திர நூலில் வியந்து எழுதியுள்ளார் .

ரஹ்மத் ராஜகுமாரன்

**Rahmath Rajakumaran**

இந்த ஆற்றில் வெள்ளப்பெருக்கு என்பது அதிக அளவில் ஏற்படகூடும். 1931 ஆம் ஆண்டு ஏற்பட்ட வெள்ளத்தில் நான்கரை லட்சம் மக்கள் உழிரிழந்தனர்,

இதனை கட்டி முடிக்க 5 லட்சத்தி 10 ஆயிரம் டன் இரும்பு மற்றும் 280 லட்ச க்யூபிக் மீட்டர் கான்கிரீட் பயன்பட்டது. த்ரீ கோர்ஜஸ் அணை 1 லட்ச விவசாய நிலங்களையும், 1 லட்சத்தில் 50 ஆயிரம் ஏக்கர் நில பரப்பை முழ்கடித்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த அணை கிட்டத்தட்ட 10 லட்சம் டன் ப்ளாஸ்டிக் குப்பைகள் கடலில் கலக்காமல் பாதுகாத்துள்ளது. யாங்சே ஆறு ஒரு மிகச்சிறந்த நீர் வழி போக்குவரத்து ஆதாரம் என்பதால் அணை கட்டினால் அந்த போக்குவரத்து பாதிக்கப்பட கூடாது என்பதற்காக சுமார் 3,000 டன் எடையுள்ள சரக்கு கப்பலையே தண்ணீரோடு சேர்த்து தூக்கி அணையின் அந்த பக்கம் வரை கொண்டு செல்ல லிஃப்ட் போன்ற அமைப்பையும் கட்டி முடித்துள்ளனர். இந்த லிஃப்ட் மூலமாக கப்பல் செல்வதற்கு சுமார் 4 - 6 மணி நேரம் ஆகும்.

இந்த அணை உலகிலேயே அதிக மின்சாரத்தை உற்பத்தி செய்யும் இடம். இந்த அணை அமெரிக்காவின் ஹூவர் அணையை விட பெரியது. அதேபோல ஹூவர் அணையை விட 10 மடங்கு அதிக மின் உற்பத்தி செய்யக்கூடியது. இந்த அணை மொத்தம் 32 ஜெனரேட்டர் உள்ளது. இந்த ஜெனரேட்டரும் ஒரு பெரிய அணு உலைக்கு சமமானது. இந்த அணையில் வருடத்திற்கு 85 கோடி மெகாவாட் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது.

அதாவது சீனாவில் மின்சார தேவையைவிட 10 மடங்கு அதிகமாகவே மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. எனவே தான் சீனாவில் அனைத்து கிரமங்களுக்கும் கூட குறைந்த விலையில் மின்சார சேவை வழங்கப்பட்டுள்ளது. இப்போது இந்த அணையால் பல நகரங்கள் முழ்கும் அபாயம் ஏற்பட்டுள்ளது. ஆம், அணை அமைந்துள்ள யாங்சே நதி உள்ளிட்ட 400க்கும் மேற்பட்ட நதிகளில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது.

த்ரீ கோர்ஜஸ் அணையில் வழக்கமான அளவை விட பல மடங்கு நீர்மட்டம் உயர்ந்துள்ளது. இதனால் அணைக்கு வரும் நீர் அப்படியே திறக்கப்பட்டுள்ளது. இதனால் யாங்சி நதியில் அபாய கட்டத்தை தாண்டி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. அணையின் பாதுகாப்பு அளவை தண்ணீர் நீர் மட்டம் எட்டியதாலும் இன்னும் பல நாட்களுக்கு மழை நீடிக்கும் என்பதாலும் அணையே உடையும் நிலை ஏற்பட வாய்ப்புள்ளதால் கிட்டத்தட்ட 38 மில்லியன் மக்கள் வெளியேற்றப்பட்டுள்ளனர். இந்த அணை உடையும் பட்சத்தில் வுகான் மற்றும் அதனை சுற்றியுள்ள தொழில்துறை நகரங்கள் பல நீரில் மூழ்கும் என்பதுதான் தற்போது சீனாவுக்கு பெரும் தலைவலியாக மாறியுள்ளது.

## இயற்கையின் அதிசயங்கள் 17

காஸ்மிக் கதிர்கள்




சுமார் 70 ஆண்டுகளுக்கு முன்பு விஞ்ஞானிகள் ஒரு அதிசய நிகழ்ச்சியை கண்டனர். இறுக மூடப்பட்ட ஒரு கண்ணாடி குழாய்க்குள் இருந்த காற்றில் சிறிதளவும் மின் இயக்கத்தை அவர்கள் கண்டனர். கண்ணாடி குழாயை சுற்றிலும் அடைப்புகளை வைத்தனர். அப்போதும் கூட கண்ணாடி குழாயினுள் காற்றில் மின் இயக்கம் தென்பட்டது. இந்த மின் இயக்கத்திற்கு காரணம் என்ன ?

பல ஆய்வுக்குப் பிறகு அண்டவெளி கதிர்களான காஸ்மிக் கதிர்கள் எனக் கண்டனர். இந்த மர்ம கதிர்கள் எங்கிருந்து வந்து கொண்டிருக்கிறது ?

வானத்திற்கும் பூமிக்கும் மத்தியில் இக்கதிர்கள் ஆக்கிரமிக்கின்றன என்று விஞ்ஞானிகள் ஆய்வுகள் நடத்தி பூமியிலிருந்தோ, அதன் கடலிலிருந்தோ, சூரியனிலிருந்து கூட வரவில்லை. சூரிய மண்ட வெளிக்கும் அப்பால் இருந்து வருகிறது என்பதை கண்டனர்.

இக்கதிர்களில் அணுத்துகள்களே நிறைந்துள்ளன. அவை பூமியின் வாயு மண்டலத்திற்கு மேலே விண்வெளியில் பயணம் செய்து கொண்டிருக்கின்றன. அவற்றின் வேகம் ஏறக்குறைய ஒளியின் வேகத்திற்கு சமமாக உள்ளது. அவை நமது பூமியை அணுகி காற்றுமண்டலத்தில் புகுந்து காற்று மண்டலத்தின் அணுத்துகள்களோடு மோதுகின்றன.

இந்த மோதலின் விளைவாக புதிய துகள்கள் பிறக்கின்றன. இப்புதிய துகள்கள் மேலும் வேகமாக அடிப்படை துகள் பிரயாணம் செய்த திக்கிலேயே சென்று, மற்ற அணுக்களுடன் மோதி, புதிய புதிய துகள்களை சிருஷ்டித்துக் கொண்டே இருக்கின்றன. இவை "இரண்டாந்தர காஸ்மிக் கதிர்கள் " என்று அழைக்கப்படுகின்றன. அவையும் தமது பங்குக்கு மற்ற அணுத்துகள்களுடன் மோதி மேலும் புதிய புதிய துகள்களை சிருஷ்டித்துக் கொண்டே இருக்கின்றன.

அண்டக் கதிர்கள் (Cosmic rays) வெட்ட பெருவெளியிலிருந்து வரக்கூடிய அண்டக்கதிர்கள் வெள்ளம் போல் வருகின்றன. இவைதான் பூமியின் தட்ப வெப்ப நிலையை நிர்ணயிக்கிறது. சூரியனின் பங்குதான் அதிகம் என நினைக்கலாம். ஆனால் தட்பவெப்ப நிலையை நிர்ணயிப்பதில் அண்டக்கதிர்கள் பெருமளவு உதவுகிறது.

அண்டக்கதிர்கள் காற்றின் மூலப் பொருட்களுடன் மோதும்போது அளவுகடந்த அயனிகள் உண்டாகின்றன.

அயனிகள் வளிமண்டலத்தின் தன்மையை மாற்றுகிறது.

செறிவூட்டப்பட்ட அயனிகளில் நேரயனிகளும் (positive ions) மாறயனிகளும் (negative ions) ஒரு விகிதத்தில் ஏற்படும். இந்த விகிதாசாரம் மாறும் தன்மையைப் பொறுத்தது உயிரினங்களின் வாழ்க்கை அமைகிறது.

அத்துடன் மாறயனி உயிரினங்களின் மன வளர்ச்சிக்கு உதவுகிறது.இந்த மாறயனிகள்தான் பிரபஞ்ச செய்தியாகும்.

ஆக்சிஜன் உடல் சக்திக்கு மட்டுமே உதவக்கூடியது. மாரயனிகள்தான் மனநிலையைத் தூண்டவும் மற்ற நடவடிக்கைக்கான உந்து சக்தியாகவும் இருக்கிறது.

தட்பவெப்ப நிலைக்கு உதவிசெய்வதோடு முக்கியமாக பூமியின் மேல் அடுக்கு வளிமண்டலத்தில் ஏற்படக்கூடிய நிகழ்வுகளின் காரணமாக பெரு வெளியிலிருந்து வரக்கூடிய இந்த கதிர்களால் ஏற்படும் ஆற்றல் அளவிடற்கறியது.

இறைவன் குர்ஆனில் வானத்திற்கும்,பூமிக்கும் மத்தியில் நடப்பதைக் குறித்து அநேக வசனங்களில் பேசுகிறான்.

وَمَا خَلَقْنَا السَّمَآءَ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا بَاطِلًا ذٰ لِكَ ظَنُّ الَّذِيْنَ كَفَرُوْا فَوَيْلٌ لِّلَّذِيْنَ كَفَرُوْا مِنَ النَّارِ

மேலும், வானத்தையும், பூமியையும், இவ்விரண்டிற்குமிடையே உள்ளவற்றையும் வீணுக்காக நாம் படைக்கவில்லை. இது (வீணென்பது) காஃபிர்களின் எண்ணமாகும்; காஃபிர்களுக்கு (நரக) நெருப்பின் கேடுதான் உண்டு. (அல்குர்ஆன் : 38:27)

وَمَا خَلَقْنَا السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا لٰعِبِيْنَ

மேலும், வானங்களையும் பூமியையும் இவ்விரண்டிற்கும் இடையே உள்ளவற்றையும் விளையாட்டிற்காக நாம் படைக்கவில்லை. (அல்குர்ஆன்: 44:38)

رَّبُّ السَّمٰوٰتِ والْاَرْضِ وَمَا بَيْنَهُمَا فَاعْبُدْهُ وَاصْطَبِرْ لِـعِبَادَتِهٖ هَلْ تَعْلَمُ لَهٗ سَمِيًّا

வானங்களையும், பூமியையும், இவற்றிற்கு மத்தியில் உள்ளவைகளையும் படைத்து வளர்ப்பவனும் அவனே! (அல்குர்ஆன் : 19:65)

وَمَا خَلَقْنَا السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَاۤ اِلَّا بِالْحَقِّ‌ وَاِنَّ السَّاعَةَ لَاٰتِيَةٌ‌ فَاصْفَحِ الصَّفْحَ الْجَمِيْلَ‏

வானங்களையும் பூமியையும், இவைகளுக்கு மத்தியில் உள்ளவைகளையும் தக்க காரணமின்றி நாம் படைக்கவில்லை. (அல்குர்ஆன் : 15:85)

அல்லாஹ்வே அறிவான்.

ரஹ்மத் ராஜகுமாரன்.

**இயற்கையின் அதிசயங்கள் 18**

பெர்முடாவின் விலகாத மர்மங்கள்..!



இயற்கை எப்போதும் பல கண்டுபிடிக்க முடியாத மர்மங்களையும், எண்ணிலடங்கா ஆச்சரியங்களையும் தன்னகத்தே கொண்டிருக்கும்.

அறிவியல் தொழில்நுட்பங்களின் வளர்ச்சி மனிதனின் நாகரீகத்தை அடுத்தடுத்த பரிமாணங்களுக்கு கொண்டு சென்றாலும், இயற்கை நமக்களிக்கும் சாவால்களை மட்டும் மனிதனின் தொழில்நுட்பத்தால் அவ்வளவு எளிதாக கண்டுபிடிக்க இயலவில்லை.இந்த பூமியில் இயற்கை நமக்களித்துள்ள பல சிக்கல்கள் இன்றும் தீர்க்கப் படாதவையாகவே உள்ளன.

அப்படி இன்றளவும் தன்னிடம் பல மர்மங்களை கொண்டுள்ளதுதான் பெர்முடா முக்கோணம் (BERMUDA TRIANGLE).

வட அமெரிக்காவின் கிழக்கே பனாமா கால்வாயில் அருகே உள்ளது பெர்முடா தீவு, இந்த தீவை ஒட்டி வட அட்லாண்ட்டிக் கடல் பகுதியில் அமைத்துள்ள புளோரிடா, பெர்முடா மற்றும் புவேர்ட்டோ ரிக்கோ (Puerto Rico) ஆகிய மூன்று இடங்களை உள்ளடக்கிய பகுதி தான் பல நூற்றாண்டு காலமாக பல்வேறு அமானுஷ்ய கதைகளுக்கு சொந்தமான பெர்முடா முக்கோணம் என அழைக்கப்படுகிறது.

இந்த மர்மமான பெர்முடா முக்கோணத்தை பற்றிய பல அனுபவங்களை, கதைகளாகவும், குறிப்புகளாகவும், புத்தகங்களாகவும் பலர் எழுதி வைத்துள்ளனர்.

அந்தவகையில் இந்த மர்ம இடத்தை பற்றி மக்களுக்கு முதலில் தெரியப்படுத்தியவர் கடற்பயணி கொலம்பஸ். 15-ம் நூற்றாண்டில் அவர் கடல் வழியாக பயணம் மேற்கொண்டிருந்தார் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு அவரின் படகு சென்ற போது, அவர் வைத்திருந்த திசைகாட்டி செயல்படாமல் போனது, மேலும்

அந்த பகுதியில் கடலும் மிகவும் சீற்றத்துடன் காணப்பட்டது குறித்து தன்னுடைய பயணக் குறிப்பிலும் கொலம்பஸ் எழுதியிருக்கிறார்.

அதன் பிறகு 1800 களில் மேரி செலஸ்டி எனும் கப்பல் காணாமல் போனது. அதைத் தொடர்ந்து 1918-ம் ஆண்டு 'யு.எஸ்.எஸ் சைக்ளோப்ஸ்' என்கிற கப்பலும் சில நூறு பயணிகளுடன் காணாமல் போனது.

1945-ம் ஆண்டு பிளைட் 19 வகையைச் சேர்ந்த 5 ராணுவ விமானங்கள் அந்தப் பகுதியில் பறக்கும்போது காணாமல் போயின.

1949-ல் ஜமைக்கா நாட்டுக்குச் சொந்தமான பயணிகள் விமானம் 39 பயணிகளுடன் மாயமானது.

இப்படி நூற்றுக்கும் மேற்பட்ட சம்பவங்கள் அந்தப் பகுதியில் நிகழ்ந்ததாகப் பதிவாகி இருப்பதால் அது மர்மப் பிரதேசமாகவே திகழ்கிறது.

மேலும் இப்படி தொடர்ச்சியாக நடக்கும் மர்மமான நிகழ்வுகள் ஏன் நடக்கின்றன என்பதற்கான காரணங்களும் மர்மமானதாகவே உள்ளன.

அந்த பகுதியை சுற்றி வசிக்கும் மக்களின் நம்பிக்கையை பொருத்தமட்டில் பெர்முடா முக்கோணம் அமைந்துள்ள பகுதியில் இதற்கு முன்பு "அட்லாண்டிஸ்" எனும் கடவுள்கள் வாழ்ந்த நகரம் இருந்ததாகவும், பின் அந்த நகரம் கடலுக்கு அடியில் மூழ்கியதாகவும், அங்கு வாழ்ந்த மக்கள் தான் இன்று இந்த சம்பவங்களுக்கு காரணமாக உள்ளதாக கருதுகிறார்கள்.

ஆனால் பின்னர் நடந்த ஆராய்சிகள் மூலம் அங்கு இருப்பது காணாமல் போன கப்பல்களில் இருந்த பொருட்களாக இருக்கலாம் என கூறப்பட்டது.

ஆனால் அறிவியலின் கூற்றுப்படி இந்த பெர்முடா முக்கோணம் எனப்படுகின்ற பகுதியில் காற்றின் வேகம் எப்போதும் அதிகப்படியான வேகத்தில் இருப்பதாகவும், அதனால் அங்கு காற்று ஏற்படுத்தும் அதிகப்படியான அழுத்தம் காரணமாக அங்குள்ள மேகங்கள் அருங்கோண வடிவில் சுழல்வதாலும், கடலின் சீற்றமும் அதிகமாக இருப்பதால் தான் இங்கு செல்லும் கப்பல்களும், விமானங்களும் காணாமல் போவதாக சமீபத்திய ஆய்வுகள் கூறுகின்றன.

எதுவாக இருந்தாலும் இயற்கை மனிதனுக்கு எப்போதும் மர்மங்களையும், ஆச்சர்யங்களையும், நன்மைகளையும் அளித்துக் கொண்டே இருக்கும், இயற்கை சார்ந்து அதை பாதிக்காமல் இருந்தால், இயற்கை நமக்கு நன்மைகளை மட்டுமே அளிக்கும்.

பெர்மிடாவைப் பற்றி படிக்கும் போதெல்லாம் இந்த வசனம்தான் என் நினைவுக்கு வருகிறது

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ

மனிதர்களின் கைகள் தேடிக்கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவி விட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக் கொள்வதற்காக, அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுவைக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது. (அல்குர்ஆன் : 30:41)

ரஹ்மத் ராஜகுமாரன்

## இயற்கையின் அதிசயங்கள் 19

பூமி சுற்றுவதை நிறுத்தினால் ஏற்படும் 7 வினோத நிகழ்வுகளும் , குர்ஆனின் முன்னறிவிப்புகளும்




நாம் வாழும் இந்த பூமியானது 365 நாட்களும் தன்னைத் தானே சுற்றிக் கொண்டும் சூரியனைச் சுற்றி வருவதால் தான் இரவு பகல் ஏற்படுகிறது என்று எல்லோருக்குமே தெரிந்த விஷயம்.

ஆனால் இந்த பூமி திடிரென்று சுற்றுவது நிறுத்தி விட்டால், என்ன நடக்கும் என்று என்றாவது கற்பனை செய்ததுண்டா? ஒருவேளை அப்படி நடந்தால் என்னவாகும் என்று பார்க்கலாம். பூமி சுற்றுவதை நிறுத்தினால் ஏற்படும் 7 வினோத நிகழ்வுகள் உண்டாகும் என்று விஞ்ஞானம் பல ஆய்வுகள் செய்து கூறியுள்ளது.

**1)** மேற்கில் இருந்து கிழக்கு நோக்கி சுமார் 1670 கி.மி வேகத்தில் சுற்றும் பூமியானது திடிரென்று சுழற்சியை நிறுத்தும் பொழுது பூமியுடன் உறுதியாகப் பிணைக்கப்படாத அத்தனைப் பொருட்களும் உயிரினங்களும் கிழக்கு நோக்கி வீசி எறியப்படும்.

يَوْمَ تَرْجُفُ الْاَرْضُ وَالْجِبَالُ وَكَانَتِ الْجِبَالُ كَثِيْبًا مَّهِيْلًا

அந்நாளில், பூமியும் மலைகளும் ஆட்டம் கொடுத்து (ஒன்றோடொன்று மோதி) மலைகள் சிதறுண்ட மண் குவியல்களாகி விடும். (அல்குர்ஆன் : 73:14)

**2)** கடல் நீரும் பூமியுடன் உறுதியாகப் பிணைக்கப் பட்டிருக்கவில்லை எனவே பூமி சுழற்சியை நிறுத்தும் பொழுது அதிக அளவிலான தொடர்ச்சியான பூகம்பகங்களும் சுனாமி ஏற்படவும் வாய்ப்புகள் உண்டு. இதனால் நிலத்தில் வாழும் ஒரு உயிர் கூட மிஞ்ச முடியாது.

وَاِذَا الْبِحَارُ فُجِّرَتْ கடல்கள் பிளக்கப்பட்டுவிட்டால், (அல்குர்ஆன் : 82:3)

تَتْبَعُهَا الرَّادِفَةُ (மென்மேலும்) அதனைத் தொடர்ந்து (பல பூகம்ப அதிர்ச்சிகள்) வரும் (நாளில் உலகம் முடிவுற்றே தீரும்). (அல்குர்ஆன் : 79:7)

**3)** பூமி தன்னைத் தானே சுற்றுவது நிறுத்திய போதிலும் சூரியனைச் சுற்றிக் கொண்டு தான் இருக்கும் எனவே வருடத்தில் 6 மாதங்கள் இருளிலும் மீதி ஆறு மாதங்கள் முற்றிலுமாக ஒளியிலும் காணப்படும். தொடர்ந்து 6 மாதங்கள் சூரியனை நோக்கி இருக்கும் பகுதிகளில் அதிக அளவிலான வெப்பம் இருக்கும்.

قُلْ اَرَءَيْتُمْ اِنْ جَعَلَ اللّٰهُ عَلَيْكُمُ النَّهَارَ سَرْمَدًا اِلٰى يَوْمِ الْقِيٰمَةِ مَنْ اِلٰـهٌ غَيْرُ اللّٰهِ يَاْتِيْكُمْ بِلَيْلٍ تَسْكُنُوْنَ فِيْهِ اَفَلَا تُبْصِرُوْنَ

“கியாம நாள்வரை உங்கள் மீது அல்லாஹ் பகலை நிரந்தரமாக இருக்கும்படிச் செய்து விட்டால், நீங்கள் அதில் ஓய்வு பெறும் பொருட்டு உங்களுக்கு இரவைக் கொண்டு வரக்கூடியவன் அல்லாஹ்வையன்றி நாயன் உண்டா என்பதை நீங்கள் (சிந்தித்துப்) பார்த்தீர்களா? (இவ்வுண்மையை) நீங்கள் நோக்க வேண்டாமா?” என்று கூறுவீராக! (அல்குர்ஆன்: 28:72)

**4)** இதனால் இருளில் உள்ள 6 மாதங்கள் பனிப் பிரதேசமாகவும் மீதி 6 மாதம் ஒளியில் உள்ளவை பாலைவனமாகவும் மாறி விடும். இந்த மாற்றத்தைத் தாங்காமல் நுண்ணுயிர்கள் கூட முற்றிலுமாக அழிந்து விடும்.

وَاٰيَةٌ لَّهُمُ الَّيْلُ ‌ۖۚ نَسْلَخُ مِنْهُ النَّهَارَ فَاِذَا هُمْ مُّظْلِمُوْنَۙ

இரவும் இவர்களுக்கோர் அத்தாட்சியாகும். அதிலிருந்தே நாம் பகலை வெளிப்படுத்துகின்றோம். இல்லையென்றால் இவர்கள் இருளில்தான் தங்கிவிடுவார்கள். (அல்குர்ஆன்: 36:37)

**5)** சூரியன் கிழக்கில் தோன்றி மேற்கில் மறைவதற்குப் பதிலாக மேற்கில் தோன்றி கிழக்கில் மறையும். இதுமட்டுமல்லாமல் இந்த வினோத நிகழ்வு ஆண்டுக்கு ஒரு முறை மட்டுமே நிகழும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சூரியன் மேற்கிலிருந்து உதிப்பதற்கு (யுகமுடிவுக்கு)முன் யார் பாவமன்னிப்புக் கோரித் திருந்திவிடுகிறாரோ அவருடைய பாவமன்னிப்புக் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறான அபூஹுரைரா (ரலி) முஸ்லிம் : 5236.

**6)** பூமி சுழற்சியை நிறுத்தும் பொழுது வளி மண்டலத்தில் ஏற்படும் மாற்றத்தினால் வீசும் காற்றின் வேகமானது ஒரு மிகப் பெரிய அணுகுண்டு வெடிப்பினை விட பல மடங்கு அதிகமாக இருக்கும். இதனால் மிகப் பெரிய கட்டிடங்கள் கூட இருக்கும் இடம் தெரியாமல் அழிந்து விடும்.

وَالذّٰرِيٰتِ ذَرْوًا ۙ (கடல் நீரை ஆவியாக்கிச் சிதறடிக்கும்) சூறாவளிகள் மீதும்,

(அல்குர்ஆன்: 51:1)

**7)** பூமி தன்னைத் தானே சுற்றுவதை நிறுத்தும் அடுத்த நொடியே பூமியைச் சுற்றியுள்ள பாதுகாப்பு காந்த மண்டலம் செயல் இழந்து போய் விடும். இதனால் சூரியனில் இருந்து வெளி வரும் கதிர்கள் மீதம் உள்ள உயிர்களையும் அழித்து விடும்.

அதுமட்டுமில்லாமல் centrifugal force எனப்படும் மையவிலக்கு விசையால் பூமத்திய ரேகையில் நிலம் சிறிய அளவில் தொடர்ச்சியாக வீக்கமடைந்து காணப்படும். பின்னர் சிறிது காலத்திற்குப் பின்னர் அந்தப் பகுதி மீண்டும் தட்டையாக மாறும் என்று கூறப்படுகிறது.

மேலும் புவி ஈர்ப்பு விசை அதிகம் இருக்கக் கூடிய துருவப் பகுதிகளை நோக்கி கடல் நகரும் என்றும் நிலப்பகுதி பூமத்திய ரேகை பகுதியில் ஒரே கண்டமாக ஒன்றாகி விடும் என்றும் கூறப்படுகிறது.

وَاِذَا الْبِحَارُ سُجِّرَتْ ۙ

கடல் நீர் நெருப்பாக மாற்றப்படும்போது. (இவ்வாறு உலகம் முடிவுபெற்று, விசாரணைக் காலம் ஏற்படும்) (குர்ஆன் : 81:6)

இவற்றையெல்லாம் மிஞ்சும் வகையில் பூமியின் காந்த விசை சிறுகச் சிறுக வலுவிழந்து ஒரு கட்டத்தில் மறைந்து போகும் நிலை உருவாகும். இதன் விளைவாக காஸ்மிக் கதிர்கள் அதிக அளவில் பூமியைத் தாக்கக் கூடும் இதன் மூலம் பூமியில் உயிர்கள் வாழ்வதற்கான சாத்தியக்கூறுகள் இல்லாத சூழல் ஏற்பட்டு பூமி முற்றிலுமாக அழிந்து போகும் நிலை ஏற்படும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**இயற்கையின் அதிசயங்கள் 20**

நெருப்புச் சுறாவளிகள் ( FIREWHIRLS )




நெருப்புச் சுறாவளிகள் என்பது சூராவளி சூழலும் போது அதன் உராய்வினால் காய்ந்த இழை தழைகள் கருகி நெருப்பு உண்டாகிறது.

இந்த நெருப்புச் ஜுவாலைகளை சூராவளி தன்னுள் இழுத்தபடியே பிற இடங்களுக்கு பரவி நாசத்தை ஏற்படுத்தும் ஆற்றல் பெற்றுள்ளன. இவைகள் பெரும்பாலும் விவசாய நிலங்கள் மற்றும் காடுகள் உள்ள பகுதிகளில் பேரிழப்பை ஏற்படுத்திவிடுகின்றன.

இந்த நெருப்புச் சூராவளிகள் 1923ம் ஆண்டு ஜப்பான் நாட்டில் உள்ள டோக்கியோவின் Hifukusho-Ato என்ற கிராமத்தில் சுமார் 38,000த்திற்கும் மேற்பட்ட மனிதர்களை வெரும் 15 நிமிட இடைவெளியில் நெருப்பினால் பொசுக்கி அழித்துள்ளது.

இவைகள் பெரும்பாலும் 10 முதல் 50 மீட்டர் அகல உயரமும் 10 அடி அகலம் கொண்டதாகவும் காணப்படும். இச்சுறாவளிகள் சூழன்றடிக்கும் போது காற்றின் வேகம் மணிக்கு 160 கி.மீ என்ற வேகத்தில் காணப்படும். 49 அடி உயரமுள்ள மரத்தை கூட சில வினாடிகளில் அழித்துவிடும்.

அல்லாஹ் அருள்மறையில் விவரிக்கும் நெருப்பு சூராவளியின் தாக்கம் பற்றி...

"உங்களில் யாராவது ஒருவர் இதை விரும்புவாரா? – அதாவது அவரிடம் பேரீச்ச மரங்களும், திராட்சைக் கொடிகளும் கொண்ட ஒரு தோட்டம் இருக்கிறது. அதன் கீழே நீரோடைகள் (ஒலித்து) ஓடுகின்றன. அதில் அவருக்கு எல்லா வகையான கனி வர்க்கங்களும் உள்ளன. (அப்பொழுது) அவருக்கு வயோதிகம் வந்துவிடுகிறது. அவருக்கு (வலுவில்லாத,) பலஹீனமான சிறு குழந்தைகள் தாம் இருக்கின்றன – இந்நிலையில் நெருப்புடன் கூடிய ஒரு சூறாவளிக் காற்று, அ(ந்தத் தோட்டத்)தை எரித்து(ச் சாம்பலாக்கி) விடுகின்றது. (இதையவர் விரும்புவாரா?) நீங்கள் சிந்தனை செய்யும் பொருட்டு அல்லாஹ் (தன்) அத்தாட்சிகளை உங்களுக்குத் தெளிவாக விளக்குகின்றான்" (அல்குர்ஆன் 2:266)

அதேபோல் ஐக்காவாசிகளையும் நேர்வழிப்படுத்தவும் நபி ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்களையே அனுப்பி வைத்தான். ஐக்காவாசிகள்; மத்யன்வாசிகள் எடையைக் குறைத்து, மோசம் செய்து வியாபாரம் செய்தனர் . ஆனால் ஐக்காவாசிகள் ஒரு மடங்கு மேலவே இருந்தார்கள்.

ஐக்காவாசிகள் உருவ வழிபாட்டை மேற்கொண்டதோடு அளவில் மோசம் செய்யவும், நல்ல காசு வாங்கிக்கொண்டு செல்லா காசு கொடுக்கவும் ,காசை குறைவாக கொடுத்து ஏமாற்றவும் , தங்கம், வெள்ளி

நாணயங்களின் ஓரங்களை வெட்டி எடுத்துக்கொண்டு, குறைபட்ட அந்த நாணயங்களைச் செலவாணியில் விடவும் செய்வதே தங்களின் வழக்கமாகக் கொண்டிருந்தனர் .

ஷாம் - மிஸ்ர் வழியில் அமர்ந்து, மக்களிடமிருந்து சுங்கம் வசூலிப்பது, பதுங்கிருந்து வழிப்போக்கர்களைக் கொள்ளையடிப்பது, உணவுப் பொருட்களை பதுக்கி வைத்து பஞ்சத்தை ஏற்படுத்தி அநியாய விலைக்கு விற்பது போன்ற கேடுகெட்ட செயலை செய்து கொண்டிருந்தனர்.

நபி ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் போதனையைக் கேட்டு அவர்களில் ஒருவர் கூட முஸ்லிம் ஆகவில்லை. மேலும் நபியைக் கேலி செய்தனர். நீர் சொல்லும் உமது கடவுளுக்கு சக்தியிருக்குமானால், வானத்திலிருந்து ஏதேனும் வேதனையை இறக்கச் சொல்லும் பார்க்கலாம் என்று ஆணவத்துடன் பேசினர்.

ஷுஐப் நபி அவர்கள் அவர்களை "அல்லாஹ்வை குறைவாக மதிப்பிடாதீர்கள். அவன் உங்களது ஒவ்வொரு சொல்லையும், செயலையும் உற்றுநோக்கியவனாகவே இருக்கிறான். அவனது ஆட்சியில் தாமதமுண்டு. ஆனால் தவறிருக்காது. நீங்கள் செய்துவரும் அக்கிரமங்களுக்கு கண்டிப்பாக தண்டனை உங்களுக்கு உண்டு. அதில் சந்தேகமில்லை'' என்றுகூறினார்கள்.

ஐக்கா வாசிகள் அதைப் பொருட்படுத்தவில்லை. மேலும் நபியவர்களை கேலி செய்வதிலும் அவர்களது உபதேசங்களுக்கு மாறு செய்வதிலுமே திளைத்திருந்தார்கள்.

இறுதியில் அல்லாஹ்வின் கோபப்பார்வை ஐக்காவாசிகள் மீது பட ஆரம்பித்தது. ஏழு நாட்கள் வரை அப்பகுதியில் கடுமையான உஷ்ணம் தகிக்கவாரம்பித்தது. குளம், குட்டை, கிணறு எல்லாமே ஒரேயடியாக வறண்டு போய் விட்டன. குடிப்பதற்கு ஒரு சொட்டுத் தண்ணீர்க் கூட கிட்டாது மக்கள் தவியாய்த் தவிக்க ஆரம்பித்தனர்.

அனல் காற்றின் கொடுமையைத் தாளமாட்டாது, வீட்டிலிருந்தவர்கள் எல்லாம் தத்தம் வீடுகளை விட்டு வெளியேறி, காடுகளில் வந்து மரங்களின் நிழலில் தங்கத் தொடங்கினர். அவர்களது மூளைகளும் வறட்சியால் பாதிக்கப்பட்டுப் போயின.

இத்தகைய சூழ்நிலையில்தான் வானத்தில் ஒரு கருமேகம் தோன்றியது. அத்தோடு ஜிலுஜிலுவென்று தென்றல் காற்றும் வீசத் தொடங்கியது. அவ்வளவுதான்! அவர்கள் அத்தனைப் பேர் அகங்களும் முகங்களும் மகிழ்ச்சியால் ஒரேடியாக மலர்ந்து போயின. ஆடிப்பாடி களியாட்டம் புரியத் தொடங்கினர்.

ஆனால் கருமேகத்திலிருந்து வெளியான தீச்சுவாலை ஒருசில மணி நேரங்களில் ஐக்காவாசிகள் அனைவரையும் பஸ்பம் ஆக்கிவிட்டது.

இந்த அழிவு ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மனதை பெரிதும் பாதித்தது. நபி அவர்கள் மனம் வெதும்பிப் போனார்கள். நமது போதனைகளை கேட்காது அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகிப் போய் அழிந்து விட்டார்களே என்று நினைத்து நினைத்து அழுது அழுது அவர்களது பார்வையும் மங்கி விட்டது.

ஹழ்ரத் ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இரண்டு புதல்விகள் இருந்தனர். அந்த மகள்களோடு கண்பார்வையும் இழந்த நிலையில் அவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் போதுதான் ஹழ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

வந்தவர்கள் நபி என்பதை அறிந்ததும் தமது புதல்விகளில் ஒருவரை அவர்களுக்கு திருமணம் செய்து வைத்து விட்டார்கள். அதன்பிறகு 7 வருடங்கள் 4 மாதங்கள் வரை வாழ்ந்தார்கள். தம்முடைய 254 ஆவது வயதில் வபாத்தானார்கள். அன்னாரின் திருவுடல் மக்காவில் ஸபா - மர்வா மலைகளுக்கிடையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

(“இயற்கையின் அதிசயங்கள் " என்கிற இத்தொடர் பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது)

**க்ரைம் 1**

(ஒரு பெண், ஒருகொலை)




காதல் மனைவியின் பிறந்தநாளுக்கு கேக் வாங்கி கொடுத்த அண்ணனை தம்பி கொடூரமாக கொலை செய்த சம்பவம் அதிர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது.

திருவள்ளூர் மாவட்டம் அடுத்த கடம்பத்தூர் ஒன்றியம் குமாரச்சேரி கிராமம் பெருமாள் கோவில் தெருவை சேர்ந்தவர் யோவான் (25). இவரது சகோதரர் ஏசான் (22). கூலித் தொழிலாளிகள். ஏசான் மது பழக்கம் மற்றும் கஞ்சா பழக்கத்திற்கு அடிமையானவர் என்றும், மனநிலை பாதிக்கப்பட்டவர் என்றும் கூறப்படுகிறது. 04 பிப்ரவரி 2021 அன்று சகோதரர்கள் இருவரும் வீட்டில் இருந்தனர்.

அப்போது திடீரென ஏசான் தான் வைத்திருந்த கத்தியால் யோவானின் தலை மற்றும் கழுத்து பகுதியில் வெட்டினார். படுகாயமடைந்த அவர் ரத்த வெள்ளத்தில் சம்பவ இடத்திலேயே துடிதுடித்து உயிரிழந்தார்.

இதுகுறித்து மப்பேடு போலீசார் வழக்குப்பதிவு செய்து ஏசானை கைது செய்து அவரிடம் விசாரணை மேற்கொண்டனர்.அப்போது, போலீசார் விசாரணையில் பல்வேறு அதிர்ச்சி தகவலை தெரிவித்தார்.

அதில், " நான் நெல்லூரில் துணிக்கடையில் வேலை செய்யும்போது அனுஷா என்பவரை காதலித்து 2 ஆண்டுகளுக்கு முன்பு திருமணம் செய்துகொண்டு நெல்லூரில் வசித்து வந்தேன். எனது சகோதரர் யோவான் பெயிண்டிங் வேலை செய்து வந்தார். கடந்த மார்ச் மாதம் குமாரச்சேரிக்கு வந்து தங்கினோம். இந்த நிலையில் ஒரு மாதத்திற்கு முன்பு யோவான் ஊருக்கு சென்று அங்கு என் மனைவிக்கு பிறந்தநாள் கேக் வாங்கி கொடுத்து கொண்டாடியுள்ளார். இதனால் அவர் மீது எனக்கு சந்தேகம் ஏற்பட்டது. இதில் மனவேதனை அடைந்த நான் எனது மனைவியுடன் எனது அண்ணன் தொடர்பில் இருப்பதாக கருதி அவரை நான் சரமாரியாக வெட்டிக்கொலை செய்தேன்" என்று கூறியுள்ளார்.

ஒரு பெண்ணுக்காக உடன் பிறந்த சகோதரனைக் கொல்வது என்பது இக்காலத்தில் மட்டும் அல்ல , மனித குலத்தின் முதன் முதலில் நடந்த குற்றமே சகோதரக் கொலைதான் .

…………………. …………….x…………………………….x…. ….'…………….. …

ஆதம் நபியின் இரு புதல்வர்கள் ஹாபீல், காபீல். ஆதம் நபியின் ஆரம்ப கால வாழ்வில் எல்லோரும் நேரடியாக அன்னை ஹவ்வாவின் வயிற்றிலிருந்தே பிறந்த ஒரு தாய் மக்களாகவே இருந்தனர்.

திருமணம் செய்து கொள்ள வேற்று உறவுகள் ஏதுமில்லை. எனவே, ஒரு சூலில் முப்பது குழந்தைகள் வீதம் பெற்றெடுத்த அன்னை ஹவ்வாவின் முதல் சூல் புள்ளைகள் அடுத்த சூல் ஆண்களையும் அப்படியே பெண்களும் மாற்றி திருமணம் செய்து கொள்ள இறைவனின் சட்டம் வழி சொன்னது.

ஹாபீலின் சகோதரி அழகு குறைந்தவளாகவும், காபீலின் சகோதரி அழகு நிறைந்தவளாகவும் இருந்தனர். இதில் காபீல் முதன் முதலாக இறைவனின் விதியை மீறினார். அழகான தன் தங்கையை ஹாபீலுக்கு கொடுத்து விட்டு அவரின் அழகற்ற சகோதரியை, தான் திருமணம் செய்து கொள்ள சம்மதிக்க மாட்டேன் என்றார்.

ஆக முதன் முதலாக ஒரு கலகக் குரல். இறைவனின் விதியை மாற்றி சுய நிலையை நிறுவும் எண்ணம் காபீல் கடுமனத்தோடு இருந்தார்.அதே வேளையில் ஹாபீல் ஷரீஅத்தை நிலை நாட்டவும், தன் உரிமையை அடையவும் போராடினார்.

ஹாபீலை கொலை செய்ய காபீல் நினைத்தார் . எவ்விதம் கொல்வது என்று யோசிக்கும் பொழுது , இப்லீஸ் மனித உருவில் தோன்றி ஒரு பறவையோ பாம்பையோ பிடித்து அதன் தலையைக் காலில் வைத்து நசுக்கிக் கொன்றான் அதைப் பார்த்து காபீல் ஹாபீலைக் கொன்றார் .

ஹாபீலுடைய கொலையைப் பற்றி அண்ணல் நபி (ஸல்) அவர் குறிப்பிடும் போது , " எந்த உயிரும் அநியாயமாகக் கொலை செய்யப்படின் அதன் பங்குரிய பாவம் ஆதம் (அலை) அவர்களின் மூத்த மகன் (காபீல்) மீது சுமத்தப் பெறாமலில்லை ஏனெனில் நிச்சயமாக அவர்தாம் கொலை புரியும் வழக்கத்தை உலகில் முதலில் உண்டு பண்ணியவராவார் " என்று கூறினர்

ஆதாரம் : இப்னு மஸ்வூத்.( ரலி) புகாரி, முஸ்லீம், திர்மிதீ ,

இறுதியில் ஒரு பெண்ணுக்காக காபீல், தன் சகோதரன் ஹாபீலைக் கொன்றார். முதன் முதலாக பூமியில் ரத்தம் சிந்தியது. தன் சகோதரனை கொன்று விட்டு அந்த பிணத்தை என்ன செய்வது என்று அறியாமல் சில நாட்கள் தன் தோளில் சுமந்து அலைந்தார்.

அப்போது இறைவன் புறத்திலிருந்து அனுப்பப்பட்ட இரு காகங்கள் காபீலின் முன்னே பறந்து வந்து, சண்டையிடுகிறது. ஒரு காகம் கொல்லப்பட்டது. உடனே அதைக் கொன்ற காகம் தன் அலகால் பூமியில் குழி தோன்றி காகத்தை புதைத்தது. இதை கண்ட காபீல் அதுபோன்றே குழி தோன்றி ஹாபீலை புதைத்தார். இச்செய்தி திருக்குர்ஆனில் 5 : 27 முதல் 32 பதிவாகியுள்ளது.

இப்னு பதூதாவோ நம் பயண நூலில் பின்வருமாறு குறிப்பிடுகிறார் .

" திமிஷ்கிற்கு வடக்கே இப்ராஹீம் (அலை) அவர்கள் பிறந்ததாகக் கூறப்படும் குகைக்கு மேற்கில் ஒரு குகை இருக்கிறது. அது " இரத்தக் குகை" என்று அழைக்கப்படுகிறது. அம்மலையின் கற்களில் நான் இரத்தக்கறையைக் கண்டேன். அது ஹாபீலைக் கொன்று இந்தக் குகைக்கு இழுத்து வந்ததாகவும் இந்தக் குகைக்கு இப்ராஹீம் (அலை), மூஸா (அலை) , ஈஸா (அலை) , ஐயூப் (அலை) ஆகியோர் வந்து தொழுதுள்ளதாகவும் கூறப்படுகிறது . இங்கு ஒரு பள்ளிவாயிலும் உள்ளது "

ரஹ்மத் ராஜகுமாரன் .

**க்ரைம் 2**

(சொத்திற்காக முதியவர் கொலை)




மதுரை அருகே முதியவரை கொலை செய்து விட்டு மகன் மற்றும் மருமகள் நாடகமாடியது போலீசார் விசாரணையில் தெரியவந்துள்ளது.

மதுரை மாவட்டம் உசிலம்பட்டி அருகே உத்தப்புரம் கிராமத்தைச் சேர்ந்தவர் ராசு. முதியவரான இவர், அவரது தோட்டத்தில் கடந்த 2020 ஏப்ரல் 22-ஆம் தேதி மர்மமான முறையில் படுகொலை செய்யப்பட்டு கிடந்தார்.

இந்த கொலை குறித்து வழக்குப்பதிவு செய்த போலீசார் உசிலம்பட்டி டி.எஸ்.பி.ராஜா தலைமையில் தனிப்படை அமைத்து கொலை செய்த மர்ம நபர்களை தேடி வந்தனர்.

இந்நிலையில் போலீசார் நடத்திய விசாரணையில், கொலையானவரின் மகன் கருப்பையா மற்றும் மருமகள் தருமா மற்றும் கூட்டாளியான அய்யனார் என மூவரும் இணைந்து சொத்திற்காக முதியவரை கொலை செய்து விட்டு நாடகமாடியது அம்பலமாகியுள்ளது.

……………………………………………………………………………………………

இஸ்ரவேல் சமூகத்தில் ஒரு செல்வந்தர் இருந்தார். அவருக்குக் குழந்தைகள் இல்லை. அவரது சகோதரன் மகன் ஒருவன் இருந்தான்.அந்த செல்வந்தர் இறந்துவிட்டால் அவரது செல்வங்கள் அவரது சகோதரன் மகனுக்குச் சென்றுவிடும்.

பணத்தின் மீது மோகம் கொண்ட அவன் தனது சித்தப்பாவைக் கொலை செய்தான். பின்னர் அவரது சடலத்தை பக்கத்து ஊரில் போட்டான். கச்சிதமாக காரியம் நடந்துவிட்டது.

மறுநாள் காலை தனது சித்தப்பாவைக் காணவில்லை என நாடகமாடினான். பின்னர் அவரது சடலத்தைக் கண்டு கத்தினான்.

தனது சித்தப்பாவை அந்த சடலம் இருந்த பகுதியில் வாழ்ந்தவர்கள் கொலை செய்துவிட்டார்கள் என்று குற்றமும் சாட்டினான். இதனால்இரு பிரிவினருக்கும் மத்தியில் பிரச்சனை உருவாகும் நிலை ஏற்பட்டது. எனவே, இறுதியில் மூஸா நபியிடம் சென்று முறையிட முன்வந்தனர்.

மூஸா நபியிடம் பிரச்சினை முன்வைக்கப்பட்டது. மூஸா நபி அல்லாஹ்விடம் பிரார்த்தித்துவிட்டு, “அல்லாஹ் ஒரு மாட்டை அறுக்குமாறு கட்டளையிடுகின்றான்” என்று கூறினார்.

இதைக் கேட்ட மக்கள் ஆச்சரியப்பட்டனர். கொலையாளியைப் பற்றிக்கேட்டால், மாட்டை அறுக்கச் சொல்கின்றாரே என எண்ணிய அவர்கள்,“எங்களைக் கேலி பண்ணுகின்றீர்களா?என்று நபியை எதிர்த்துக் கேட்டனர்.

“அறிவீனன்தான் அல்லாஹ்வின் பெயரில் பொய்யுரைப்பான். நான் அத்தகைய அறிவீனனாக இருப்பதை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகின்றேன்” என்றார் மூஸா நபி.

அந்த மக்கள் நபி கூறியதற்குக் கட்டுப்பட்டு மாட்டை அறுத்திருக்கலாம். ஆனால், அதை விட்டு விட்டு கேள்வி மேல் கேள்வி கேட்டனர்.

“மாடு என்றால் எத்தகைய மாடு?” என்று கேட்டனர்.

அதற்கு, “அது கிழடும் அல்ல கன்றும் அல்ல இரண்டுக்கும் இடைப்பட்ட வயதையுடையதாக இருக்க வேண்டும்” என்று கூறினார்.

அதன் பின்னர் என்ன நிறமுடைய மாட்டை அறுக்க வேண்டும் ? என்று கேட்டனர். பார்ப்பவர்களைப் பரவசப்படுத்தக் கூடிய அமைப்பில் உள்ள கருமஞ்சள் நிற மாடு என்று பதில் வந்தது.

பின்னரும் அந்த மாட்டைப் பற்றி விசாரித்தனர். அந்த மாடு நிலத்தை உழவோ ,விவசாயத்திற்கு நீர் இறைக்கவோ பழக்கப்படாத மாடு. குறைகளோ, தழும்புகளோ அற்றதாக இருக்க வேண்டும் என்று மூஸா நபி கூறினார்.

அதன் பின்னர் தான் அத்தகைய மாட்டை அறுக்க முடிவெடுத்தனர். இவ்வளவு வர்ணனைகளும் உள்ள மாட்டைத் தேடி அலைந்தனர். பன்மடங்கு செல்வத்தை கொட்டிக் கொடுத்து அதை வாங்கி அறுத்தனர்.

அறுக்கப்பட்ட மாட்டின் ஒரு பகுதியை (மாட்டின் நாக்கு ) எடுத்து இறந்தவரின் சடலத்தின் மீது அடிக்குமாறு அல்லாஹ் கூறினான். அவ்வாறு அடித்ததும் அந்த ஆச்சரியம் நடந்தது.

இறந்தவர் உயிர் பெற்று தன்னைக் கொன்றவன் தனது சகோதரன் மகன்தான் என கொலையாளியை அடையாளப்படுத்தினார்.

மீண்டும் அவரது உயிர் போய்விட்டது.

கொலைகாரன் வசமாக மாட்டிக் கொண்டான். அவனது பண ஆசை அவனுக்கு அழிவைக் கொடுத்தது. அவன் தண்டனை பெற்றான்.

இதன் மூலம் அல்லாஹ் இறந்தவர்களை உயிர்ப்பிப்பான் என்பதை நேரடியாக அவர்கள் கண்ணால் கண்டார்கள். இருப்பினும் அந்த மக்கள் அல்லாஹ்வுக்குக் கட்டுப்படும் இயல்பு உள்ளவர்களாக மாறவில்லை.

அதிக ஆசை ஆபத்தானது என்பதையும் குறுக்கு வழியில் அடைய முயலக் கூடாது. குற்றம் செய்தவன் எவ்வளவு தந்திரம் செய்தாலும் மாட்டிக் கொள்வான். குற்றம் செய்து விட்டு அதை அடுத்தவர் தலையில் போடுவது பெருங்குற்றம். அளவுக்கு மீறிய கேள்விகள் அர்த்தமற்றவை. கொலையாளியைக் கண்டுபிடிக்க இறந்த உடலைப் பிரேத பரிசோனைக்குட்படுத்தலாம். போன்ற பல அம்சங்களை இக்கதை வாயிலாக நாம் அறிந்துக் கொள்ளலாம்.

ரஹ்மத் ராஜகுமாரன்

## க்ரைம் 3

பெண்ணை விபச்சாரத்திற்கு அழைத்த முதியவர் கைது



தர்மபுரி பஸ் நிலையத்தில் நின்று கொண்டிருந்த பெண்ணை விபச்சாரத்திற்கு அழைத்த முதியவர் கைது செய்யப்பட்டார்.

தருமபுரி கலெக்டர் அலுவலகம் அருகேயுள்ள கோணம்மாள் தெருவில் வசித்து வருபவர் ஜோதி (வயது37). இவர் நேற்று ( 2018 செப் 30 ) வெளியூருக்கு செல்வதற்காக தருமபுரி நகர பஸ் நிலையத்திற்கு வந்தார்.

அப்போது பஸ் நிறுத்தத்தில் நின்று கொண்டிருந்த போது அருகில் உள்ள கூழ் கடை நடத்திவரும் இண்டூரை சேர்ந்த ரவிக்குமார் (62) என்பவர் விபச்சாரத்திற்கு அழைத்ததாக கூறப்படுகிறது.

இது குறித்து ஜோதி டவுன் போலீசில் புகார் கொடுத்தார். அதன் பேரில் போலீசார் வழக்குபதிவு செய்து ரவிக்குமாரை கைது செய்தனர். முதியவர் தன் மீது வீண்பழி சுமத்தியதாக அக்குற்றத்தை மறுத்துள்ளார்.

....................................... ..................................................................... ..

வாரத்திற்கு ஒரு முறை சனிக்கிழமை அன்று இஸ்ரவேலர்களுக்கு இறைவனின் கட்டளைகளை எடுத்துக்கூறி அறப்போதம் செய்வதற்கு மூஸா (அலை) அவர்கள் வழக்கமாக இருந்து வந்தது. அவ்வாறு அவர்கள் மக்களுக்கு அறப்போதம் செய்து கொண்டிருந்தபோது காரூன் அவர்கள் முன் வந்து அமர்ந்தான்.

அப்போது மூஸா (அலை) அவர்களுக்கு ஒவ்வொரு தீய செயலையும் எடுத்துரைத்து, அவற்றுக்கான தண்டனையும் கூறிக் கொண்டு வந்தார்கள். ஒருவன் களவு செய்யின் அவனுடைய கையை வெட்ட வேண்டும் என்றும், ஒருவன் விபச்சாரம் செய்யின் அவனை கல்லெறிந்து கொல்ல வேண்டும் என்றும் ,சொல்லிக் கொண்டு வந்தார்கள்.

அப்போது காரூன் இடைமறித்து "நீர் விபச்சாரம் செய்தாலுமா ? என்று வினவினான். அதற்கு மூஸா அலை அவர்கள், "ஆம் நான் விபச்சாரம் செய்தாலும்தான், எனக்கு ஒரு சட்டம் உங்களுக்கு ஒரு சட்டம் என்றில்லை இறைச் சட்டம் எல்லோருக்கும் ஒன்றுதான் என்று பதிலளித்தார்கள்

"தன்னுடன் தகாத முறையில் நீர் நடந்து கொண்டதாக பாகிஷா என்ற ஓர் அழகி கூறுகிறாள். அதற்கு நீர் என்ன கூறுகிறீர் ?'' என்று கேட்டான் காரூன்.

(பாகிஷா என்றால் விபசாரத்தின் மூலம் பொருளீட்டுபவள் என்பதாகும். அவளின் இயற்பெயர் முனீரா என்பதாகும் )

அவ்வாறு அல்லாஹ்வின் தூதர் மீது அடாத பழியை ஒன்றை தூக்கி எறிந்து தன் மனதுக்குள் மெள்ளச் சிரித்தான் காரூன்

அதுகேட்டு மூஸா (அலை) அவர்கள் சற்றேனும் அஞ்சாது "பாக்கிஷாவையே இங்கு அழைத்து வந்து இதுபற்றி விசாரியுங்கள் ! குற்றம் நிரூபிக்கப்பட்டால், என்னை சட்டப்படி கல்லெறிந்து கொள்ளுங்கள் "என்று கூறினார்கள்.

அவ்வாறே பாக்கிஷாவும் அழைத்து வரப்பட்டாள். அந்த அவை முழுவதும் பரபரப்பு அடைந்தது.

அப்போது மூஸா (அலை) அவர்கள் அவளை நோக்கி, " பனீ இஸ்ராயீல்களுக்காகக் கடலை பிளக்கச் செய்து, அதில் பன்னிரண்டு வழிகளை உண்டு பண்ணிய அந்த இறைவன் மீது ஆணையாக கேட்கிறேன் நான் உன்னை விபச்சாரம் செய்தேனா ? கூறு ! "என்று உணர்ச்சிவசப்பட்டு பெரும் சப்தம் போட்டு கேட்டார்கள்.

மூஸா (அலை) அவர்கள் இப்படி கேட்டதும்,பாக்கிஷாவின் உள்ளத்தையும், உடலையும் அது அதிரச் செய்தது. மூஸா (அலை) அவர்கள் மீது வீண்பழி கூறின், தான் அழிவது உறுதி என்று அவளுடைய உள்மனம் எச்சரித்தது. எனவே என்னதான் ஏற்படினும் அல்லாஹ்வின் தூதர் மீது வீண்பழி கூற வேண்டாம் என்று முடிவுக்கு வந்தாள்.

எனவே அவள் அங்கு குழுமியிருந்த இலட்சோப லட்சம் இஸ்ரவேலர்களை நோக்கி,

" பனீ இஸ்ராயீல்களே! காரூன் கூறுவது அத்தனையும் பொய். நேற்று அவர் என்னை தேடி என் இல்லம் வந்து, எனக்கு நிறைய பொன் தந்து தம்முடைய சதித் திட்டத்துக்கு என்னை உடந்தையாய் இருக்குமாறும் தாம் மூஸா மீது பழி சுமத்தும் போது அது முற்றிலும் உண்மை என்று கூறுமாறும் என்னிடம் கேட்டார் கொண்டார் . அவர் கூறுவது அத்தனையும் பொய். மூஸா தூயவர் . இறைத்தூதர் . அதில் எந்த ஐயமும் இல்லை" என்று கூறி,

தான் அவ்வாறு கூறுவதற்கு ஆதாரமாக காரூன் தனக்கு அளித்த அவன் பெயர் பொறிக்கப்பட்ட பொற்பைகள் இரண்டையும்,அவனுடைய பொன் வண்டு மோதிரத்தையும் முன்வைத்தாள்.

காரூன் முகம் பேயால் அறையப்பட்டவன் முகம் போன்று வெளிறியது, நாணத்தால் தலை குனிந்தவாறு அவ்விடத்தை விட்டு அகன்றான்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

க்ரைம் 4

## பெண் சிசுக்கொலை




11 மார்ச் 2020- மதுரை மாவட்டம் உசிலம்பட்டி அருகில் உள்ள புள்ளேரிப்பட்டி கிராமத்தில் பிறந்து 33 நாள்களான பெண் குழந்தை ஒன்று, மார்ச் 5-ம் தேதியன்று அதன் தாய், தந்தை மற்றும் தாத்தாவால் எருக்கம்பால் ஊற்றிக் கொல்லப்பட்டிருக்கிறது. குழந்தையைக் கொன்ற வைரமுருகன், சவுமியா மற்றும் வைரமுருகனின் தந்தை சிங்கம் ஆகியோர், இப்போது சிறையில் இருக்கின்றனர்.

………………………………………………………………………………………………

பெண் குழந்தைகளைப் பெற்றெடுப்பதையே கேவலமாகக் கருதி பிறந்த குழந்தைப் பெண்ணாகயிருப்பின் அதற்கு உயிருடனே சமாதிகட்டும் கொடுமைகள் நடந்திருக்கின்றது;

அதனால் தான் இன்றளவும் தொட்டில் குழந்தைகள் போன்ற திட்டம் போன்றவற்றை செயல்படுத்தி பெண் குழந்தைகள் காப்பகங்களை அரசாங்கமே நடத்த வேண்டிய இழி நிலைக்கு நாம் ஆளாகியிருக்கிறோம்.

'பச்சிளம் பெண் குழந்தை கிணற்றில் மிதந்தது', 'குப்பைத் தொட்டியில் கிடந்த பெண் சிசுவின் உடலை தெரு நாய்கள் குதறி தின்றன' போன்ற செய்திகளை அன்றாடம் நாம் நாள் இதழ்களில் கான்கிறோம்.

கல்வியறிவில்லாத கிரமத்திலிலுள்ள மூடர்கள் தான் பெண் குழந்தைகளைப் பளுவாகக் கருதி அவர்களை பிறந்த உடனேயே கொன்று விடுகின்றார்கள் எனில் பட்டணத்திலுள்ள படித்த மேதைகளோ அந்தப் பெண் சிசுக்கள் இந்த உலகைப் பார்ப்பதற்கு முன்னரே பெண் குழந்தை என்பதையறிந்து கருவிலேயே அதை கொலை செய்து விடுவதைப் பார்க்கிறோம். கருவிலேயே செய்யப்படும் கொலைக்கு புதிய பெயர் சூட்டி 'கருக் கலைப்பு' என்று வேறு அழைக்கின்றனர்.

"அவர்களில் ஒருவனுக்கு பெண் குழந்தை பிறந்துள்ளது என்று நன்மாராயங் கூறப்பட்டால் அவன் முகம் கறுத்து விடுகிறது – அவன் கோபமுடையவனாகிறான். எதைக் கொண்டு நன்மாராயங் கூறப்பட்டானோ, (அதைத் தீயதாகக் கருதி) அந்தக் கெடுதிக்காக(த் தம்) சமூகத்தாரை விட்டும் ஒளிந்து கொள்கிறான் – அதை இழிவோடு வைத்துக் கொள்வதா? அல்லது அதை (உயிரோடு) மண்ணில் புதைத்து விடுவதா? (என்று குழம்புகிறான்); அவர்கள் (இவ்வாறெல்லாம்) தீர்மானிப்பது மிகவும் கெட்டதல்லவா?" (குர்ஆன் 16:58-59)

வேறு சில மூடர்களோ ஈவு இரக்கம் என்பது சிறிதுமின்றி பெண்ணாகப் பிறந்த ஒரே காரணத்துக்காக அந்தப்பச்சிளம் குழந்தையை துடிதுடிக்க உயிரோடு புதைத்து வந்தனர். நமதூர்களில் கள்ளிப்பால், அரளிவிதை, நெல் மணிகள் கொடுத்து பெண் குழந்தைகளைக் கொல்வது போல!

இஸ்லாம் இவற்றை வன்மையாக கண்டிப்பதுடன், இவ்வாறு கொலை செய்யப்பட்ட அந்த பெண் சிசுக்கள், நியாயத் தீர்ப்பு நாளில் அவைகள் எதற்காக கொலை செய்யப்பட்டது என்று விசாரணை செய்யப்பட்டு கொலை செய்தவர்களுக்கு கடுமையான தண்டணையளிக்கப்படும் என்று கூறுகிறது.

நியாயத் தீர்ப்பு நாளின் ஒரே அதிபதியாகிய ஏக இறைவன் கூறுகிறான்: -

'உயிருடன் புதைக்கப்பட்ட பெண் (குழந்தை) வினவப்படும் போது- எந்தக் குற்றத்திற்காக அது கொல்லப்பட்டது?' என்று- (அல்-குர்ஆன் 81:8-9)

இன்னும் சிலர் எங்கே நிறைய குழந்தைகள் பெற்றால் அவர்களை வளர்த்து ஆளாக்குவதற்கு நிறைய செல்வம் தேவைப்படுமே! அதனால் நம் செல்வம் எல்லாம் தீர்ந்து நாம் ஏழையாகி விடுவோமே என்று வறுமைக்கு பயந்து ஓரிரு குழந்தைகளுக்கு மேல் கருவுற்றால் அதைக் கருகலைப்பு என்ற பெயரில் கருவில் வைத்தே கொலை செய்கின்றனர்.

'நீங்கள் வறுமைக்குப் பயந்து உங்களுடைய குழந்தைகளைக் கொலை செய்யாதீர்கள்; அவர்களுக்கும் உங்களுக்கும் நாமே உணவை (வாழ்க்கை வசதிகளையும்) அளிக்கின்றோம் – அவர்களைக் கொல்லுதல் நிச்சயமாகப் பெரும் பிழையாகும்' (அல்-குர்ஆன் 17:31)

நபிகள் நாயகம் காலத்தில் நடந்த ஒரு நிகழ்வைப் பாருங்கள்.

நபிகளார் தோழர்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது இஸ்லாத்திற்கு முந்தைய அறியாமைக் காலத்து பேச்சு எழுந்தது. ஒரு தோழர் தன் அடி மனதில் உறைந்து கிடந்த நிகழ்வைச் சொல்லத் தொடங்கினார்.

"இறைத் தூதரே! அந்த அறியாமைக் காலத்தில் என் மனைவி நிறை மாதக் கர்ப்பிணியாக இருந்த நேரம். நான் வியாபார விஷயமாகப் பயணம் செல்ல வேண்டிய கட்டம். என் மனைவியிடம், 'ஆண் குழந்தை பிறந்தால் பத்திரமாகப் பார்த்துக் கொள். பெண் குழந்தை பிறந்தால் கொன்று புதைத்து விடு' என்று சொன்னேன். பிறகு நான் பயணத்தில் இருந்து திரும்பியபோது மனைவி என்னிடம், 'நமக்குப் பெண் குழந்தை பிறந்தது. நல்லவேளை அது இறந்து விட்டது' என்று சொன்னாள்.

சில ஆண்டுகள் சென்றன. ஒருநாள் என் வீட்டிற்கு ஒரு அழகான பெண் குழந்தை வந்து விளையாடுவதைக் கண்டு, 'யாரவள்?' என்று திடுக்கிட்டுக் கேட்டேன். அதற்கு என் மனைவி, 'பக்கத்து வீட்டுக் குழந்தை' என்றாள்.

அந்தக் குழந்தை என்னிடம் பழகத் தொடங்கியது. குழந்தைக்கும் எனக்கும் இடையே இருந்த பாசத்தைக் கண்ட என் மனைவி, 'இந்தக் குழந்தை மீது உங்களுக்கு அவ்வளவு பாசமா?' என்று கேட்டாள். 'ஆம்.. இவள் என் உயிரல்லவா?' என்றேன்.

அப்போது என் மனைவி, 'அன்று நான் சொன்னது பொய். இது பக்கத்து வீட்டு குழந்தை அல்ல. நம் குழந்தைதான். உங்களுக்குப் பயந்து நான் அப்படிச் சொன்னேன்' என்றாள்.

நான் மகிழ்ச்சியில் நனைந்திருக்க வேண்டுமல்லவா? ஆனால் அறியாமைக் காலத்து வெறித்தனத்தில் நான், அந்தக் குழந்தையைக் கொல்ல முடிவு செய்தேன். ஆனாலும் பாசம் என்னை விடவில்லை. பாசத்திற்கும், அறியாமைக் கால சிந்தனைகளுக்கும் இடையே நடந்த போராட்டத்தில் பாசம் தோற்றது.

ஒருநாள் என் அன்பு மகளைப் பாலை வெளிக்கு அழைத்துச் சென்றேன். என்னுடன் அவள் விளையாடிக் கொண்டும், கதை பேசிக் கொண்டும் இருந்தாள். ஒரு இடத்தில் குழி தோண்டினேன். பாலை வனத்தின் மணல் என் தாடியில் பதிந்தன. அந்தச் செல்ல மகள் ஏதும் அறியாமல், தன் பிஞ்சு விரல்களால் என் தாடியில் உள்ள மணலைத் தட்டி விட்டாள்.

இறைத்தூதரே! நான் கல்நெஞ்சக்காரன். என் மகளைக் குழியில் தள்ளி மணலைப் போட்டு, உயிரோடு புதைத்து விட்டேன்" என்று நபித் தோழர் சொன்னபோது, நபிகளார் அழ ஆரம்பித்து விட்டார்.

அருகில் இருந்த தோழர்கள், அந்தத் தோழரைப் பார்த்து, "என்ன காரியம் செய்தீர்? நபிகளாரையே அழச் செய்து விட்டீரே!" என்றபோது, நபிகள் நாயகம், "அந்தக் காலம் மறைந்து விட்டது. நாம் பாவமன்னிப்பைத் தேடி மீண்டு விட்டோம்" என்று கூறியவண்ணம் தனது தாடி நனையும் அளவு அழுதார்கள்.

பின்னர் நபிகள் நாயகம் கூறினார்கள்: "நாம் எவ்வளவு கல் நெஞ்சகர்களாய் இருந்துள்ளோம். (இஸ்லாத்தின் வருகைக்கு முந்தைய) அறியாமைக் காலத்தில் செய்த செயல்கள் அனைத்தையும் இறைவன் மன்னித்து

விடுவான். ஆகவே உமது நற்செயல்களை புதுப்பித்துக் கொள்வீராக!" என்று அத்தோழரைப் பார்த்துக் கூறினார்கள்.

பெண் குழந்தைகள் பிறப்பு விகிதம் குறைவதால் ஏற்படும் பின் விளைவுகள் :

1. 2030 இல் இந்தியாவில் பெண் குழந்தைகளை விட ஆண்கள் 20 சதவிகிதம் அதிகமாக இருப்பார்களென்று லண்டனின் சர்வதேச சுகாதார மற்றும் வளர்ச்சிக்கான யு.சி. எல். மையம் நடத்திய ஆய்வில் தெரியவந்துள்ளது. இதேபோல் சீனா, தென் கொரியா ஆகிய நாடுகளிலும்100 பெண் குழந்தைகளுக்கு105 ஆண் குழந்தைகள் என்ற வீதத்தில் பிறக்கின்றனர்.

2.இந்தியாவில் ஆண், பெண் இடையிலான பிறப்பு விகிதம் பெரியளவில் குறைந்து வருவதால்2030 இல் இரு பாலாருக்குமிடையிலான வித்தியாசம் 20 சதவிகிதமாக இருக்குமென்று புதிய ஆய்வொன்றில் தெரியவந்துள்ளது.

3. குழந்தை பெற்றுக் கொள்வதில் பாரபட்சம் காட்டப்படுவதால் சமூகத்தில் ஆண்கள் திருமணம் செய்யத் தேவையான பெண்கள் கிடைக்காமல் பற்றாக்குறை நிலவும்.

4. உரிய வயதில் திருமணத்திற்கு பெண் கிடைப்பதில் தாமதமாவதால் திருமணத் தடை ஏற்பட்டு மனச் சிதறல் அடையும் பலகீனமான ஆண்களினால் சிறுமிகள் பாலியல் தொந்தரவுகளுக்கு ஆளாக நேரிடலாம்.

ரஹ்மத் ராஜகுமாரன்

## க்ரைம் 5

(விபச்சாரம்)



2 செப் 2021 விபச்சார கும்பல் தலைவி; விசாரணையில் திடுக்கிடும் தகவல்கள்

இதன் மூலம் அருணாதேவி கோடி கோடியாக பணத்தை சம்பாதித்து பல இடங்களில் வீடு, பங்களா வாங்கி போட்டு இருக்கிறார். மேலும் அவர் மீது அழகாபுரம், சூரமங்கலம், டவுன், ஏற்காடு காவல் நிலையங்களிலும் விபச்சார வழக்குகள் உள்ளன. சமீபத்தில் கொலை செய்யப்பட்ட விபசார கும்பல் தலைவி கிளிஞ்ச வாய் சாந்தியும், அருணாதேவியும் தொழில் பாட்னராக இருந்து உள்ளனர்.

அருணாதேவியிடம் காவல்துறையினர் யார்-யாருக்கெல்லாம் அழகிகளை சப்ளை செய்தார் என்று விசாரணை நடத்தி வருகிறார்கள். இதனால் பல அரசியல் வாதிகள், அதிகாரிகள் கலக்கத்தில் உள்ளனர்.

மேலும் அருணாதேவியை போலவே சேலத்தில் பலர் விபசார தொழிலை நடத்தி வருகிறார்கள். பலவீனமான பெண்களையும், பணத்துக்கு ஆசைப்படும் பெண்களையும் மயக்கி அவர்கள் விபசாரத்தில் ஈடுபடுத்தி பணத்தை சம்பாதித்து வருகிறார்கள்.

எனவே சேலத்தில் உள்ள அனைத்து விபசார கும்பல் குறித்தும் காவல்துறை பட்டியல் சேகரித்து விசாரிக்க தொடங்கி இருக்கிறார்கள். மேலும் அருணாதேவியுடன் நெட்வொர்க் அமைத்து விபசாரம் செய்தவர்கள் குறித்தும் விசாரணை நடந்து வருகிறது. சினிமாவை போல் தொடரும் இந்த சம்பவம் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி இருக்கிறது.

................................ ..........................................................................

"விபச்சாரம் செய்யும் பெண்ணையும், விபச்சாரம் செய்யும் ஆணையும் அவர்கள் ஒவ்வொருவரையும் நூறு கசையடி அடியுங்கள். அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நீங்கள் நம்பினால் அல்லாஹ்வின் சட்டத்தில் அவ்விருவர் மீதும் உங்களுக்கு இரக்கம் ஏற்பட வேண்டாம். அவ்விருவர் தண்டிக்கப் படுவதை நம்பிக்கை கொண்டோரில் ஒரு கூட்டம் பார்த்துக் கொண்டிருக்கட்டும். (அல்குர்ஆன் 24:2)

இறைச் சட்டத்தை நிறைவேற்றுவதில் உங்களுக்கும் இரக்கம் ஏற்படவேண்டாம் என்றும் விபச்சாரன், விபச்சாரி தண்டிக்கப்படுவதை நம்பிக்கை கொண்டோர் பார்க்க வேண்டும் எனவும் மற்றவருக்குப் படிப்பினையாக்கியது இஸ்லாம்.

”(விபச்சாரக் குற்றத்திற்கான தண்டனை சட்டத்தை) என்னிடமிருந்து பெற்றுக் கொள்வீர்! அல்லாஹ் (வாக்களித்திருந்ததைப் போன்று) பெண்களுக்கு ஒரு வழியை ஏற்படுத்திவிட்டான்.

மணமாகாத பெண்ணுடன் மணமாகாத ஆண் விபச்சாரம் செய்துவிட்டால் நூறு கசையடிகள் வழங்கி, ஓராண்டு காலத்திற்கு நாடு கடத்தப்பட வேண்டும். மணமான பெண்ணுடன் மணமான ஆண் விபச்சாரம் செய்துவிட்டால் நூறு சாட்டையடிகள் வழங்கி (உயிர் பிரியும்வரை) கல்லெறி தண்டனையும் வழங்கப்பட வேண்டும் " என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர் – உபாதா பின் ஸாமித் (ரலி) நூல்கள் – முஸ்லிம் 3489,3490 திர்மிதீ 1354)

பெண்கள் விஷயத்தில் இறைவன் வேறுவழி ஏற்படுத்தும்வரை என்று 4:15 வது வனத்தில் கூறியுள்ள வேறுவழியை இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு இறைவனால் அறிவிக்கப்பட்டு, மேற்கண்ட நபிவழிச் செய்தியாக விபச்சாரத்திற்கான தண்டனை சட்டங்கள் நடைமுறைக்கு வந்தன.

இதன் பிறகு, மணமாகாத ஆணோ – பெண்ணோ விபச்சாரம் செய்தால் அவர்களுக்கு கசையடிகளும், ஓராண்டு காலம் நாடுகடத்தலும்; மணமான ஆணோ – பெண்ணோ விபச்சாரம் செய்தால் அவர்களை உயிர் பிரியும் வரை கல்லெறிந்து கொல்வதும் சட்டமாகியது. தொடர்ந்து அச்சட்டம் கடைபிடிக்கப் பட்டது, அது குறித்த பல நபிவழிச் செய்திகளிலிருந்து இரு அறிவிப்புகள்:

கிராமவாசிகளில் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, ‘இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டத்தின் படியே நீங்கள் எனக்குத் தீர்ப்பளிக்கும் படி நான் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்” என்று கூறினார்; அவரை விட விளக்கமுடையவராக இருந்த அவரின் எதிரி, -ஆம், எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டத்தின்படி தீர்ப்பளியுங்கள்” என்று கூறினார். ‘என்னை(ப் பேச) அனுமதியுங்கள்” என்று கிராமவாசி கூற நபி(ஸல்) அவர்கள், ‘சொல்” என்று கூறினார்கள்.

அவர், ‘என் மகன் இவரிடம் வேலைக்காரனாக இருந்தான். அப்போது இவரின் மனைவியுடன் விபச்சாரம் செய்துவிட்டான். என் மகனைக் கல்லால் அடித்துக் கொன்று விடவேண்டும் என்று என்னிடம் தெரிவிக்கப்பட்டது. எனவே, நான் (இந்த தண்டனையிலிருந்து அவனைக் காப்பாற்றுவதற்காக) அவனுக்காக நூறு ஆடுகளையும் ஓர் அடிமைப் பெண்ணையும் பிணைத் தொகையாகத் தந்தேன்.

பிறகு, அறிஞர்களிடம் நான் விசாரித்தபோது, என் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தலும் தான் தண்டனையாகத் தரப்பட வேண்டும் என்றும், இந்த மனிதரின் மனைவிக்குக் கல்லெறி(ந்து கொல்லும்) தண்டனை கொடுக்கப் படவேண்டும் என்றும் என்னிடம் தெரிவித்தனர்” என்று கூறினார்.

இதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டத்தின் படியே தீர்ப்பளிக்கிறேன். அடிமைப் பெண்ணும் ஆடுகளும் (உன்னிடமே) திருப்பித் தரப்பட வேண்டும். உன் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலம் நாடு கடத்தும் தண்டனையும் தரப்பட வேண்டும்" (என்று கூறிவிட்டு, அருகிலிருந்த உனைஸ் இப்னு எஹ்ஹாக்(ரலி) அவர்களை நோக்கி)

''உனைஸே! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று, அவள் (தன் விபசாரக் குற்றத்தை) ஒப்புக் கொண்டால் , அவளுக்குக் கல்லெறி தண்டனை கொடுங்கள்" என்று கூறினார்கள்.

அவ்வாறே, உனைஸ் அவர்கள் அவளிடம் சென்று விசாரிக்க, அவளும் (தன் குற்றத்தை) ஒப்புக் கொண்டாள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவளைக் கல்லெறிந்து கொன்று விடும்படி உத்தரவிட, அவ்வாறே அவள் கல்லெறிந்து கொல்லப்பட்டாள். (அறிவிப்பவர்கள் – அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித் அல் ஜுஹைனீ(ரலி) நூல்கள் – புகாரி 2725, முஸ்லிம் 3502, திர்மிதி 1353)

மேற்கண்ட செய்தியில், வேலைக்காரராக அமர்த்தப்பட்ட கிராமவாசியின் மகன் திருமணம் ஆகாதவர். அவருக்கு நூறு கசையடிகளும், ஓராண்டு காலம் நாடுகடத்தலும் விபச்சாரக் குற்றத்திற்கு தண்டனையாகவும், முதலாளியின் மனைவி மணமுடித்தவர் என்பதால் அவரைக் கல்லெறிந்து கொல்வதை விபச்சாரக் குற்றத்திற்கு தண்டனையாகவும் தீர்ப்பளித்து தண்டனை நிறைவேற்றப்பட்டது.

யூதர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று அவர்களிடம், தம் சமுதாயத்தாரிடையே ஓர் ஆணும் ஒரு பெண்ணும் விபசாரம் செய்துவிட்டதாகக் கூறினார்கள்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நீங்கள் கல்லெறி தண்டனை குறித்து தவ்ராத்தில் என்ன காண்கிறீர்கள்?' என்று கேட்டார்கள்.

அதற்கவர்கள், 'அவர்களை நாம் கேவலப்படுத்திட வேண்டும் என்றும், அவர்கள் கசையடி கொடுக்கப்படுவார்கள் என்றும் அதில் கூறப்பட்டுள்ளது" என்று பதிலளித்தார்கள்.

உடனே, (யூத மத அறிஞராயிருந்து இஸ்லாத்தை ஏற்ற) அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) 'நீங்கள் பொய் சொன்னீர்கள். (விபசாரம் செய்தவர்களை சாகும்வரை) கல்லால் அடிக்க வேண்டுமென்றுதான் அதில் கூறப்பட்டுள்ளது" என்று கூறினார்கள்.

உடனே, அவர்கள் தவ்ராத்தைக் கொண்டு வந்து அதை விரித்தார்கள். அவர்களில் ஒருவர் 'விபசாரிகளுக்கு கல்லெறிந்து கொல்லும் தண்டனை தரப்படவேண்டும்' என்று கூறும் வசனத்தின் மீது தன்னுடைய கையை வைத்து மறைத்து, அதற்கு முன்பும் பின்பும் உள்ள வசனத்தை ஓதினார்.

அப்போது அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி), 'உன் கையை எடு" என்று சொல்ல, அவர் தன்னுடைய கையை எடுத்தார். அங்கே (விபசாரக் குற்றத்திற்கு) கல்லெறி தண்டனை தரும்படி கூறும் வசனம் இருந்தது. உடனே யூதர்கள், 'அப்துல்லாஹ் இப்னு சலாம் உண்மை கூறினார். முஹம்மதே! தவ்ராத்தில் கல்லெறி தண்டனையைக் கூறும் வசனம் இருக்கத்தான் செய்கிறது" என்று கூறினார்கள்.

உடனே, அவ்விரண்டு பேரையும் சாகும் வரை கல்லால் அடிக்கும்படி நபி(ஸல்) அவர்கள் உத்திரவிட்டார்கள். அவ்வாறே அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கப்பட்டது. அப்போது அந்த ஆண், அப்பெண்ணைக் கல்லடியிலிருந்து பாதுகாப்பதற்காக தன் உடலை (அவளுக்குக் கேடயம் போலாக்கி) அவளின் மீது கவிழ்ந்து (மறைத்துக்) கொள்வதை பார்த்தேன். (அறிவிப்பவர் – அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) நூல்கள் – புகாரி 3635, முஸ்லிம் 3503)

ரஹ்மத் ராஜகுமாரன

## க்ரைம் 6

(வன்புணர்வு)




ஏப் 03, 2021 , உத்தரப்பிரதேச மாநிலத்தில் ஆக்ராவில் இளம் பெண் மற்றும் அவரின் கணவர் என இருவரும் கடந்த திங்கட்கிழமை மாலை 6 மணி அளவில் இருசக்கர வாகனம் ஒன்றில் ஆக்ராவில் உள்ள அவர்களின் வீட்டில் இருந்து ஃபிரோசாபாத்தில் உள்ள அவர்களின் உறவினர் வீட்டுக்கு சென்று கொண்டிருந்தனர்.

ஜார்நா நலா எனும் பகுதியில் அவர்கள் சென்றுகொண்டிருந்த போது இருசக்கர வாகனத்தில் வந்த 3 பேர் தங்களின் வாகனத்தை வழிமறித்து,கணவர் கண் எதிரே அவருடைய 19 வயது மனைவியை 3 பேர் கொண்ட கும்பல் காட்டுப்பகுதிக்கு கடத்திச் சென்று இருவரின் ஆடைகளை களைந்து, வன்புணர்வு செய்தனர்.

பின்பு இருவர் மீதும் சரமாரியாக தாக்குதல் நடத்தியதுடன் அவர்களிடமிருந்து பணம், பொருட்களை கொள்ளையடித்துச் சென்றதாக காவல் நிலையத்தில் பரபரப்பு புகார் அளிக்கப்பட்டுள்ளது.

வீட்டுக்கு வந்த பின்னர் காவல் கட்டுப்பாட்டு அறைக்கு தொடர்பு கொண்டு நடந்தவற்றை தெரிவித்திருக்கின்றனர். அவர்கள் அறிவுறுத்தியதன் பேரில் ஏத்மாபூர் காவல்நிலையத்துக்கு சென்று எழுத்துப்பூர்வ புகாரையும் அளித்திருக்கின்றனர்.

வன்புணர்வில் ஈடுபட்ட மூவரின் இருவரின் விவரங்களையும் அப்பெண் புகாரில் குறிப்பிட்டிருந்தார். அதன்படி சம்பவத்தில் ஈடுபட்டது ஆக்ராவின் ஷாதரா பகுதியைச் சேர்ந்த கவுரி ராஜ்புத், மோனு ஆகிய இருவர் என தெரியவந்துள்ளது, மூன்றாவது நபர் குறித்த விவரங்கள் இன்னமும் கிடைக்கவில்லை.

மேலும் பாலியல் வன்புணர்வு செய்ததை அவர்கள் வீடியோவாகவும் எடுத்ததாக அப்பெண் தனது புகாரில் கூறியுள்ளார்.

இச்சம்பவம் தொடர்பாக ஆக்ரா வடக்கு காவல் கண்காணிப்பாளர் சத்யஜீத் குப்தா கூறுகையில், " மூவர் மீதும் கடத்தல், கூட்டு பாலியல் வன்புணர்வு உள்ளிட்ட பிரிவுகளில் வழக்கு பதிவு செய்யப்பட்டிருப்பதாகவும், ஒருவர் கைது செய்யப்பட்டிருப்பதாகவும்,தற்போது விசாரணை நடைபெற்று வருவதால் ,கூடுதல் தகவல்களை கூற இயலாது எனவும் பாதிக்கப்பட்ட இளம் பெண் மருத்துவ பரிசோதனைக்கு அனுப்பப்பட்டிருப்பதாகவும் அவர் கூறினார்.

................................ .................................. .... .. ........ .... ............... ......

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் ஒரு பெண்மணி தொழுவதற்காகப் புறப்பட்டார். அவரை ஒரு ஆண் கண்டு போர்வையால் போர்த்தி அவரைக் கற்பழித்து விட்டார். அவள் சப்தமிட்டதும் அவன் ஓடி விட்டான்.

வேறொரு ஆடவர் அவளருகே வந்தார் இந்த மனிதன் என்னைக் கெடுத்துவிட்டான் என்று அப்பெண் கூறினாள். முஹாஜிர்களில் ஒரு கூட்டத்தினரைக் கடந்து சென்ற அப்பெண் "இந்த மனிதன் என்னைக் கெடுத்து விட்டான்" என்ற கூறினார்.

யார் அவளைக் கெடுத்ததாக அப்பெண் அடையாளம் காட்டினாளோ அவரைப் பிடித்து வந்தனர். " அவன்தான்" என்று அப்பெண் அடையாளம் காட்டினாள்.

நபி (ஸல்) அவர்களிடம் அவர் கொண்டு வரப்பட்டு கல்லெறியுமாறு உத்தரவிடப்பட்டதும், அப்பெண்ணை உண்மையிலேயே கெடுத்தவர் எழுந்து "அல்லாஹ்வின் தூதரே நான்தான் அவளைக் கெடுத்தவன்" என்று கூறினார்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம் நீ செல்! அல்லாஹ் உன்னை மன்னித்து விட்டான்" என்று கூறினார்கள். (தவறாகப் பிடித்து வரப்பட்ட) மனிதரிடம் அழகிய வார்த்தைகளைக் கூறினார்கள். அப்பெண்ணைக் கெடுத்தவரைக் கல்லெறியுமாறு ஆணையிட்டார்கள்.

" மதீனாவாசிகள் அனைவரும் எந்த அளவு தவ்பா – பாவமன்னிப்புக் கேட்டால் ஏற்கப்படுமோ அந்த அளவு இவர் தவ்பா – பாவமன்னிப்புக் கேட்டு விட்டார்" என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர், வாயில் பின் ஹுஜ்ர் (ரலி) திர்மிதீ, அபூ தாவூத் )

ரஹ்மத் ராஜகுமாரன்

## க்ரைம் 7

வட்டி




அக் 24, 2017, திருநெல்வேலி மாவட்டம், கடையநல்லூர் வட்டம், காசிதர்மம் அருகேயுள்ள எம்.ஜி.ஆர்.நகரைச் சேர்ந்த பலவேசம் மகன் இசக்கிமுத்து (28), கூலித் தொழிலாளி. இவரது மனைவி சுப்புலட்சுமி (26). இவர்களது மகள்கள் மதி சாருண்யா (4), அட்சய பரணியா (2).

இசக்கிமுத்து அப்பகுதியைச் சேர்ந்த பெண்ணிடம் வட்டிக்கு கடனாக ரூ. 1.60 லட்சம் பெற்றிருந்தாராம். அதற்கு இதுவரை ரூ. 2.34 லட்சம் திரும்பச் செலுத்திய நிலையில், மேலும் பணம் கேட்டு இசக்கிமுத்துவுக்கு அப்பெண் தொடர்ந்து மிரட்டல் விடுத்து வந்ததாகக் கூறப்படுகிறது.

இதுதொடர்பாக இசக்கிமுத்து அளித்த புகாரின்பேரில் அச்சன்புதூர் போலீஸார் நடவடிக்கை எடுக்கவில்லையாம். மாறாக, பணம் கொடுத்தவருக்கு ஆதரவாக போலீஸார் செயல்படுவதாக மக்கள் குறைதீர்க்கும் கூட்டத்தில் இசக்கிமுத்து பலமுறை மனு அளித்திருந்தாராம்.

இந்நிலையில், கந்துவட்டி நெருக்கடி அதிகரித்ததால் இசக்கிமுத்து, கடந்த சில மாதங்களாக குடும்பத்துடன் திருப்பூரில் வசித்து வந்ததாகக் கூறப்படுகிறது. இதற்கிடையே, திருநெல்வேலி ஆட்சியர் அலுவலகத்துக்கு திங்கள்கிழமை காலை 11 மணிக்கு குடும்பத்துடன் இசக்கிமுத்து வந்தார். அங்கு திடீரென மனைவி, 2 குழந்தைகள் மீது மண்ணெண்ணெயை ஊற்றிய

இசக்கிமுத்து தன் மீதும் ஊற்றிக்கொண்டு தீவைத்துக் கொண்டார்.

..........................................................................................................................

இஸ்லாமியப் பொருளாதாரத்தில் வட்டிக்கு அறவே அனுமதி இல்லை. வட்டியில் இருந்து முற்றிலுமாக முஸ்லிம்கள் விலகிக் கொள்ள வேண்டும்.

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் வர வேண்டிய வட்டியை விட்டு விடுங்கள்! அவ்வாறு நீங்கள் செய்யாவிட்டால் அல்லாஹ்விடமிருந்தும், அவனது தூதரிடமிருந்தும் போர்ப் பிரகடனத்தை உறுதி செய்து கொள்ளுங்கள்! நீங்கள் திருந்திக் கொண்டால் உங்கள் செல்வங்களில் மூலதனம் உங்களுக்கு உரியது. நீங்களும் அநீதி இழைக்கக் கூடாது. உங்களுக்கும் அநீதி இழைக்கப்படாது. குர்ஆன் 2:278, 279

யார் வட்டி (வாங்கித்) தின்கிறார்களோ, அவர்கள் (மறுமையில்) ஷைத்தானால் தீண்டப்பட்ட ஒருவன் பைத்தியம் பிடித்தவனாக எழுவது போலல்லாமல் (வேறுவிதமாய் எழ மாட்டார்கள்; இதற்குக் காரணம் அவர்கள், "நிச்சயமாக வியாபாரம் வட்டியைப் போன்றதே" என்று கூறியதினாலேயாம்.

அல்லாஹ் வியாபாரத்தை ஹலாலாக்கி, வட்டியை ஹராமாக்கியிருக்கிறான்;. ஆயினும் யார் தன் இறைவனிடமிருந்து நற்போதனை வந்த பின் அதை விட்டும் விலகிவிடுகிறானோ, அவனுக்கு முன்னர் வாங்கியது உரித்தானது - என்றாலும் அவனுடைய விவகாரம் அல்லாஹ்விடம் இருக்கிறது. ஆனால் யார் (நற்போதனை பெற்ற பின்னர் இப்பாவத்தின் பால்) திரும்புகிறார்களோ அவர்கள் நரகவாசிகள். ஆவார்கள்; அவர்கள் அதில் என்றென்றும் தங்கிவிடுவார்கள்.(2:276)

ஈமான் கொண்டவர்களே! நீங்கள் உண்மையாக முஃமின்களாக இருந்தால், அல்லாஹ்வுக்கு அஞ்சியடங்கி, எஞ்சியுள்ள வட்டியை வாங்காது விட்டு விடுங்கள்.(3:130)

ஈமான் கொண்டோரே! இரட்டித்துக் கொண்டே அதிகரித்த நிலையில் வட்டி (வாங்கித்) தின்னாதீர்கள்;. இன்னும் நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி (இதைத் தவிர்த்துக் கொண்டால்) வெற்றியடைவீர்கள்.(4:161))

வட்டி வாங்குவது அவர்களுக்குத் தடை செய்யப்பட்டிருந்தும், அவர்கள் அதை வாங்கி வந்ததன் (காரணமாகவும்,) தவறான முறையில் அவர்கள் மக்களின் சொத்துகளை விழுங்கிக் கொண்டிருந்ததன் (காரணமாகவும், இவ்வாறு தண்டனை வழங்கினோம்), இவர்களில் காஃபிரானோருக்கு (மறுமையில்) நோவினை செய்யும் வேதனையையும் நாம் சித்தப்படுத்தியுள்ளோம்.(20:84)

(மற்ற) மனிதர்களுடைய முதல்களுடன் சேர்ந்து (உங்கள் செல்வம்) பெருகும் பொருட்டு நீங்கள் வட்டிக்கு விடுவீர்களானால், அது அல்லாஹ்விடம் பெருகுவதில்லை ஆனால் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை நாடி ஜகாத்தாக எதை நீங்கள் கொடுக்கிறீர்களோ, (அது அல்லாஹ்விடத்தில் பெருகும். அவ்வாறு கொடுப்போர் தாம் (தம் நற்கூலியை) இரட்டிப்பாக்கிக் கொண்டவர்களாவார்கள்.

இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் சொன்னார்கள், ரஸூல் (ஸல்) அவர்கள் வட்டியைச் சாப்பிட்டவன், அதை உண்ணக் கொடுப்பவன், அதற்கு சாட்சியாக இருப்பவன், அதை எழுதுபவன் அனைவரையும் சபித்துள்ளார்கள் நூல்; திர்மிதி, நஸாயி,

## க்ரைம் 8

திருட்டு



ஆக 30 - 2021 கோவையில் திறந்து இருக்கும் வீடுகளில் நுழைந்து பொருட்களை திருடி செல்லும் 4 பேர் கொண்ட கும்பலை கோவை மாநகர போலீசார் கைது செய்தனர். வீடுகளில் நுழைந்து செல்போன் உள்ளிட்ட பொருட்களை திருடும் சிசிடிவி காட்சிகளும் வெளியாகியுள்ளது.

வெரைட்டிஹால் அருகே ஒரு வீட்டில் இரண்டு பெண்கள் புகுந்து செல்போன்களை திருடும் காட்சிகள் சிசிடிவி கேமராவில் பதிவாகியிருந்தது. அந்த காட்சிகளை கொண்டு திருட்டில் ஈடுபட்ட இரு பெண்களை போலீசார் கைது செய்தனர்.

அவர்களிடம் நடத்திய விசாரணையில் திண்டுக்கல் மாவட்டத்தை சேர்ந்த கிருஷ்ணவேணி, சௌரியம்மாள் என்பதும் தங்கள் சகோதரர்கள் ரமேஷ், அந்து ஆகியோர் உதவியுடன் திருட்டு சம்பவத்தில் ஈடுபட்டு வந்திருப்பதும் தெரியவந்தது.

அதிகாலை நேரங்களில் அசந்து தூங்கும் போது வீடுகளுக்குள் நுழையும் பெண்கள் செல்போன் உள்ளிட்ட பல்வேறு பொருட்களை திருடி சென்று தங்களது சகோதரர்கள் மூலம் விற்பனை செய்து இருப்பதும் போலீஸ் விசாரணையில் தெரியவந்துள்ளது. மேலும் கோவிலுக்கு கூல் ஊற்ற காணிக்கை வசூல் செய்வது போன்று வீடுகளை நோட்டமிட்டு திருடி வந்ததும் போலீசார் விசாரணையில் தெரியவந்துள்ளது.

……………………………………………………………………………………………………

திருட்டை மிகப்பெரிய பாதக செயலாகக் கருதும் இஸ்லாம் அதற்கு தண்டனையையும் மிக கடுமையாகவே தருகிறது.

அல்லாஹ்வின் சாபம் திருடன் மீது ஏற்படட்டும்.அவன் (விலை மதிப்புள்ள) தலைக்கவசத்தைத் திருடுகிறான்;அதனால் அவனது கை வெட்டப்படுகிறது.(விலை மலிவான) கயிற்றையும் அவன் திருடுகிறான்;அதனாலும் அவனது கை துண்டிக்கப்படுகிறது என நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்.புகாரி 6783

இந்த தண்டனையை நிறைவேற்ற 6 விதிமுறைகள் உள்ளன

(1) "இஸ்லாமியக் குற்றவியல் சட்டங்கள் மிகவும் கொடூரமானவை; மனிதாபிமானமற்றவை" என்று விமர்சிக்கின்றனர்.

ஆனால் இஸ்லாமியக் குற்றவியல் சட்டங்களே மனித குலத்திற்கு மிகவும் நன்மை பயக்கும் சட்டங்கள் என்பதை நடுநிலையோடு சிந்திக்கின்ற யாரும் புரிந்து கொள்வார்கள்.

குற்றவாளி தண்டிக்கப்பட வேண்டும் என்று விதி ஏற்படுத்தப்பட்டிருப்பதன் நோக்கம் என்ன என்பதைப் புரிந்து கொண்டால் தான் இந்த விஷயத்தில் நாம் சரியான முடிவுக்கு வர முடியும்.

கொலையாளிகளைக் கொல்வதால் கொல்லப்பட்டவனின் உயிர் திரும்பக் கிடைக்கப் போவதில்லை; கற்பழித்தவனுக்கு மரண தண்டனை வழங்குவதால் போன கற்பு திரும்ப வரப் போவதில்லை; பொருளாதாரம் சம்பந்தப்பட்ட திருட்டு போன்ற சில குற்றங்களில் வேண்டுமானால் பறிபோனவை சில சமயங்களில் கிடைக்கலாமே தவிர பெரும்பாலான குற்றங்களில் குற்றவாளி தண்டிக்கப்படுவதால், பாதிக்கப்பட்டவனுக்குப் பயனேதும் கிடையாது.

இழந்ததை மீட்பது தண்டனைகளின் நோக்கம் அல்ல என்பதை இதிலிருந்து விளங்கலாம். அப்படியானால் குற்றவாளிகள் தண்டிக்கப்பட வேண்டிய காரணம் என்ன?

குற்றம் செய்தவனுக்கு வழங்கப்படும் தண்டனை, மீண்டும் மீண்டும் குற்றம் செய்வதிலிருந்து அவனைத் தடுக்க வேண்டும். ஒரு குற்றவாளிக்கு வழங்கப்படும் தண்டனையைக் கண்டு மற்றவர்கள் குற்றம் செய்ய அஞ்ச வேண்டும்.

குற்றவாளியால் பாதிப்புக்கு உள்ளானவன் தனக்கு நீதி கிடைத்து விட்டதாக நம்ப வேண்டும். மன நிறைவு அடைய வேண்டும். குற்றவாளிகள் தண்டிக்கப்பட இந்த மூன்றைத் தவிர வேறு காரணங்கள் இருக்க முடியாது.

குற்றம் செய்தவர்கள் மீண்டும் குற்றம் செய்யாமலும், குற்றம் செய்ய நினைப்பவர்கள் அதன்பால் நெருங்காமலும் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் உலகமெங்கும் சிறைச் சாலைகள், காவல் நிலையங்கள், நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. குற்றவாளிகளுக்கு எந்த விதமான தண்டனையும் வழங்கக் கூடாது என்று உலகில் எந்த அரசாங்கமும் கூறுவதில்லை.

ஆனால் உலக நாடுகள் பலவற்றில் இயற்றப்பட்டுள்ள குற்றவியல் சட்டங்களால் குற்றங்களைக் குறைக்க இயலவில்லை.

அது மட்டுமின்றி குற்றவாளிகளுக்கு சிறைச் சாலைகளில் செய்து தரப்படுகின்ற வசதிகள் குற்றங்களை அதிகப்படுத்தவே வழி வகுக்கின்றன.

குற்றங்களைத் தடுத்து நிறுத்த வேண்டிய சட்டங்களே குற்றம் செய்யத் தூண்டினால் என்னவாகும்?

திருட்டு, கற்பழிப்பு, கொலை, கொள்ளை, இன்ன பிற குற்றங்களில் ஈடுபடும் சமூக விரோதிகளுக்கு வழங்கப்படும் தண்டனை என்ன? சில மாதங்களோ, சில வருடங்களோ சிறைத் தண்டனை வழங்கப்படுகின்றது. பெரும்பாலான நாடுகளில் தண்டனையின் அளவு இது தான்.

சிறைத் தண்டனை என்பது என்ன? வெளியே வர முடியாது என்ற ஒரு அம்சத்தை நீக்கி விட்டுப் பார்த்தால், எத்தனையோ பரம ஏழைகளின் வாழ்வை விட சிறை வாழ்வு மேலானதாக உள்ளது.

நியாயமாகவும், நேர்மையாகவும் நடக்கும் ஏழைகளுக்கு அன்றாடம் கால்வயிற்றுக் கஞ்சிக்கே வழியில்லை. அநியாயமாகவும், அயோக்கியத்தனமாகவும் நடந்து கொண்ட குற்றவாளிகளுக்கு மூன்று வேளை உணவுக்கு உத்தரவாதம் தரப்படுகின்றது. உயர்தரமான மருத்துவ வசதிகள் அவர்களுக்குச் செய்து தரப்படுகின்றன. அவர்களின் பொழுதைப் போக்குவதற்காக (?) சினிமா போன்ற வசதிகளும் சிறைச்சாலைகளுக்குள்ளேயே செய்து தரப்படுகின்றன.

குற்றவாளிகளால் பாதிக்கப்பட்டவர்கள் குற்றவாளிகளை எதுவும் செய்து விடாத அளவுக்குப் பாதுகாப்பு வசதிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதில் வேதனையான அம்சம் என்ன வென்றால், எந்த மக்களிடமிருந்து ஒருவன் திருடுகிறானோ, எந்த மக்களைக் கொலை செய்கிறானோ, எந்தப் பெண்களைக் கற்பழிக்கிறானோ, அந்த மக்களின் வரிப் பணத்திலிருந்து தான் இந்த அயோக்கியர்களுக்கு இவ்வளவு வசதிகளும் செய்து தரப்படுகின்றன.

இந்தப் பெயரளவிலான தண்டனையால் ஒரு பயனும் ஏற்படாது; ஏற்படவில்லை.

53 முறை சிறை சென்றவர் மீண்டும் கைது! 15 முறை சைக்கிள் திருடியவன் மீண்டும் கைது!

இவ்வாறு அன்றாடம் செய்தித் தாள்களில் செய்திகள் வருகின்றன. 53 தடவை வழங்கப்பட்ட தண்டனைகள் அவனுக்கு எந்த அச்சத்தையும் ஏற்படுத்தவில்லை. அதை ஒரு தண்டனையாகவே அவன் கருதவில்லை என்பது இதிலிருந்து தெரிகின்றது.

சிறைச் சாலைகளில் கிடைக்கும் வசதிகள் பற்றி மற்றவர்களும் தெரிந்து கொண்டதால் "நேர்மையாக வாழ்ந்து கஞ்சிக்கு ஏன் கஷ்டப்பட வேண்டும்? ஏதேனும் குற்றம் புரிந்தால் சிறைச்சாலைகளில் மூன்று வேளை உணவு கிடைக்குமே'' என்றெண்ணி அவர்களும் குற்றங்களில் ஈடுபடத் தொடங்குகின்றனர்.

மேலும் குற்றவாளிகள் சிறைச்சாலைகளில் கூட்டாகத் திட்டமிடவும் வாய்ப்புக் கிடைப்பதால் மேலும் பெரிய அளவில் குற்றம் செய்வதற்கு புதுப்புது யுக்திகளை வகுக்கின்றனர்.

சிறைச் சாலைகள் குற்றவாளிகளின் பல்கலைக் கழகங்களாகத் திகழ்வதை அனைவரும் அறிவர்.

ஆண்டு தோறும் குற்றவாளிகள் பெருகி வருகின்றார்கள்; குற்றங்கள் பெருகுகின்றன குற்றவாளிகளை அதிகப்படுத்துவதற்காக மக்களின் வரிப் பணம் பாழாக்கப்படுகின்றது.மனிதாபிமானச் (?) சட்டங்கள் ஏற்படுத்திய விளைவுகள் இவை.

பாதிக்கப்பட்டவன் இந்தத் தண்டனைகளால் மனநிறைவு அடைவானா? என்பதையும் நாம் சிந்திக்க வேண்டும்.

திருட்டுக் கொடுத்தவனிடம் போய் திருடியவனை என்ன செய்யலாம் என்று கேட்டால் "ஆறு மாதம் சோறு போடலாம்'' எனக் கூற மாட்டான். கொல்லப்பட்டவனின் மகனிடம் போய் கொலையாளியை என்ன செய்ய வேண்டும் எனக் கேட்டால் "பதினான்கு வருடம் அரசாங்கச் செலவில் அவனைப் பராமரிக்க வேண்டும்'' என்று கூறுவானா ? தலையைச் சீவ வேண்டும் என்பானா ?

கற்பழிக்கப்பட்டவள், அதனால் தனது எதிர்காலமே இருண்டு விட்ட நிலையில் கற்பழித்தவனுக்கு எத்தகைய தண்டனை கொடுத்தால் மனம் நிறைவடைவாள் ? என்று பாதிக்கப்பட்டவர்களின் உணர்வுகளைச் சீர்தூக்கிப் பார்த்து தண்டனைகள் வழங்கப்பட வேண்டும்.

பாதிக்கப்பட்டவனின் நிலையிலிருந்து பார்க்காமல் பாதிக்கப்படாத இடத்தில் அமர்ந்து கொண்டு சட்டங்கள் இயற்றப்படுவதால் தான் பாதிக்கப்பட்டவனின் உணர்வுகள் கவனத்தில் கொள்ளப்படுவதில்லை. இஸ்லாமோ இதைக் கவனத்தில் கொள்கிறது.

ஒருவன் பத்துப் பேரை கொலை செய்து தூக்குத் தண்டனை பெறுகிறான். அவனது தண்டனையைக் கருணை மனுவின் அடிப்படையில் ரத்துச் செய்யும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு வழங்கப்பட்டுள்ளது. இது உலகின் பல நாடுகளிலும் பரவலாகக் காணப்படுகிறது.

கொல்லப்பட்டவர்களுக்கு குடியரசுத் தலைவர் மாமனோ, மச்சானோ அல்ல என்றாலும் அந்த அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பட்டிருப்பதிலிருந்து பாதிக்கப்பட்டவனின் நிலையைச் சட்டம் கடுகளவும் கவனத்தில் கொள்ளவில்லை என்பதை அறிந்து கொள்ளலாம்.

இஸ்லாமியச் சட்டம் என்ன கூறுகிறது?

"அவர்களுக்காக அ(வர்களுடைய வேதமாகிய தவ்றாத்)தில் நாம் கட்டளையிட்டிருந்தோம்: "உயிருக்கு உயிர், கண்ணுக்குக் கண், மூக்குக்கு மூக்கு, காதுக்குக் காது, பல்லுக்குப் பல், காயத்திற்கும் (காயமாக) நிச்சயமாக பழிவாங்கப்படும்" என்பதாக. எனினும், எவரேனும் பழிவாங்குவதை (மன்னித்து) அறமாக விட்டுவிட்டால் அது அவரு(டைய தீய செயலு)க்குப் பரிகாரமாகிவிடும். எவர்கள், அல்லாஹ் இறக்கி வைத்தவைகளைக்கொண்டு தீர்ப்பளிக்க வில்லையோ அவர்கள் நிச்சயமாக அநியாயக்காரர்கள்தான்! "

(அல்குர்ஆன்: 5:45)

ஒருவன் மற்றொருவனின் கண்ணைக் குருடாக்கி விட்டால், இஸ்லாத்தில் இதற்கான தண்டனை குற்றவாளியின் கண்ணையும் குருடாக்கிட வேண்டும். கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல் என்பது இஸ்லாத்தின் குற்றவியல் சட்டம்.

கண்ணை இழந்தவன் குற்றவாளியை மன்னித்து விட்டால் குற்றவாளி தண்டிக்கப்பட மாட்டான். அல்லது குற்றவாளியிடம் இழப்பீட்டைக் கோரிப் பெற்றுக் கொண்டாலும் குற்றவாளி தண்டிக்கப்பட மாட்டான்.

அது போலவே கொல்லப்பட்டவரின் வாரிசுகளில் யாரேனும் ஒருவர் குற்றவாளியின் உயிரை எடுக்க வேண்டாம் என்று கூறினால் கூட குற்றவாளிக்கு மரண தண்டனை விதிக்கப்படாது. இது இஸ்லாமியச் சட்டம்.

அதாவது உலக நாடுகள் குடியரசுத் தலைவருக்கு வழங்கிய அதிகாரத்தை பாதிக்கப்பட்டவனுக்கு இஸ்லாம் அளிக்கிறது.

சட்டங்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதை நியாயமான சிந்தனையுடைய யாரும் மறுக்க முடியாது. பாதிக்கப்பட்டவன் மன நிறைவு பெறும் வகையில் தண்டனை அளிக்கப்படாவிட்டால் பாதிக்கப்பட்டவனே குற்றவாளியாகும் நிலைமையும் உருவாகும்.

கொலைக் குற்றத்துக்காகக் கைது செய்யப்பட்டவன் ஜாமீனில் விடப்படும் போதும், சிறைச் சாலையிலிருந்து நீதிமன்றத்துக்கு அழைத்துச் செல்லப்படும் போதும் கொல்லப்பட்டவனின் உறவினர்கள் அவனைக் கொன்று விடுவது அன்றாட நிகழ்ச்சியாகி வருகிறது.

இந்த நிலைமைக்கு என்ன காரணம்? "கொலையாளியை இந்தச் சட்டங்கள் தண்டிக்காது. தண்டித்தாலும் அது போதுமானதாக இருக்காது'' என்ற எண்ணத்தின் காரணமாகவே கொலை செய்யப்பட்டவனின் உறவினர்களும் கொலையாளிகளாகி விடுகின்றனர். குற்றங்கள் அதிகரிப்பதற்கு இதுவும் முக்கியக் காரணமாக உள்ளது எனலாம்.

இஸ்லாமியச் சட்டம் எவ்வளவு அர்த்தமுள்ளது; அறிவுப்பூர்வமானது தெரியுமா?

திருட்டுக் குற்றத்தில் ஈடுபடும் ஆண்கள், பெண்கள் ஆகியோரின் வலது கை மணிக்கட்டு வரை வெட்டப்பட வேண்டும் என்று இஸ்லாம் கூறுகிறது.

இப்படிக் கையை வெட்டினால் அவன் தொடர்ந்து திருட மாட்டான்; திருடவும் முடியாது. மீண்டும் திருடுவதற்கு மனதாலும் எண்ண மாட்டான் என்பது ஒரு நன்மை.

முதன் முதலாகத் திருட எண்ணுபவனும் அதற்குக் கிடைக்கும் தண்டனையை அறியும் போது திருடத் துணிவு பெற மாட்டான். இது மற்றொரு நன்மை.

கை வெட்டப்பட்டவனைப் பார்க்கும் போது அவன் திருடன் என்பதை மற்றவர்கள் அறிந்து கொள்ள இயலும். எனவே அவனிடம் தங்கள் பொருட்களைப் பறிகொடுக்காமல் எச்சரிக்கையாக இருந்து கொள்ளலாம்.

"இவர்கள் இங்கே இருக்கிறார்களா?'' என்று திருடர்களின் புகைப்படங்களைப் பொது இடங்களில் ஒட்டி வைப்பதால் அந்த முகங்களை யாரும் நினைவில் பதிய வைக்க இயலாது. ஆனால் கையை வெட்டினால் அதுவே திருடன் என்பதற்குச் சிறந்த அடையாளமாகி விடுகிறது. இது மூன்றாவது நன்மை.

தண்டனைகள் வழங்கப்படுவதன் நோக்கம் பரிபூரணமாக இப்போது நிறைவேறுகிறது. அது மட்டுமின்றி குற்றவாளியை வருடக் கணக்கில் சிறையில் போட்டு அவனைப் பராமரித்துப் பாதுகாக்கும் வகையில் ஏற்படும் பொருளாதாரச் செலவுகள் அரசுக்கு மிச்சமாகின்றன. மக்களின் வரிப்பணம் பாழாகாமல் இந்தச் சட்டம் தடுக்கின்றது. சிறைக் கூடங்களை ஒழித்து விட்டு இஸ்லாம் பரிந்துரைக்கின்ற தண்டனைகளை அமுல்படுத்தினால் பற்றாக்குறை பட்ஜெட் போடும் அவசியம் இராது. இது நான்காவது நன்மை .

(2) "பாவம்! கையை வெட்டுகின்றீர்களே!'' என்று குற்றவாளிகளுக்காக பரிதாபப்படுவது தான் மனிதாபிமானம் என்று சிலர் எண்ணுகின்றனர்.

மரணப் படுக்கையில் கிடக்கும் தன் மனைவியின் உயிர் காக்கும் மருந்தை வாங்கச் செல்லும் ஒருவனிடமிருந்து திருடன் பணத்தைப் பறித்துக் கொள்கிறான். பணத்தை மட்டுமின்றி தன் மனைவியின் உயிரையும் பறிகொடுத்து நிற்கிறானே! அவனுக்காக யார் பரிதாபப்படுவது?

நேர்மையையும், ஒழுக்கத்தையும் விரும்புபவன் பாதிக்கப்பட்டு நடுத்தெருவில் நிற்பதைப் பார்த்து பரிதாபப்படாமல், அவனை நடுத்தெருவில் நிறுத்திய அயோக்கியனுக்காகப் பரிதாபப்படுகிறார்கள்.

(3) இப்படியே கையை வெட்டிக் கொண்டே போனால் கையில்லாதவர்களின் எண்ணிக்கை பெருகி விடுமே என்றும் சிலர் கேள்வி எழுப்புகின்றனர்.

நிச்சயமாக கையில்லாதவர்களின் எண்ணிக்கை பெருகாது. ஒரே ஒரு திருடனின் கையை வெட்டி விட்டால் மற்ற எவனுக்குமே திருடும் துணிவு ஏற்படாது; வெட்டப்படும் கைகளின் எண்ணிக்கை நிச்சயம் பெருகாது.

உதாரணத்துக்காகத்தான் திருட்டுக் குற்றத்தின் தண்டனை பற்றி இங்கே குறிப்பிட்டுள்ளோம். இஸ்லாம் கூறும் தண்டனை முறைகள் யாவுமே இவ்வாறு தான் அமைந்துள்ளன.

கொலை செய்தவனை அரசாங்கம் உடனே கொன்று விடுமானால் கொலை செய்ய எவருமே துணிய மாட்டார்கள். பல்லை உடைத்தால் தனது பல்லும் அரசாங்கத்தினால் உடைக்கப்படும் என்பதை அறிந்தால் எவருமே அடுத்தவனின் பல்லை உடைக்க மாட்டார்கள்.

உலகில் எத்தனையோ அரசுகள் வந்து போய் விட்டன. மக்களின் உயிருக்கும், உடமைக்கும், கற்புக்கும் பாதுகாப்பு அளிக்கும் பொறுப்பில் அத்தனை அரசுகளுமே தோல்வியைத்தான் தழுவி இருக்கின்றன. எப்போது என்ன நேருமோ என்று அஞ்சியே மக்கள் வாழும் நிலை ஏற்பட்டு விட்டது.

இந்த நிலை மாற வேண்டுமானால்...

குற்றவாளிகள் விஷயத்தில் கருணை என்ற பேச்சுக்கே இடமளிக்கக் கூடாது.

குறுகிய நோக்கில் இஸ்லாமியத் தண்டனைகளைப் புறக்கணிக்காமல் அதனால் ஏற்படும் நல்ல விளைவுகளைக் கருத்தில் கொண்டு அதை அமுல்படுத்த முன்வர வேண்டும்.

குற்றவாளிகளுக்கு ஒத்தடம் கொடுக்கும் தண்டனைகளை மாற்றி அவர்களுக்கெதிராகச் சாட்டையை உயர்த்தி, கடும் தண்டனைகளை நடைமுறைப்படுத்தினால் உலகம் அமைதிப் பூங்காவாகத் திகழும்.

(4) திருடனைப் பிடித்தவுடன் அவன் கையை வெட்டி விட்டால் பிறகு அவன் நிரபராதி என்பது தெரிய வந்தால் போன கை திரும்பி வந்து விடுமா? என்று சிலர் கேட்கின்றனர்.

இரண்டு மூன்று ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்றபின் எத்தனையோ பேர் நிரபராதிகள் என நிரூபிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் இழந்த மூன்றாண்டுகளைத் திருப்பிக் கொடுக்க இயலுமா என்று கேட்டால் அதற்கு என்ன பதில்? என்பதைச் சிந்தித்தால் இப்படிக் கேட்க மாட்டார்கள்.

மேலும் "எடுத்தேன்; கவிழ்த்தேன்'' என்று தண்டனை வழங்குமாறு இஸ்லாம் கூறவில்லை. குற்றங்கள் நிரூபிக்கப்பட்ட பின்பே தண்டனை வழங்குமாறு கூறுகின்றது.

மரண தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப்படும் விபச்சாரத்தை நான்கு நேரடியான சாட்சிகள் மூலம் நிரூபிக்க வேண்டும். நான்குக்கும் குறைவானவர்கள் இக்குற்றத்தைச் சுமத்தினால் அவ்வாறு குற்றம் சுமத்தியவர்களுக்கு எண்பது கசையடிகள் வழங்குமாறு இஸ்லாம் உத்தரவிடுகிறது. (பார்க்க: திருக்குர்ஆன் 24:4, 24:13)

இஸ்லாமிய ஆட்சி முறையில் தகுந்த சாட்சியங்களின்றி சில குற்றவாளிகள் தப்பித்துக் கொள்ள முடியுமே தவிர நிரபராதிகள் தண்டிக்கப்படவே முடியாது என்பது தான் உண்மை.

(இக்குறிப்புக்குரிய வசனங்கள்: 2:178-179; 5:33; 5:38; 5:45; 17:33; 24:2; 24:4)

சப்ஃவான் இப்னு உமய்யா (ரழி) அவர்கள் மதீனாவிற்கு வந்து பள்ளிவாயிலில் தன்னுடைய விலையுயர்ந்த போர்வையை தலைக்கு வைத்து படுத்துறங்கினார்கள்.அப்போது ஒருவன் போர்வையை மெதுவாக உருவி எடுத்தான் சப்ஃவான் (ரழி) அவர்கள் அவனை பிடித்துவிட்டார்கள். நபியவர்களிடம் கொண்டுவந்து விபரம் கூறினார்கள்.

உடனே நபியவர்கள் திருடனின் கையை வெட்டுமாறு கட்டளையிட்டார்கள்.உடனே சப்ஃவான் (ரழி) அவர்கள் "கையை வெட்ட வேண்டுமென்பதற்காக நான் அழைத்து வரவில்லை அந்த போர்வை அவருக்கு தர்மமாகட்டும் நான் மன்னித்துவிட்டேன் "என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் என்னிடம் அழைத்து வருவதற்கு முன்பாகவே மன்னிதிருக்கலாமே அவர்களது மன்னிப்பை ஏற்க மறுத்துவிட்டார்கள் (இப்னுமாஜா)

நீதிமன்றத்திற்கு கொண்டுவந்து குற்றம் நிரூபிக்கப் பட்டதற்கு பின்னால் தண்டனை வழங்கியாகவேண்டும் இல்லையேல் சமூக கட்டுப்பாடு இருக்காது.

நபியவர்கள் எவ்வளவு இரக்கமுடையவர்கள் அனைவர்களின் மீதும் அன்பு செலுத்தகூடியவர்கள் என்பது ஆனால் இந்த ஹதீஸில் பார்க்கும்போது நபியவர்களே இந்தளவு கண்டிப்பாக நடந்துள்ளார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

"நாங்கள் கைபரை வெற்றி கொண்டோம். அப்போது நாங்கள் தங்கத்தையோ வெள்ளியையோ போர்ச் செல்வமாகப் பெறவில்லை. மாடு, ஒட்டகம், (வீட்டுப்) பொருள்கள், தோட்டங்கள் ஆகியவற்றையே போர்ச் செல்வமாகப் பெற்றோம்.

பிறகு நாங்கள், இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (மதீனாவிற்கு அருகிலுள்ள) “வாதில் குரா” என்னுமிடத்தை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தோம்.

நபியவர்களுடன் “மித்அம்” எனப்படும். ஓர் அடிமையும் இருந்தார். அவரை “பனூளிபாப்“ குலத்தாரில் (ரிஃபாஆ இப்னு ஸைத் என்ற) ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக வழங்கியிருந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சிவிகையை அந்த அடிமை இறக்கிக் கொண்டிருந்தபோது எங்கிருந்தோ வந்த ஓர் அம்பு அவரின் மீது பாய்ந்தது. “அவருக்கு இறைவழியில் உயிர்த் தியாகம் செய்யும் பேறு கிடைத்து விட்டது. **வாழ்த்துகள்**

!” என்று மக்கள் கூறினர்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், “இல்லை. என்னுடைய உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! போர்ச் செல்வங்கள் பங்கிடப்படும் முன் அவர் எடுத்துக் கொண்ட போர்வையே அவருக்கு நரக நெருப்பாகி எரிந்து கொண்டிருக்கிறது” என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடமிருந்து இதைக் கேட்டபோது ஒருவர், ஒரு செருப்புவாரை… அல்லது இரண்டு செருப்புவார்களைக் … கொண்டு வந்து, “இது (போர்ச் செல்வம் பங்கிடப்படும் முன்) நான் எடுத்துக் கொண்ட பொருள்” என்று கூறினார்.

அப்போது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், “(இது சாதாரண செருப்பு வார் அல்ல. இதனைத் திருப்பித்தராமல் இருந்திருந்தால் இதுவே) நரகத்தின் செருப்பு வார்… அல்லது இரண்டு வார்கள்… ஆகும்” என்று கூறினார்கள்.

ஷஹீஹ் புகாரி

## க்ரைம் 9

(மோசடி)




12 August 2021, ஆந்திரா : போலி தங்க நாணய மோசடி வியாபாரம் செய்த கும்பலை கைது செய்த போலீசார் ரூ.13.96 லட்சம் ரொக்கம் மற்றும் 92 போலி தங்க நாணயங்களை பறிமுதல் செய்தனர்.

ஆந்திர மாநிலம் அனந்தபூர் மாவட்டத்தில் போலி தங்க நாணய மோசடி வியாபாரம் அவ்வப்போது நடைபெறுவது வழக்கம்.இந்நிலையில் அதே போன்ற சம்பவம் ஒன்று அனந்தபுரத்தில் நடைபெற்றது.

இதுபற்றி தகவல் அறிந்த போலீசார் போலி தங்க நாணய மோசடி கும்பலை சேர்ந்த 4 பேரை பிடித்து கைது செய்து அவர்களிடம் இருந்து பதிமூன்று லட்சத்து 96 ஆயிரம் ரூபாய் பணம், 92 போலி தங்க நாணயங்கள் ஆகியவற்றை பறிமுதல் செய்தனர்.

……………………………………………………………………………………………………

உலக மக்களின் பொருளாதார வளர்ச்சிக்கு முக்கிய காரணமாக இருப்பது வியாபாரம் தான். இந்த வியாபாரத்தை செய்யவேண்டிய முறைப்படி செய்கிறார்களா? என்றால் பெரும்பாலும் இல்லை. மற்றவர்களை ஏமாற்றுதல், மோசடி செய்தல், அபகரித்தல் போன்ற சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கக்கூடிய காரியங்கள் நிறைய நடைபெறுகின்றன.

.

எவ்வாறு மோசடிகள் நடைபெறுகின்றன என்பதை கீழ்காணும் திருமறை குர்ஆனின் வசனம் மூலமும், நபிமொழி மூலமும் நன்கு விளங்கிக் கொள்ளலாம்.

(எடையிலும், அளவிலும்) குறைவு செய்பவர்களுக்கு கேடுதான். அவர்கள் மனிதர்களிடமிருந்து அளந்து வாங்கும் போது நிறைவாக வாங்குவார்கள். (ஆனால்,) அவர்கள் (மற்றவர்களுக்கு) அளந்து கொடுத்தாலோ அல்லது நிறுத்துக் கொடுத்தாலோ குறைவு செய்வார்கள். குர்ஆன் (83:1-3)

நபி (ஸல்) அவர்கள் ஒரு தானியக் குவியலுக்கு அருகில் சென்றார்கள். தமது கையை அந்தக் குவியலுக்குள் விட்ட போது, விரல்களில் ஈரம்பட்டது. அப்போது “உணவு வியாபாரியே! இது என்ன?” என்று கேட்டார்கள்.

அதற்கவர்,” அல்லாஹ்வின் தூதரே! மழையில் நனைந்து விட்டது.” என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள், “மக்கள் பார்க்கும் விதமாக உணவுக்கு மேல் பகுதியில் அதைப் போட்டிருக்கக் கூடாதா?” என்று கூறிவிட்டு, “யார் மோசடி செய்கிறாரோ, அவர் நம்மைச் சார்ந்தவரல்லர்” எனவும் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு”ரைரா(ரலி) முஸ்லிம், அபூதாவூத், திர்மிதீ

மேற்கண்ட குர்ஆன் வசனம் மற்றும் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது போலவே, இப்போது நாம் வசிக்கும் பகுதியிலும் மோசடி, கலப்படம் போன்ற வியாபார நேர்மையற்ற தன்மை அதிகமாக காணப்படுகிறது. தாய் பாலைத்தவிர அனைத்திலும் கலப்படம் என்ற நிலை பரவிக் கிடக்கிறது. பருப்பு, எண்ணெய், அரிசி உட்பட எல்லா உணவுப் பொருட்களிலும் கலப்படம் கொடிகட்டிப் பறக்கிறது.

மக்களை ஏமாற்றுவது வணிகத்தின் மிகப் பெரிய வெற்றியாக கருதப்படுகிறது. பொருட்களில் உள்ள குறைகளை மறைத்து நல்ல சரக்கு என்று கூறி விற்பனை செய்யப்படுகிறது. அல்லது ஒருவர் கொள்முதல் செய்யும் போது கொடுக்காத பணத்தை கொடுத்ததாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து வாங்குபவர்களை கவர்ந்து விற்பனை செய்கிறார்.

இவ்வாறான தவறான வியாபார நடவடிக்கைகளை ஒருவர் செய்வதற்கு முக்கியமான காரணம் மிகவும் அதிகமான லாபம் அடைய வேண்டும் என்ற ஒரே நோக்கம் தான். ஆனால், இத்தகைய நடவடிக்கைகள் மூலம் அதிக லாபம் அடைவது போல் தோன்றினாலும் உண்மையில் அவன் செல்வத்தில் அபிவிருத்தி அடையமாட்டான்.

எனவே, விற்பவரும், வாங்குபவரும் வியாபாரப் பொருளை நன்கு பார்த்து, உண்மையிலேயே குறைகள் இருந்தால், அவற்றை தெளிவுப் படுத்தி வியாபாரம் செய்ய வேண்டும். அதன் மூலம் வியாபாரிக்கும், வாங்குபவருக்கும் அபிவிருத்து உண்டு.

'விற்பவரும், வாங்குபவரும் உண்மை கூறி (குறைகளைத்) தெளிவுபடுத்தினால் அவர்களின் வியாபாரம் பரக்கத் செய்யப்படும். அவர்கள் பொய் சொல்லி மறைத்தால், அவர்களுக்கு இலாபம் கிடைக்கலாம். ஆனால், வியாபாரத்தில் பரக்கத் அழிக்கப்பட்டுவிடும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஹகீம் பின் ஹிஷான் (ரலி) -புகாரி

“மறுமை நாளில் அல்லாஹ் மூன்று நபர்களைப் பார்க்க மாட்டான். அவர்களுக்குக் கடுமையான தண்டனையும் உண்டு” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “நஷ்டமடைந்த அவர்கள் யார்?” என்று நான் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்” செய்த உதவிகளை சொல்லிக் காட்டுபவன், (பெருமைக்காக) தனது வேஷ்டியைத் தரையில் படுமாறு அணிபவன், தனது சரக்குகளை பொய்ச் சத்தியம் செய்து விற்பவன்” என்று கூறினார்கள். அபூதர் (ரலி) முஸ்லிம், திர்மிதீ

மேலும், அரபு நாட்டில் செங்கடலுக்கு வடமேற்கு பகுதியில் “மத்யன்” என்ற பகுதி இருந்து வந்தது. இந்தப் பகுதியில் வாழ்ந்த மக்கள் அளவிலும், எடையிலும் பயங்கர பொருளாதார மோசடிகளைச் செய்து வந்தார்கள். அம்மக்களைத் திருத்துவதற்காக ஷுஐபு நபியை அல்லாஹ் அனுப்பி வைத்தான். அவர் உபதேசித்தார். அதை அம்மக்கள் கேட்கவில்லை. அவரைப் புறக்கணித்தனர். அவர்களை பூகம்பம் பிடித்துக் கொண்டது. இது பற்றி திருமறை குர்ஆனின் வசனங்களை (7: 85-92 வரை)க் காணலாம்.

“ஆகவே, அவர்களை பூகம்பம் பிடித்துக் கொண்டது. அதனால்,அவர்கள் (காலையில்) தம் வீடுகளில் இறந்தழிந்து கிடந்தனர்.” (அல் குர்ஆன் 7:91)

ஷுஐபை பொய்ப்பித்தவர்கள் தம் வீடுகளில் வாழ்ந்திராதவர்களைப் போல் ஆகிவிட்டனர். ஷுஐபைப் பொய்ப்பித்தவர்கள் (முற்றிலும்) நஷ்டமடைந்தவர்களாகி விட்டார்கள். (அல் குர்ஆன் 7:92)

இந்தியாவில் சமீப காலத்தில் பூகம்பம் நடந்த பகுதி குஜராத் மாநிலமாகும். இந்த மாநிலம்தான் இந்தியாவிலேயே அதிகமாக வர்த்தக நடவடிக்கைகள் நடைபெற்ற பகுதியாகும். என்ன விதமான மோசமான வர்த்தக, வியாபார முறைகேடுகளில் ஈடுபட்டார்களோ, அவர்களையும் பூகம்பம் பிடித்துக் கொண்டது. எனவே, அல்லாஹ்வின் வேதனையிலிருந்து தங்களை காப்பாற்றிக்கொள்ள இன்ஷா அல்லாஹ் நேர்மையான வியாபாரம் செய்வோமாக!

ரஹ்மத் ராஜகுமாரன்

## க்ரைம் 10

சூதாட்டம் (Gambling)



31, May 2019.கடலூர் மாவட்டம் பண்ருட்டியை அடுத்த மேலாப்பாளையத்தைச் சேர்ந்தவர் அருள்வேல். மென்பொறியாளரான இவர் சென்னையில் உள்ள ஐ.டி நிறுவனத்தில் பணியாற்றி வந்தார். இவர் மாதம் சுமார் ஒரு லட்சம் ரூபாய் வரை சம்பளம் பெற்று வந்ததாக கூறப்படுகிறது.

ஆன்லைனில் சூதாட்டம் விளையாடத் தொடங்கிய அருள்வேல், தொடக்கத்தில் சிறிய தொகையை கட்டி ரம்மி விளையாடியுள்ளார். ஆரம்பத்தில் வெற்றி மேல் வெற்றி கிடைத்ததால், கையில் இருந்த பணம் முழுவதையும் செலுத்தி ஆன்லைனில் சூதாட்டம் விளையாடி வந்தார். முதலில் வெற்றி முகமாக இருந்த ஆன்லைன் சூதாட்டம், நாட்கள் செல்லச் செல்ல தனது கோர முகத்தை காட்டத் தொடங்கியது.

பணம் முழுவதையும் இழக்கத் தொடங்கினார் அருள்வேல். சூதாட்டத்திற்கு அடிமையான அவர், திறமையாக விளையாடினால், இழந்த பணத்தை மீட்டு விடலாம் என நினைத்துள்ளார். அதனால் வட்டிக்கு பணம் கொடுக்கும் நபர்களிடம் சிறுக சிறுக கடன் வாங்கி, அதை வைத்து ஆன்லைனில் ரம்மி விளையாடியுள்ளார்.

இறுதியில் பணம் அத்தனையும் இழந்த அவருக்கு, ஒரு லட்சம் ரூபாய் சம்பளம் கிடைத்த வந்த வேலையும் பறிபோனது. செய்வதறியாது திகைத்த அருள்வேல், சென்னையில் இருந்து சொந்த ஊருக்கு திரும்பிச் சென்றுவிட்டார். ஆனால், கடன் கொடுத்த நபர்கள் வீட்டிற்கு வந்து, பணத்தை திரும்பத் தர வேண்டுமென நெருக்கடி கொடுத்து வந்ததாக கூறப்படுகிறது. இச்சம்பவம் அருள்வேலையும், தாய் ராஜலட்சுமியையும் மிகுந்த மன வேதனைக்கு ஆளாக்கியுள்ளது.

நிலைமை கையை மீறி சென்றதாக நினைத்த இவரும், வீட்டில் யாரும் இல்லாத நிலையில், விஷம் குடித்து தற்கொலை செய்து கொண்டதாக காவல்துறை தெரிவித்துள்ளனர். இதுதொடர்பாக நடந்த விசாரணையில், ராஜலட்சுமி எழுதிய கடிதத்தின் மூலம் தற்கொலை தொடர்பாக விவரங்கள் தெரியவந்ததாக கூறப்படுகிறது. ஆன்லைனில் உள்ள சூதாட்ட விளையாட்டுகள் தொடர்பாக மத்திய மாநில அரசுகள் கண்காணிப்பு மேற்கொண்டு, அவற்றை முறைப்படுத்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென பொதுமக்கள் தரப்பில் கோரிக்கை விடுக்கப்பட்டுள்ளது.

..................................................................................................................

சூதாட்டம் (Gambling) என்பது, பணம் அல்லது வேறு பெறுமதியான பொருட்களைப் பணயமாக வைத்து ஆடுகின்ற, நிச்சயமற்ற விளைவைக் கொடுக்கக்கூடிய ஒரு விளையாட்டு வகை ஆகும். இதன் அடிப்படை நோக்கம் பணயமாக வைக்கப்பட்ட பணம் அல்லது பொருளிலும் கூடிய பெறுமதியான பணத்தையோ, பொருளையோ அடைவதாகும்.

கத்தோலிக்க, யூத மரபுகளில் சூதாட்டத்துக்காக குறிப்பிட்ட நாட்களை ஒதுக்கும் வழக்கம் இருந்தது. ஆனால் அவர்களுடைய மதங்கள் சூதாட்டத்தை ஏற்றுக் கொள்வதில்லை. சூதாட்டத்தினால் விரும்பத்தகாத பல சமூக விளைவுகள் ஏற்படுகின்றன. இதனாலேயே பல நாடுகள் சூதாட்டத்தைக் கட்டுப்படுத்துகின்றன. சில இஸ்லாமிய நாடுகளும், வேறு சில நாடுகளும் சூதாட்டத்துக்கு முற்றாகவே தடை விதித்துள்ளன.

இந்து சமய நூல்களும், தமிழில் தோன்றிய நீதி நூல்கள் பலவும் சூதாட்டத்தில் ஈடுபடாடாதிருக்கும்படி அறிவுறுத்துகின்றன. இந்தியாவின் பழைய நூல்களான மகாபாரதக் கதையும், நளன் கதையும் சூதினால் விளைந்த கேட்டையே அடிப்படையாகக் கொண்டு அமைந்தவை.

நபியே!) மதுபானத்தையும், சூதாட்டத்தையும் பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர்; நீர் கூறும்; “அவ்விரண்டிலும் பெரும் பாவம் இருக்கிறது; மனிதர்களுக்கு (அவற்றில் சில) பலன்களுமுண்டு; ஆனால் அவ்விரண்டிலும் உள்ள பாவம் அவ்விரண்டிலும் உள்ள பலனைவிடப் பெரிது". (குர்ஆன் 2: 219)

மதுவும், சூதாட்டமும் இருமுகம் கொண்ட மத்தளங்களாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அறிவிப்பவர்: இப்னு அம்ருப்னு ஆஸ் (ரலி) நூல்: அபூதாவூத்

மேற்கண்ட வசனத்தின் பொருளையும், ஹதீஸின் கருத்தையும் உணர்ந்த முஸ்லிம்கள் குடிகாரனும், லாட்டரி விற்பவனும், அதற்குத் துணை செய்பவனும் ஒரு தரத்தில் உள்ளவர்கள் என்பதை உணர வேண்டாமா? இதில் ஈடுபடுபவர்கள் இப்பெரும் பாவத்தைத் தவிர்த்துக் கொள்ள வேண்டாமா? முஸ்லிம்கள் இறைவனால் ஹராமாக்கப்பட்ட மதுவையையும் பன்றி மாமிசத்தையும் வெறுக்கும் அளவுக்கு லாட்டரி சூதாட்டத்தை வெறுக்கவில்லையே ? இதிலும் அல்லாஹ்வுடைய கருத்துக்கு மாற்றமாக இவர்களுடைய சொந்தக் கருத்துக்களைப் புகுத்தி வித்தியாசம் கற்பித்து விட்டார்களா?...

இறைவன் மது, சூதாட்டம், சிலை வணக்கம், ஜோதிடம் இந்நான்கையும் இணைத்து கூறி இவைகள் ஈமான் கொண்டவர்களைக் கெடுக்கச் செய்யும் ஷைத்தானின் சூழ்ச்சி என்று தெளிவாக கூறுவதை நாம் உணரவேண்டாமா?

"ஈமான் கொண்டோரே! மதுபானமும், சூதாட்டமும், கற்சிலைகளை வழிபடுதலும், அம்புகள் எறிந்து குறி கேட்பதும், ஷைத்தானின் அருவருக்கத்தக்க செயல்களில் உள்ளவையாகும்; ஆகவே நீங்கள் இவற்றைத் தவிர்த்து கொள்ளுங்கள் அதனால் நீங்கள் வெற்றியடைவீர்கள்.(குர்ஆன் 5:90)

நிச்சயமாக ஷைத்தான் விரும்புவதெல்லாம், மதுபானத்தைக் கொண்டும், சூதாட்டத்தைக் கொண்டும், உங்களிடையே பகைமையையும், வெறுப்பையும் உண்டு பண்ணி அல்லாஹ்வின் நினைவிலிருந்தும், தொழுகையிலிருந்தும் உங்களைத் தடுத்து விடத்தான்; எனவே, அவற்றை விட்டும் நீங்கள் விலகிக் கொள்ள மாட்டீர்களா? (அல்குர்ஆன் 5:91)

மக்களுக்கு ஒரு காலம் வரும் அக்காலத்தவர் தமது சம்பாத்தியம் ஹலாலானதா, ஹராமானதா, முறையானதா, முறையற்றதா என்பவனவற்றைப் பொருட்படுத்தாது இருப்பர் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரி

எனவே எனதன்பு நடுநிலைச் சமுதாயத்தவர்களே! அல்லாஹ்வும் அவனது தூதரும் பெரும்பாவம் என எச்சரித்த இந்த தடுக்கப்பட்ட செயலில் ஈடுபட்டுள்ள நமது சகோதரர்களுக்கு இதன் தீமைகள் பற்றி நயமாக எடுத்துக்கூறி அனுமதிக்கப்பட்ட வழிகளில் தொழில் செய்து ஹராம், ஹலாலை பேணி நடக்கும் நல்மக்களாக நாம் வாழ்வோமாக!

ரஹ்மத் ராஜகுமாரன்

(இத்துடன் க்ரைம் தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது)

**தகவல் பரிமாற்றம் 1**

குகை சொல்லும் தகவல்கள்




இயற்கை காட்டிய வழிமுறையின் அடிப்படையில், மனிதனின் ஆறாம் அறிவை பயன்படுத்தி, அறிவியல் மூலம் பெற்றுள்ள தகவல்களை , பல்வேறு வழிகளில் பயன்படுத்தி தொடர்பு கொள்ளும் முறையை தகவல் தொடர்பு வழிமுறைகளாகும்.

குகைகளை வீடாக பயன்படுத்திய காலம் முதல் விண்ணிலே வீடமைத்து வாழும் வழிமுறைகளை ஆராய்ந்து கொண்டிருக்கும் இன்றைய காலம் வரையிலும் மட்டுமல்லாது, நிலவில் குடியேறிய பிறகும்கூட மனித குலத்தின் அடிப்படைத் தேவையாகத் திகழப்போவது தகவல் தொடர்பு என்பதுவே.

அறிவியல் சார்ந்த வாழ்க்கைக்கு மட்டுமல்லாது, எளிமையான வாழ்க்கைக்கும் இந்தத் தகவல் தொடர்பு என்பதே அடிப்படையாகும்.

இதனை முழுமையாக அறிந்து கொண்டால் மட்டுமே இதுபற்றி நாம் சரியாகப் புரிந்து கொள்ள முடியும். இதில் "தகவல்" – "தொடர்பு" என்ற இரண்டு சொற்கள் இணைந்துள்ளன. தகவல் என்றால் 'பிறர் அறியும் வகையில் வெளிப்படுத்தப்படும் செய்தி' என்று பொருளாகும். " தொடர்பு "என்றால் 'இரு இடங்களை இணைப்பது; இணைப்பு' என்று பொருளாகும்.

அதாவது இரண்டு இடங்களை இணைத்து, அங்குள்ளவர்கள் அறிந்து கொள்ளும் வகையில் செய்திகளை வெளிப்படுத்தும் வழிமுறை மற்றும் அதற்கான கருவிகளுக்குத் தகவல் தொடர்பு என்ற தொழில்நுட்பச் சொல்லைப் பயன்படுத்துகின்றோம்.

குறிப்பிட்ட காலகட்டத்தில்தான் துவங்கியது என்று உறுதியாகக் கூறமுடியாதவற்றுள் தகவல் தொடர்பின் துவக்கமும் அடங்குகிறது. மனிதகுலத்தில் பேச்சும் எழுத்தும் துவங்குவதற்கு முன்பாகவே தகவல் பரிமாற்றம் துவங்கிவிட்டது என்றே ஆராய்ச்சிகள் கூறுகின்றன.

அச்சு மற்றும் தகவல் தொடர்பின் துவக்கம் என்று கருதப்படுவது, கற்கால மனிதர்கள் வரைந்து வைத்துள்ள குகைச் சித்திரங்களாகும். கிறிஸ்து பிறப்பதற்கு முன்பாக 15 ஆயிரம் முதல் 10 ஆயிரம் வரையிலான வரலாற்றிற்கு முந்தைய காலத்தில் மனிதன் நாகரீகம் எதுவும் அடையவில்லை ஆனால் தகவல் தொடர்பு துவங்கி விட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தான் அறிந்த ஒன்றை அல்லது பார்த்த ஒன்றை, அருகில் அல்லது தொலைவில் அல்லது இனிமேல் வரப்போகும் நபர்களுக்குத் தெரிவிப்பதற்காக வரையப்பட்டவையே குகை ஓவியங்கள் ஆகும்.

அதிசயிக்கத்தக்க அளவிற்கு அறிவியல் வளர்ச்சியும், கண்டுபிடிப்புகளும் உள்ள இந்த நாட்களிலும், ஆராய்ச்சியாளர்களை வியப்பில் ஆழ்த்துகின்றவைகளாகவும் இந்தக் குகைச் சித்திரங்கள் உள்ளன.

இறைநம்பிக்கை கொண்ட ஏழு இளைஞர்கள் சிலை வணக்கக் காரரான அப்ரூஸ் நாட்டை ஆண்ட தக்யானூஸ் மன்னனின் வன்முறையிலிருந்து தப்பிக்கவும் , தங்களின் இறைநம்பிக்கையைக் காத்துக்கொள்ளவும் முடிவெடுத்து ஊரைத் துறந்து மலைப்பகுதிக்குச் சென்றுவிட்டனர்.

மலையில் ஒரு குகை இருந்தது. புகலிடம் தேடிக் குகைக்குள் நுழைந்தவர்கள் தம்மைக் காத்தருளும்படி நெஞ்சுருக இறைவனிடம் வேண்டினார்கள். குகையில் போதிய இட வசதி இருந்தது. இளைஞர்களுடன் அவர்களின் செல்லப் பிராணியான நாயும் இருந்தது.

அதிகாலையில் சூரியன் உதிக்கும்போது, அதன் கதிர்கள் குகையை விட்டு விலகி வலதுபுறமாகப் பாயும். மாலையில் மறையும்போது குகையைக் கடந்து இடதுபுறமாகத் தாழும். இத்தகைய அமைப்பில் மலைக்குகை அமைந்திருந்தது.

இந்த சூரிய ஒளி வலம் இடம் தகவல்களால் அந்த குகை இருக்கும் முகவரியை இறைவன் சொல்லியுள்ளான். சூரிய ஒளி உதிக்கும் போது வலது புறம் என்றும் மறையும் போது இடதுபுறம் என்றும் குறிப்பிடப்படும் குகை உலகில் வேறு எங்கும் இல்லை. இக்குகை ஜோர்டான் நாட்டு தலைநகரம் அம்மானுக்கு அருகில் ரக்கீம் என்ற இடத்தில் மட்டுமே இருக்கிறது.

குகைக்குள் சென்ற இளைஞர்கள் களைப்பில் படுத்தனர். ஆழ்ந்த உறக்கம் அவர்களைப் பற்றிக்கொண்டது. குகை வாயிலில் நாய் படுத்துக் கொண்டது.

ஆழ்நிலை உறக்கம் அது. துயில் கலையாமல், உணவும், நீரும் இல்லாமல் வலப்புறம், இடப்புறம் என்று மாறி மாறிப் புரண்டு தூக்கத்தில் பல்லாண்டுகள் லயித்திருந்தார்கள்.

தக்யானூஸ் என்கிற மன்னன் இவர்களைத் தேடி இம்மலைக்கு வந்து சேர்த்தான் .தன் கஸானாவின் அதிகாரியாகிய மார்னூஸ் என்பவரை அக்குகையினுள் அனுப்பி வைத்தான்.

அவர் அவர்கள் அனைவரும் இறந்து போனதாக மன்னனிடம் கூறுகிறார் .மன்னன் குகையின் வாயிலை கல்லும் சுண்ணாம்புக் கொண்டும் அடைக்க சொல்கிறான் .

அதிகாரி மார்னூஸ் குகைத் தோழர்களின் பெயர்களையும், குடும்பத்தின் குறிப்புகளையும், அப்ரூஸ் பட்டணத்தை விட்டு வெளியேறிய வருஷம் தேதியையும் விவரமாக எழுதி மலைக்குகையின் வாயில் பதிக்கிறார் .

" ஆசியா மைனான் மேற்கு கரையில் உள்ள ஸர்மீர்னாவுக்கு 50 மைல் தெற்கே உள்ள இபிஸியஸ் ( Ephesus) நகரத்திலுள்ள

1) மகஸல்மீனா, 2) எம்லீகா, 3) ஸப்பீதா, 4) மர்தூனஸ்,

5) யப்யூனஸ், 6) ஸார்ப்யூனஸ் 7) கஷ்பைத்தூனஸ் ஆகிய 7 வாலிபர்கள் சுமார் 20 வயது இவர்கள் ஏக இறைவனை வழிபட்டு வந்தனர் " - என்பதாக குகையின் வாயில் பதித்தார்.

இதற்கிடையில், ஊரில் இறைநம்பிக்கை கொண்ட ஆட்சி, அதிகாரம் என்று பல மாற்றங்கள் நடந்துவிட்டன.

குகையில் உறங்கிக் கொண்டிருந்த இளைஞர்களின் உறக்கம் கலைந்தது. கொட்டாவி விட்டுக்கொண்டே ஒருவர், “சரியான தூக்கம்” என்றார்.“நாம் எவ்வளவு நாட்கள் உறங்கியிருப்போம் ?” என்று அடுத்தவர் கேட்டார்.

“என்ன. ஒரு நாள் அல்லது அதைவிடக் குறைவான நேரமாகத்தான் இருக்கும்!” என்றார் இன்னொருவர்.

“சரி. சரி.. சர்ச்சையை விடுங்கள்! நாம் எத்தனை நாள் உறங்கினோம் என்பதை எல்லாம் வல்ல இறைவன் நன்கறிவான். பசி வயிற்றைக் கிள்ளுகிறது. அதனால், ஒருவர் ஊருக்குள் சென்று சாப்பிட ஏதாவது வாங்கி வாருங்கள். யாராவது அடையாளம் கண்டுவிடப் போகிறார்கள் எச்சரிக்கை!” என்று தம் ஊரார் குறித்த பயம் விலகாமலேயே அவர் சொன்னார்.

மாறிய காலத்தில் இளைஞர்களில் ஒருவர் ஊருக்குள் சென்றார். கடைவீதி வித்தியாசமாக இருந்தது. பரிச்சயமானவர்கள் யாரும் தென்படவில்லை. இதுவும் அவருக்கு வியப்பாக இருந்தது. ஒரு கடைக்குள் சென்றவர் தேவையான உணவுப் பொருட்களைக் கேட்டு வாங்கினார். அதற்கான காசை நீட்டினார். அதைப் பெற்றுக் கொண்ட கடைக்காரரின் முகம் மாறியது. அவர் இளைஞரை மேலும் கீழும் பார்த்தார். நாணயத்தை உருட்டி உருட்டிச் சோதித்தார். மெல்ல சிரித்தார்.

இளைஞருக்கு ஒன்றும் புரியவில்லை. முந்நூறு ஆண்டுகள் காலம் கடந்து, ரோம் நகரின் அங்காடியில், பழங்கால நாணயத்தையல்லவா அவர் நீட்டியிருந்தார்!

கடைக்காரர் இளைஞரின் கையைப் பிடித்துக்கொண்டு, “செல்லாக்காசைக் கொடுத்து என்னை ஏமாற்றவா பார்க்கிறாய்? "

" நானாவது ஏமாறுவதாவது! இந்த நாணயம் உனக்கு எப்படிக் கிடைத்தது? நிச்சயம் ஏதாவது புதையல்தான் உனக்குக் கிடைத்திருக்க வேண்டும். என்னுடன் வா.. அரசாங்க அதிகாரியிடம் செல்வோம்!” என்று மிரட்டினார்.

“அய்யா! நான் நேற்றுதான் இந்த ஊரிலிருந்து சென்றேன். அப்போது நான் வைத்திருந்த நாணயம் இது. அதற்குள் செல்லாக் காசாகிவிட்டது என்றால் எப்படி? பல நூறு ஆண்டுகளுக்கு முந்தையது என்று வேறு சொல்கிறீர்கள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. குழப்பமாக இருக்கிறது” என்றார் அந்த இளைஞர்.

“உனக்கு ஒன்றும் புரியாதுதான்! விசாரிக்க வேண்டிய முறைப்படி விசாரித்தால் எல்லா உண்மையும் வெளிப்பட்டுவிடும்” .

விசாரணையின் முடிவில் கொடுங்கோலர்களிடமிருந்து தங்கள் இறைநம்பிக்கையைப் பாதுகாத்துக்கொள்ள ஊர்துறந்து ஒரு குகையில் தஞ்சமடைந்ததாக அந்த இளைஞர் அரசனிடம் சொன்னார். அச்சம்பவத்தை ஊராரும் தங்கள் மூதாதையரிடமிருந்து கேள்விப்பட்டிருந்தார்கள்.

இளைஞர்கள் தங்கிய குகைக்கு முன்னால் பதிக்கப்பட்டிருந்த தகவல்களை ஊரார்கள் கண்டு அனைவரும் வியப்படைந்தார்கள்.

“முந்நூறு ஆண்டுகளா நாம் உறங்கிக் கிடந்தோம்!” என்று அந்த இளைஞர்களும் வியப்பில் ஆழ்ந்தனர். குகைக்கு வெளியே திரளாய் நின்றிருந்த மக்களுக்கு வாழ்த்துத் தெரிவித்தார்கள். இறைவனை துதித்தவாறு மீண்டும் படுத்துக்கொண்டார்கள். அந்த நிமிடமே அவர்களின் உயிரும் பிரிந்தது.

இம்மையில் மாண்டவர், மறுமையில் மீண்டெழுவது குறித்த விவாதத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் அதற்கான உதாரணத்தை நேரில் கண்டார்கள்.

18-வது சூரா கஹ்ப் முழுவதுமே ஏகப்பட்ட தகவல்களால் இறக்கியருளப்பட்டிருக்கிறது என்பதை குர்ஆன் ஆய்வாளர்கள் கண்டு பிரமிக்கின்றனர்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 2**

சுவடிகள் சொல்லும் தகவல்கள்




சொற்கள் வரிவடிவம் பெற்று எழுத்துக்கள் உருவாகியதும், தகவல் தொடர்பில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. ஏடுகள்கள் எழுதப்பட்டன. அன்றைய நாட்களில், அந்தந்தப் பகுதிகளில் கிடைத்த துணி, ஓலை, தோல், மரத்துண்டு போன்ற தளங்களில் எழுத்துக்கள் எழுதப்பட்டு மற்றவர்களுக்கு தகவல்கள் அனுப்பப்பட்டன.

சூரா கஹ்ப் அத்தியாயத்தில் குகைவாசிகள் என்று மட்டும் குறிப்பிட்டால் போதும். ஆனால் குகைவாசிகள் மற்றும் ஏட்டுக்குரியவர்கள் (சுவடிக்கு உரியவர்கள்) என்றும் அல்லாஹ் கூறுகிறான். குர்ஆன் (18:9)

அப்படியானால் ஒரு சுவடி இவர்களது வரலாற்றுடன் முக்கியமான இடத்தைப் பிடித்திருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.

ஏதோ ஓர் ஏட்டை அவர்கள் வைத்திருந்தார்கள் என்பதற்காக மட்டும் இவ்வாறு நிச்சயமாகக் கூறப்பட்டிருக்காது. "அந்த ஏடு" என்று குறிப்பிட்டுச் சொல்வதென்றால்,அது ஒரு முக்கியமான ஏடாக இருக்க வேண்டும்.

அந்த ஏடு ஒரு காலத்தில் கண்டெடுக்கப்பட்டு மக்களுக்கு அதில் உள்ள தகவல் உண்மைகள் தெரிய வேண்டும் என்பதற்காகவே "**அந்த ஏட்டுக்குரியவர்கள்**" என்று அல்லாஹ் கூறியிருக்க முடியும். அந்த ஏடு யாருக்குமே கிடைக்காது என்றால் "அந்த ஏடு" என்று முக்கியத்துவப்படுத்தி இறைவன் கூறியிருக்க மாட்டான்.

அது என்ன சுவடி? அது என்ன ஏடு என்பதெல்லாம் பல வருடங்களாக உலகத்திற்குத் தெரியவில்லை. ஆனால் அந்த ஏடுகளில் இருந்த செய்திகள் இப்போது அம்பலமாகியுள்ளன.

**"சாவுக்கடல் சாசனச் சுருள்கள்"** என்ற தலைப்பில் **1998**ஆம் ஆண்டு ஒரு மாதத்தில் பல தடவை பி.பி.சி. தொலைக் காட்சியில் ஒரு மணி நேர நிகழ்ச்சி ஒன்று ஒளிபரப்பப்பட்டது. அதில் சொல்லப்பட்ட செய்திகள் கேட்போர் அனைவரையும் வியப்பில் ஆழ்த்துவதாக இருந்தது. இந்த நிகழ்ச்சியின் முதல் ஒளிபரப்பு 1993ஆம் ஆண்டிலேயே காட்டப்பட்டதாகவும் சொல்லப்பட்டது.

1947ஆம் ஆண்டு ஒரு நாள் ஆடு மேய்க்கும் ஓர் அரபுச் சிறுவன், காணாமல் போன தனது ஆட்டுக்குட்டி ஒன்றைத் தேடி சாவுக்கடலை ஒட்டிய ஜோர்டான் நாட்டு மலைப் பகுதிகளில் தேடி அலைந்தான். அந்த மலைப் பகுதி "கும்ரான் மலைப் பகுதி" என்று அழைக்கப்படுகிறது.

ஆட்டுக் குட்டியைத் தேடிய சிறுவன் அங்கிருந்த குகைக்குள் பார்த்த போது, மண் பாண்டங்களில் சுருட்டி நிரப்பி வைக்கப்பட்ட தோல் ஆவணங்களைக் கண்டிருக்கின்றான். அவைகளில் சிலவற்றை எடுத்து வந்து செருப்புத் தொழிலாளியான தன் தந்தையிடம் கொடுக்க, மறு நாள் தந்தையும், மகனும் சேர்ந்து குகைக்குள் இருந்த அனைத்துச் சுருள்களையும் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

அந்தப் பழைய தோல்களைத் தமது செருப்புத் தொழிலுக்குப் பயன்படுத்த எண்ணிய அந்தச் சிறுவனின் தந்தை தோல்களில் ஹிப்ரு மொழியில் எழுதப்பட்டிருந்த வார்த்தைகளின் பொருள் புரியாமல், அதை அப்பொழுது ஜோர்டான் மன்னர் ஆட்சியின் கீழிருந்த கிழக்கு ஜெருஸலத்தைச் சேர்ந்த ஒரு பழைய புத்தகக் கடைக்காரரிடம் காண்பித்திருக்கிறார்.

ஓரளவு ஹிப்ரு மொழியறிந்த அந்தக் கடைக்காரர் அந்தச் சுருள்கள் பழங்காலச் செய்திகளைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்று கருதி, ஒரு சில தீனார்களுக்கு அத்தனை சுருள்களையும் அந்த செருப்புத் தொழிலாளியிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொண்டார்.

கிறித்தவரான அந்தப் புத்தகக் கடைக்காரர் அந்தச் சுருள்களை அந்நகரில் இருந்த கிறித்தவ ஆலயத்தில் ஒப்படைத்து விட்டார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் சுருள்கள் கண்டெடுக்கப்பட்ட விஷயம் வெளிப்பட்டது. அதில் உள்ள செய்திகளைத் தெரிந்து கொள்வதற்கு யூதர்களும், முஸ்லிம்களும் ஆர்வம் காட்டினர்.

அப்போது ஜோர்டானை ஆட்சி செய்த மன்னர் ஹுசைன், "அந்தச் சாசனச் சுருள்கள் முஸ்லிம், யூத, கிறித்தவர்கள் அடங்கிய ஒரு குழுவிடம் பொதுவாக ஒப்படைக்கப்பட்டு அவை ஆராயப்பட வேண்டும்" என்று விண்ணப்பித்தார்.

ஆனால் கிறித்தவப் பாதிரியார்கள், "அது தனியார் சொத்து" என்று வாதிட்டு அதைப் பொதுவில் வைக்க மறுத்து விட்டனர். கிறித்தவர்களில் பல பொதுப்படைவாதிகளான அறிஞர்களுக்கும் கூட அவற்றைப் படிப்பதற்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படவில்லை.

இடைப்பட்ட ஐந்தாண்டு காலங்களில் ஜெருஸலத்தில் இருந்த பாதிரிமார்கள் சில குழுக்களை ஏற்படுத்தி கும்ரான் மலைப் பகுதிகளில் இருந்த குகைகளில் தேடியலைந்து அங்கிருந்த மிச்சமீதி சாசனச் சுருள்கள் அனைத்தையும் தங்கள் கைவசம் கொண்டு வந்து விட்டனர்.

1952ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் அனைத்துச் சுருள்களும் கிறித்தவப் பாதிரிமார்கள் கையில் போய்ச் சேர்ந்து விட்டன. பதினைந்தாயிரம் (Manuscripts) கையெழுத்துப் பிரதிகள் இவ்வகையில் இருப்பதாக தற்பொழுது கணக்கிட்டு உள்ளனர்.

கடந்த ஐம்பதாண்டுகளுக்கு மேல் அந்த சாசனச் சுருள்களில் அடங்கிய செய்திகளை, ஒரு குறிப்பிட்ட கிறித்தவப் பாதிரிகள் அடங்கிய குழு இருட்டடிப்பு செய்து வந்தது.

பல கிறித்தவ அறிஞர்களும், ஆராய்ச்சியாளர்களும் அதைப் படிப்பதற்கு ஆர்வம் கொண்டு கேட்ட போதெல்லாம், அவர்களுக்கு அந்த வாய்ப்பு மறுக்கப்பட்டது.

சாசனச் சுருள்களைக் கைவசம் கொண்ட குழுவில் ஒருவர் இறக்க நேரிட்டால் அவருக்குப் பதில் அக்குழுவில் உள்ள மற்றவர்களால் சிபாரிசு செய்து, வேறொரு பாதிரியார் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவருக்கு மட்டுமே அதைப் படிப்பதற்கு உரிமை வழங்கப்பட்டு வந்தது.

இவ்விதமாகவே இவ்வளவு காலமும் அந்தச் சாசனச் சுருள்களின் செய்திகள் ரகசியமாக வைக்கப்பட்டு வந்தன. இந்த இரகசியக் காப்பில் போப்பாண்டவரின் வாட்டிகன் சபை முன்னணியில் இருந்தது.

தோலில் பதிந்த அந்தப் பழங்காலச் சாசனம் அழிந்து விடும் நிலையைக் கண்ட அதன் ரகசியக் காப்பாளர்கள் அச்சாசனங்களை மைக்ரோ பிலிம் Microfilm (நுண்ணிய படச்சுருள்) எடுத்தார்கள்.

அதன் ஒரு செட் போட்டோ காப்பிகள் அமெரிக்காவில் உள்ள லாஸ் ஏஞ்சல்ஸ் நகரிலிருக்கும் ஒரு நூலகத்துக்குப் பாதுகாப்புக்காக அனுப்பி வைக்கப்பட்டது.

1990 ஆம் ஆண்டு அந்த நூலகத்துக்குத் தலைவராக ஐஸ்மேன் என்ற அறிஞர் நியமிக்கப்பட்டார். அவர் முன்பே அந்த சாசனச் சுருள்களைப் படிப்பதற்கு ஆர்வம் காட்டி, அதற்கான வாய்ப்பு மறுக்கப்பட்டவர்.

இப்போது தனது அதிகாரத்தில் உள்ள நூலகத்தில் இருந்து சாசனச் சுருள்களின் நுண்ணிய போட்டோக்களைப் பெரிய அளவில் போட்டோ எடுக்கச் செய்து அவற்றைப் படித்தார்.

அவற்றைப் படித்த போது தமக்கு வியப்பு ஏற்பட்டதாக வாக்குமூலம் அளிக்கின்றார். இத்தனை காலமும் கிறித்தவசபை அந்த சாசனச் சுருள்களை மற்றவர்களுக்குக் காட்டாமல் இருந்ததன் உள்நோக்கம் என்ன என்பதையும் புரிந்து கொண்டதாகக் கூறுகின்றார்.

மைக்கேல் வைஸ் என்னும் சிகாகோ பல்கலைக் கழக ஹிப்ரு மொழிப் பேராசிரியர் ஒருவரின் உதவியைக் கொண்டு அந்த சாசனச் சுருள்களில் பதினைந்தாயிரத்தில் முக்கியமானது என்று அவர் கருதிய 100 (கையெழுத்துப் பிரதி)களை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து வெளியிட்டார்.

அந்தப் புத்தக வெளியீடு கிறித்தவ உலகத்தை உலுக்கியது என்றும், குறிப்பாக கிறித்தவ மத ஆலயங்கள் பேரதிர்ச்சியில் உறைந்து போயின என்றும் அந்த டாக்குமென்டரியின் செய்தியாளர் கூறுகின்றார்.

மேற்கத்திய மக்களின் மத நம்பிக்கையைத் தகர்ப்பதாக அந்தப் புத்தக வெளியீடு இருந்தது என்றும், ஆகவே அந்த இரு அறிஞர்களும் சட்ட நடவடிக்கைகளுக்கு உட்படுத்தப்படுவார்கள் என்ற அச்சம் இருந்தது என்றும் அதன் செய்தியாளர் குறிப்பிடுகிறார்.

அப்படி எது நடந்தாலும் அதைத் தாங்கள் எதிர்கொள்ளத் தயாராக இருப்பதாகவும், இதற்கு அஞ்சி ஒரு மிகப் பெரும் பேருண்மையை உலகத்திலிருந்து தாங்கள் மறைக்க விரும்பவில்லை என்றும் அவ்விரு அறிஞர்களும் வெளிப்படையாகக் கூறுவதையும் அந்தத் தொலைக்காட்சி டாக்குமெண்டரி பதிவு செய்து காட்டுகின்றது.

கிறித்தவ மத ஆலயங்களில் இப்போது ஏசுவின் பெயரால் செய்யப்படும் மதச் சடங்குகளும், வழிபாடுகளும் ஆரம்ப கிறித்தவர்களிடையே நடைபெறவில்லை என்பதையே சாசனச் சுருள்கள் நிரூபிக்கின்றன.

இந்தச் சடங்குகளுக்கும், ஏசுவின் பிரச்சாரத்திற்கும், கொள்கை கோட்பாடுகளுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவை அனைத்தும் "பவுல்" என்பவரால் பிற்காலத்தில் ஏற்படுத்தப்பட்டவை.

மொத்தத்தில் இப்போது ஏசுவின் பெயரால் சொல்லப்படும் அனைத்து கிறித்தவக் கொள்கைகளும் பொய்யானவை. அவற்றை ஏசுவிற்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்த உண்மையாளர்களின் வாழ்வில் காண முடியவில்லை.

மேற்கண்டவாறு அறிஞர் ஐஸ்மேன் கூறும் போது, ஒரு யூதரிடம் அவற்றைப் பற்றி வாதம் செய்கையில், ஏகத்துவம் கூறும் இஸ்லாத்தை உறுதிப்படுத்துகிறது என்று ஆணித்தரமாகக் கூறுகிறார். அவ்விடத்தில் அந்த வாதம் நிறுத்தப்பட்டு மறு காட்சி காட்டப்படுகின்றது.

இதே முறையில் மைக்கேல் வைஸ் என்ற அறிஞரும் பேசும் போது, அது ஏகத்துவத்தை போதிக்கும் இஸ்லாத்தை உறுதிப்படுத்துகின்றது என்று கூறுகிறார். இங்கும் காட்சி மாற்றப்படுகின்றது.

ஆகவே இந்தச் சாசனச் சுருள்கள் எந்த வகையில் குர்ஆனையும், இஸ்லாத்தையும் உண்மைப்படுத்துகின்றன என அவர்கள் கூறுகிறார்கள் என்பதைப் பார்வையாளர்கள் அறிய முடியவில்லை.

அந்தச் செய்தியிலிருந்து நாம் ஆச்சரியமான ஓர் உண்மையைத் தெரிந்து கொள்கிறோம்.

ஈஸா (அலை) அவர்களுக்கு இறைவன் இஞ்ஜீல் எனும் வேதத்தை வழங்கியதாகத் திருக்குர்ஆன் பல இடங்களில் கூறுகின்றது. ஆனால் கிறித்தவ சமுதாயத்திடம் அந்த வேதம் நிச்சயமாக இல்லை எனலாம்.

ஏனெனில் பைபிளின் புதிய ஏற்பாடு என்பது இயேசுவுக்குக் கடவுள் வழங்கியதன்று. மாறாக ஏசுவைப் பற்றி மற்றவர்கள் எழுதிய குறிப்புகள் தான் புதிய ஏற்பாடு.

"ராஜ்ஜியத்தின் சுவிஷேசத்தை இயேசு பிரசங்கித்தார்" என்று பைபிளில் கூறப்பட்டுள்ளது. (பார்க்க: மத்தேயு 4:23, மாற்கு 1:14)

எந்த இறை வேதத்தை மறைத்தார்களோ அதைத் தான் இயேசுவின் வழி வந்த நல்ல மனிதர்கள் தங்களுடன் எடுத்துச் சென்று குகையில் தங்கினார்கள் என்று முடிவு செய்யப் போதுமான காரணம் இருக்கிறது.

"குர்ஆனை ஒத்திருக்கின்றது" என்பது தான் அந்தச் சுருள்களைப் படித்த கிறித்தவ அறிஞர்களின் கருத்தாகும்.

இஞ்ஜீல் எனும் வேதத்தைக் திருக்குர்ஆன் மெய்ப்பிப்பதாக திருக்குர்ஆனும் பல இடங்களில் குறிப்பிடுகின்றது.

அதை வாசித்த பாதிரியார்கள் திட்டமிட்டு மறைத்ததும் இந்தக் கருத்தை உறுதிப்படுத்துகின்றது.

மனிதர்களால் எழுதப்பட்ட ஏட்டுக்கு இவ்வளவு முக்கியத்துவம் அளித்து இறைவன் கூறியிருக்க மாட்டான் என்பதும் இக்கருத்தை மேலும் உறுதிப்படுத்துகின்றது.

ரஹ்மத் ராஜகுமாரன்

## தகவல் பரிமாற்றம் 3

ஒலி வழித் தகவல்கள்




தகவல் தொடர்பிற்கு அந்த நாட்களில் சில வழிமுறைகளும் கருவிகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் முதல் நிலையில் உள்ளது தோல் கருவிகளால் ஒலி எழுப்பப்பட்டு செய்யப்பட்ட தகவல் பரிமாற்றமாகும்.

இன்று பயன்பாட்டில் உள்ள பேரிகைகள், மத்தளங்கள் , நவரா போன்ற தோல் கருவிகளால் ஒலி எழுப்பப்பட்டது. மகிழ்ச்சி, ஆபத்து, போர், வரவேற்பு போன்ற நேரங்களிலெல்லாம் அந்த நிகழ்விற்கு ஏற்ற ஒலிகளை எழுப்ப இந்தத் தோல் கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதில் யுத்த காலங்களில் எழுப்பப்படும் போர் முரசு பிரசித்திப்பெற்றது.

தமிழ்நாட்டில், குறுநில மன்னராக இருந்த வீரபாண்டிய கட்டபொம்மன் இதுபோன்ற ஒரு வசதியை பயன்படுத்தியுள்ளதாக வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர்.

தனது நகரான பாஞ்சாலங்குறிச்சிக்கும், தான் வணங்கிய முருகக் கடவுளின் ஊரான திருச்செந்தூருக்கும் இடையே பெரிய மணிகளை நிறுவியுள்ளார்.

திருச்செந்தூர் கோவிலில் பூசை செய்யப்படும் நேரத்தில் மணியடிக்கப்படுகிறது. அந்த ஒலியைக் கேட்டு வரிசையாக உள்ள மணிகளை ஒலிக்கச் செய்துள்ளனர். அவற்றின் தொடர்ச்சியாக பாஞ்சாலங்குறிச்சியில் மணி ஒலி எழுப்பப்பட்டுள்ளது.

கோவில் பூசையை அறிந்து கட்டபொம்மன், தனது பூசைகளைச் செய்துள்ளார். கோவில் பூசை பற்றிய தகவல் மணி ஒலி மூலம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இன்றும் கோவில்களிலும், தேவாலயங்களில், மசூதிகளிலும் எழுப்பப்படும் ஒலி, ஊர்முழுக்கக் கேட்கிறது அல்லவா? கோவிலுக்கு வரமுடியாதவர்கள் அந்த நேரத்தில், இருந்த இடத்திலிருந்தே இறைவனை வழிபடவும் தகவல் தொடர்பு வழிமுறை கையாளப்படுகிறது.

மாநபி (ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் ஹிஜ்ரத் செய்து மதீனாவிற்கு வந்து குன்றுகள் சூழ்ந்த அந்த பாலைவன நகரில் பரவலாக பல்வேறு பகுதிகளில் குடியேறினர். குடிசைகள் கட்டி வாழ்ந்தனர்.

அவர்கள் தொழுகை நேரம் அறிந்து கூடி தொழ கூடுவதற்கு ஏற்பாடு செய்ய நிர்ப்பந்தம் உண்டானது. நபி (ஸல்) அவர்கள் தோழர்களிடம் ஆலோசனை சேட்டார்கள்.

சில தோழர்கள் கொடியை நட்டு தொழுகை நேரத்தை நினைவு படுத்தலாம் என்றனர். கொடி நடப்பட்டிருப்பதைத் தேடி வந்து பார்ப்பது எளிதன்று என்று ஏற்கபடவில்லை.

மணியடித்து அறிவிக்க சொன்ன ஆலோசனையும் கிறித்துவத்தில் கடைபிடிக்கப்படுவதால் நடைமுறையில் குழப்பம் ஏற்படுத்தும் என்று ஏற்கப்படவில்லை.

சிலர் கொம்பு வைத்து குழலூதுவது போல் சங்கு ஊத உரைத்தனர். யூத முறை என்பதால் இதுவும் ஏற்படையதல்ல என்று தள்ளப்பட்டது.

நெருப்பு மூட்டி நினைவுபடுத்துவது மஜூஸிகளின் வழக்கம் என்பதால் நிராகரிக்கப்பட்டது.

கைகளைத் தட்டி ஓசை எழுப்பி, அதன் மூலம் மக்களைத் தொழுகைக்கு அழைக்கலாமே என்றொரு யோசைனையும் பிறந்தது.

ஒருநாள் இரவு நபித்தோழர்களில் ஒருவரான அப்துல்லா பின் ஜைத் (ரலி) அவர்கள், தொழுகைக்கு மக்களை எப்படி அழைப்பது என்பது பற்றியதொரு கனவைக் காண்கின்றார்கள், அதனை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் :

" எனது கனவில் இறையச்சமுள்ள மனிதர் ஒருவர் பச்சை ஆடைகளை அணிந்த நிலையில் தோன்றினார். அவரது கையில் கைக்கொட்டு ஒன்றை வைத்திருந்தார். நான் அந்த கைக்கொட்டை எனக்குத் தருமாறு கேட்டேன்.

அதற்கு அவர் எதற்காக அதனைக் கேட்கின்றீர்கள் என்று என்னிடம் கேட்டார்,

அதற்கு நான் முஸ்லிம்களைத் தொழுகைக்கு அழைப்பதற்காக எனக்கு இது தேவைப்படுகின்றது என்று கூறினேன்.

அதற்கு அந்த மனிதர், தொழுகைக்கு அழைக்கும் நோக்கத்திற்கு இது பயன்படாது என்று கூறினார்.

அதற்கு நான், பின் எந்த முறையில்தான் மக்களை தொழுகைக்கு அழைப்பது என்று கேட்டேன்.

அதற்கு அந்த மனிதர், பள்ளியின் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட இடத்தில் நின்று கொண்டு, உரத்த சப்தமிட்டு, அல்லாஹ் மிகப் பெரியவன் (அல்லாஹு அக்பர்) என்றும், இன்னும் நான் அல்லாஹ்வைத் தவிர வணக்கதிற்குரிய இறைவன் வேறு இல்லை என்றும், தொழுகைக்கு வாருங்கள் என்றும் கூறி மக்களைத் தொழுகைக்கு அழையுங்கள் என்று கூறினார்"".

அப்துல்லா பின் ஜைத் (ரலி) அவர்கள் கூறிய வண்ணம், மக்களைத் தொழுகைக்கு அழைக்குமாறு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கேட்டுக் கொண்டார்கள்.

தொழுகைக்கான நேரம் வந்ததும், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களை அழைத்து, அப்துல்லா பின் ஜைத் (ரலி) அவர்கள் கூறியவாறு, மக்களைத் தொழுகைக்கு அழைக்குமாறு கூறினார்கள்.

உமர் (ரலி) அவர்களும் இந்தப் புதிய பாங்கின் ஓசையைத் தனது வீட்டிலிருந்து செவிமடுத்து விட்டு, தனது ஆடை இழுபட பள்ளியை நோக்கி விரைந்து வந்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் வருவதற்காக சற்று தாமதித்த உமர்(ரலி) அவர்கள்,

'இறைத்தூதர் (ஸல்) அவர்களே...! இவ்வாறு மக்களை பாங்கின் மூலம் அழைக்க வேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு எவ்வாறு ஏற்பட்டது" என்று வினவினார்கள்.

அப்துல்லா பின் ஸைத் (ரலி) அவர்களின் கனவுதான், இந்த மாதிரியான முறையைப் பின்பற்றி மக்களைத் தொழுகைக்கு அழைக்க வேண்டும் என்ற உதிப்பைத் தந்தது, அதனை நானும் ஏற்றுக் கொண்டு, அவ்வாறே மக்களைத் தொழுகைக்கு அழைப்பு விடுக்குமாறு கேட்டுக் கொண்டேன்" என்றார்கள்

"நானும் இதே போன்றதொரு கனவைத் தான் கண்டேன், ஆனால் அப்துல்லா பின் ஸைத் (ரலி) அவர்கள் இந்த விஷயத்தில் என்னை முந்திக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் கண்ட கனவிற்கும் நான் கண்ட கனவிற்கு ஒரு வித்தியாசம் இருக்கின்றது என்று கூறினார்கள்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அந்த வித்தியாசம் என்ன என்று கூறுங்கள் என்று கேட்டுக் கொண்டதும், உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் :

அப்துல்லா பின் ஸைத் (ரலி) அவர்களின் கூற்றுப்படி, "அல்லாஹ்வைத் தவிர வணங்கத்தக்க இறைவன் வேறு ஒருவன் இல்லை"என்று நான் சாட்சி கூறுகின்றேன், என்ற வாசகத்துடன், இன்னும் நான் இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களை அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி கூறுகின்றேன்", என்ற வாசகத்தையும் நான் செவிமடுத்தேன் என்று கூறினார்கள்.

இதற்குப் பின், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களை அழைத்து, பாங்குடன் மேற்கண்ட "நான் இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களை அல்லாஹ்வின் தூதர்" என்றும் நான் சாட்சி கூறுகின்றேன், என்றும் சேர்த்துக் கூறுமாறு கேட்டுக் கொண்டார்கள்.

பின்னர், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அப்துல்லா பின் ஸைத் (ரலி) மற்றும் உமர்(ரலி) அவர்களின் பக்கம் திரும்பி, "இறைவனுக்கே எல்லாப் புகழும். என்னைப் பின்பற்றும் என்னுடைய சத்தியத் தோழர்களுக்கு அல்லாஹ் கனவின் வழியாக உண்மையை அருள் செய்கின்றான்"என்று கூறினார்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 4**

பறவைகள் மூலம் கடிதத் தகவல்கள்



கடிதப் போக்குவரத்தில் முற்கால அரசர்கள் பயன்படுத்திய சிறப்பான தகவல் தொடர்பு சாதனம் புறாக்கள் ஆகும். இந்த அமைதிப் பறவையின் காலில் கட்டப்பட்டு அனுப்பப்படும் கடிதம், குறித்த நபருக்கு விரைவாகக் கொண்டு சேர்ப்பிக்கப்பட்டுள்ளது. இன்றும் இந்த புறாக்களைப் பயிற்றுவிப்பவர்கள் இந்தியாவில் உள்ளனர். சரியான வழியை கண்டுபிடித்து புறப்பட்ட இடத்திற்கு இந்தப் பறவைகள் வந்து சேர்வது இயற்கையின் விந்தைக்குரிய செயல்பாடுகளில் ஒன்றாகும்.

புறாவின் கால்களில் கடிதங்களைக் கட்டி அனுப்பும் அஞ்சல் சேவை உலகிலேயே இப்போது இந்தியாவின் ஒடிஷா மாநிலத்தில் மட்டும்தான் தொடர்கிறது. ஒடிஷா காவல்துறையில் இன்னமும் 50 புறாக்களுக்குத் தகுந்த பயிற்சியும், உணவும் அளித்து இதற்காகவே வளர்த்துவருகின்றனர்.

இந்த அரிய, பழங்காலக் கடிதப் போக்குவரத்து சேவையைக் கொண்டாடும் விதத்தில் கடந்த ஏப்ரல் 14-ல் புவனேஸ்வரத்திலிருந்து கட்டாக் நகருக்கு தகவல்களை அனுப்பினர். 25 கிலோ மீட்டர் தொலைவை 20 நிமிடங்களில் கடந்து, பார்வையாளர்களுக்கு உற்சாகம் ஊட்டின புறாக்கள். கலை, கலாச்சாரப் பாரம்பரியத்தைக் காப்பதற்கான இந்திய தேசிய அறக்கட்டளை இந்நிகழ்ச்சிக்கு ஏற்பாடுசெய்திருந்தது.

தகவல் தொழில்நுட்பம் நவீனமடைந்துவிட்ட இக்காலத்தில் மின்னஞ்சல் சேவை உள்ளிட்ட எல்லாவித சாதனங்களும் விரல் நுனியில் காரியங்களைச் சாதிப்பதால் புறா விடு தூது பொதுவாக வழக்கொழிந்துவிட்டது.

இருந்தாலும், ஒடிஷா மாநிலத்தில் இந்தப் பாரம்பரியத்தை அறுத்து எறிய மனமில்லாமல் இன்னமும் தொடர்கிறார்கள். பெரிய புயல், சூறாவளி அல்லது அதுபோன்ற இயற்கைப் பேரிடர்களின்போது மின்சாரம் தடைபட்டால் விரைவாகவும் நிச்சயமாகவும் தகவல்களைக் கொண்டுபோய்ச் சேர்க்க புறாக்கள்தான் பயன்படுகின்றன.

ஒடிஷா காவல்துறையில் 1946-ல் 200 புறாக்களுடன் இந்த சேவை தொடங்கப்பட்டது. அதற்கும் முன்னால் இந்தப் புறாக்கள் ராணுவத்தின் அஞ்சல் சேவைப் பிரிவில் செயல்பட்டன. இவை யாரோ-யாருக்கோ எழுதிய கடிதங்களைக் கொண்டுபோய்க் கொடுக்காது. ஒரு ராணுவப் பாசறையிலிருந்து இன்னொரு பாசறைக்கோ, தலைமையிடத்துக்கோ அனுப்பும் ரகசியச் செய்திகளை வழி மாறாமல் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

இப்போதும் காவல்துறையினர் தங்களுக்கு இடையிலான தகவல் பரிமாற்றத்துக்கு மட்டுமே இதை அடையாளத்துக்குப் பயன்படுத்துகின்றனர். வாகனங்களால் போக முடியாத வழிகளில்கூட இவை பறந்து செல்லும்.

முதலில் கோராபுட் மாவட்டத்தில்தான் இச்சேவை தொடங்கியது. பெல்ஜியம் நாட்டிலிருந்து தருவிக்கப்பட்டு பிறகு உள்நாட்டு இனங்களுடன் கலப்பினமாக்கப்பட்ட 700 புறாக்கள் இச்சேவையில் பயிற்சி பெற்றன.

எளிதில் அணுகமுடியாத தொலைதூரத்தில் இருந்த காவல் நிலையங்களுக்குத் தகவல் அனுப்ப இவைதான் பெரிதும் பயன்பட்டன. 1999-ல் பெரு வெள்ளம் ஏற்பட்டபோதும் புயல் வந்தபோதும் இந்தப் புறாக்கள் மிகவும் துடிப்பாகச் செயல்பட்டன. மின்சாரம் துண்டிக்கப்பட்டதாலும் தகவல் தொடர்பு கோபுரங்கள் செயலிழந்ததாலும் ஏற்பட்ட தகவல் தொடர்பு இடைவெளியைப் புறா படைதான் இட்டு நிரப்பியது.

1982-ல் பங்கி என்ற சிறு நகரம் வெள்ளத்தால் சூழப்பட்டபோது அங்கிருந்த நிலைமையைக் காவல் துறை மூலம் பெற்றுவர இந்தப் புறாக்கள்தான் அனுப்பப்பட்டன. இந்தப் புறாக்கள் வெறும் தகவல்களைக் கொண்டுபோய்ச் சேர்க்கும் தூது வேலையைத்தான் செய்தன என்று நினைக்க வேண்டாம். சில குற்றவாளிகளை அவர்களுக்குத் தெரியாமலேயே பின்தொடர்ந்து கண்காணித்து பிடித்தும் கொடுத்துள்ளன!

புறாவின் கால்களில் கடிதங்களைக் கட்டி அனுப்பும் அஞ்சல் சேவை உலகிலேயே இப்போது இந்தியாவின் ஒடிஷா மாநிலத்தில் மட்டும்தான் தொடர்கிறது. ஒடிஷா காவல்துறையில் இன்னமும் 50 புறாக்களுக்குத் தகுந்த பயிற்சியும், உணவும் அளித்து இதற்காகவே வளர்த்துவருகின்றனர்.

இந்த அரிய, பழங்காலக் கடிதப் போக்குவரத்து சேவையைக் கொண்டாடும் விதத்தில் கடந்த ஏப்ரல் 14-ல் புவனேஸ்வரத்திலிருந்து கட்டாக் நகருக்கு தகவல்களை அனுப்பினர். 25 கிலோ மீட்டர் தொலைவை 20 நிமிடங்களில் கடந்து, பார்வையாளர்களுக்கு உற்சாகம் ஊட்டின புறாக்கள். கலை, கலாச்சாரப் பாரம்பரியத்தைக் காப்பதற்கான இந்திய தேசிய அறக்கட்டளை இந்நிகழ்ச்சிக்கு ஏற்பாடுசெய்திருந்தது.

தகவல் தொழில்நுட்பம் நவீனமடைந்துவிட்ட இக்காலத்தில் மின்னஞ்சல் சேவை உள்ளிட்ட எல்லாவித சாதனங்களும் விரல் நுனியில் காரியங்களைச் சாதிப்பதால் புறா விடு தூது பொதுவாக வழக்கொழிந்துவிட்டது.

இருந்தாலும், ஒடிஷா மாநிலத்தில் இந்தப் பாரம்பரியத்தை அறுத்து எறிய மனமில்லாமல் இன்னமும் தொடர்கிறார்கள். பெரிய புயல், சூறாவளி அல்லது அதுபோன்ற இயற்கைப் பேரிடர்களின்போது மின்சாரம் தடைபட்டால் விரைவாகவும் நிச்சயமாகவும் தகவல்களைக் கொண்டுபோய்ச் சேர்க்க புறாக்கள்தான் பயன்படுகின்றன.

ஒடிஷா காவல்துறையில் 1946-ல் 200 புறாக்களுடன் இந்த சேவை தொடங்கப்பட்டது. அதற்கும் முன்னால் இந்தப் புறாக்கள் ராணுவத்தின் அஞ்சல் சேவைப் பிரிவில் செயல்பட்டன. இவை யாரோ-யாருக்கோ எழுதிய கடிதங்களைக் கொண்டுபோய்க் கொடுக்காது. ஒரு ராணுவப் பாசறையிலிருந்து இன்னொரு பாசறைக்கோ, தலைமையிடத்துக்கோ அனுப்பும் ரகசியச் செய்திகளை வழி மாறாமல் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

இப்போதும் காவல்துறையினர் தங்களுக்கு இடையிலான தகவல் பரிமாற்றத்துக்கு மட்டுமே இதை அடையாளத்துக்குப் பயன்படுத்துகின்றனர். வாகனங்களால் போக முடியாத வழிகளில்கூட இவை பறந்து செல்லும்.

முதலில் கோராபுட் மாவட்டத்தில்தான் இச்சேவை தொடங்கியது. பெல்ஜியம் நாட்டிலிருந்து தருவிக்கப்பட்டு பிறகு உள்நாட்டு இனங்களுடன் கலப்பினமாக்கப்பட்ட 700 புறாக்கள் இச்சேவையில் பயிற்சி பெற்றன.

எளிதில் அணுகமுடியாத தொலைதூரத்தில் இருந்த காவல் நிலையங்களுக்குத் தகவல் அனுப்ப இவைதான் பெரிதும் பயன்பட்டன. 1999-ல் பெரு வெள்ளம் ஏற்பட்டபோதும் புயல் வந்தபோதும் இந்தப் புறாக்கள் மிகவும் துடிப்பாகச் செயல்பட்டன. மின்சாரம் துண்டிக்கப்பட்டதாலும் தகவல் தொடர்பு கோபுரங்கள் செயலிழந்ததாலும் ஏற்பட்ட தகவல் தொடர்பு இடைவெளியைப் புறா படைதான் இட்டு நிரப்பியது.

1982-ல் பங்கி என்ற சிறு நகரம் வெள்ளத்தால் சூழப்பட்டபோது அங்கிருந்த நிலைமையைக் காவல் துறை மூலம் பெற்றுவர இந்தப் புறாக்கள்தான் அனுப்பப்பட்டன. இந்தப் புறாக்கள் வெறும் தகவல்களைக் கொண்டுபோய்ச் சேர்க்கும் தூது வேலையைத்தான் செய்தன என்று நினைக்க வேண்டாம். சில குற்றவாளிகளை அவர்களுக்குத் தெரியாமலேயே பின்தொடர்ந்து கண்காணித்து பிடித்தும் கொடுத்துள்ளன!

குர்ஆனில் நபி சுலைமான் (அலை) அவர்கள் பறவை விடு தூதாக ஹுத் ஹுத் பறவை அனுப்பியதாக ….

ஸபா நாட்டு அரசிக்கு ஸுலைமான் (அலை) அவர்கள் இஸ்லாமிய அழைப்பை ஏந்திய கடிதத்தை ஹுத் ஹுத் என்ற கொண்டாலாத்தி பறவையிடம் கொடுத்து அனுப்பினார்கள்.

அது கொண்டு சென்று அரசியின் மாளிகையில் கொண்டு போட்டது. அதைப் பிரித்துப் படித்து விட்டு அந்த அரசி உடனடியாக தம் அரசவைக் கூட்டத்தைக் கூட்டி தம் அரசவைப் பிரதானிகளிடம் விவாதிக்க ஆரம்பித்த போது…

" அரசவைப் பிரமுகர்களே! மிக முக்கியமான, கண்ணியம் நிறைந்த கடிதம் ஒன்று என்னிடம் போடப்பட்டுள்ளது. அது ஸுலைமான் என்பவரிடமிருந்து வந்துள்ளது. மேலும், அருளாளன் அன்பாளன் அல்லாஹ்வின் திருப்பெயரால் அது தொடங்கப்பட்டுள்ளது. எனக்கு எதிராக நீங்கள் ஆணவத்துடன் நடந்து கொள்ளாதீர்கள். முஸ்லிம்களாய் – பணிந்தவர்களாய் என்னிடம் வரவேண்டும்" எனும் வாசகம் அதில் உள்ளது."

சமுதாயத்தலைவர்களே! என்னுடைய இந்த விவகாரத்தில் நீங்கள் எனக்கு நல்லதொரு ஆலோசனையை வழங்க வேண்டும்!" (குர்ஆன்: 27:27-32) என்று கூறினார்.

ரஹ்மத்ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 5**

கல்வெட்டுக் கூறும் தகவல்கள்



பண்டைக் காலத்தில் நீண்ட காலம் அழியாதிருக்க வேண்டும் எனக் கருதப்பட்ட செய்திகள் கற்களில் வெட்டப்பட்டன. இவ்வாறு கல்லில் பொறிக்கப்பட்ட செய்தியே கல்வெட்டு எனப்படுகின்றது. பெரும்பாலும், மன்னர்களின் ஆணைகள், அவர்கள் செய்த பணிகள் போன்றவை கல்வெட்டுக்களாகப் பொறிக்கப்பட்டன. இவை தவிர வீரர்கள், பிரபுக்கள், அதிகாரிகள் போன்றோர் தொடர்பிலும், முக்கிய நிகழ்வுகள் தொடர்பிலும் கல்வெட்டுக்கள் உள்ளன.

கல்வெட்டுக்கள், பெரும்பாலும் பொதுமக்கள் பார்ப்பதற்காக வெட்டப்படுவதால் இவை பொது இடங்களிலேயே அதிகம் காணப்படுகின்றன. கோயில்கள், குகைகள், பொது மண்டபங்கள், வெற்றித்

தூண்கள், நடுகற்கள் எனப்படும் இறந்தோர் நினைவுக் கற்கள் என்பவற்றில் கல்வெட்டுக்களைக் காணலாம்.

கல்வெட்டுப் பொறிக்கும் வழக்கம் உலகின் பல பகுதிகளிலும் காணப்பட்டுள்ளது. தொல்லியல் ஆய்வுகள் இறந்துபட்ட அல்லது இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கின்ற பல்வேறு மொழிகளிலுமான கல்வெட்டுக்களை வெளிச்சத்துக்குக் கொண்டுவந்துள்ளன.

கல்வெட்டுக்கள் பல ஆயிரம் ஆண்டுகள் நிலைத்திருக்கக் கூடியவை ஆதலால், மிகப் பழங்கால வரலாற்றுச் செய்திகள், நிகழ்வுகளுக்கான நம்பகமான சான்றுகளாக இவை திகழ்கின்றன. பல கல்வெட்டுக்கள் ஒரு மொழியில் மட்டுமன்றி, ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளிலும் ஒரே செய்தியைக் குறிக்கும்படி அமைந்துள்ளன.

இத்தகைய கல்வெட்டுக்கள் வழக்கொழிந்து மறக்கப்பட்டுவிட்ட மொழிகள் பலவற்றை வாசித்து அறியவும் அவற்றை மீட்டுருவாக்கம் செய்யவும் உதவுகின்றன.

பண்டை எகிப்திய மொழி இவ்வாறு மீட்டுருவாக்கம் செய்யப்பட்டதே. பல்வேறு காலகட்டங்களைச் சேர்ந்த கல்வெட்டுக்களை ஆய்வு செய்வதன் மூலம் எழுத்துக்களின் படிமுறை வளர்ச்சிகளையும் அறிந்துகொள்ள முடிகிறது.

எகிப்து நாட்டில் ஏழு வருடம் தொடர் பஞ்சம் ஏற்பட்டதையும், அப்பஞ்சத்திலிருந்து மக்களை பாதுகாக்க நபி யூசுப் (அலை) அவர்கள் செய்த யுக்தியையும் திருக்குர்ஆனில் இறைவன் பதிவு செய்துள்ளான் .

قَالَ تَزْرَعُوْنَ سَبْعَ سِنِيْنَ دَاَبًا فَمَا حَصَدْتُّمْ فَذَرُوْهُ فِىْ سُنْۢبُلِهٖۤ اِلَّا قَلِيْلًا مِّمَّا تَاْكُلُوْنَ

“நீங்கள் தொடர்ந்து ஏழு ஆண்டுகளுக்கு (நல்லபடியாக) விவசாயம் செய்வீர்கள்; பிறகு நீங்கள் அறுவடை செய்த - (விளைச்ச)லில், நீங்கள் உண்பதற்கு வேண்டிய ஒரு சிறிய அளவைத்தவிர, அதனை அதற்குரிய கதிர்களிலேயே விட்டு வையுங்கள்.

ثُمَّ يَاْتِىْ مِنْۢ بَعْدِ ذٰلِكَ سَبْعٌ شِدَادٌ يَّاْكُلْنَ مَا قَدَّمْتُمْ لَهُنَّ اِلَّا قَلِيْلًا مِّمَّا تُحْصِنُوْنَ

“பின்னும், அதற்கப்பால் கடினமான (பஞ்சத்தையுடை வருடங்கள்) ஏழு வரும்; நீங்கள் பஞ்சமான ஆண்டுகளுக்காக பத்திரப்படுத்தி முன்னமேயே வைத்திருப்பதில் சொற்ப (அளவை)த் தவிர மற்றதை அவை (அந்த பஞ்ச ஆண்டுகள்) தின்றுவிடும்.

ثُمَّ يَاْتِىْ مِنْۢ بَعْدِ ذٰلِكَ عَامٌ فِيْهِ يُغَاثُ النَّاسُ وَفِيْهِ يَعْصِرُوْنَ

பின்னும், அதற்கப்பால் ஓராண்டு வரும், அதில் மக்களுக்கு நல்ல மழை பெய்யும்; அதில் (விளையும் கனிகளிலிருந்து) அவர்கள் பழரசங்கள் பிழிந்து (சுகமாக) இருப்பார்கள்” என்று கூறினார்.

(அல்குர்ஆன்: 12:47 -49)

எகிப்தில் ஏற்பட்ட இந்த ஏழு ஆண்டு பஞ்சம் உண்மை தான் என்பதற்கான சான்று இன்றும் இருந்து வருகிறது அக்காலத்தில் வாழ்ந்த அரசி கருங்கல் ஒன்றில் ஹிப்ரு மொழியில் எழுதிய கல்வெட்டு இன்றும் லண்டன் பொருட்காட்சி சாலையில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அக்கல்வெட்டில், எகிப்தில் ஏற்பட்ட ஏழாண்டு பஞ்சம் பற்றியும், நபியவர்கள் சமயோஜிதமாக சமாளித்து கடந்த விபரத்தையும் தெளிவாக பொறிக்கப்பட்டுள்ளது.

ரஹ்மத் ராஜகுமாரன்

## தகவல் பரிமாற்றம் 6

கடிதங்கள் மூலம் தகவல்கள்.



நாட்கள் மாறி, நவீன தொழில்நுட்பங்கள் உருவாக்கிக் கொடுத்த காகிதம் புழக்கத்திற்கு வந்தது. கடிதங்கள் எழுதும் பழக்கம் துவங்கியது. எழுதுபவரிடமிருந்து கடிதங்களைப் பெற்று உரிய நபரிடம் கொண்டு சேர்க்கும் அஞ்சல் சேவை உருவாக்கப்பட்டது;.

இதற்கான கட்டணங்களை பெறுவதற்கு பல்வேறு முறைகள் முயற்சிக்கப்பட்டன. இறுதியாக இன்றைய நாட்களிலும் பயன்படுத்தப்பட்டு வருகின்ற தபால் தலை முறை அறிமுகப்படுத்தப்பட்டது. உலகிற்கு இதனை அறிமுகப்படுத்தியவர்கள் தாங்களே என்பதால், இன்றும் தபால் தலையில் இங்கிலாந்து நாட்டின் பெயர் கொடுக்கப்படுவதில்லை. நாட்டின் பெயர் இல்லாத தபால் தலை ஒன்றைக் கண்டால் அது இங்கிலாந்து நாட்டினுடையது என்பதை அறிந்து கொள்ளலாம்.

ஓரிடத்தில் சேகரிக்கப்படும் கடிதங்களை மற்றொரு இடத்திற்கு, நாட்டிற்குக் கொண்டு செல்ல, குதிரைகள், உந்து வண்டிகள், கப்பல்கள், புகை வண்டிகள் என்று எல்லாவிதமான போக்குவரத்து முறைகளும் பயன்படுத்தப்பட்டன. நவீன மின்னணுச் சாதனங்கள், தொலை தொடர்பிற்காக அறிமுகப்படுத்தப்பட்ட பிறகும் இந்தக் கடிதப் போக்குவரத்து இன்றும் உலகளவில் நடைமுறையில் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இஸ்லாமிய வரலாற்றில் மிகவும் பிரசித்தமான ஒற்றர் மூலம் அனுப்பப்பட்ட ரகசிய கடிதம்

மக்காவை நோக்கி இஸ்லாமியப் படை வருகிறது என்ற செய்தி இரகசியமாக இருக்க வேண்டும். மக்காவிற்குள் திடீரென நுழையும் வரை ஒற்றர்கள் மூலம் குறைஷிகளுக்கு இச்செய்தி தெரியாமல் இருக்க வேண்டுமென்று பார்த்துக் கொண்டார்கள் நபி(ஸல்) அவர்கள்.

அலீ (பின் அபீ தாலிப் (ரலி) அவர்கள் அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குதிரை வீரர்களான என்னையும், அபூ மர்ஸத் (கினாஸ் இப்னு ஹுஸைன்) அவர்களையும், ஸுபைர் இப்னு அவ்வாம் அவர்களையும், 'நீங்கள் 'ரவ்ளத்து காக்' என்னுமிடம் வரை செல்லுங்கள்; ஏனெனில், அங்கு (ஒட்டகச் சிவிகையில் இணைவைப்பவர்களில் ஒருத்தி இருக்கிறாள். இணைவைப்பவர்(களின் தலைவர்)களுக்கு ஹாதிப் இப்னு அபீ பல்தஆ அனுப்பியுள்ள (நம்முடைய ரகசியத் திட்டங்களைத் தெரிவிக்கும்) கடிதம் ஒன்று அவளிடம் இருக்கும்; (அவளிடமிருந்து கடிதத்தைக் கைப்பற்றி வாருங்கள்)' என்று கூறினார்கள்.

(பிறகு நாங்கள் புறப்பட்டுப் போனோம்.) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குறிப்பிட்ட இடத்தில் அந்தப் பெண் தன்னுடைய ஒட்டகத்தில் சென்று கொண்டிருக்க, அவளை நாங்கள் அடைந்தோம். அவளிடம், 'கடிதம் (எங்கே? அதை எடு)' என்று கேட்டோம்.

அவள், 'எம்மிடம் கடிதம் எதுவுமில்லை' என்று பதிலளித்தாள். (அவள் அமர்ந்திருந்த) ஒட்டகத்தை நாங்கள் படுக்க வைத்து (அந்தக் கடிதத்தைத்) தேடினோம். எந்தக் கடிதத்தையும் நாங்கள் காணவில்லை. அப்போது, 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பொய் சொல்லமாட்டார்கள். ஒன்று, நீயாக கடிதத்தை எடு(த்துக் கொடு);

அல்லது உன்னை(ச் சோதிப்பதற்காக உன்னுடைய ஆடையை) நாங்கள் கழற்ற வேண்டியிருக்கும்' என்று நாங்கள் சொன்னோம்.

விடாப் பிடியாக (நாங்கள்) இருப்பதை அவள் கண்டபோது, (கூந்தல் நீண்டு தொங்கும்) தன்னுடைய இடுப்புப் பகுதிக்கு அவள் கையைக் கொண்டு சென்றாள். அவள் ஒரு துணியை இடுப்பில் கட்டியிருந்தாள். (அங்கிருந்து) அ(ந்தக் கடிதத்)தை வெளியில் எடுத்தாள். அந்தக் கடிதத்துடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி நடந்தோம்.

நபி(ஸல்) அவர்களின் முன்பு ஹாதிப் இழுத்து வரப்பட்டார். உமர்(ரலி), “ஹாதிப் துரோகமிழைத்துவிட்டார், ஆணையிடுங்கள் அவருடைய கழுத்தைக் கொய்துவிடுகிறேன்” என்று கூறினார். மிகப் பொறுமையுடன் நபி(ஸல்) அவர்கள் ஹாதிப்பை பார்த்து “ஏன் இப்படிச் செய்தீர்கள்?” என்று கேட்டார்கள்.

அதற்கு ஹாதிப் “நான் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் விசுவாசமில்லாதவனாக நடந்து கொள்ள வேண்டுமென்று இப்படிச் செய்யவில்லை. இணைவைப்பாளர்களுக்கு நான் செய்யும் இந்த உதவியால் எனக்கு அங்கு செல்வாக்கு கிடைக்கும், அதன் மூலம் மக்காவிலிருக்கும் என் மனைவியும் மக்களும் பாதுகாக்கப்படுவார்கள் என்று நம்பியே இக்காரியத்தைப் புரிந்தேன்.

நான் மக்காவில் வாழ்ந்தேனே தவிர நான் குறைஷியல்ல, என் குடும்பத்தைப் பாதுகாக்க எனக்கு அங்கு எந்தக் குறைஷி உறவினரும் இல்லை. உங்களுடைய தோழர்கள் அனைவருக்குமே மக்காவில் அவர்களின் குடும்பத்தையும் அவர்களின் செல்வத்தையும் பாதுகாப்பதற்கு அங்கு அவர்களது மற்ற உறவினர்கள் இருக்கின்றார்கள். எனக்கு அப்படி யாரும் அங்கில்லை” என்று கூறினார்.

இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், “இவர் உண்மையைத்தான் சொல்கிறார் என்று நான் நம்புகிறேன்” என்று கூறினார்கள். இருப்பினும் கோபத்தில் கொந்தளித்த உமர்(ரலி), “இவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்கும் துரோகமிழைத்துவிட்டார், என்னை விடுங்கள், இவரின் கழுத்தைக் கொய்து விடுகிறேன்” என்று மீண்டும் கூறினார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள், “இவர் பத்ருப் போரில் பங்கெடுத்தவர். பத்ரில் பங்கெடுத்தவர்களை நோக்கி அல்லாஹ், 'நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள். உங்கள் பாவங்களை நான் மன்னித்துவிட்டேன். உங்களுக்குச் சொர்க்கம் உறுதியாகிவிட்டது' என்று கூறியிருக்கிறான். உமரே! இவர் பத்ரில் கலந்து கொண்டவர் என்பது உனக்குத் தெரியுமா?” என்றார்கள்.

இதைக் கேட்ட உமர்(ரலி) ஸ்தம்பித்து நின்றார்கள். அவர்களின் கண்கள் கண்ணீர் உகுத்துக் கொண்டிருக்க, 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் ஹாதிப்பை மன்னித்து விடுவித்தார்கள்.

ஒற்றர்கள் வழியாகச் செய்தி செல்வதை அல்லாஹ் தடுத்துவிட்டான். குறைஷிகளுக்கு எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை. முஸ்லிம்கள் போருக்கு தயாராகி மக்காவிற்குப் புறப்பட்டனர். ஸஹீஹ் புகாரி 3983

ரஹ்மத் ராஜகுமாரன்

## தகவல் பரிமாற்றம் 7

(தகவல்கள் உயிர்நாடி)



ஓர் ஆராய்ச்சி நடந்தது.

மொத்தம் மூன்று நாய்க்குட்டிகளை கொண்டுவந்தார்கள். மூன்று நாய்க்குட்டிகளையும் வெவ்வேறு தொட்டிலில் படுக்க வைத்தார்கள். தொட்டிலுக்குள் குட்டிகளை படுக்க வைத்துவிட்டு மூடிவிடவேண்டும். காற்று உள்ளே போவதற்கு தனி குழாய் உண்டு. மேலும் இரண்டு குழாய்கள் ஒன்று உணவு , மற்றொன்று தண்ணீருக்காக பொருத்தப்பட்டுள்ளன.

ஆராய்ச்சி இதுதான் ! தொட்டிலுக்குள் நாய் குட்டிகளை படுக்க வைத்து விட்டு, தொட்டிலை மூட விடவேண்டும். வேளாவேளைக்கு உணவு, காற்று, தண்ணீர் இவைகளை தவிர நாய்க்குட்டிகளுக்கு வேறு எதுவும் தேவைப்படுமா ?

இதுதான் அவர்கள் கண்டுபிடிக்க விரும்பினார்கள். ஆராய்ச்சியின் முடிவு அவர்களை அதிர்ச்சியடைய வைத்தது.

முதலில் ஆராய்ச்சி விவரங்கள். முடிவு பிறகு !

நாய்க்குட்டிகள் படுத்து இருக்கும் மூன்று தொட்டில்களையும் மூன்று குழுக்கள் கண்காணிக்க வேண்டும். மூன்று குழுக்கள் என்ன செய்ய வேண்டும் என்று விளக்கினார்கள்.

முதல் குழு,தொட்டிலை எப்போது வேண்டுமானாலும் திறந்து நாய் குட்டியை வெளியே தூக்கி தடவி கொடுக்கலாம். மெலிதாக வருடி விடலாம் . ஆசை தீர கொஞ்சலாம். முடிந்த பின் மீண்டும் குட்டியை தொட்டிலுக்குள் வைத்து மூடி விட வேண்டும். இரண்டு மணி நேரத்துக்கு ஒரு முறை இப்படி செய்ய வேண்டும்.

இரண்டாவது குழு, இரண்டாவது தொட்டிலை திறந்து குட்டியை தூக்கவேண்டும். கொஞ்சம் கூடாது .மாறாக ஒவ்வொரு முறையையும் நாய்க்குட்டியை லேசாக துன்புறுத்த வேண்டும். லேசாக அடிக்கவேண்டும்.

மூன்றாவது குழு, மூன்றாவது தொட்டியை திறக்கக்கூடாது அந்த நாய்க்குட்டிக்கு யாரிடமும் எந்த தொடர்பும் இருக்கக் கூடாது.

சில நாட்கள் கழிந்தன. ஆராய்ச்சி முடிவை தெரிந்து கொள்ள வேண்டிய நாள் வந்தது.

முதல் தொட்டிலை திறந்தார்கள். வெளியே வந்த நாய் ஆரோக்கியமாக இருந்தது. மகிழ்ச்சியுடன் வாலை ஆடிக்கொண்டிருந்தது.

இரண்டாவது தொட்டிலை திறந்தார்கள். அதிலிருந்த நாய்க்குட்டியின் கண்களில் கொஞ்சம் பயம். கொஞ்சம் வன்மம் தெரிந்தது. தொட்டிலின் மூடியை திறக்கப்படுகிறது என்று தெரிந்ததும் உள்ளே கொஞ்சம் பதுங்கிவிட்டு பிறகு திடீரென்று மூடியைத் திறந்தவரின் கையை கடிக்க முயன்றது.

மூன்றாவது தொட்டிலை நெருங்கினார்கள்.

அனைவருக்கும் இந்த நாய்க்குட்டியைப் பார்க்கவேண்டும் போல் இருந்தது. ஏனென்றால் அவர்கள் அந்த நாய்க்குட்டியை நீண்ட நாட்களாக பார்த்ததே இல்லை. அது எப்படி இருக்கும் என்றும் ஒருவருக்கும் தெரியாது மகிழ்ச்சியாக..? சோகமாகவா..? மிகுந்த ஆர்வத்துடன் தொட்டிலைத் திறந்தார்கள்.

உள்ளே அந்த நாய் செத்து கிடந்தது.

ஆராய்ச்சியாளர்களுக்கு அதிர்ச்சி. இதே ஆராய்ச்சியில் வேறு பல நாய்க்குட்டிகளை வைத்து செய்து பார்த்தார்கள். முடிவுகள் மாறுபடவில்லை. மூன்றாவது தொட்டிலில் வைக்கப்பட்ட நாய் குட்டிகள் அனைத்தும் செத்துப் போயின. நாய்க்குட்டிக்குப் பதிலாக பூனைக்குட்டிகளை பயன்படுத்தி பார்த்தார்கள்.

அதே முடிவுதான் !

மற்ற இரண்டு நாய் குட்டிகளுக்கு கிடைத்த அதே ஆகாரம் தான் இதற்கும் கிடைத்தது .எனில், இந்த குட்டி ஏன் இறந்தது ?

மூடிய தொட்டில் மூடியபடியே இருந்ததுதான் இதற்குக் காரணம்.

அந்தப் பரிதாபகரமான குட்டி - யாரையும் பார்க்கவில்லை, யாருடனும் பேசவில்லை. உறவாட வில்லை . அதனால் இறந்துவிட்டது.

ஆக, தொடர்பு கொள்வது மிக மிக முக்கியமானது என்பது தெரிய வருகிறது. இல்லையா ?

சரி, நாய்க்குட்டிகளை வைத்து செய்த இந்த ஆராய்ச்சிக்கும் நமக்கும் என்ன சம்பந்தம் ?

ஒரு விஷயம் அனாதை இல்லங்களில் குழந்தைகளின் இறப்பு விகிதம் அதிகம் .

ஜீவராசிகள், பறவைகள் மற்றும் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அத்தனை பேருக்குமே தகவல் பரிமாற்றம் இன்றியமையாதது. இது ஒரு சேவை மட்டுமல்ல மனிதர்களின் உயிர் நாடியும் கூட !

சுவர்க்கத்தில் எல்லா வசதிகளும், சந்தோஷங்கள் இருக்கும் கூடவே சாந்தியும் சமாதானமும் கொண்ட நல்ல தகவல்களும் இருந்து கொண்டே இருக்கும் .

اِلَّا قِيْلًا سَلٰمًا سَلٰمًا

“ஸலாம், ஸலாம்” என்னும் சொல்லையே (செவியுறுவார்கள்).

(அல்குர்ஆன்: 56:26)

وَاُدْخِلَ الَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ جَنّٰتٍ تَجْرِىْ مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ خٰلِدِيْنَ فِيْهَا بِاِذْنِ رَبِّهِمْ تَحِيَّتُهُمْ فِيْهَا سَلٰمٌ

-அங்கு அவர்களுடைய காணிக்கையாவது “ஸலாமுன் (சாந்தியும் சமாதானமும் உண்டாகுக!”) என்பதாகும். (அல்குர்ஆன் : 14:23)

தகவல்கள் உயிர்நாடி.

ரஹ்மத் ராஜகுமாரன் .

## தகவல் பரிமாற்றம் 8

(நாலாவது ஒன்று)



மனிதனுடைய அடிப்படைத் தேவைகள் உணவு, உடை, வீடு பொதுவாக இந்த மூன்றையும் தான் சொல்வார்கள். நான்காவதாக ஒரு தேவை இருக்கிறது .அது பேசுவதும் கேட்பதும். அதாவது தொடர்பு கொள்ளுதல்.

இந்த பேசுவதும், கேட்பதும்தானே என்று சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியாது. அது நம் மனநிலையை மாற்றியமைக்கும் வல்லமை கொண்டது.உயிர் வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளிப்பது .

நம்ம ஊரில் பிரபல ஓவியர் ஒருவர், ஆஸ்திரேலியாவில் இருக்கும் தமது மகன் வீட்டுக்கு போனார். பிரம்மாண்டமான நாடு, பெரிய வீடு, தேவைப்படும் அத்தனை வசதிகளும் கிடைக்கும். ஆனால் , சில நாட்களிலேயே அவர் தன் மகனிடம் நச்சரிக்க ஆரம்பித்து விட்டார்.

" நான் திரும்ப ஊருக்கு போறேன்பா "

மகனுக்கு புரியவில்லை .

" அதுக்குள்ள என்னப்பா அவசரம்? "

" இல்லப்பா எனக்கென்னவோ ஊருக்கு போகணும் போல இருக்கு "

" வேளாவேளைக்கு நல்ல சாப்பாடு. உங்களுக்குன்னு தனி ரூம் , ஏசி ,கம்ப்யூட்டர், இன்டர்நெட், கார் இப்படி சகல சௌகரிங்களும் இங்கே இருக்கிறது. இதை எல்லாத்தையும் விட்டுவிட்டு, கிராமத்திற்கு போறேன்னு ஏம்ப்பா அடம் பிடிக்கிறீங்க ?"

அவர் பிரச்சினை என்னவென்று பிறகுதான் மகனுக்கு புரிந்தது.

பேசுவதற்கு ஆள் இல்லை . வீடு, ஏசி, கார் எல்லாம் இருந்து என்ன பிரயோஜனம் ? மனம் விட்டுப் பேச யாரும் இல்லை.

ஏரோபிளேன் பிடித்து, இந்தியா வந்து, ஏர்போர்ட்டில் இருந்து பஸ் பிடித்து, கூட்டத்தில் வியர்வை பொங்க, வீட்டிற்கு வந்து சேர்ந்த உடன் தான் அவருக்கு 'அப்பாடா 'என்று உயிரே வந்தது.

அதே மாதிரி வயோகத்தில் மனைவி இழந்த கணவரும் சொற்ப நாளிலே மனநிலை பாதிக்கப்படுகிறார்கள். சீக்கிரமே மரணத்தின் விளிம்பிற்கு வந்து சேருகிறார்கள் என்பதாக ஓர் உளவியல் ஆய்வு கூறுகிறது .

" பேச்சு துணைக்கு நபரில்லை.

பேசுவதற்கே பிடிக்கவில்லை..

துவளும்போது தூக்க ஆளில்லை..

அழும்போது உன் ஆறுதல் அருகிலில்லை;

சிரித்தப்படி மிரட்ட நீயில்லை..

உண்ண சொல்லி கெஞ்ச அரவமில்லை..

ஏன் முந்தி சென்றாய் எனை நீ..!

#வயோதிகம்..

பேசுவதும், கேட்பதும்தானே என்று சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியாது. அது நம் மனநிலையை மாற்றியமைக்கும் வல்லமை கொண்டது .உயிர் வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளிப்பது.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 9**

(மனிதனை உற்பத்தி செய்யும் தகவல்கள்)




மனித உடலின் ஒவ்வொரு அங்கமும் எப்படி உருவாகிறது என்ற தகவல்கள் அவனுடைய செல் என்னும் உயிரணுவில் செய்தியாக எழுதி வைக்கப்பட்டிருக்கிறது, பேப்பர் பென்சிலால் அல்ல ; குரோமோசோம்கள் என்னும் மிக நீண்ட கூட்டணு கட்டமைப்பில் அந்த ரகசியம் பொதிந்து இருக்கிறது .

இந்த உருவாக்கும் தகவல் புத்தகத்தைப் படித்தால் எப்படி இருக்கும் ? சுவாரஸ்யமில்லாத ATGCCAGGCCAGGAC இப்படியே 300 கோடி எழுத்துக்கள். இதில் இந்த தகவலை வைத்து தலைகால் புரிந்துகொண்டு,என்னத்தைக் கண்டுபிடித்து இருக்கிறார்கள் என்று நீங்கள் வியக்கலாம். இதில் ஒவ்வொரு எழுத்தும் ஒரு கூட்டணுயைக் குறிக்கிறது .

அடினைன் (A) தயோமைன் ( T) சைட்டோசைன் (C ) குவானின் (G) என்ற 4 புரோட்டீன்களால் அடுக்கப்பட்டு ஒவ்வொரு உடல் அங்கமும் படைக்கப்பட்டிருக்கிறது

டி.என்.ஏ என்பது என்ன ?

ஒரு மனிதனை படைப்பதற்கான செய்முறைக் குறிப்புகள் . அது எப்படி எழுதப்பட்டிருக்கிறது ? நான் சற்று முன் சொன்ன மாதிரி ATCG என்ற நான்கெழுத்து சரங்களாக.

இதை சற்று புரியும்படி சொல்றேன் .

நம் உடம்பு ஒரு மிகப் பெரிய கட்டடம் என்று வைத்துக் கொண்டு இந்தப் படிமத்தை கொஞ்சம் தொடரலாம் .

உடம்பெனும் கட்டிடத்தில் எத்தனையோ அறைகள் இருக்கின்றன . ஒவ்வொரு அறையிலும் ஒரு புத்தக அலமாரி இருக்கிறது . அந்த புத்தக அலமாரி ஒவ்வொன்றிலும் பல பாகங்கள் கொண்ட ஒரு புத்தகம் வைக்கப்பட்டிருக்கிறது .

அந்தப் புத்தகத்தின் உள்ளடக்கம் என்ன? முழுக் கட்டடத்தை உருவாக்கும் திட்டம் , அதற்கான செயல் முறைகள் ஒவ்வொரு அறையிலும் ஒரே புத்தகத்தின் ஒரு செட் பிரதிகள் .

இதில் மனிதன் கட்டிடம், அறைகள் அவன் செல்கள் , அலமாரி ஒரு செல்லின் உட்கரு அதாவது நியூக்ளியஸ்..., புத்தகம் டி.என்.ஏ

புத்தகம் 46 பாகங்கள் கொண்டது .இந்த பாகங்களைத்தான் குரோமோசோம்கள் என்று சொல்கிறோம் மொத்தம் 23 ஜோடிகள் 46 குரோமோசோம்கள் மைக்ரோஸ்கோப் நுண்ணோக்கி வழியாகப் பார்த்தால் நீண்ட நூலேணி போல் தெரிகிறது .

மனிதன் - கட்டிடம்

செல்கள் - அறைகள்

செல்லின் உட்கரு நியூக்ளிஸ் _ அலமாரி

டி.என்.ஏ - புத்தகம்

குரோமோஸோம்கள் - புத்தகத்தின் அத்தியாயங்கள்

ஜீன்கள் - பல்லாயிரக்கணக்கான கதைகள்.

எக்ஸான் - கதையின் ஒவ்வொரு பாரா

இன்ட்ரான்கள் - கதையின் இடையே விளம்பரம்

கோடான்கள் - ஒவ்வொரு பாராவின் தடித்த எழுத்துக்கள்

பேஸ் _ எழுத்து ATCG - இந்த 4 எழுத்துக்கள்தான் திரும்ப திரும்ப வரும். ஆனால் இதில் 3 எழுத்துக்கள் சேர்ந்து ஒரு வார்த்தையாகிறது .

நமது வாழ்க்கை புத்தகம் 100 கோடி வார்த்தைகளால் எழுதப்பட்டிருக்கிறது.

இதில் ஆச்சரியம் என்னவென்றால் இந்த வார்த்தைகள் தக்க சமயத்தில் தன்னைத்தானே பிரதியெடுத்துக்

கொள்ளும். தன்னைத்தானே படிக்கவும் செய்யும் .

(உ-ம்) சமையல் செய்வது எப்படி ?

என்ற புத்தகம் அந்த அலமாரியில் இருப்பதாக வைத்துக்கொள்வோம் .

சமைப்பதற்குரிய சமையல் பொருட்களும் அதே அலமாரியில் வைக்கப்பட்டு தக்க சமயத்தில் அதுவாக சமைக்கப்பட்டும் விடும் ( ! )

"ஒரே புத்தகத்தின் பிரதிகளை ஒவ்வொரு அறையிலும் வைத்தவர் யார்? அந்த புத்தகத்தை எழுதியவர் யார்? " என்ற கேள்வி உடனே உங்களுக்கு எழும்

இதற்கு பதில் ஸாரி ..யாரும் இல்லை அவை இயற்கையின் தேர்ந்தெடுப்பு என்கிற முறைகளின்படி மெல்ல மெல்ல உருவானதுதான் என்கிறது அதி நவீன விஞ்ஞானம் .

ஆனால் குர்ஆனில் அல்லாஹ்....

பிறகு அவனது சந்ததிகளை அற்பமான நீரின் சத்திலிருந்து உருவாக்கினான்.(குர்ஆன் 32:8)

மேற்கண்ட இந்த வசனத்தின் மூலம் நாம் அறியக்கூடிய ஆத்மீக இரகசியம் இதுதான் அற்பமான நீரின் சத்து அதாவது மரபணு ஜீன்கள் என்பதே!

எனவே ஆதம் நபி படைக்கப்பட்ட போதே உலக அழிவு நாள் வரை பிறக்கப்போகும் அனைத்து உயிர்களும் மரபணு ஜீன்கள் முதல் மனிதர் படைக்கப்படும்போதே அல்லாஹ் படைத்துவிட்டான்.

இன்று ஒரு குழந்தை பிறக்கும் போது அதற்குரிய உயிரை வானவர்கள் மூலமாக கர்ப்பக் கோளரைகளில் வந்து சேர்ந்து விடுகிறது ஆதாரம் இதோ!

உங்களில் ஒருவரின் கரு தம் தாயின் வயிற்றில் நாற்பது (40 நாட்கள்) பகல் அல்லது இரவு சேமிக்கப்படுகிறது.

பிறகு அதைப் போன்றே (40 நாட்கள்) அது (அட்டைப் பூச்சி போன்று கருப்பையின் சுவரைப் பற்றிப் பிடித்துக் தொங்கும்) ஒரு கருக் கட்டியாக மாறுகிறது.

பிறகு அதைப் போன்றே (மேலும் 40 நாட்கள் மெல்லப்பட்ட சக்கை போன்று) ஒரு சதைப் பிண்டமாக மாறுகிறது.

பிறகு அதனிடம் ஒரு வானவர் அனுப்பப்படுகிறார். அந்த வானவருக்கும் நான்கு கட்டளைகள் பிறப்பிக்கப்படுகின்றன.

அவர் (கருவாக இருக்கும்) அந்த மனிதனின் வாழ்வாதாரத்தையும், அவனுடைய வாழ்நாளையும், செயல்பாட்டையும், அவன் (இறுதிக் கட்டத்தில்) துர்பாக்கியசாலியா அல்லது நற்பாக்கியசாலியா என்பதையும் (இறைவனின் கட்டளைப்படி) பதிவு செய்கிறார்.

செல்லில் தகவலாக எழுதப்பட்டிருந்த மனிதன் பின் சதைப் பிண்டமாக உருமாறி மனிதனாக சர்வ லட்சணத்தோடு இந்த பூமிக்கு வருகிறான். எல்லாமே இறைவன் எழுதி வைத்த மனித உருவாக்கத்தின் தகவல்களே !

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 10**

("யாராவது இருக்கீங்களா?")

வாயேஜர் 1 (Voyager 1) என்பது ஐக்கிய அமெரிக்காவின் நாசா விண்வெளி ஆய்வு மையத்தினால் 1977 செப்டம்பர் 5 இல் சூரியக் குடும்பத்தின் வெளிப்புறத்தை ஆராய்வதற்காக ஏவப்பட்ட ஓர் ஆளில்லா விண்கலம் ஆகும்.

அதற்கு துணை விண்கலமாக 16 நாட்களுக்குப் பிறகு "வாயேஜர்-2" விண்ணில் செலுத்தப்பட்டது 722 கிலோகிராம் எடையுள்ள இந்த விண்கலம் 8 செப்டம்பர் 2021 வரை 44 ஆண்டுகள் 3 நாட்கள் காலத்தை விண்வெளியில் நிறைவு செய்துள்ளது.

பிரபஞ்சவிஞ்ஞானி கார்ள் சேகன் (Carl Sagan) போன்றவர்கள் விண்கங்களை விண்வெளியில் நெடுந்தூரம் செல்ல அனுப்பும் போது வேற்று கிரகவாசிகள் பிரபஞ்சத்தில் இருந்தால், அவர்களுக்கு எப்படி நம்மைப் பற்றிய தகவல்கள் தருவது என்று யோசித்தார்கள்.

ஒரு 100 கோடி வருடம் தாங்கக் கூடிய தங்க முலாம் தகட்டில் , குறியீடாக பிரபஞ்சத்தில் நம் பூமியின் இடம் இதிலிருந்து கிளம்பும் விண்கலம் மற்றும் நம் உலகத்தின் அத்தனை வித சங்கீதங்களுக்கும் ஒரு சாம்பிள். இதில் இந்திய ராகம் ஒன்று உள்ளது .

இந்த வாயேஜர் 1, 2 சூரிய மண்டலத்தை தாண்டி 1800 கோடி கி.மீக்கும் மேலாக இன்னும் பயணிக்கிறது .

விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கோலங்களில் நம் பூமியை போன்று தட்ப வெப்ப நிலையை பெற்றுள்ள கோலங்கள் எத்தனை எத்தனையோ உள்ளன என்றும் அவற்றிலெல்லாம் நிச்சயம் மனித உற்பத்தி தோன்றியிருக்க வேண்டும் என்றும், அதில் மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் என்றும் கூறுகின்றனர்.

وَلَقَدْ خَلَقْنَا فَوْقَكُمْ سَبْعَ طَرَآٮِٕقَ وَمَا كُنَّا عَنِ الْخَـلْقِ غٰفِلِيْنَ

(மனிதர்களே! இவ்வாறு நாம் உங்களை மட்டுமா படைத்திருக்கிறோம்?) நிச்சயமாக உங்களுக்கு மேலுள்ள ஏழு வானங்களையும் நாமே படைத்தோம். (அவை ஒவ்வொன்றிலும் உங்களைப் போன்ற எத்தனையோ படைப்புகள் இருக்கின்றன. இவைகளைப் படைத்து இருப்பதுடன்) இப்படைப்புக(ளுக்கு வேண்டியவைக)ளைப் பற்றி நாம் பராமுகமாகவும் இருக்கவில்லை. (அவைகளுக்கு வேண்டியவை அனைத்தையும் முழுமையாக நாம் படைத்தும் இருக்கிறோம்.) (அல்குர்ஆன்: 23:17)

**தகவல் பரிமாற்றம் 11**

(பூமி முகவரிக்கு தடங்காட்டி)




உங்களது நண்பரோ அல்லது உங்கள் காதலியாக கூட இருக்கலாம் உங்களை அவர் ஒரு அட்ரஸ்க்கு வரச் சொல்கிறார் என்றால், நம்மில் பல பேருக்கு அதுக்கு போகும் வழி தெரிவதில்லை.

நாம் செல்லும் வழியில் பல பேரிடம் வழியை கேட்பதுண்டு அதில் ஒரு சிலர் நீங்கள் போகும் வழி பின்னே என்பார்கள்; மேலும் சிலர் முன்னே என்பார்கள்; மேலும் சிலர் நீங்கள் தவரான வழியில் வந்து விட்டிர்கள் என்று கூறுவார்கள். இந்த பிரச்சினையிலிருந்து எப்படி நல்ல வழியை தெரிந்து கொள்வது மற்றும் நீங்கள் யாரிடமும் கேட்க்காமல் எப்படி அந்த முகவரிக்கு சரியாக போவது ?

இன்று நீங்கள் செல்லும் அட்ரஸுக்கு சரியான வழியை எப்படி தெரிந்து கொள்வது ? வாருங்கள் பார்ப்போம்..!

ஸ்டேப் 1 :- முதலில் உங்கள் போனில் லொகேஷன் ஆன் செய்ய வேண்டும்.

ஸ்டேப் 2 :- லொகேஷன் ஆன் செய்த பிறகு உங்கள் போனில் கூகுள் மேப் ஆப் ஓபன் செய்யுங்கள், அதன் பிறகு நீங்கள் செல்லும் வழியை அங்கு டைப் அல்லது மைக் மூலம் இடத்தின் பெயரை சொல்லுங்கள்.

ஸ்டேப் 3:- பெயரை சொல்லி முடித்ததும் கூகுள் மேப் உங்களுக்கு ப்ளூ கலரில் நீங்கள் செல்லும் வழிக்கு வழியை காட்டுவதன் மட்டுமில்லாமல் எவ்வளவு ட்ராபிக் இருப்பது என்பதையும் உங்களுக்கு காண்பிக்கும்.

ஸ்டேப் 4:- இன்டர்நெட் இல்லை என்றல் கவலை பட வேண்டாம் இந்த ஆப் நீங்கள் ஆப்லைனிலும் பயன்படுத்தலாம்

ஸ்டேப் 5:- இந்த கூகுள் ஆப் மூலம் கேப் புக்கிங் செய்து கொள்ளலாம் இதனுடன் நீங்கள் செல்லும் வழிக்கு எவ்வளவு சார்ஜ் ஆகும் என்பதையும் நீங்கள் பார்க்க முடியும்.

இதனுடன் உங்களுக்கு மற்றும் ஒரு ஈஸியான வழியை தெரிந்து கொள்ள நாம் அனைவரும் இப்பொழுது ஆண்ட்ராய்டு போன் பயன் படுத்துகிறோம். அந்த வகையில் தங்கள் நண்பர் அல்லது காதலி எந்த இடத்தில் இருக்கிறார் என்ற வழியை தெரிந்து கொள்ள என்ன செய்யவேண்டும் வாருங்கள் பார்ப்போம்.

ஸ்டேப் 6::- உங்கள் நண்பர்/காதலி மொபைலில் லொகேஷன் ஆன் செய்ய சொல்லுங்கள் பிறகு நீங்கள் வாட்ஸ் ஆப் சாட் மூலம் அட்டாச் பைல் க்ளிக் செய்வதன் மூலம் லொகேஷன் மேப் இருக்கும். அதை லைவ் லொகேஷன் ஷேரிங்கில் க்ளிக் செய்வதன் மூலம் அவர் எங்கு இருக்கிறார் என்பதை கூகுள் மேப்பில் போட்டோ உடன் காண்பிக்கும்

ஸ்டேப் 7:- அதன் மூலம் அவர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறார் அவர் சரியான வழியில் தான் வருகிறார்களா என்பதை நீங்கள் எளிதாக தெரிந்து கொள்ளலாம். அது மட்டுமில்லாமல் அவர் இருக்கும் வழியில் நீங்கள் எளிதாக போக முடியும்.

சரி, இந்த தடங்காட்டி எப்படி இயங்குகிறது ?

தடங்காட்டி (Global Positioning System - GPS) என்பது உலகத்தில் ஓரிடத்தைத் துல்லியமாக வானில் இருந்து அறியும் ஓர் கருவியும் திட்ட அமைப்பும் ஆகும்.

உலகைச் சுற்றி பல செயற்கைத் துணைக்கோள்களை நிறுவி, அதன் உதவியால், வானொலி மின்காந்த அலைகளை வானில் இருந்து வாங்கியும் செலுத்தியும், புவியில் ஓர் இடத்தில் ஓர் உணர்கருவி இருப்பதைத் துல்லியமாக அறியப் பயன்படும் கருவி அல்லது அமைப்பு ஆகும்.

இது அமெரிக்காவின் பாதுகாப்பு துறையால் முதன் முதலில் உருவாக்கப்பட்டு, அமெரிக்காவின் வானூர்திப் படையின் 50 -வது விண்வெளிப் பிரிவால் நிர்வகிக்கப்படுகிறது. இது மட்டும் தான் உலகத்தில் முழுதும் இயங்கக்கூடிய பயனுடைய உலக இடங்காண் செயற்கைத் துணைக்கோள்கள் அமைப்பு (global navigation satellite system - GNSS) ஆகும்.

இதை யாராலும் எங்கேயும் எளிதில் பயன்படுத்தமுடியும். இது ஊடுருவுதல் பயன்பாட்டுக்காக பொதுமக்களிடையே பயன்படுத்தப்படுகிறது.

1995 ஆம் ஆண்டு ஏப்ரல் 27 ஆம் தேதியிலிருந்து இவை உலகம் முழுதும் இயங்கக்கூடியவையாக மாறின. புவியிடங்காட்டி உலகம் முழுதும் ஊடுருவலுக்கு ஒரு பயனுடைய கருவியாக குறிப்பாக நில வரைபடங்களை உருவாக்குவதற்கும், நில அளவை தொடர்பானவற்றுக்கும், வழியைப் பின்தொடர்வதற்கும் பயன்படுத்தப்படுகிறது என்பதுடன், தெளிவான நேரக்குறிப்பிற்காக பல பயன்பாடுகளில் பயன்படுத்தப்படுகிறது. மேலும் இது நிலநடுக்கம் பற்றிய ஆய்வுகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

மேப் எப்படி இயங்குகிறது கூகுள் மேப் என்பது , நம்முடைய ஆண்டிராய்டு, ஆப்பிள் போன்களில் உள்ள ஜிபிஎஸ் உதவியுடன் இயங்க கூடியது. இந்த ஜிபிஎஸ் தான் நம்முடைய இருப்பிடத்தை செயற்கைகோள்

உதவியுடன் கண்டுபிடிக்கும். இதை வைத்து மேப் உதவியுடன் நாம் வெவ்வேறு இடங்களுக்கு செல்வது, டாக்சி புக் செய்வது என நிறைய பணிகளை செய்யலாம்.

இதை ஆப் செய்தும் வைக்க முடியும். அதாவது நம்முடைய போனில், கூகுள் லொகேஷன் ஹிஸ்டரி என்ற ஆப்ஷனை நிறுத்தி வைத்தால், கூகுளால் நாம் செல்லும் இடங்களை கண்டுபிடிக்க முடியாது. கூகுளுக்கு நாம் எங்கே செல்கிறோம் என்ற விவரம் எதுவும் தெரியாது.

ஆனால் கூகுள் இங்குதான் தவறு ஒன்றை செய்துள்ளது. அதாவது இந்த லொகேஷன் ஹிஸ்டரியை நிறுத்திய பின்பும் கூட கூகுள் மக்களின் இடங்களை கண்காணித்து உள்ளது. தொடர்ந்து மக்களின் விவரங்களை சேகரித்து வந்துள்ளது. நாம் எங்கே எல்லாம் செல்கிறோம் என்று நம்முடைய அனுமதி இல்லாமலே கண்காணித்து வந்துள்ளது.

இதன் நிலையில் கலிபோர்னியா நீதிமன்றத்தில் வழக்கு தொடுக்கப்பட்டுள்ளது. கூகுள் இழப்பீடு வழங்க வேண்டும் என்று கேட்டு, வழக்கு தொடுத்துள்ளனர்.

هُوَ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ يَعْلَمُ مَا يَلِجُ فِى الْاَرْضِ وَمَا يَخْرُجُ مِنْهَا وَمَا يَنْزِلُ مِنَ السَّمَآءِ وَمَا يَعْرُجُ فِيْهَا وَهُوَ مَعَكُمْ اَيْنَ مَا كُنْتُمْ وَاللّٰهُ بِمَا تَعْمَلُوْنَ بَصِيْرٌ

அவன் தான் வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் அர்ஷின் மீது அமைந்தான். பூமிக்குள் நுழைவதையும், அதிலிருந்து வெளியாவதையும்; வானத்திலிருந்து இறங்குவதையும், அதில் ஏறுவதையும் அவன் நன்கறிகிறான்; நீங்கள் எங்கிருந்து போதிலும் அவன் உங்களுடனே இருக்கிறான் - அன்றியும் அல்லாஹ் நீங்கள் செய்வதை உற்று நோக்கியவனாக இருக்கிறான்.

(அல்குர்ஆன்: 57:4)

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 1 முதல் 6 பதிவுகள் வரலாற்று தகவல்களாக பதிந்திருந்தேன்..**

**7 முதல் 11 வரை நவீன விஞ்ஞானம் சார்ந்த பதிவுகளாக வெளியிட்டேன்**.

இன்னும் இதன் அடுத்த கட்டமாக நவீன விஞ்ஞானத்தின் தகவல்களில் மனித மூளை. இன்டர்நெட் , வேற்று கிரகவாசியான ஏலியன் குறித்து பூமியில் அவர்கள் கொடுத்த, இன்றும் கொடுத்துக் கொண்டிருக்கிற தகவல்கள்..... என்று பதிவின் தளங்கள் விண்ணை தாண்டி உள்ள விஷயங்களை பதிய நினைத்தேன் .

அதற்குள் நண்பர் ஆர்வமாக சுற்றுப்புற சூழல் தகவல்களை குறித்து எழுதச் சொன்னார்.

"அதுவும் எழுத உள்ளேன்" என்றேன்.

உடனே நண்பர், "சுற்றுப்புற சூழலில் எது குறித்து எழுதுவீர்கள்" என்று கேட்க ..

1) தேனீக்கள் கூறும் தகவல் பரிபாஷை,

2) கடந்த காலத்தின் சூழல் சொல்லும் மர வளையங்களின் தகவல்கள்

3) கடலின் ரகசியத்தை சொல்லும் திமிலங்கலத்தின் கோரஸ் பாடலின் தகவல்கள்

4) காட்டின் எதிராளியைக் குறித்து மற்ற விலங்குகளுக்கு கூறும் ஆட்காட்டி குருவியின் தகவல்கள்

5) ஆற்று வெள்ளம் வருவது குறித்து தவளையின் பரிபாஷை பாடலின் தகவல்

6) பூகம்பத்தின் முனங்களின் தகவல்கள் … இப்படி நிறைய பதிவுகள் டைரியில் குறிப்புகளாக இருக்கிறது என்றேன்.

விழுப்புர நண்பர் ஆர்வத்தில் 40 நிமிடம் வரை தனதாக்கி கொண்டார் - ர.ரா

**தகவல் பரிமாற்றம் 12**

பயிர் வட்டங்கள் யார் போட்ட கோலங்கள் ?



2012 வரை தொடர்ந்து கொண்டிருக்கும் இந்த பயிர் வட்டங்கள் (Crop Circles ) ஒரு சுவாரசியமான மர்மங்கள். விளைந்திருக்கும் பயிரில் ஒரே இரவில் ஏதோவொரு அமானுஷ்ய சக்தி இதுபோன்ற உருவங்களை உருவாக்கிச் செல்வதாய் சொல்லப்படும் சேதிகள் நீள்கின்றன. இந்த பயிர் வட்டங்கள் நமக்கு என்ன சொல்ல வருகிறது என்பது இதுவரை தெரியவில்லை

நம் இந்தியா உட்பட உலகின் பல நாடுகளில் இந்த பயிர் வட்டங்கள் தோன்றியிருக்கும் போதும் கிட்டத்தட்ட 80 சதவீதத்திற்கும் அதிகம் பதியப்பட்டிருப்பது இங்கிலாந்தில்தான். இங்கிலாந்திற்குத்தான் அதிகமான தகவல்கள் சொல்ல வேண்டியதிருக்கிதோ என்னவோ ?

பெரும்பாலான வரையப்படும் உருவங்கள் ஒரே இரவில் மனிதர்கள் உருவாக்க சாத்தியமேயில்லாத முறையில் உருவாக்கப்பட்டிருப்பது இதன் மர்மத்தை மேலும் கூட்டுகிறது.

இரவுப்பொழுதில் வெளிச்சம் இல்லாமல் சுற்றியிருக்கும் பயிருக்கு எந்தவொரு சிறு சேதமும் இல்லாமல் , எந்தவொரு வாகனமோ, மனிதக்காலடியோ, இல்லை இயந்திரத்தின் தடயமோ இல்லாமல் இப்படிப்பட்ட படைப்புகள் உருவாக்கப்படுவது மனித சக்திக்கு அப்பாற்பட்ட மர்மத்திலும் மர்மமே.

அதுவும் சில ஆராய்ச்சிகளில் இந்த பயிர்வட்டங்கள் உருவாக்கப்பட்ட இடத்தின் மண் மட்டும் பாறைப்படிவம் போல மாறியிருப்பது மர்மத்தின் இன்னொரு உச்சம்.

ஏனென்றால் ஒரு சாதாரண மண் இறுகிப் பாறைபடிவம் போல மாறவேண்டுமென்றால் அதற்கு இயற்கையாய் 1000 ஆண்டுகளுக்கு மேல் தேவைப்படும். இப்படி ஒரே இரவில் பாறைப்படிவம் போல மாற வேண்டுமானால் கிட்டத்தட்ட 8000 டிகிரி வெப்பத்தில் மண்ணை சூடுபடுத்தவேண்டும். அவ்வாறு வெப்பம் உண்டாக்கப்படும் பட்சத்தில் அந்த இடமே சின்ன புல் பூண்டு கூட இல்லாமல் பஸ்பமாகிவிடும்.

மேலும் இதேப்போன்ற பயிர் வட்டங்களை பல மனிதர்களைக் கொண்டு உருவாக்க நடந்த ஆராய்ச்சிகளின் முடிவில் ஒரு சாதாரணமாக வரையும் உருவத்தை பகல் வெளிச்சத்தில் உருவாக்கவே 5 நாட்களுக்கும் மேல் ஆகியிருக்கிறது.

அதைவிட முக்கிய விஷயம் மனிதர்களைக்கொண்டு இந்த முயற்சியைச் செய்தபோது பயிர்கள் நிறைய சேதப்படுத்தப்பட்டிருக்கின்றன. மனிதர்களின் சேற்றுக் காலடித்தடங்கள் பயிர்களில் பதிந்திருக்கின்றன. ஆனால் உண்மையான பயிர்வட்டங்களில் பயிர்கள் மடக்கப்பட்டிருந்தாலும், வளைக்கப்பட்டிருந்தாலும் இதுவரை ஒரு பயிர்கூட சேதப்பட்டிருக்கவில்லை என்பது கூடுதல் ஆச்சர்யம்.

இந்தப் பயிர் வட்டங்கள் இரவு நேரத்தில் வானத்திலிருந்து வரும் ஓர் ஒளிக்கற்றையால் உருவாக்கப்படுவதாகவும், வேற்றுக்கிரக வாசிகளின் வாகனம் இறங்கிச் சென்ற தடையங்களே இந்தப்பயிர் வட்டங்கள் என்றும் கூறப்படுகிறது .

இந்தப்பயிர் வட்டங்களுக்குள் செல்லும் மிருகங்கள் மிரண்டு ஓடுவதாகவும், இந்தப்பயிர் வட்டங்களுக்குள் கடிகாரம் வேகமாகவும், சிலது மெதுவாகவும் மாறி மாறிச் சுற்றுவதாகவும், சில மனிதர்களுக்கு இந்தப்பயிர் வட்டங்களுக்குள் நுழையும்போது தலைச்சுற்றல் வாந்தி போன்ற அறிகுறிகள் தோன்றுவதாகவும், சில மனிதர்களுக்கு இந்தப்பயிர் வட்டத்துக்குள் நுழைந்ததும் தங்கள் உடம்பிலிருந்த நோய்கள் சரியானதாகவும் வித விதமான மர்மக்கதைகள் நமக்கு மயக்கத்தையே வர வைக்கின்றன.

எனினும் வெறும் காகிதத்திலேயே வரையச் சிரமப்படும் பல டிசைன்கள், பயிர்களில் சேதமில்லாமல் உருவாகியிருப்பது மர்மமான ஆச்சர்யம்தான்.

وَلَقَدْ خَلَقْنَا فَوْقَكُمْ سَبْعَ طَرَآٮِٕقَ وَمَا كُنَّا عَنِ الْخَـلْقِ غٰفِلِيْنَ

(மனிதர்களே! இவ்வாறு நாம் உங்களை மட்டுமா படைத்திருக்கிறோம்?) நிச்சயமாக உங்களுக்கு மேலுள்ள ஏழு வானங்களையும் நாமே படைத்தோம். (அவை ஒவ்வொன்றிலும் உங்களைப் போன்ற எத்தனையோ படைப்புகள் இருக்கின்றன. இவைகளைப் படைத்து இருப்பதுடன்) இப்படைப்புக(ளுக்கு வேண்டியவைக)ளைப் பற்றி நாம் பராமுகமாகவும் இருக்கவில்லை. (அவைகளுக்கு வேண்டியவை அனைத்தையும் முழுமையாக நாம் படைத்தும் இருக்கிறோம்.) (அல்குர்ஆன் : 23:17)

பயிர் வட்டங்கள் பற்றிய மேலும் பல சுவாரசியத் தகவல்களுக்கும், நிறைய புகைப்படங்களுக்கும் இந்த வெப்சைட்டில் பார்க்கவும்...http://davidpratt.info/cropcirc1.htm

இதனால் வரைந்தவர்கள் சொல்ல வரும் தகவல்கள் என்ன ?

தெரியவில்லை .

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 13** நாஸ்கா பாலைவனக் கோடுகள் சொல்லும் தகவல் என்ன ?




நேர் கோட்டில் ஏதாவது இருந்தால் அதனை பார்த்து பிரம்மிப்பு அடையாதவர்கள் இருக்கமாட்டார்கள். நடுவானில் பறந்து கொண்டிருக்கும் பொழுது மரங்களோ, கட்டடங்களோ ஒரே சீராக இருப்பதை பார்த்தாலே நம் மனதிற்குள் ஒரு சிறு மகிழ்ச்சி உருவாகிவிடும்.

வலுவான தொழில்நுட்பங்கள் கொண்ட தற்பொழுதைய காலகட்டத்தில் இது போல் நேர் கோட்டில் கட்டடங்களோ சாலைகளோ கட்டுவது என்பது மிகவும் எளிது. ஆனால், எந்தவித தொழில்நுட்ப வளர்ச்சியும் இல்லாத அந்த காலத்தில் இதுபோல் நேர்கோட்டில் மிகப்பிரம்மாண்டமான கோடுகளை வடிவமைத்திருப்பது ஆராய்ச்சியாளர்களிடையே மிகவும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. எதற்காக இந்த கோடுகள் ? அது என்ன தகவல்களை சொல்கிறது.யாருக்குமே தெரியவில்லை.

பெருவின் தலைநகர் லிமாவின் தெற்கே 400 கி.மீ தொலைவிலுள்ள நாஸ்கா பாலைவனத்தில் சுமார் 450 கி.மீ சுற்றளவில் வடிவமைக்கப்பட்டுள்ளதுதான் இந்த நாஸ்கா கோடுகள். 450 கி.மீ சுற்றளவு (! ? )

சுமார் ஒரு அடி ஆழக் கோடுகள் அருகில் இருந்து பார்த்தால், நீண்ட பாதை போல மட்டுமே காட்சியளிக்கும் இந்த கோடுகளை வானத்தில் இருந்து பார்த்தால் மிக பிரம்மாண்டமான பறவைகள் போலவோ, குரங்கு போலவோ சிலந்தி போலவோ, தேன் சிட்டு போலவோ காட்சியளிக்கும். இப்படியே சுமார் 15, 000 மேற்பட்ட உருவங்கள் (! ?)

எதனால் இதுபோன்ற கோடுகள் உருவாக்கப்பட்டன? அந்த காலத்திலேயே எப்படி இதுபோன்ற நேர் கோடுகளை வடிவமைப்பது சாத்தியம் என்பது போன்ற பல்வேறு மர்மங்களும் தேடுதல்களும் இந்த நாஸ்கா கோடுகளின் பின்னால் இருந்த வண்ணம் இருக்கிறது.

பெரு நாட்டை சேர்ந்த தொல்பொருள் வல்லுநர் ஒருவரால் 1926ம் ஆண்டு இதுபோன்ற பிரம்மாண்ட கோடுகள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால், 1930ம் ஆண்டில் விமானத்தில் பயணித்துக்கொண்டிருந்த சில மக்களே இந்த நாஸ்கா கோடுகளை வெளிச்சத்திற்கு கொண்டுவந்தனர்.

நாஸ்கா கோடுகள், கி.மு. 700களில் நாஸ்கா மக்களால் கட்டப்பட்டது என அறிவியலாளர்கள் தெரிவிக்கின்றனர். நாஸ்கா பகுதியில் உள்ள பாறைகள் ஒருவிதமான இரும்புத்துருவின் வண்ணத்தில் இருப்பதால், அதன் மேற்பரப்பை அகற்றினால், பழுப்பு நிறத்தில் இருக்கும் மண் தெரியும். அப்படி உருவாக்கப்பட்டவை தான் இந்த நாஸ்கா கோடுகள்.

வெள்ளம், சூறாவளி என பல இயற்கை பேரிடர்கள் வந்தபொழுதும், சுமார் 2000 ஆண்டுகள் இந்த கோடுகள் நிலைத்திருப்பது மிக ஆச்சரியமான ஒன்று.

வேற்றுகிரக விண்கலங்கள் தரையிறங்க வரையப்பட்ட விமான ஓடுதளங்கள் , பாலைவனத்தில் நீர் இருக்கும் இடங்களை சுட்டிக் காட்டுவதற்காக குறிக்கப்பட்ட வரைபடங்கள் , மிகப் பெரிய வானவியல் நாள்காட்டி மற்றும் நட்சத்திர மண்டலங்களின் ஒட்டு மொத்த வடிவங்கள் என்பன போன்ற பற்பல தகவல்கள், பல யுகங்கள்... உங்களின் யுகங்களையும் தெரிவித்தால், நாஸ்கா ஆய்வாளர்களுக்கு பிரயோஜனப்படும் .

என்ன வரைய வேண்டும் எங்கே வரைய வேண்டும் அவை சூரியனை மையப்படுத்தி வரைய வேண்டும் என்பதெல்லாம் குறித்து தெளிவான திட்டமிடல் இருந்திருக்கிறது

திட்ட வரைபடமோ திட்ட மாதிரியோ கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக தாங்கள் நினைத்தை சாதித்திருக்கிறார்கள் என்பது மேரி ரெய்சேவின் விளக்கம். சாதித்தவர்கள் யார் ? தகவல் இதுவரை இல்லை.

இந்த பெண்மணியின் பெரு முயற்சியால் நாஸ்கா பாலைவனத்தைப் பற்றி உலகம் அறிந்து கொள்ள முடிந்தது

1995 ல் யுனெஸ்கோ அறித்தத்தது

குரங்கு உருவத்திற்கும் தனக்கும்

ஓர் ஒற்றுமை இருப்பதைக் கண்டு அதிசயித்தார்

மேரி ரெய்சே ஒரு விபததில் தன் கைவிரல் ஒன்றை இழந்தவர்

குரங்குக்கும் ஒன்பது கைவிரல்களே இருந்தன

தளர்ந்த வயதில் கூட எந்நேரமும் துடப்பத்தோடு அலைந்தார் கோடுகளை சுத்தப்படுத்திக் கொண்டே இருப்பார்

அவர் அடிக்கடி வானத்தைப் பார்த்தும் காற்று வெளிதனிலும் விநோத மொழியில் பேசிக்கொண்டே இருப்பார். அது என்ன மொழி என்று அவர் தெரிவிக்க மறுக்கிறார் . அதே நேரத்தில் நாஸ்கா மக்களிடம் நாஸ்கா மொழியில் பேசிக்கொள்வார்.

சிலர் இவரை சூனியக்காரி என்றும் வேற்றுகிரகவாசிகளின் தோழி என்றும் அழைக்கிறார்கள் .

இந்த கோடுகளில் நிறைந்துள்ள ஆச்சரியங்களும் மர்மங்களும் தொடர்ந்துகொண்டே இருக்கின்றன. பெர்முடா முக்கோணம் போன்ற மர்மங்கள் நிறைந்த இந்த உலகத்தில், இந்த நாஸ்கா கோடுகளும் விடை தெரியாத மர்மமாகவே இன்னும் இருந்து கொண்டேயிருக்கிறது.

உங்கள் சிந்தனைக்கு நாஸ்கா பாலைவனக் கோடுகளுக்கும் ஜின்களுக்கும் தொடர்பு இருக்குமா ?

இமாம் இப்னு அப்துல் பர்ரு என்பவர் பின்வருமாறு கூறுகின்றார். ஜின்களில் பல தரத்தினர் இருப்பதாக மொழி வல்லுனர்கள் கூறுகின்றனர். மனிதர்களுடன் சேர்ந்து வாழ்பவைக்கு 'ஆமிர் ' என்றும், சிறு பிள்ளைகளுடன் சேட்டை செய்பவைகளை 'அர்வாஹ் ஆவிகள் ' என்றும் அவற்றில் கீழ்த்தரமான அசிங்கமானவைகளை “ஷைத்தான்” என்றும், அதி ஆற்றல் கொண்டவைகளை “இப்ரீத்” என்றும் கூறப்படும்.

ஆதாரம் : உகாமுல் மர்ஜான் பக்கம் 08

وَإِذْ قُلْنَا لِلْمَلَائِكَةِ اسْجُدُوا لِآدَمَ فَسَجَدُوا إِلَّا إِبْلِيسَ كَانَ مِنَ الْجِنِّ

(இப்லிஸாகிய) அவன் ஜின் இனத்தை சேர்ந்தவனவான்.

(அல் குர்ஆன் 18:50)

ஜின்கள் மூன்று பிரிவினராக இருப்தாக றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் கூறியுள்ளார்கள்.

முதல் வகையினர் காற்றில் சஞ்சரிப்பவர்கள். இரண்டாவது வகையினர், பாம்பு, நாய் போன்றவற்றின் உருவில் இருப்பவர்கள். மூன்றாவது வகையினர் ஷரீஅத்தைப் பேணி நடப்பவர்கள். ஆதாரம் : தப்றானி, ஹாகீம்

மற்றொரு அறிவிப்பில்...

ஜின்கள் மூன்றுவகைப்படும் என்று நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்கூறியுள்ளார்கள்.

1) பாம்பு வடிவில் உள்ளவைகள். 2) (கண்ணுக்கு புலப்படாமல்) பூமியில் வாழ்பவை 3) ஆகாயத்தில் பறப்பவை. (அபூ தஅல்பா ரலியல்லாஹு அன்ஹு, ஹாக்கிம்)

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலியல்லாஹு அன்ஹு) அறிவித்தார்

ஜின்கள் மனித உருவிலும் மிருகங்களின் உருவிலும் தோன்றும் ஆற்றலைப் பெற்றிருக்கின்றன. இதனால் அவை பாம்பு, தேள், ஒட்டகம், மாடு, ஆடு, கழுதை, குதிரை, குரங்கு குருவிகள் (பூனை, நாய்) உள்ளிட்ட உருவில் தோன்றுகின்றனர். ஆதாரம் :மஜ்முஉல் பதாவா பாகம் -19, பக்கம் – 44

ரஹ்மத் ராஜகுமாரன் .

**தகவல் பரிமாற்றம் 14**

கனவுகள் கூறும் தகவல்கள்




" The interpretation of Dreams " _ கனவுகளின் விளக்கம் என்று 1900-ல் சிக்மண்ட் ஃப்ராய்டு என்ற உளவியல் அறிஞர் புத்தகம் எழுதினார். நவீன உளவியாளர்கள் ஃப்ராய்டு சொன்ன சில காரணங்களுடன் ஒத்துப் போவதில்லை. உதாரணமாக அவர் நம் எல்லாச் செயல்களுக்கும் செக்ஸ்தான் அடிப்படை என்றார். தப்பு

நம் கனவுகளை தின வாழ்வில் நிறைவேற்ற முடியாத உள்மன இச்சைகள் என்றார். இதுவும் தப்பு .

அவருடைய மிகப்பெரிய புரட்சிகரமான சித்தாந்தம் "இடீபஸ் காம்ப்ளெக்ஸில் - ''எல்லா இளைஞர்களுக்கும் தகப்பனைத் துரத்திவிட்டு, தாயே மணந்து கொள்ளும் இச்சையும் , எல்லா பெண்களுக்கும் தாயை துரத்திவிட்டு தந்தையோடு படுத்துக்கொள்ளும் இச்சையும் உள்மனத்தில் உண்டு"என்றார்

இது தப்போ தப்பு.

ஃப்ராய்டு சொன்னது எல்லாம் வழக்கொழிந்து போய் நவீன விஞ்ஞானம் ந்யூரோ ஃபார்மகாலஜி (Neuro Pharmocology) என்னும் புதிய இயலுக்குக்கு மாறிவிட்டது .இந்த புதிய விஞ்ஞான இயல் இஸ்லாத்தின் கனவுக் கோட்பாட்டோடு அப்படியே ஒத்துப் போகிறது.

மனித வாழ்க்கையில் கனவுகள் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது என்றால் அது மிகையல்ல. அந்த அடியிப்படையில் அல்குர்ஆன் தலைமை விரிவுரையாளர் மற்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அன்பு தோழர் ஹள்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் குர்ஆனின் 39:42 ஆவது வசனத்திற்கு கீழ் கண்டவாறு விளக்கம் தருகிறார்கள்.

'ஒவ்வொரு மனிதனுக்கும் நஃப்ஸ் (ஆத்மா)வும்,ரூஹ் (உயிர்) வும் உள்ளன. நஃப்ஸில் உணரும் தன்மையும் அறிவும் உள்ளன. ரூஹில் அசையும் தன்மையும் மூச்சு வாங்கும் தன்மையும் உள்ளன.

மனிதன் தூங்கும் போது அல்லாஹ் நஃப்ஸை மட்டுமே கைப்பற்றுகிறான். ரூஹை கைப்பற்றுவதில்லை. ரூஹ் தனது அசையும் தன்மையால் அந்நேரத்தில் சுற்றித் திரிகிறது. அப்பொழுது அந்த ரூஹிற்கு மற்ற ரூஹ்களுடன் நடைபெறும் சம்பாஷனைகள் மற்றும் நிகழ்ச்சிகளே கனவுகளாகும். (நூல் : குர்துபி)

இன்றைய விஞ்ஞானம் கனவைப் பற்றி அது நம் நினைவுகள் மற்றும் சிந்தனைகளின் பிம்பங்கள் என்றும் நாம் தூங்கும் சமயம் நமது மூளை மிகக் குறைந்த அளவில் வேலை செய்யும் போது அதில் தோன்றும் சில படக்காட்சிகள் என்றும் பல விதமான கருத்துக்கள் கூறுகின்றது.

அடிப்படையில் கனவிற்கும் அர்த்தமுண்டு. அது நிறைய தகவல்களை தருகிறது .எல்லோருக்குமே சகஜமாக கனவு வரத்தானே செய்கிறது என்று கனவை நாம் சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியாது. கனவிற்கும் பலவிதமான அர்த்தங்கள் உண்டு. அவை அத்தனையும் கனவு கண்ட மனிதருக்குரிய தகவல்கள்.

நபிகள் நாயகம் ( ஸல் ) அவர்கள் ஸஹாபாக்களிடம், "நீங்கள் யாரேனும் கனவு கண்டீர்களா? "என்று கேட்டு அதற்கு விளக்கம் கூறுபவர்களாக இருந்தார்கள். நூல்: புகாரி 7047, முஸ்லிம் 4572

மேலும் சில முக்கிய நபர்கள் இஸ்லாத்தில் நுழைவதற்கும் கனவு காரணமாக அமைந்துள்ளது. ஹள்ரத் முஹம்மது இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். "ஹள்ரத் காலித் இப்னு ஸஈத் (ரலி) அவர்கள் இஸ்லாத்தில் நுழைவதற்கு அவர்கள் கண்ட ஒரு கனவே காரணமாக அமைந்தது. அவர்கள் கண்ட கனவு இதுதான்.

அவர் நரகத்தின் விளிம்பில் நின்று கொண்டிருக்கிறார். அவரது தந்தை அவரை நரகில் தள்ள முயற்சிக்கிறார். அதைக் கண்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவர் நரகில் விழாதவாறு அவரின் இடுப்பை பிடித்துக் கொள்கிறார்கள்.

இதற்குப் பிறகு திடுக்கிட்டு விழித்த ஹள்ரத் காலித் இப்னு ஸஈத் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்த கனவு உண்மையானதுதான்' என்று கூறிக் கொண்டு ஹள்ரத் அபூபக்ர் (ரலி) அவர்களை சந்தித்து நடந்ததைக் கூறினார்கள்.

அதற்கு 'உனக்கு நல்லதே நடக்கட்டுமாக! இதோ, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அமர்ந்துள்ளார்கள். அவர்களை நீ பின்பற்றி அவர்களுடன் புனித இஸ்லாத்தில் இணைந்து விடு! நீ நரகில் விழாமல் அவர்கள் உன்னை பாதுகாப்பார்கள். ஆனால் உனது தந்தையோ நரகில் விழுந்து விட்டார்' என்று பதில் கூறினார்கள்.

அதன் பிறகு அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை சந்தித்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

நூல்: முஸ்தத்ரக், ஹாகிம்

அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் நற்செய்தியாகும் (நமக்கு நல்லது நடப்பதைப் போன்ற நிகழ்வுகள் மற்றும் நாம் விரும்பும் நிகழ்வுகளை கனவுகளாக காணுவதாகும்)

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" நல்ல மனிதர் காணும் நல்ல (உண்மையான) கனவு, நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும். என அனஸ் இப்னு மாலிக் (ரலியல்லாஹு அன்ஹு) அறிவித்தார்கள்.(புகாரி 6983)

"உங்களில் எவரேனும் தனக்கு பிடித்தமானதை கனவில் கண்டால் நிச்சயமாக அது அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்ததாகும். எனவே அவர் அல்லாஹ்வைப் புகழட்டும். மேலும் அதை அவர் யாரிடமேனும் கூறட்டும்" என்றும்

வேறு அறிவிப்பில் "அவர் அந்த கனவை தன்னை விரும்பக் கூடிய, (தனக்கு நல்லதையே நாடக்கூடிய) அறிஞரான (இறையச்சம் முடையவர்களில்) ஒருவரிடம் கூறட்டும்' அறிவிப்பவர்: அபூஸயீத் அல்குத்ரீ (ரலி)(புகாரி 6984, 6985)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹள்ரத் அபூ கதாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். "நல்ல கனவு அல்லாஹ்வின் புறத்திலிருந்து வருவதாகும். கெட்ட கனவு ஷைத்தான் புறத்திலிருந்து வருவதாகும். எனவே உங்களில் ஒருவர் தனக்கு பிடிக்காத கெட்ட கனவு கண்டால் அவர் தனது இடது புறமாக (எச்சில் வராதவாறு) மூன்று முறை துப்பிக் கொள்ளட்டும். மேலும் ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடிக்கொள்ளட்டும். (அப்படி செய்தால்) அந்த கனவால் அவருக்கு எந்த இடைஞ்சலும் ஏற்படாது. ( நூல் : புகாரி 6985, 6995, 7005, 7044, 7045 முஸ்லிம் 4551, 4552, 4554)

இப்னு ஸீரீன் ரஹ் இவரது முழுப் பெயர் அபூபக்கர் முஹம்மது இப்னு ஸீரின் பஸராவைச் சேர்ந்தவர்

நபி யூசுஃப் அலை அவர்களுக்குப் பிறகு கனவுக்கலைக்கு பெருமை சேர்த்தவர் . இவர்தான்

நண்பர்களுடன் இப்னு ஸீரீன் உரையாடிக் கொண்டு இருக்கும் போது ஒருவன் , " நான் ஒரு முட்டையை உடைத்து அதிலுள்ள வெள்ளைக் கருவை மட்டும் எடுத்துக் கொண்டு மஞ்சள் கருவை வீசுவது போல் கனவு கண்டேன் " என்றான்

" நீதான் அந்தக் கனவைக் கண்டாய் என்று இறைவன் மீது ஆணை இட்டுக் கூறு "

அவ்விதமே ஆணையிட்டான் உடனே சுற்றி உள்ள நண்பர்களிடம் இப்னு ஸீரீன் " இதோ இவன் கபரை தோண்டி கஃபன் துணி திருடும் திருடன் இவனை பிடித்து சுல்தானிடம் கொண்டு செல்லுங்கள் என்று கூற கனவு கண்டவன் திடுக்கிட்டு தன் தவறை ஒப்புக் கொண்டு , தான் இனிமேல் அச் செயலை செய்வதில்லை என்று சத்தியம் செய்தான் பின்பு மன்னிப்புக் கேட்டுச் சென்றான்.

இவன் கண்ட கனவில் மற்றவர்களுக்கு எச்சரிக்கை தகவல்கள் இருக்கிறதல்லவா ?

ஒரு நாள் இப்னு ஸீரீன் ரஹ் உடைய அடிமைப் பெண் இவர்களிடம் தாம் விண்ணிலே உயர்ந்து உயர்ந்து சென்று இறுதியில் " ஜஹ்ரா " என்ற விண்மீனை அடைந்து விட்டதாகவும் அப்போது அந்த விண்மீனியிலிருந்து ஒருவர் அதனை உன் எஜமானர் இப்னு ஸீரீனிடம் போய்ச் சொல்லுமாறு சொன்னதாகவும் கூறியபோது, அது கேட்டு ஸீரீன் (ரஹ்) அதிர்ந்து போனார்கள்.

" நீ கண்ட கனவு எனக்குரிய தகவல்கள் இருக்கிறது"

அடிமைப் பெண் அவரிடம்: " எஜமானரே ! இதை விட பயங்கரமான கியாமத் நாளைப் பற்றிய கனவெல்லாம் கண்டு சொன்ன போது கூட தாங்கள் பதறாமல் விளக்கம் சொன்னீர்கள். ஒரு அழகான நட்சத்திரத்தை நான் அடைந்த கனவில் நீங்கள் ஏன் பதறுகிறீர்கள் . ?

அதற்கு இப்னு ஸீரீன் (ரஹ்) அவர்கள் " என்னுடைய முடிவு நாள் மிக நெருங்கி விட்டது வரும் ஜும்மாவுக்குள் நான் இறந்து விடுவேன் " என்று கூறினார்கள்

ஜும்மா தொழுகைக்கு முன் பஸ்ராவில் இறந்து போனார்கள்.

கனவுகளெல்லாம் கண்டவருக்குரிய தகவல்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன

**தகவல் பரிமாற்றம் 15**

(விரல் ரேகை தகவல்கள் _Unique Identification Data)

Full form

UID




?



கிபி 700 புராதன அஸீரியாவில் விரல் ரேகைகளின் தகவல் மூலம் அடையாளம் கண்டுபிடிக்கும் முறையை பயன்படுத்தி இருக்கிறார்கள்.

சீனாவில் போலீஸ் 13ஆம் நூற்றாண்டிலிருந்து விரல் ரேகை தகவல் முறை உபயோகிக்கிறது.

இந்தியாவின் சர் வில்லியம் ஹெர்ஷல் என்ற ஐ சி எஸ் ஆபிஸர் 1858 இல் ஆள்மாறாட்ட தவிர்ப்பதற்காக விரல் ரேகை தகவல் முறையை பயன் படுத்தியதாக தெரிகிறது.

ஆனால் இந்த முறை ஒழுங்குபடுத்தி குற்றவாளிகளை கண்டுபிடிக்கும்படி வழி செய்தவர் சர் பிரான்சிஸ் கால்டன் என்பவராவர். இங்கிலாந்தில் சட்டப்படி இந்த முறை நடைமுறைக்கு வந்தது.

.

1895 இல் கார்டனின் முறையை சர் எட்வர்ட் ஹென்றி என்பவர் சற்றே மாற்றினார். இம்முறைதான் இன்றும் உலகெங்கும் பிரபலம் .

அல்லாஹ் படைத்த மனித மிருக தாவர வர்க்கங்கள் அனைத்தும் பிரத்தியேக தனித்தனி அங்க அடையாளங்களுடனேயே சிருஷ்டித்துள்ளான்.

நமது பார்வைக்கு ஒன்றுபோல் இவை தெரிந்தாலும் ஒவ்வொரு ஜீவனும் தனித்த அடையாளங்களுடனே படைக்கப்பட்டுள்ளன இந்த அடையாளங்கள் இருப்பதால்தான் பறவைகள் விலங்குகள் தங்கள் இணைகளை அறிந்து ஒரு கூட்டமாக சமுதாயமாக வாழுகின்றன

"பூமியில் ஊர்ந்து திரியும் பிராணிகளும் தம் இரு இறக்கைகளால் பறக்கும் பறவைகளும் உங்களைப்போன்ற இனமேயன்றி வேறில்லை; இன்னும் அவையாவும் அவற்றின் இறைவனிடம் ஒன்று சேர்க்கப்படும் -அல் குர்ஆன்-(6:38)

அந்த அல்லாஹ்தான் படைப்புக்கான திட்டம் வகுப்பவனும் அதனைச் செயல்படுத்துபவனும் அதற்கேற்ப வடிவம் அமைப்பவனுமாவான் -அல்குர்ஆன் ( 59:24)

மனிதர்களும் பல்வேறு உருவ அளவிலும் பல நிறங்களிலும் முகத்தோற்றத்திலும் தங்களுக்கிடையில் அடையாளம் காண்பதற்காகவே இப்படி வித்தியாசமாகப் அல்லாஹ் படைத்திருக்கின்றான் குறிப்பாக முக அடையாளமே நடைமுறையில் பெரிதும் பயன்படுகிறது. ஆனால் போர் விபத்து மற்றும் கலவர சண்டையில் உடல் உறுப்புகளை இழப்பவர்களை அடையாளம் காண்பது மிகவும் கடினம்.

நபி (ஸல்) அவர்களுடன் உஹதுப் போரில் பங்குகொண்ட நபித்தோழர்,அனஸ் இப்னு நள்ர் (ரலி) அவர்கள் கடுமையாக போரிட்டு ஷஹீதானர். அவர் உடல் முழுவதும் சிதைந்து போனதால் அடையாளம் அறியப்படாத நிலையில் கொல்லப்பட்டார். அவரின் உடலில் வாளால் வெட்டப்பட்டும்,ஈட்டியால் குத்தப்பட்டும்,அம்பால் துளைக்கப்பட்டும் எண்பதுக்கும் மேற்பட்ட காயங்கள் இருந்தன. அவரை அவரின் சகோதரி மச்சத்தை வைத்தோ.. அல்லது அவரின் கைவிரல் நுனிகளை வைத்தோ அடையாளம் கண்டு கொண்டார். ( புகாரி : 4048)

விரல் ரேகையைப் பற்றி குர்ஆனில் அல்லாஹ்...

“ஆம்! அவனுடைய விரலின் நுனியைக் கூட மிக துல்லியமாக அமைப்பதற்கு நாம் ஆற்றல் பெற்றுள்ளோம்” (75:4)

விரல்நுனி ரேகையில் அல்லாஹ்வின் ஆதார் அடையாளம் (Unique Identification Data)

நமது தோற்றம் நாளுக்கு நாள் மாறக்கூடியது.பத்து வயதில் இருப்பது போல் இருபது வயதில் இருப்பதில்லை.நாற்பது வயதில், அறுபது வயதில் அல்லது என்பது வயதில் நமது உடல் உறுப்பு, முக அடையாளங்கள் மாறிக்கொண்டே இருக்கும்.

ஆனால் இரண்டு வயது குழந்தையின் விரல் ரேகைதான், அந்தக் குழந்தை என்பது வயதான முதியவராக மாறிய போதும் அதே ரேகைதான் இருக்கும்.விரல் நுனி ரேகை அமைப்பு கொஞ்சம் கூட மாறுவதில்லை.எனவேதான் தடய அறிவியல் துறை விரல் ரேகை நிபுணர்கள், இதை “ கடவுள் கொடுத்த முத்திரை ” என்று ( A Seal given by God ) வர்ணிக்கிறார்கள்.இது அல்லாஹ் அடியானுக்கு வைத்த முத்திரை.

தாயின் கர்ப்பத்தில் 10 வது வாரத்தில் இதயத்தால் பம்ப் செய்யப்படும் இரத்தம் உடலெங்கும் பரவி விரல் நுனி வரை வந்து திரும்பும் தடயமே விரல் ரேகையாக மாறுகிறது. விரல்களில் 17 வது வாரத்திற்குள் விரல் ரேகைகள் பதியப்பட்டு முடிந்து விடும்.பிறகு அதன் ஆயுள் வரை மாறுவதில்லை.

இதிலும் ஆச்சரியம்,ஒத்த உருவமுள்ள இரட்டைக் குழந்தைகள் விரல் ரேகைகளும் ஒன்றுபோல் இருப்பதில்லை.இன்றைய நவீன அறிவியல் வளர்ச்சியில் உருவான குளோனிங் முறையில் அச்சு அசலாக தாயைப்போல சேய் பிறந்தாலும் பிறக்கும் குழந்தையின் விரல் ரேகை ஒன்று போல் இருக்காது. காரணம் விரல் ரேகையை டிஎன்ஏ என்னும் மரபணு ஜீன்களால் உருவாவதில்லை. தாயின் கர்பத்தில்தான் ரேகைகள் இயற்கையாகவே தீர்மானிக்கப்படுகின்றன.

மனிதன் மரணம் அடையக்கூடியவன் தான். இருந்தும் மறுமை நாளில் அவன் மீண்டும் உயிர்ப்பிக்கப்படுவான். அப்போது அவனது நன்மைகள், தீமைகளுக்கு ஏற்ப அவனுக்கு சொர்க்கம் அல்லது நரகம் பரிசாக வழங்கப்படும்.

‘இறந்த பிறகு அடக்கம் செய்யப்படும் மனித உடல் சில மாதங்களில் மண்ணோடு மண்ணாக மட்கிப்போகும். அப்படிப்பட்ட மனிதன் மீண்டும் எப்படி உருவாக்கப்படுவான்’ என்ற கேள்வி ஆதி தொட்டு இன்றுவரை நிலைத்திருக்கின்ற ஒன்று. அருள்மறை திருக்குர்ஆன் இதற்கு இவ்வாறு பதிலுரைக்கின்றது:

“இறந்து, உக்கி மண்ணாய் போன அவனுடைய எலும்புகளை நாம் ஒன்று சேர்க்க மாட்டோம் என்று மனிதன் எண்ணிக்கொண்டிருக்கின்றானா?” குர்ஆன் (75:3).

அல்லாஹ்வின் தூதர் அருமை நாயகம் நபிகள் நாயகம் அவர்கள் சொன்னார்கள்:

“மனிதனின் உடலில் எலும்பு ஒன்று உள்ளது. அதை பூமி ஒருபோதும் புசிக்காது. அதை வைத்தே மீண்டும் மறுமையில் அவன் படைக்கப்படுவான்”.

அப்போது அருகில் இருந்த தோழர்கள் கேட்டனர் ‘அது எந்த எலும்பு என்று எங்களுக்கு விளக்கிச் சொல்ல முடியுமா?’

அதற்கு நபிகளார் பதில் அளிக்கும்போது, 'உள்வால் எலும்பின் நுனி' என்றார்கள். (முஸ்லிம்-5662)

இந்த உள்வால் எலும்பின் நுனியில்தான் ஒவ்வொரு மனிதனின் படைப்பின் ரகசியத் தகவல்கள் பொதிந்திருக்கிறது.

ஜெர்மன் விஞ்ஞானி ஹான்ஸ் ஸ்பீமேன் என்பவர் உள்வால் எலும்பு நுனி குறித்து தீவிரமாக ஆராய்ந்தார். அதனை பல ஆயிரம் டிகிரி வெப்பத்தில் எரிக்கவும், வீரியம் மிக்க அமிலங்களின் கலவை கொண்டு அதனை கரைக்கவும் முயற்சி செய்தார். அதில் சிறு மாறுதலைக் கூட அவரால் செய்ய முடியவில்லை. ஆராய்ச்சியின் முடிவாய் திருக்குர்ஆன் வார்த்தைகளை உண்மைபடுத்தி உலகிற்கு அறிவித்தார்.

எனவே அத்தகைய சிறப்பு மிக்க படைப்பாக நம்மை உருவாக்கிய ஏக இறைவன் அல்லாஹ்வை வணங்கி, அவன் காட்டிய வழியில் நடந்து இம்மையிலும், மறுமையிலும் இறைவனின் திருப்பொருத்தத்தை பெற நாம் அனைவரும் முயற்சி செய்ய வேண்டும். இதுவே நம்மை படைத்த இறைவனுக்கு நாம் செலுத்தும் நன்றியாகும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 16**

(காந்தத்தின் திசைகளால் தகவல் பரிமாற்றம்)



காந்தம் எப்படி உருவாகிறது ?

காந்த சக்தி என்பதே பொருள்களின் ஆதாரமான மின் அமைப்பால் ஏற்படுவது. எல்லாப் பொருள்களும் அணுக் கட்டடத்துக்குள் போனால் உட்கருவும் அதைச் சுற்றிக் கொண்டிருக்கும் எலக்ட்ரான்களுமாக அமைந்திருக்கின்றன.

எலக்ட்ரான் என்பது ஒரு சின்ன மின் துகள். இது சுழலும்போது அதன் விளைவாக காந்தசக்தி ஏற்பட்டுத்தான் ஆக வேண்டும். இது இயற்கையின் நியதி.

மின் சக்தியும், காந்த சக்தியும் இணைபிரியாதவை. எங்கெங்கே மின்சாரம் நகர்கிறதோ அங்கங்கே காந்த சக்தியும் ஏற்படுகிறது. இவ்வாறாக அணு கட்டடத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் எலக்ட்ரான்கள், சுற்றிக் கொண்டிருக்கும் அச்சை நோக்கி ஒரு காந்த சக்தியை ஏற்படுத்துகின்றன.

எலக்ட்ரான்கள் உட்கருவை சுற்றுவது மட்டுமின்றி தமக்குத்தாமே வேறு சுற்றிக் கொள்கின்றன. இதை 'ஸ்பின்' என்பார்கள்.இந்தத் தனக்குத்தான் சுழற்ச்சியாலும், காந்தசக்தி விளைவுகள் உண்டு.

இவ்விரு காந்த சக்திகள் ஒத்துப்போகும்போது, ஒரே திசையை திசையை நோக்கி இருக்கும் போது, அதுவும்இணையாக இருக்கும் போது, இந்த மின்காந்த விளைவு கோஷ்டியாக சேர்ந்து கொண்டு அந்த அணுவே ஒரு குட்டி காந்தமாக்கி விடுகிறது.

பூமி ஒரு மஹா காந்தம். பூமிக்கு எப்படி காந்த சக்தி வந்தது என்பதைப் பற்றி இன்னும் ஆராய்ச்சி செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். பூமியின் சுழற்சியினால் இது ஏற்படுகிறது என்கிறார்கள்.

இல்லை..இல்லை...பூமியைச் சூழ்ந்திருக்கும் அயன மண்டலத்தின் அயான்களின் விளைவுதான் என்கிறார்கள். இன்னும் தீர்மானமாக தெரியவில்லை.இருந்தும் பூமிக்கு வடக்கு தெற்காக ஒரு காந்த சக்தி இருக்கிறது.

குட்டி காந்தத்தை தொங்கவிடும் போது பூமியின் வடக்கு தெற்கான காந்தத்துடன் இணையாக இருந்தால்தான் இரண்டுக்கும் பிணக்கம் குறைவாக இருக்கும். திரும்ப முயற்சித்தால் பூமியின் காந்தம் 'எங்கே நகர்கிறாய் ? என்று அதை இழுத்து நேராக்கும்.

எனவே பூமியின் வட துருவத்தை நோக்கும் முனையை காந்தத்தின் வட துருவம் என்றும், எதிர்முனையைத் தென்துருவம் என்றும் சொல்கிறார்கள். கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் , பூமி ஒரு தலைகீழ் காந்தம் என்று தெரியவரும். எல்லாமே எலக்ட்ரான்களின் சுழற்சியால்தான் நடைபெறுகிறது .

பூமியின் காந்த சக்தியைப் பற்றி குர்ஆன்..

''பூமியைத் தொட்டிலாகவும், மலைகளை முளைகளாகவும் நாம் ஆக்கவில்லையா?'' (குர்ஆன்–78:6).

''அவனே பூமியை உங்களுக்குத் தொட்டிலாக அமைத்தான். நீங்கள் வழிகளை அடைவதற்காக அதில் பல பாதைகளை அமைத்தான்'' (குர்ஆன்–43:10).

நாம் ஒரு கயிற்றில் கல்லைக் கட்டிக் கொண்டு அதன் மறுமுனையைப் பிடித்துக் கொண்டு சுழற்றினால் என்ன நிகழும்? கயிற்றில் கட்டப்பட்டுள்ள கல் வட்ட வடிவத்தில் நம்மைச் சுற்றி சுழன்று கொண்டிருக்கும் அல்லவா? கயிற்றின் வழியே இது நம்முடன் ஒரு ஆற்றலால் பிணைக்கப்பட்டுள்ளது. இதனை 'ஈர்ப்பு ஆற்றல்' என்று அழைக்கிறோம்.

மேலே குறிப்பிட்டதைப் போல பூமியின் மையத்தில் செயல்படும் ஈர்ப்பு ஆற்றலே, பூமியின் மேற்பரப்பில் உள்ள அனைத்தையும் பிடித்து வைத்துள்ளது. இந்த ஈர்ப்பு ஆற்றல் இல்லாது போனால் நாம் விண்ணிற்கு வீசி எறியப்பட்டிருப்போம்.

பூமி, சூரியனால் ஈர்க்கப்பட்டு, சூரியனை விட்டு விலகாமல், ரங்கராட்டினம் போல சுற்றி சுற்றி வருகிறது.

மேற்கண்ட வசனத்தில் இந்தப் பூமியைத் தொட்டிலாக அமைத்திருப்பதாக இறைவன் கூறுவதன் மூலம், புவி ஈர்ப்பு விசை அதாவது பூமிக் காந்தம் பற்றிய கருத்து இங்கே மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது என்று கொள்ளலாம்.

காந்த சக்தியின் தகவல்களால் திசைகாட்டும் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டது . பூமியின் காந்த முனைகளுக்கு சார்பாக வடக்கு - தெற்கு திசையைக் காட்டும் உபகரணமாகும். திசைகாட்டியை முதன்முதலில் கண்டுபிடித்தவர் அலெக்சாண்டர் நெக்காம் என்ற துறவியாவார்.

திசைகாட்டி கருவியில் 1. நிலத்திசைகாட்டி, 2.கடல் திசைகாட்டி, 3.வானூர்தி திசைகாட்டி என மூன்று வகையுள்ளது.

பறவைகள் தங்களது இடம்பெயர்ச்சிக்கு குறைந்தது இரண்டு அச்சுகளாகிய அட்ச ரேகையையும், தீர்க்க ரேகையையும் பயன்படுத்துகின்றன எனப் புதிய ஆராய்ச்சிகள் கூறுகின்றன. இதிலிருந்து பறவைகள் எவ்வாறு அட்ச ரேகைகளைக் கண்டறிகின்றன என்பது தெரியவில்லை.

ஆனால் தீர்க்க ரேகை என்பது வடக்கு தெற்கு திசைகளில் செல்கிறது. இதை நடுப்பகலில் உள்ள சூரியனின் இருப்பிடத்தை வைத்தோ அல்லது பூமியின் காந்தப்புலத்தை வைத்தோ எளிதில் கண்டறியலாம் என்று ஆய்வாளர் சென்ஸ்டவ் விளக்கியுள்ளார்.பறவைகள் இவ்வாறு புவி காந்தயீர்ப்பு மற்றும் காந்த விலக்கு விசை மூலம் திசைகளை மாற்றி கொள்கிறது.

மூன்றாவதாக வானத்தில் உள்ள நட்சத்திரத்தின் அடிப்படையில் இடம்பெயரும் பறவைகள், அவை செல்ல வேண்டிய இடத்தில் தீர்க்கரேகையை அறிந்து இடம் பெயருகின்றன என்பர்.

وَعَلٰمٰتٍ‌ؕ وَبِالنَّجْمِ هُمْ يَهْتَدُوْنَ

(பகலில் திசைகளை அறிவிக்கக்கூடிய மலைகள் போன்ற) அடையாளங்களைக் கொண்டும் (இரவில்) நட்சத்திரங்களைக் கொண்டும் (பயணிகள்) தங்கள் வழியை அறிந்து கொள்கின்றனர். (அல்குர்ஆன் : 16:16)

புவி ஈர்ப்பு காந்தத்தைக் கொண்டு புறா தன் பயணத்திற்கு GPS தத்துவத்தை இயற்கையாக பயன்படுத்தி வருவதை ஆய்வின் மூலம் கண்டறிந்துள்ளனர் .

கிப்லா என்றால் என்ன?

கிப்லா என்பது சவூதி அரேபியாவின் மக்காவில் அமைந்துள்ள அல்-மஸ்ஜித் அல்-ஹரம் பள்ளிவாசலில் உள்ள கஃபாவை நோக்கிய நிலையான திசையாகும். உலகில் எப்பகுதியில் இருந்தாலும் இஸ்லாமியர்கள் அனைவரும் இந்தத் திசையை நோக்கியே தொழுகை செய்வர்.

கிப்லாவை எப்படிக் கணக்கிடுகிறோம்?

கஃபாவின் இருப்பிடத்தையும்- (அட்சரேகை 21.4224779, தீர்க்கரேகை 39.8251832) - உங்களின் தற்போதைய இருப்பிடத்தையும் (GPS அல்லது நீங்களே செட் பண்ணியது) பயன்படுத்தி, உலகில் அமைந்துள்ள இரண்டு புள்ளிகளுக்கு இடையேயான நேர் வழியைக் கண்டறிவோம். இது பெரு வட்டத்தின் தொலைவு எனவும் அழைக்கப்படுகிறது.

கஃபாவின் திசையை கண்டறிய பறவைகள் போலவே அட்ச ரேகையையும், தீர்க்க ரேகையையும் பயன்படுத்துகின்றோம் .

ஹேவர்சைன் சூத்திரத்தைப் பயன்படுத்தி, இது கணக்கிடப்படுகிறது.(ஹேவர்சைன் சூத்திரம் சொன்னால் அது உங்களுக்கு போரடிக்கும். அதனால் தவிர்த்துள்ளேன்) தட்டையான வரைபடத்தில் பார்க்கும் போது, பூமியின் வளைவு காரணமாக சில நேரங்களில் நேர்க்கோடு வளைந்து காணப்படலாம்.

கிப்லா ஃபைண்டர் உங்கள் சாதனத்தின் திசைகாட்டியைப் பயன்படுத்தி செயல்படுகிறது. முடிந்த வரை திசையின் துல்லியத்தை உறுதிப்படுத்த, திசைகாட்டியைப் பயன்படுத்தும் முன் அதைச் சீரமைக்குமாறு பரிந்துரைக்கிறோம்.

இத்தனை விஷயங்களும் காந்தம் தரும் தகவல்களால்தான் என்றால், அது மிகையாது.

ரஹ்மத் ராஜகுமாரன் .

தகவல் பரிமாற்றம் 17

எங்கே மறைந்து போனது அந்த வான சாஸ்திரம் ?



வானத்தில் நட்சத்திரங்கள் முன்னறிவிப்பு செய்து கொடுத்த தகவல்களின் விளக்கத்தை யூகிக்கும் திறமையும் கொடுத்த வல்ல நாயன் அவனுக்கே எல்லாப் புகழும்

இந்த வான சாஸ்திரத்தை பூமிக்கு கொண்டு வந்தவர் நபி இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களாகும். ஒருநாள் இவர் வெயில் கடுமையாக இருந்தது அதன் வெப்பம் தாளாது இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் பெரிதும் துயருற்றார்கள் . சூரியனிலிருந்து இவ்வளவு தொலைவு பூமியிலிருந்தும் இங்குள்ள மக்களுக்கு இவ்வளவு வெப்பமாக இருக்கிறது. அந்த சூரியனை சுமக்கும் அந்த வானவருக்கு அதன் வெப்பத்தை எவ்வாறு பொறுத்துக் கொள்வார் ? இறைவனை அவரின் துன்பத்தை இலகுவாய் ஆக்குவாயாக !

அந்த உடனே சூரியனின் வெப்பம் குறைக்கப்பட்டது .அந்த வானவர் சந்தோஷப்பட்டு இத்ரீஸ் (அலை) அவர்களை காண பூமிக்கு வந்து , நபியவர்களை வானலோகத்திற்கு

அழைத்து சென்று மலக்குகள் பார்வையிடும் ஸிர்ருல் மலக்கூத்து என்கிற பிரபஞ்சங்கள் இரகசிய

கிதாபை படிக்க கொடுத்தும் சூரியனுடைய கோள்கள் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்

இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள் ஆகையால் இவர்களால் தன்னால் நேரில் கண்ட நட்சத்திரத்திரங்களைப் பற்றியும் கிதாபு ஸிர்ருல் மலக்கூத்து என்கிற பிரபஞ்சங்கள் இரகசிய

கிதாபை ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து பூமிக்கு கொடுத்தார்கள்

தொடு குறி சாஸ்திரம், கிளி ஜோஸ்யம், பங்கஜா லாட்ஜ் பாமிஸ்ட் , "கிரகம் பாடாய் படுத்தும் " என்று சொல்லும் "பாலத்து ஜோஸ்யர்கள் " போன்ற வியாபாரக்காரர்களை எல்லாம் ஒரு புறம் ஒதுக்கிவிட்டு, இந்த சாஸ்திரத்தின் அடிப்படைச் சிந்தனையை யோசித்து பார்த்தால் , வசீகரமாகத்தான் இருக்கிறது.

அந்த சிந்தனை என்ன?

ஒரு குழந்தை பிறக்கும் போது, அதன் முதல் மூச்சு, வடிவம் பெற்று அது உலகத்தில் ஓர் உயிராய் பிரவேசிக்கும் போது, இந்த பிரபஞ்சவெளியிலும் ஒரு பிரத்தியேகமான நிகழ்ச்சி நிகழ்கிறது என்கிறார்கள்.

ஏதோ ஒரு நட்சத்திரம் ஒரு குறிப்பிட்ட நிலையில் உச்சம் பெறுகிறது. இந்த நட்சத்திரம் மற்றும் கிரகங்களின் நிலை இதெல்லாம் பிறந்த உயிருக்கு தொடர்புபடுத்தி நிறைய நிறைய கணிக்கிறார்கள் .

இதெல்லாம் நிஜமாலுமா ..? என்று நீங்கள் கேட்பது புரிகிறது. சொல்றேன்

பைலபூஸ் மன்னர் கிரேக்க அரச குமாரி கிலாயா மணக்கிறர் .சிற்றரசர் மல்கான் என்பவரை அவள் தங்கை அல்காவை மணக்கிறார் .பைலபூஸ் 40 ஆண்டு காலமாக சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு வானத்தைப் பார்த்து கோள்கள் நட்சத்திரங்கள் ஆகியற்றின் அமைப்புகளையும் ஆராயும் வழக்கம் அவருக்கு உண்டு. அந்தந்த நட்சத்திரங்கள் உச்ச நிலை அடையும் பொழுது வீடு கூடி மல்கான் என்பவருக்கு கிள்று (அலை) அவர்களும், பைலயூஸ் மன்னருக்கு துல்கர்னைன் (அலை) பெற்றெடுத்தார்கள் .

''நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நட்சத்திரங்களை கூர்ந்துப்பார்த்தார் " குர்ஆன் (37 : 88) " இலா "என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருந்தால் "கூர்ந்து " என்று அர்த்தம் வரும். எனவே நட்சத்திரக் கலையை பயின்றார். மேற்கண்ட வசனத்தைத் தொடர்ந்து இப்ராஹிம் (அலை) அவர்கள்

" பின்னர் நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து. நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கின்றது " என்று கூறவே குர்ஆன் (37 : 88,89)

"எந்த நபியுடைய ஜென்ம நட்சத்திரம் விண்ணில் அவர் பிறப்பதற்கு முன் தோன்றாமல் இருந்ததில்லை "

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்

நபி மூஸா (அலை) அவர்கள் பிறப்பதற்கு முன்னதாக பிர்அவ்னின் அரண்மனையில் உள்ள வான சாஸ்திரிகள் வானில் ஜென்ம நட்சத்திரம் தோன்றி விட்டது இது ஓர் அவதாரப் புருஷன் பனி இஸ்ரவேலர்களில் பிறந்தற்குரிய அறிகுறி என்று கணித்ததும் , ஒரு லட்சத்திறகும் அதிகமான பிறந்த ஆண் குழந்தைகளின் தலை சீவப்பட்டது . அக்கால வான இயல் வல்லுநர் கணித்ததில் தவறெதும் உண்டா ? மூஸா (அலை) பிறக்காமலா போனார்கள் ? பிறந்தார்கள் அல்லவா ? குர்ஆன் ( 20 : 39 ) ( 28 : 07 )

இது போன்றே நபி ஈஸா (அலை) அவர்கள் பிறக்கும் போது மூன்று வான இயல் வல்லுநர்கள் ஜென்ம நட்சத்திரம் வானில் தோன்றியதை கண்டு, பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்து இஸ்ரவேலர்களின் அரசர் பிறந்து விட்டாரா என்று ஐரதூஸ் மன்னனிடம் கேட்க, பின் விசாரித்தில் மாட்டுத் தொழுவத்தில் மாநபி ஈஸா (அலை) அவர்கள் பிறந்தது உண்மைதானே.?

"பதினோரு நட்சத்திரங்களும். சூரியனும், சந்திரனும் எனக்கு தலை வணங்கக் கண்டேன்" குர்ஆன் (12 : 04) என்று சிறுவர் நபி யூசுப் (அலை) கனவில் கண்ட நட்சத்திரங்கள் தன்னுடைய சகோதரர்கள் என்பதை தந்தை நபி யாகூப் (அலை) அவர்கள் அறிவிக்கவில்லையா ?

ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் "இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்தபோது, "விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன்" என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா ? புகாரி பாகம் 1 - ஹதீஸ் 07

வான் நட்சத்திரங்கள் இன்றைக்கும் பல தகவல்களை வாரி இறைத்துக் கொண்டேதான் இருக்கிறது .அந்த தகவல்களைப் புரிந்து பூமியில் சொல்லத்தான் யாருமே இல்லை .

(வான சாஸ்திர சிறப்பு சொற்பொழிவு Copy link )

**https://m.facebook.com/story.php?story_fbid=2615474468711892&id=100007480923921**

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 18**

மழை வரும் தகவல்கள்




தமிழ் இலக்கியம் போல உலகில் எந்த இலக்கியமும் வாழ்க்கையை பிரதிபலிக்காது என்று சொல்லுவார்கள் அறிஞர் பெருமக்கள். வாழ்க்கையின் ஒவ்வொரு பொழுதையும் தமிழ் இலக்கியம் பாடல்களாக பாடி தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு படைத்த பெருமை தமிழ் இலக்கியத்திற்கு உண்டு .

சின்ன வயதில் படித்தது, அநேகமாய் உங்களுக்கும் தெரிந்திருக்கும், மழை அறிகுறிகள் பற்றிய தகவலை தரும் தமிழ் இலக்கிய பாடல்

ஆற்று வெள்ளம் நாளை வரத்

தோற்றுதே குறி மலையாள மின்னல் ஈழ மின்னல்

சூழ மின்னுதே

நேற்றும் இன்றும் கொம்புசுற்றிக்

காற்றடிக்குதே - கேணி

நீர்ப்படு சொறித்தவளை

கூப்பிடுதே

சேற்று நண்டு சேற்றில் வளை

ஏற்று அடைக்குதே - மழை

தேடி ஒருகோடி வானம்

பாடியாடுதே

போற்று திருமால் அழகர்க்கு

ஏற்றமாம் பண்ணைச் சேரி

பள்ளிப் பள்ளர் ஆடிப்பாடித்

துள்ளிக் கொள்வோமே

(முக்கூடற்பள்ளு – 30)

நூல்: முக்கூடற்பள்ளு (#35)

பாடியவர்: தெரியவில்லை

சூழல்: மழை வரும் நேரம், பள்ளர் இனத்தைச் சேர்ந்தவர்கள் ஆனந்தமாகப் பாடும் ‘சிந்து’ வகைப் பாடல்

(இந்த எளிய பாடலுக்கு உரை அவசியமில்லை. எனினும் ஒரு சாத்திரத்துக்காக இது!)

ஆற்றில் நாளை வெள்ளம் வரப்போகிறது, அதற்கான அறிகுறிகள் இப்போதே தெரிகின்றன.

மலையாள / கேரள நாடு இருக்கிற பக்கத்திலிருந்தும், இலங்கை / ஈழ நாடு இருக்கிற பக்கத்திலிருந்தும் மின்னல்கள் சூழ்ந்து மின்னுகின்றன.

நேற்றும் இன்றும் காற்று பலமாகச் சுழன்று அடிக்கிறது. மரங்களை ஆட்டிவைக்கிறது.

கிணற்றுத் தண்ணீரில் இருக்கும் சொறித்தவளை சத்தமிட்டு மழை வரப்போகும் செய்தியைச் சொல்கிறது.

மழை வந்து வெள்ளம் நிரம்பினால் சேற்றில் வாழும் நண்டு என்ன ஆகும்? அதற்காக அந்த நண்டு முன்னெச்சரிக்கையாக அந்தச் சேற்று மணலைக் கொண்டே தன்னுடைய வளையின் வாசலை அடைக்கிறது.

மழையைத் தேடி ஒரு கோடி வானம்பாடிகள் விண்ணில் பாடிப் பறக்கின்றன.

எல்லோரும் போற்றி வழிபடுகிற அழகர் திருமால். அவருக்குப் பிடித்தமான பள்ளர் இனத்தைச் சேர்ந்தவர்கள் நாம்.

பண்ணையில் வேலை செய்கிற, சேரியில் வாழ்கிற பள்ளர்களாகிய நாம் அனைவரும் மழையை வரவேற்றுப் பாடுவோம், துள்ளி ஆடுவோம் என்று பாடல் பொருள் விரிகிறது .

ஆற்றில் வெள்ளம் வருவதையும் அதனால் முன்னேற்பாடான சுற்றுச் சுழல் பற்றிய தகவல் தெரிவிக்கிறது இப்பாடல் .

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 19**

இரவு ஏன் இருட்டாக இருக்கிறது ?

இப்படி ஒரு சந்தேகம் ஜெ.பி.எல். டிசேசாக்ஸ் (J.P.L Decheseaux) என்ற சுவிட்சர்லாந்து அறிஞர் ஒருவர் விஞ்ஞானிகளிடம் கேட்டார்.

இதென்ன பெரிய கேள்வி ?

இரவில் சூரியன் இல்லை. அதனால் இருட்டாக இருக்கிறது என்று நாம் பதில் சொல்லி இருப்போம். ஆனால் விஞ்ஞானிகள் கொடுத்த விளக்கம் என்ன தெரியுமா ?

வானிலுள்ள நட்சத்திரங்கள் எல்லாம் தானாக ஒளிரக் கூடியது ! நம்ம சூரியனும் ஒரு நட்சத்திரம்தான். அதுவும் தானாக ஒளிரும் சக்தி இருக்கிறது . நமக்குத் தேவையான ஒளியையும், வெப்பத்தையும் பகலில் கொடுக்கிறது .

ஆனால் சூரியன் மேற்புறத்தின் வெப்பம் 6000 டிகிரி செல்சியஸ் , சூரியனின் நடுவில் 20,000 டிகிரி செல்சியஸ் பூமிக்குத் தேவையான வெப்பத்தையும் ஒளியையும் பெறுவதற்கு நம்ம பூமிதான் 149,600 ,000 கிலோ மீட்டர் தூரத்தில் சூரியனிலிருந்து விலகி இருக்கிறது.

இதே சூரியன் மறுமை நாளில் சூரியன் மக்களுக்கு அருகில் ஒரு மைல் தொலைவில் நெருங்கி வரும். அப்போது மக்கள் தங்களின் செயல்களுக்கேற்றவாறு வியர்வையில் மூழ்குவார்கள். சிலரது வியர்வை கணுக்கால் வரையிலும், சிலரது வியர்வை முழங்கால்கள் வரையிலும், சிலரது வியர்வை இடுப்பு வரையிலும், சிலரது வியர்வை வாய் வரையிலும் எட்டிவிடும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மறுமைநாளில் மனிதர்களுக்கு (அவர்களின் தலைக்கருகில் நெருங்கி வரும் சூரியனால்) வியர்வை ஏற்படும். அவர்களின் வியர்வை தரையினுள் எழுபது முழம் வரை சென்று, (தரைக்கு மேல்) அவர்களின் வாயை அடைந்து, இறுதியில் அவர்களின் காதையும் அடையும். அபூஹுரைரா (ரலி) அவர்கள்,புகாரி-6532

இரவில் ஏகப்பட்ட நட்சத்திரம் வானில் இருக்கிறது. இவைகள் ஒவ்வொன்றும் நம்ம சூரியனை விடவும் பெரியது.அப்படி என்றால் பகலில் இருப்பதை விட அதிகமான வெளிச்சம் இரவில் இருக்க வேண்டுமே ! ஏன் இல்லை ?

நட்சத்திரங்கள் எல்லாம் பூமியில் இருந்து வெகு தூரத்திற்கு அப்பால் இருக்கிறது. அது மட்டுமல்ல அதில் இருந்து வருகிற ஒளி ஆற்றல் மாறுபடுகிறது.

எப்படி மாறுபடுகிறது ?

பூமிக்கும் நட்சத்திரங்களுக்கும் இடைப்பட்ட தூரம் எவ்வளவோ அந்த தூரத்தின் வர்க்கத்தோட தலைகீழ் விகிதத்தில் மாறுபடுகிறது. அதனால் இடைப்பட்ட தூரம் அதிகரிக்க அதிகரிக்க நட்சத்திரத்தில் இருந்து பூமிக்கு வந்து சேர்கிற ஒளியின் அளவு குறைந்து போய்விடுகிறது. இது பற்றி பத்தாவது வகுப்பு படிச்ச பையன் தெளிவாக சொல்வான் .

.

சரி, சூரியனில் இருந்து வந்து சேருகிற வெளிச்சத்தில் பத்து லட்சத்தில் ஒரு பங்கு வெளிச்சம்தான் ஒரு நட்சத்திரத்தில் இருந்து இங்கே வருவதாக வைத்துக்கொள்வோம். அப்படியென்றால் 10 லட்சம் நட்சத்திரங்களிடருந்து பூமிக்கு வருகிற மொத்த வெளிச்சத்தையும் கூட்டினால் ஒரு சூரியனிடம் இருந்து வருகிற அளவுக்கு வெளிச்சம் இருக்க வேண்டுமே ...இந்த கணக்குப்படி பார்த்தால் இரவு பகலைவிட வெளிச்சமாக இருக்க வேண்டும் அல்லவா ? நல்ல கேள்வி .

இப்போ மறுபடியும் முதல் கேள்வியை யோசித்துப்பாருங்கள் இரவு ஏன் இருட்டாக இருக்கிறது ?

ஒரு சின்ன செயல்முறை : ஒரு காகிதத்தை குழாய் மாதிரி சுருட்டி 5 அல்லது 6 அங்குலம் நீளம் இருக்கட்டும் .இரவில் ஒரு இருட்டான பகுதியில் நில்லுங்கள் ! வெளிச்சமான பகுதியிலே உள்ள ஒரு சுவரை அந்த காகிதகுழாய் மூலம் பாருங்கள் !

முதலில் கொஞ்சம் பக்கத்திலிருந்து பார்த்து விட்டு , அதன் பின் ஒரு பத்து அடி தூரம் பின்னாடி நகர்ந்து போய் நின்று மறுபடியும் பாருங்கள் .

முதலில் பார்த்த போது சுவரில் ஒரு சிறு பகுதி ஒளிவட்டமாக தெரியும் .பின்னால் போய் நின்று பார்த்த போது அதிகமான சுவர் பரப்பு தெரியும். ஆனால் வெளிச்சம் குறைவாக இருக்கும். உண்மையில் இந்த

வெளிச்சம் குறைவு சுவர் பரப்பு அதிகரிக்கிறதை சரிக்கட்டுகிறது . இப்படித்தான் வானில் உள்ள நட்சத்திரங்களின் ஒளி குறைவாக தெரிகிறது .

எனவே இரவு இருட்டாக இருப்பதற்கு இதுவும் காரணங்களாகும் .

இறைவனிடம் ஏன் பகலை வெளிச்சமாகவும், இரவை இருட்டாகவும் படைத்தற்கு அவன் சொல்லும் காரணம் :

وَهُوَ الَّذِىْ جَعَلَ لَـكُمُ الَّيْلَ لِبَاسًا وَّالنَّوْمَ سُبَاتًا وَّجَعَلَ النَّهَارَ نُشُوْرًا

அவன்தான் உங்களுக்கு இரவைப் போர்வையாகவும், ஓய்வளிக்கக் கூடியதாகவும், பகலை (உங்கள்) நடமாட்டத்திற்காக (பிரகாசமாக)வும் ஆக்கினான்.

(குர்ஆன்: 25:47)

وَسَخَّرَ لَـكُمُ الَّيْلَ وَالنَّهَارَ ۙ وَالشَّمْسَ وَالْقَمَرَ وَالنُّجُوْمُ مُسَخَّرٰتٌ بِاَمْرِهٖ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّعْقِلُوْنَۙ

அவனே இரவையும், பகலையும், சூரியனையும், சந்திரனையும் உங்களுக்காக (படைத்துத்) தன் அதிகாரத்துக்குள் வைத்திருக்கிறான். (அவ்வாறே) நட்சத்திரங்கள் அனைத்தும் அவனுடைய கட்டளைக்கு உட்பட்டவையாகவே இருக்கின்றன. நிச்சயமாக இதிலும் சிந்தித்து அறியக்கூடிய மக்களுக்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 16:12)

ரஹ்மத் ராஜகுமாரன்

**தகவல் பரிமாற்றம் 20**

வயிற்றுக்குள் ஒரு பயணம்



நமக்கு பல தகவல்கள் வந்து கொண்டே இருக்கும் .அதில் சில தகவல் நம் பகுத்தறிவை பதம் பார்க்கும். அப்படிப்பட்ட சில தகவல்களை பார்ப்போம் .

சில நத்தைகள் உயிரோடு மீன் வயிற்றுக்குள் போய்விடும் மறுபடி உயிரோடு வெளியே வந்துவிடும் .நண்டு, நத்தை, லாப்ஸ்டர் இந்த வகை உயிரினங்களுக்கு ஓடு உறுதியாக இருக்கிறது. காரணம் எதிரிகள் கடிச்சா தப்பிக்கத்தான்.

கடலில் உள்ள சில வகை நத்தைகளை சில வகை மீன்கள் அப்படியே முழுங்கி விடும். அந்த நத்தைக்கெல்லாம் இயற்கை ஒரு வசதியை பண்ணி கொடுத்திருக்கிறது .அதாவது அந்த நத்தை ஓடுகளில் ஒரு கதவு இருக்கிறது. இந்த கடல் நத்தை ஓர் மீன் வயிற்றுக்குள் போனதும் அந்த கதவு உடனே கெட்டியாக மூடிக்கொள்ளும் .

மீனின் ஜீரண நீர் நத்தையின் ஓட்டில் சேதம் இருந்தால் அதன் வழியே துளைத்து உள்ளே சென்று நத்தையை பஸ்பமாகிவிடும் .எவ்வித சேதமும் இல்லாத ஓட்டுடன் கூடிய நத்தையை மீனின் ஜீரண நீர் ஒன்றும் செய்ய முடியாது. மேலும் மீனின் ஜீரணபாதை வழியாக பயணம் செய்து உயிருடன் வெளியே வந்துவிடும். நத்தை அதுவா நகர்ந்து போய் எந்தக் காலத்தில் போய்ச் சேர்றது. இப்படி மீன் ஏதாவது விழுங்கி தொலை தூரத்திற்கு கொண்டு சென்றால்தான் உண்டு.

இந்த ஆச்சரியமான இந்த விஷயத்தை அமெரிக்க ஆராய்ச்சியாளர் Stephen F Norton என்பவர் கண்டு பிடித்திருக்கிறார்.

நபி யூனுஸ் (அலை) - யோனா (Jonah ) கி.மு 8 நூற்றாண்டில் ஈராக்கிலுள்ள நைனுவா நகருக்கு அதுவும் ஒரு இலட்சம் பேர் கொண்ட ஒரு சமூகத்திற்கு அவர்கள் நபியாக அனுப்பப்பட்டார்கள் .

அந்த மக்கள் சிலைகளை வணங்கி வந்தனர். யூனுஸ் நபி சிலை வணக்கம் கூடாது அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்க வேண்டும் என்று போதித்தார்கள் . அந்த மக்கள் நபியின் போதனையை ஏற்கவில்லை. எனவே, உங்களுக்கு அழிவு வரும் என்று எச்சரித்து விட்டு, ஊரை விட்டும் யூனுஸ் நபி அவர்கள் வெளியேறிவிட்டார்கள்

ஒரு நபி தனது நைனுவா ஊரை விட்டும் வெளியேறுவதென்றால், அல்லாஹ்வின் கட்டளை வர வேண்டும். யூனுஸ் நபி அவர்கள் தனது சுய முடிவில் சென்றார்கள்

ஒரு கடல்கரையில் கப்பல் நின்றிருந்தது. அதில் மக்கள் நிறைந்திருந்தனர். இவர் போய் அந்தக் கப்பலில் நபியவர்கள் ஏறிக் கொண்டார்கள் .கப்பல் கடலில் பயணித்தது. இடை நடுவில் கப்பல் அலை மோத ஆரம்பித்தது. இவ்வாறு ஆபத்து வந்ததால் கப்பலில் உள்ளவர்களின் பெயர்களை எழுதி சீட்டுக் குலுக்கி யாருடைய பெயர் வருகின்றதோ அவரைக் கடலில் குதிக்கச் சொல்வது அவர்களது மரபாகும்.

இந்த அடிப்படையில் சீட்டுக் குலுக்கிய போது யூனுஸ் நபி அவர்களின் பெயர்தான் வந்தது. அவர்கள் கடலில் குதித்தார்கள்

அப்போதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. மிகப் பிரம்மாண்டமான ஒரு மீன் யூனுஸ் நபி அவர்களை விழுங்கிக் கொண்டது. யூனுஸ் நபியவர்கள் மீனின் வயிற்றுக்குள் சென்றார்கள். தான் சோதிக்கப்படுவதை அறிந்தும் கொண்டார்கள் அவர் மீன் வயிற்றில் இருந்து கொண்டு,

உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாரும் இல்லை. நீ தூய்மையானவன். நான் அநீதமிளைத்தோரில் ஆகிவிட்டேன்! (குர்ஆன் 21:87) என்று பிரார்த்தித்தார்.

பிற வேதங்களில் யூனுஸ் நபி மூன்று நாட்கள் மீன் வயிற்றில் இருந்தார்கள் என்று சொல்லப்பட்டாலும், குர்ஆனில் அவர் எத்தனை நாட்கள் மீன் வயிற்றில் இருந்தார்கள் என்று சொல்லப்படவில்லை. மாறாக அவர் நீண்ட காலம் இருந்துள்ளார்கள் என்பதை குர்ஆனில் இருந்து அறிய இயலும்.

மனிதனை விழுங்கும் அளவுக்கு பெரிய மீன் ஆழமுள்ள கடல் பகுதியிலேயே இருக்கும். மேலும் கடலின் பல பாகங்களுக்கு சென்று வரக்கூடிய அம்மீன் நபியவர்களைக் நைனுவா கரையிலேயே கொண்டுவந்து உமிழ்ந்துள்ளது.

மீன் வயிற்றில் இருந்து நோய்வாய்ப்பட்ட நிலையிலேயே அவர்கள் வெளியேற்றப்பட்டுள்ளார். நிச்சயமாக இது குறுகிய நேரத்தில் நடந்த நிகழ்வல்ல. இது ஒரு அற்புத நிகழ்வே...

மீன் வயிற்றில் மனிதன் சுவாசிக்கக் காற்று இருக்காது. மனிதனால் காற்றிலிருந்து 15% ஆக்சிஜனை மட்டுமே உள்ளிழுக்க இயலும். ஆனால் திமிங்கலத்தால் 90% ஆக்சிஜனை உள்ளிழுக்க முடியும். மீனின் வயிற்று தசைகளில் மயோக்ளோபின் எனும் செல்களில் அந்த ஆக்சிஜன் சேமிக்கப்பட்டிருக்கும்.

மேலும் உணவை உட்கொண்ட உடனேயே திமிங்கலத்தின் வயிறு செரிமான வேலைகளை துவங்கிவிடும். திமிங்கலம் உணவை மென்று விழுங்காது. அப்படியே முழுமையாக விழுங்கி விடும்.

எனவே வயிற்றின் முதல் பகுதியில் இருக்கும் சக்தி வாய்ந்த தசைகள் மெல்லும் வேலையை செய்யும். மனிதனை திமிங்கலம் விழுங்கினால் சற்று நேரத்தில் வயிற்றின் முதல் பகுதியில் மனிதனது எலும்புகள் உடைக்கப்படும். அடுத்த இரண்டாம் கட்டமாக செரிமானத்திற்கான அமிலங்கள் சுரக்கப்பட்டு அந்த அமிலத்தில் மனிதன் அழிந்துவிடுவான்.

ஆக மீன்களின் வயிற்றில் சில நாட்கள் என்ன சில மணி நேரங்கள் கூட மனிதனால் உயிரோடு இருக்க இயலாது.

அல்லாஹ் அவரது பிரார்த்தனையை அங்கீகரித்தான். மீன் அவரை கரையில் துப்பியது. அவர் கடற்கரையில் பலவீனமான நிலையில் இருக்கும் போது அல்லாஹ் சுரைக்காய் கொடியை வளரச் செய்து அவருக்கு நிழல் கொடுத்தான்.

யூனுஸ் நபியின் மக்கள் வேதனையின் அடையாளத்தைக் கண்டு அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டனர். அவர்களின் ஈமானும் தவ்பாவும் அவர்களைப் பாதுகாத்தது. யூனுஸ் நபி அவர்களும் சோதனையில் இருந்து மீண்டு கொண்டார்கள்

ரஹ்மத் ராஜகுமாரன் .

("தகவல் பரிமாற்றம்" தொடர் பதிவு இத்துடன் நிறைவு பெறுகிறது)

**https://m.facebook.com/story.php?story_fbid=324497489410832&id=100055517507696**

**தாவரங்களின் உலகம் 1**




புல், பூண்டு, புதர், செடி, கொடி, மரம் ஆகியன எல்லாமும் தாவரங்களே. ஓரிடத்தில் நிலையாய் ஊன்றி நின்று அங்குமிங்கும் ஓடித்திரியாமல் வாழ்வதால் தாவரம் என்கிறோம். தாவரம் என்றால் இடம்பெயராமல் ஊன்றி நிற்பது என்று பொருள்.

தெரியுமா... தாவரங்கள் பேசிக் கொள்கின்றன! தாவரங்களுக்கும் தாய்ப்பாசம், தோழமை, பகைமை உணர்வுகள் உண்டு. மிருகங்களுடனும் பூச்சிகளுடனும் அவை போர் தொடுக்கின்றன!

தாவரங்களிடையேயும் நிலத்தகராறு, வர்த்தகத் தகராறு உண்டு. அடித்து, இடித்து, முந்தித்தள்ளி வாழ்க்கை நடத்துவதில் விலங்குகளுக்குச் சளைத்தவை அல்ல அவை!

எதையும் மிக மெதுவாகச் செய்வதால் நம் பார்வைக்குத் தாவரங்களின் நடத்தைகள் தெரிவதில்லை. தாவரங்களைக் கவனிப்பது ஈரமான பெயிண்ட் உலருவதை வேடிக்கை பார்ப்பதுபோல் போரடிக்கும் வேலை! ஆனால் இன்று நம்மிடம் "டைம் லேப்ஸ்' கேமராக்கள் உள்ளனவே! ஒரு வாரம் நடந்த நிதானமான நிகழ்ச்சியை நம்மால் ஒரு சில விநாடிகளில் ஓட்டிப் பார்த்துவிட முடியும்!

கண்கள் இல்லாமலே தாவரங்கள் காண்கின்றன! இரவு பகல் மாறி மாறி வருவது அவற்றுக்குத் தெரியும்! வருஷத்தில் எந்த மாதத்தில் பூக்க வேண்டும், காய்க்க வேண்டும், எப்போது முளைக்க வேண்டும் என்பதை நன்றாகவே அறிகின்றன!

கண்கள் இல்லாவிடினும் இலையில் படும் சூரிய ஒளி மூலம் காலத்தை அறிகின்றன! காம்பு நுனிகள்தாம் அவற்றின் கண்கள்!

தாவரங்கள் 13 வகை உலோகத் தாதுக்களை மற்ற தாதுக்களிலிருந்து பிரித்து அறிகின்றன! இது அவற்றின் சுவை அறிவுக்குச் சாட்சியம். விஷத்தன்மையுடைய மெர்க்குரி, கேட்மியம், ஈயம் போன்ற உலோகங்களைத் தவிர்க்கின்றன. தேவையான சோடியம், பொட்டாசியம், மெக்னீசியம், கால்ஷியம் போன்ற தாதுக்களை உறிஞ்சுகின்றன!

நல்ல வேளை... இந்த அறிவு அவற்றுக்கு இருந்ததால்தான் நாம் தப்பித்தோம்!

இப்போதெல்லாம் கீரைகளைச் சாக்கடைத் தண்ணீரில் வளர்க்கிறார்கள். வாழை மரங்களுக்கு கழிவு நீரை ஊற்றுகிறார்கள். யார் எந்தத் தண்ணீரை ஊற்றி வளர்த்தாலும் வேர்கள் தக்கபடி ஃபில்ட்டர் செய்து நச்சுத் தாதுக்கள் இல்லாத இலை, தண்டு, காய், கனிகளை ஈனுகின்றன!

தாவரங்களுக்கு "சுவை பிரித்தறியும் அறிவு' இல்லாதிருந்தால் நம் கதி என்னவாகும்? இளநீர், பழம், கிழங்கு, இலை ஆகியவற்றில் எல்லாம் மெர்க்குரியும் கேட்மியமும் அல்லவா நிறைந்திருக்கும்! வேர்கள் செடிகளின் சுவை அரும்புகள்!

தாவரங்களில் அழகு அழகாய், வண்ண வண்ணமாய்ப் பூத்து நம் கண்களுக்கு விருந்தளிக்கின்றனவே. மலர்கள்... இவை என்ன தெரியுமா? அவை தாவரங்களின் செக்ஸ் உறுப்புகள்!

இந்தப் பாலுறுப்பைப் பிரகடனப்படுத்த எத்தனை கலர் கலாட்டாக்கள்! எத்தனை மேக்கப்புகள், எத்தனை சென்ட் வாசனைகள், கவர்ச்சிச் சாதனங்கள்! இவை போதாது என்று போனசாக தேனை லஞ்சமாக விநியோகித்து பிரபலப்படுத்துகின்றனவே!

இந்த விஷயம் தெரியாதவர்கள் மலர்களை அழகு, ஆனந்தம், தெய்வீகம் என்பர். இறைவனுக்குச் சாற்றுவதற்கு அர்ப்பணிப்பின் அடையாளமாக மலர்கள் மரியாதை செய்கின்றன. அம்மா, அய்யா, அண்ணன், பெரியார் என்று மதிக்கப்பட்டு போற்றிப் புகழப்படும் அரசியல் தலைவர்களுக்கெல்லாம் மிகவும் பிடித்தது ஆளுயர ரோஜா மாலை! அத்தனை மலர்களும் ரோஜாச் செடியின் பிறப்பு உறுப்புகள் என்பது அவர்களுக்குத் தெரியுமா?

தாவரங்கள் தாம் உற்பத்தி செய்யும் சரக்கில் ஏராளமானவற்றை மலர்களுக்குச் செலவிடுகின்றன. பெரும்பகுதி சத்தை மலர்களிலேயே முதலீடு செய்கின்றன.

நிலத்தில் சேமித்து வைத்த கிழங்குகள் மெலிந்து வற்றி மறைந்து போவது மலர்களின் பொருட்டே. ஒட்டுமொத்த சேமிப்பும் மலர்களுக்கே செலவாகிவிடுவதால் விவசாயிகள் மலர்வதற்கு முன்பே, கேரட், உருளை, பீட்ரூட் போன்ற நிலத்தடி காய்கறி கிழங்குகளை புத்திசாலித்தனமாக அறுவடை செய்து விடுவார்கள். விட்டுவிட்டால் கிழங்கைச் சுரண்டி மலர்கள் மலர்ந்து விடும்!

தாவரங்கள் பேசிக் கொள்கிறது . பார்க்கிறது .காலத்தை கணிக்கிறது .தாய்ப்பாசம், தோழமை, பகைமை உணர்வுகளைக் கொள்கிறது . சுவை அறிகிறது. மிருகங்களுடனும் பூச்சிகளுடனும் அவை போர் தொடுக்கின்றது.

மனிதர்களுக்கு நிகராக எல்லா இயல்புகளையும் கொண்ட தாவரங்கள் தம்மைப் படைத்த இறைவனை அறியுமா ?

என்னெ அறியுமாவா... ? இறைவனை அறிந்து, அவனை வணங்கவும் செய்கிறது அது தெரியுமா உங்களுக்கு ?

وَّالنَّجْمُ وَالشَّجَرُ يَسْجُدٰنِ

செடிகள், (கொடிகள்,) மரங்கள் (ஆகிய அனைத்தும் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டுச்) சிரம் பணிகின்றன. (அல்குர்ஆன் : 55:6)

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 2**

RAMADAN 2021
Breaking your fast with dates
Dates are rich in vitamins, fibre and antioxidants.
King Medjool
Black Medjool
Mabroom
Ajwa
Deglet Noor
Piarom Malik
Breaking the fast with dates and water is rooted in the religious teachings of the Prophet Muhammad and has specific mention in the Quran for nutritional value.
*Approximate nutritional value per date:*
20 CALORIES
0g FAT
0.14mg SODIUM
5.3g CARBOHYDRATES
0.6g FIBER
4g SUGAR
0.2g PROTEIN
Source: Al Jazeera, Very Well | April 13, 2021
@AJLabs ALJAZEERA

'மரங்களில் இப்படியும் ஒருவகை மரம் உண்டு. அதன் இலைகள் உதிர்வதில்லை. அது முஸ்லிமுக்கு உவமையாகும். அது என்ன மரம் என்பதை எனக்கு அறிவியுங்கள்' என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

அப்போது மக்களின் எண்ணங்கள் நாட்டு மரத்தின் பால் திரும்பியது. நான் அதை பேரீச்சை மரம் தான் என்று கூற வெட்கப்பட்டுக் கொண்டு அதைச் சொல்லாமல் இருந்து விட்டேன்.

பின்னர் 'அல்லாஹ்வின் தூதரே! அது என்ன மரம் என்று எங்களுக்கு அறிவியுங்கள்' என தோழர்கள் கேட்டார்கள். அதற்கு 'பேரீச்சை மரம்' என்றார்கள்.அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்கள்: புகாரீ (61), முஸ்லிம் (5028)

பிரசவத்தின் போதும், அதற்குப் பின்னும், பெண்ணுக்கு இரும்புச் சத்து என்னும் Hemoglobin அதிகம் தேவைப்படுகிறது. அதனால் இரும்புச் சத்து அதிகம் உள்ள பேரீட்சம் பழத்தைப் பற்றி குர்ஆன் கூறுகிறது

" பின்பு (அவருக்கு ஏற்பட்ட) பிரசவ வேதனை அவரை ஒரு பேரீத்த மரத்தின்பால் கொண்டு வந்தது: "இதற்கு முன்பே நான் இறந்து, முற்றிலும் மறக்கப் பட்டவளாகி இருக்கக் கூடாதா" என்று கூறினார்.

(அப்போது ஜிப்ரீல்) அவருக்குக் கீழிலிருந்து: "(மர்யமே!) கவலைப் படாதீர்கள்! உம்முடைய இறைவன் நிச்சயமாக உமக்கு கீழாலேயே ஒரு சின்ன ஆற்றை உண்டாக்கி இருக்கின்றான்" என்று அழைத்து கூறினார்.

இன்னும், இந்த பேரீச்ச மரத்தின் கிளையைப் பிடித்து உம் அருகில் இழுத்துக் குலுக்கும்; (கொய்வதற்குப்) பக்குவமான பழங்களை உம் மீது அது உதிர்க்கும். "ஆகவே, (அவற்றை) உண்டு, (ஆற்று நீரைப்) பருகி கண் குளிர்ந்து இருப்பீராக! திருக்குர்ஆன்( 19:23-26 )

மரியம் (அலை) அவர்களை வானவர் ஜிப்ரீல், ‘பேரீச்சம் பழத்தை சாப்பிட்டு, கண்குளிர இருப்பீராக’ என்று கூறினார் என்று கூறுகிறது.

இந்த இடத்தில் குர்ஆன் ,பிரசவத்துக்கும் பேரீச்சம் பழத்திற்கும் ஒரு நேர்முறையான சம்பந்தம் உள்ளது என்பதை தெரிவிக்கிறது. அது பற்றிப் பார்ப்போம்.

இன்றைய நவீன மகப்பேறு மருத்துவர்கள், எல்லா கர்ப்பிணிப் பெண்களுக்கும் கர்ப்ப காலத்தின் போதும், பிரசவத்திற்கு பின் மூன்று மாதத்திற்கு, இரும்புச் சத்து மாத்திரை தருகிறார்கள். காரணம் பொதுவாகவே, பெண்களுக்கு மாதமாதம், ஏற்படும் மாதவிடாய் காரணமாக இரத்த அளவு குறைவாகவே இருக்கும். மேலும் கர்ப்பமும், பிரசவமும், அவர்களின் இரும்புச் சத்து தேவையை இன்னும் பல மடங்கு அதிகரிக்கச் செய்கிறது.

உடல் தன்னால் ஓரளவுக்கு மேல், உற்பத்தி பண்ண முடியாது. அதனால், இரும்புச் சத்து மாத்திரைகள் கொடுக்கப்படுகிறது. ஏற்கனவே கற்பத்தால், குமட்டல், வாந்தி இருக்கும் போது, இரும்புச் சத்து மாத்திரையால் இன்னும் குமட்டல் அதிகரிக்கலாம். எனவே உணவு மூலம், எந்தக் குமட்டலும் இல்லாமல் , இயற்கையாக இனிப்பு சுவையுடன் இரும்புச் சத்தை அதிகரிக்கும் உணவு பேரீச்சம் பழம் மட்டுமே, என்று அறிவியல் கூறுகிறது.

தினமும் பேரிச்சம் பழத்தை உட்கொண்டு வந்தால், ஒரு நாளைக்கு ஒருவருக்கு வேண்டிய ஊட்டச்சத்துக்கள் கிடைக்கும். குறிப்பாக காப்பர், பொட்டாசியம், நார்ச்சத்து, மாங்கனீசு, வைட்டமின் பி6, மக்னீசியம் போன்றவற்றைப் பெறலாம்.

வைட்டமின் ‘ஏ’ குறைவினால்தான் கண்பார்வை மங்கலாகும். இதைக் குணப்படுத்த பேரீச்சம் பழமே சிறந்த மருந்தாகும்.

மாலைக் கண் நோயால் பாதிக்கப்பட்டவர்கள், பேரீச்சம் பழத்தை தேனுடன் கலந்து ஊற வைத்து சாப்பிட்டு வந்தால் உடலுக்குத் தேவையான எல்லா சத்துக்களும் கிடைக்கும். இதனால் கண் பார்வைக் கோளாறுகள் நீங்கும்.

பேரிச்சம் பழம் செரிமான மண்டலத்தின் ஆரோக்கியத்திற்கு நல்லது. ஒருவேளை உங்களுக்கு சீரற்ற குடலியக்கம், மலச்சிக்கல் அல்லது வேறு ஏதேனும் செரிமான பிரச்சனைகள் இருப்பின், பேரிச்சம் பழத்தை தினமும் உட்கொண்டு வர, அதில் உள்ள நார்ச்சத்து இப்பிரச்சனைகளுக்கு தீர்வளித்து, குடல் புற்றுநோய் வரும் அபாயத்தைக் குறைக்கும்.

பேரீச்சம் பழத்துடன் பாதாம் பருப்பு சேர்த்து பாலில் கலந்து கொதிக்க வைத்து சாப்பிட்டால் நரம்புத் தளர்ச்சி நீங்கி, ஞாபக சக்தி கூடும். கைகால் தளர்ச்சி குணமாகும்.

பேரிச்சம் பழத்தில் உள்ள மக்னீசியம், தமனிகளில் ஏற்படும் வீக்கத்தைக் குறைத்து, இதய நோய்கள் வரும் அபாயத்தைக் குறைப்பதாக கூறுகின்றன.

பேரிச்சம் பழத்தை கர்ப்ப காலத்தில் உட்கொண்டு வந்தால், பிரசவம் முடிந்த பின் உடல் எடையை குறைக்க உதவியாக இருக்கும்.

பேரிச்சம் பழத்தில் உள்ள பொட்டாசியம், இதய செயல்பாட்டை மென்மையாக்கி, இரத்த அழுத்தத்தை சீராக வைத்துக் கொள்ளும். எனவே பேரிச்சம் பழம் சாப்பிட்டு வந்தால், இரத்த அழுத்தத்தைக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளலாம்.

தினமும் பேரிச்சம் பழத்தை உட்கொண்டு வந்தால் மூளையின் செயல்பாடு மேம்படும். அதாவது ஞாபக சக்தி, ஒருமுகப்படுத்தும் தன்மை, கூர்மையான புத்தி, எதையும் எளிதில் கற்றுக் கொள்ளும் திறன் போன்றவை அதிகரிக்கும்.

பேரிச்சம் பழத்தில் உள்ள அதிகப்படியான இரும்புச்சத்து, உடலில் இரத்தணுக்களின் அளவை அதிகரித்து, இரத்த சோகை வரும் அபாயத்தைக் குறைக்கும். எனவே உங்கள் உடலில் இரத்தத்தின் அளவு சீராக இருக்க, தினமும் 3 பேரிச்சம் பழத்தை உட்கொண்டு வாருங்கள்.

சளி இருமலுக்கு பேரீச்சம் பழத்தின் கொட்டைகளை நீக்கி பாலில் போட்டு காய்ச்சி பருகி வந்தால் சளி, இருமல் குணமாகும்.

நீரழிவு நோயால் பாதிக்கப்பட்டவர்களின் எலும்புகள் பலம் இழந்து காணப்படும். இவர்களுக்கு கால்சியம் இரும்பு சத்து தேவைப்படுவதால் தினமும் இரண்டு பழம் வீதம் சாப்பிட்டு வந்தால் உடலுக்குத் தேவையான சத்துக்கள் கிடைக்கும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 3**

(மரமும், மனிதனும்)



காலையில் எழுந்ததும் மரத்தின் முகத்தில் விழிப்பது மகிழ்ச்சியைத் தரும். ஒற்றைக் காலால் நின்று ஒவ்வொரு மரமும் 'என்னைப் பார் உன் ஆயுள் கூடும்' என்ற உண்மையை உரக்கச் சொல்கின்றன.

மரங்களைப்பார்க்கும் போதும், மரங்களோடு பேசும் போதும் நாம் இளமையாகி விடுகிறோம்.

மரம் என்ற ஒற்றைச் சொல் பசுமையை, வளமையை, மனிதன் வாழ்க்கையைக் குறிக்கிறது.'மனம் போல் வாழ்வு' என்ற வாசகம் இன்று 'மரம் போல் வாழ்வு' என்றாகி வருகிறது. ஆம்! மரங்கள் பசுமையாக இருக்கும் போதெல்லாம் மனித வாழ்க்கை வளமையாக இருக்கிறது.

தன் வீட்டைச் சுற்றி மரம் வைத்துஇருப்பவர் இந்த உலகின் மிகப் பெரும் செல்வந்தராக மாறிவிடுகிறார்.மரத்தைத் தேடி வரும் பறவைகள், தங்கள் மகிழ்ச்சியை ஒலி எழுப்பிச் சொல்கின்றன. வாகனங்களின் பேரொலியைக் கேட்டு காயம் பட்டுப்போன மனித மனத்தை மயிலிறகால் வருடுவது போல் வருடி, மனம் திருடுகின்றன பறவைகள். பறவைகளுக்கு மட்டுமல்ல, பல மனிதர்களுக்கும் மரங்கள்தான் வீடுகள்.

'ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூத்ததாம்' என பாடலோடு ஒரு விளையாட்டு விளையாடி இருக்கிறோம். இருவர் எதிரெதிரே நின்று, இரண்டு கைகளையும் கோர்த்து தலைக்கு மேலே கோபுரம் போல் உயர்த்தி நிற்க, சிறுவர்கள் அவர்களிருவருக்கும் இடையில் உள்ள இடத்தில் ஒவ்வொருவராக நடந்து செல்வார்கள்.

சாலையின் இருபுறமும் நிற்கும் மரங்கள் தன் கிளைகரத்தால் கைகுலுக்கி, வெப்பத்தில்இருந்து நம்மைக் காப்பது, சிறுபருவ விளையாட்டை நினைவுபடுத்துவதாக இருக்கின்றது.

எப்போதும் புன்னகைத்துக் கொண்டே இருக்கின்றன பூத்துக் குலுங்கும் மரங்கள். மணமக்களை பெரியோர்கள் பூக்கள் தூவி, 'வாழ்க பல்லாண்டு' என வாழ்த்துவதைப் போல, மரங்களடர்ந்த சாலையில் பயணம் செய்யும் போது நமது பயணம் சிறக்க பூக்களைத் தூவி வாழ்த்துகின்றன.

மரங்கள். காலையிலும் மாலையிலும் நடையாளர்களின் நண்பனாகவும், மதிய வேளையில் அன்னையாகவும் மாறிவிடுகிறது மரம்.உழைத்துக் களைத்துவருபவரின் உள்ளச் சோர்வையும், உடல் சோர்வையும் ஒரு நிமிடத்தில் நீக்கி, கட்டணமில்லா மருத்துவராக இருக்கின்றன மரங்கள்.

அன்னையின் அருமையை இல்லாத போதும், மரங்களின் அருமையை கோடையிலும் நாம் உணரலாம். வியர்த்து விறுவிறுத்து வருகின்ற போது, எங்கேனும் ஒரு மரம் இருக்காதா எனத் தேடி அலையும் நமது கண்கள். அப்போதுதான் மரத்தின் மாண்பினை நம் மனம் உணரும். அப்படி எங்கேனும் ஒரு மரம் தென்பட்டால், அந்த மரத்தின் நிழலில் ஒரு பெருங்கூட்டம் கூடி மகிழ்ந்து கொண்டிருக்கும்.

வகுப்பறையில் மாணவர்களிடம் ஒரு ஓவியம் வரையச் சொன்னால், அவர்கள் உடனே வரைவது ஒரு மரமாகத்தான் இருக்கும். ஒரு இயற்கைக் காட்சி வரைந்து வா என்றுசொன்னால், ஒரு வீட்டை வரைந்து அதன் இருபுறமும் மரங்களை வரைந்து, வீட்டின் முன்புறம் ஓர் ஆறும், பின்புறம் மலையும், வானிலே நான்கைந்து பறவைகள் பறப்பது போலவும்தான் மாணவர்கள் வரைவார்கள்.'வீட்டிற்கொரு மரம்' என்பது இப்படியாகத்தான் விதைக்கப்பட்டிருக்கிறது

இந்த மண்ணில் நாம் வாழ்ந்ததற்கு அடையாளமாக ஏதேனும் விட்டுச்செல்ல வேண்டுமென்றால், அது ஆளுக்கொரு மரம் நடுவது என்பதை மனிதர்களுக்கு புரிய வைக்க வேண்டும்.

மரமும் மனிதனும் மரத்திற்கும் மனிதனுக்கும் நிறைய ஒற்றுமைகள் உள்ளன. நம் வீட்டில் ஒரு குழந்தை தாயின் கருவறையிலிருந்து பிறப்பதைப் போல மண்ணிலிருந்து வெளிவருகிறது ஒரு மரம், சின்னஞ்சிறு செடியாக. மண்ணை முட்டிவரும் ஒரு விதை தனக்கான முதல் தன்னம்பிக்கையை மனிதகுலத்திற்கு விதைக்கிறது. குழந்தைகளிடம் பிள்ளைப் பருவத்திலேயே தன்னம்பிக்கையை விதைத்திடுங்கள் என்பதை நமக்குச் சொல்லாமல் சொல்கிறது.

சற்றே வளரத் தொடங்கும் போது, நம் வீட்டுப் பிள்ளைகள் பள்ளி செல்வதை உணர்த்துகிறது. செடிவளர்ந்து கிளை பரப்பி தன்னைச் சுற்றி நிழலால் நிரப்பி பூக்கத் தொடங்குகிறது.

குழந்தை வாலிபப் பருவத்தை அடைந்து மணமாவதற்குத் தயாராவதை இது காட்டுகிறது. மணமாகி குழந்தை பெறுவதை, மரமானது பூத்துக் காய்த்து, கனியாகி தன் சந்ததியைப் படைக்க உள்ளோம் என்பதைக் காட்டுகிறது.

தன் செல்வத்தை வறியவர்களுக்கு அள்ளித் தரும் வள்ளல் போல, மரம் தன்னிடம் உள்ள பூக்களை, காய்களை கனிகளை தன்னை நாடிவருகிறவர்களுக்குத் தந்து பசி தீர்க்கிறது. தந்தையால் கிடைக்கும் சொத்தையும், சுகத்தையும் அனுபவிக்கும் ஒரு மகன் அவரது முதுமைக் காலத்தில் தாங்கிப் பிடிக்க வேண்டும். இதைத்தான் ஆலமரம், மனித இனத்திற்கு உணர்த்துகிறது.

இப்படியாக மரமும் மனிதனும் ஒன்று.மனிதம் வளர்க்கும் மரம் மனிதனின் முதல் நண்பன்.

திருக்குர்ஆன் மரம் பற்றி பல இடங்களில் பேசுகிறது.

மரங்களோடு முஸ்லிமை நெருக்கமாக்கி வைக்கும் விதமாகவே அது அமைந்துள்ளது.

جاءت كلمة شجرة في القرآن الكريم مفردة في نحو تسعة عشر موضعا ومجموعة في نحو ستة مواضع، أما كلمة زرع ومشتقاتها فوردت في نحو ثلاثة عشر موضعا .

மரம் என்ற சொல் தனியே 19 இடத்திலும், இன்னொன்று சேர்த்து ஜைத்தூன் மரம் என்பது போல ஆறு இடத்திலும் சொல்லப்பட்டது. மரம் வளர்த்தல், விவசாயம் செய்தல் என்பது சுமார் 13 இடங்களில் கூறப்பட்டுள்ளது,

கலிமா தய்யிபாவை அல்லாஹ் ஆகாயமளவு வளர்ந்திர்க்கும் மரத்துடன் ஒப்பிடுகிறான்.

கலிமா தைய்யிபாவுக்கு அல்லாஹ் எவ்வாறு உவமை கூறியுள்ளான். என்பதை நீர் பார்க்கவில்லையா? மணமிக்க ஒரு மரத்தைப் போன்று அதனுடைய ஆணி வேர் (பூமியில்) பதிந்ததாகவும், அதனுடைய கிளை வானளாவியதாகவும் இருக்கிறது. (அல் குர்ஆன் 14:24)

தம்முடைய ரப்பின் உத்தரவு கொண்டு எல்லா நேரங்களிலும் அதனுடைய கனியை அது கொடுத்துக் கொண்டிருக்கும். அல்லாஹ் (இந்த) உவமைகளை மனிதர்களுக்காக, அவர்கள் நல்லுபதேசம் பெறுவதற்காக விளக்குகிறான். (14: 25)

முஃமின்களை இவ்வுலக வாழ்விலும், மறுமையிலும் (கலிமா தய்யிபா என்னும்) உறுதியான சொல்லை கொண்டு அல்லாஹ் நிலைப்படுத்துகிறான். (14: 27)

"லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர ரஸூலுல்லாஹ் "– வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை. முஹம்மது நபி (ஸல்) அல்லாஹ்வின் தூதராக இருக்கிறார்கள் என்ற கலிமா தைய்யிபா எனும் இஸ்லாமிய மார்க்கத்தின் கொள்கைச் சாரமானது முஸ்லிமின் இதயத்தில் ஆழ வேரூன்றி அவரது வாழ்வெங்கும் பரவிப் படர்ந்திருக்கிறது என்ற

**அருமையான**

கருத்தை – அற்புதமான சிந்தனையை மரத்துடன் ஒப்பிட்டு இறைவன் பேசுகிற போது ஒரு முஃமினுக்கு மரத்துடனான நட்பும் நெருக்கமும் இறுக்கமாகிவிடுகிறது,

அதே கெட்ட நிராகரிப்போரையும் மரத்தோடுதான் இறைவன் ஒப்பிடுகிறான் .

وَمَثَلُ كَلِمَةٍ خَبِيْثَةٍ كَشَجَرَةٍ خَبِيْثَةِ ۨاجْتُثَّتْ مِنْ فَوْقِ الْاَرْضِ مَا لَهَا مِنْ قَرَارٍ

(நிராகரிப்போரின்) கெட்ட வாக்கியத்திற்கு உதாரணம் கெட்ட மரமாகும்; பூமியின் மேல் பாகத்திலிருந்தும் (அதன் வேர்) பிடுங்கப்பட்டிருக்கும்; அதற்கு நிலைத்து நிற்கும் தன்மையுமில்லை. (அல்குர்ஆன் : 14:26)

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 4**

(தாவரங்கள் நகர்ந்து இடம் மாறுமா...? மாறும்.)




உலகில் தாவரங்கள் சுமார் 350,000 தாவர வகைகள் உள்ளதாக மதிப்பிடப்படுகின்றது. இவற்றுள் 287,655 இனங்கள் வரை அடையாளம் காணப்பட்டுள்ளன.

பொதுவாக எல்லோருக்கும் தெரிந்த மரங்கள், செடிகள், கொடிகள், புற்கள் போன்றவை மட்டுல் அல்லாமல் பன்னங்கள் (ferns), பாசிகள் (ஆங்கிலத்தில் அல்கே என்பர்), போன்றவையும் தாவரங்களே. இதில் எந்த வகை தாவரமும் இடம் பெயராது என்பதே இயற்கையின் நியதி

இதனால்தான் தாவரம் (Plant) அல்லது "நிலைத்திணை" என்பது மரம், செடி, கொடி, புற்கள் போன்றவற்றைக் குறிக்கும் ஒரு பெரும் உயிரினப் பிரிவாகும்.

இவ்வகை உயிரினங்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு தானே நகராமல் இருப்பதால் இவைகளை நிலைத்திணை என்பர்.

நபி ( ஸல் ) அவர்கள் காலத்தில் அபூ துஜானா (ரலி) என்ற நபித்தோழர் , பஜ்ர் தொழுது முடித்துவிட்டால் விரைவாக வெளியேறி விடுவார் . நபி (ஸல்) அவர்களுடைய துஆ வைக் கேட்கின்ற வரையில் பொறுமையாக இருக்க மாட்டார்.

ஒரு நாள் இதுபற்றி அந்நபித் தோழரிடம் கேட்டார்கள் :

"எனது பக்கத்து வீட்டு பேரீத்தப் பழங்கள் என் வீட்டில் விழுகின்றன என் குழந்தைகள் விழித்து எழுந்ததும் பசியினால் அப்பழங்களை எடுத்து சாப்பிட்டு விடுகிறார்கள். ஒரு நாள் என் குழந்தை தனது வாயில் ஒரு பழத்தை சாப்பிட முயற்சிக்கும் போது வாயில் கையை விட்டு வெளியே எடுத்து விட்டேன்.

" மகனே ..! மறுமையில் உன் தந்தையை இழிவுப்படுத்தி விடாதே " என்று என் குழந்தைகளிடம் சொன்னேன். பசியின் கொடுமையால் என் மகன் அழுதான்.என் உயிர் பிரிந்தாலும் உனது வயிற்றில் அதை நுழைய விடமாட்டேன் " என்று கூறினேன் .பின்னர் அப்பழத்தை உரியவரிடம் சேர்த்து விட்டேன். ஆகவே அவர்கள் விழிப்பதற்கு முன்பே அவைகளை எடுத்து பக்கத்து வீட்டில் ஒப்படைக்க விரைகிறேன்" .

இவ்வாறு அந்தத் தோழர் கூறி முடித்த போது , பெருமானாரின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தொடியது .

நபி (ஸல்) அவர்கள் அந்த பக்கத்து வீட்டுக்காரரிடம் :

"இந்த ஒரு மரத்திற்கு பகரமாக சுவனத்தில் 10 மரத்திற்கு நான் பொறுப்பேற்கிறேன். சுவனத்து மரங்கள் அவற்றின் வேர்கள் பச்சை மரகதம் அவற்றின் தண்டுகள் செந்நிறத் தங்கம் அவற்றின் கிளைகள் வெண் மாணிக்கமுத்துக்கள் அம்மரத்தில் எத்தனை பழங்கள் இருக்கிறதோ அத்தனை ஹூருல் ஈன் பெண்களும் உமக்கு கிடைப்பார்கள். இந்த ஒரு மரத்தை தோழருக்கு கொடுத்து விடு" என்றார்கள்

அவன் " நான் தவணைக்கு விற்பவன் அல்லன் ; ரொக்கத்திற்கு விற்பவன்" என்றான் .

உடனே அபூபக்கர் (ரலி ) அவர்கள் பாய்ந்து வந்து மதீனாவில் செழிப்பான இடத்தில் உள்ள 10 பேரீத்தம் மரங்களை கொடுத்து இந்த மரத்தை அபூதுஜானா (ரலி) அவர்களுக்கு அன்பளிப்பு செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களிடம் "உமக்கு சுவனத்து அந்த 10 மரங்களுக்கு நான் பொறுப்பேற்கிறேன் " என்றார்.

அந்த நயவஞ்ச பக்கத்து வீட்டுக்காரன் தன் மனைவியிடம் நடந்த சம்பவத்தைக் கூறி 10 பேரீத்த மரங்களும் நமக்கு கிடைத்துள்ளது . நம் வீட்டில் நிற்கும் பேரீத்த மரத்தையும் நாம் அனுபவித்தக் கொள்ளலாம் "என்றான்

அன்று இரவு தூங்கி விழித்தபோது , அல்லாஹ்வின் மாபெரும் சக்தியால் அம்மரம் அபூதுஜானா (ரலி) அவர்களின் வீட்டிற்கு பின்புறம் இடம் பெயர்ந்து வந்து விட்டது.

தாவரங்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு தானே நகராமல் இருப்பதால் இவைகளை "நிலைத்திணை" என்பர்

ஆனால் அபூதுஜானா (ரலி) அவர்களின் வீட்டிற்கு பின்புறம் இடம் பெயர்ந்து வந்த பேரீத்தம் மரம் நிலைத்திணை தானா ?

ர.ரா

**தாவரங்களின் உலகம் 5**

(தாவரங்கள் பேசும்)




இங்கிலாந்து இளவரசர் சார்லஸ் இருபது ஆண்டுகளுக்கு முன்பு கூறுகையில், " நான் அரண்மனைத் தோட்டத்தில் உள்ள செடி, கொடிகளுடன் பேசுகிறேன். நான் பேசும்போது அவை மலர்ச்சியுடன் காணப்படுகின்றன. என் பேச்சுக்கு அவை பதில் அளிப்பதையும் என்னால் உணர முடிகிறது. இதுபற்றி ஆய்வு செய்ய வேண்டும்" - என கேட்டுக் கொண்டார்.

ஷேக்ஸ்பியரின் இலக்கியங்களை ஒலிபெருக்கி மூலம் ஒளிபரப்பப்பட்டன. பூந்தொட்டிகளில் ஹெட்போன்கள் வைத்து தாவரங்கள் கேட்கும்படி செய்து, ஆய்வு நடத்தினர். இதன் மூலம் செடிகளின் வளர்ச்சி பலன் தரும் அளவு கணிசமாக அதிகரித்தது.

தாவரங்கள் சந்தோஷமான, துக்கமான விஷயங்களை அருகிலுள்ள தாவரங்களோடு பகிர்ந்துகொள்வது கண்டறியப்பட்டன.

அதாவது ஒரு செய்தி அல்லது சம்பவத்துக்கு ஏற்ப அதன் பாகங்கள் இரசாயன மாற்றங்கள் ஏற்படுகின்றன. அந்த ரசாயன மாற்றம் காற்றில் கலந்து பரவுகிறது. அருகில் உள்ள தாவரம் ஈர்த்து அதனை உணர்ந்து கொள்கிறது.

பூச்சிகள் படையெடுத்து வருவது தேனீக்கள் தேனை சுவைக்க வருவது மனிதர்களின் செயல்கள் விலங்குகளின் செயல்கள் அனைத்துக்கும் சப்தமில்லாமல் தகவல்களாக பரப்பப்படுகின்றன.

இந்த ஆய்வில் ஈடுபட்ட கலிபோர்னியா பல்கலைக்கழக ஆய்வாளர் ரிச்சர்ட் கார்பன் கூறுகையில், "தாவரங்கள் மிக இரகசியமாகப் பேசிக் கொள்கின்றன. எங்களின் ஆய்வில் தக்காளி செடிகளை மனிதன் பேச்சுக்கு அதிகமாக பதில் அளித்தன " என்றார் .

ஈத்தங் கட்டை (பேரீத்த மரக்கட்டை) மீது நின்று கொண்டு நபி (ஸல்) அவர்கள் குத்பா பிரசங்கம் செய்வார்கள். மஸ்ஜிதில் வேறு ஒரு பிரசங்கம் மேடை கட்டப்படவே, அந்த பழைய பேரீத்த மரக்கட்டை விட்டும் புதிய பிரசங்க மேடையில்பால் நபி (ஸல்) அவர்கள் திரும்ப, அந்தப் பழைய கட்டை மழலை சப்தம் போன்றும் , சூல் நிறைந்த ஒட்டகம் முனங்குவது போன்றும் அழுதது.

நபி (ஸல்) அவர்கள் அந்த பேரீத்தங்கட்டையை எடுத்து அணைத்துக் கொண்டு, " நீ இருந்த தோட்டத்திற்கு போகிறாயா..? அல்லது சொர்க்கம் போகிறாயா...? என கேட்க,

" நான் சொர்க்கம் போகிறேன் " என்று எல்லோரும் கேட்கும்படி பேரித்தங்கட்டை சொன்னது.

ஒரு காட்டரபியிடம் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தின்பால் அழைக்க, அந்த காட்டரபி " நீங்கள் நபி என்பதற்கு சாட்சி வேண்டும்" என்றார்

நபி (ஸல்) அவர்கள் ஒரு மரத்தைப் பார்த்து இந்த மரம் சாட்சி பகரும் என்றார்கள் .

உடனே அந்த மரம் வேரோடும் தூரோடும் பூமியைப் பிளந்து கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்து, " நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுடைய ரசூல் என்று சாட்சி சொல்கிறேன் " என்று கூறியது.

அதைக்கண்ட காட்டரபி அக்கணமே இஸ்லாத்தை ஏற்றார்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 6**

மரம் செடி கொடிகளை மனிதனால் உருவாக்க முடியுமா?



நிச்சயமாக இறைவன்தான், வித்துகளையும, கொட்டைகளையும் வெடித்து முளைக்கச் செய்கிறான்; இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றை வெளிப்படுத்துகிறான், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் அவனே வெளிப்படுத்துகிறான்; அவனே உங்கள் இறைவன்- எப்படி நீங்கள் திசை திருப்பப்படுகிறீர்கள்? - குர்ஆன் 6:95

“உங்களுக்கு வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உணவளிப்பவன் யார்? உங்கள் செவிப்புலன் மீதும், உங்கள் பார்வைகளின் மீதும் சக்தியுடையவன் யார்? இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? அகிலங்களின் அனைத்துக் காரியங்களையும் திட்டமிட்டுச் செயல்படுத்துபவன் யார்?” என்று நபியே! நீர் கேளும். உடனே அவர்கள் “இறைவன்” என பதிலளிப்பார்கள்; “அவ்வாறாயின் அவனிடம் நீங்கள் பயபக்தியுடன் இருக்க வேண்டாமா?” என்று நீர் கேட்பீராக.

-குர்ஆன் 10:31

'நீங்கள் மூட்டுகிற நெருப்பைப் பற்றி சிந்தித்தீர்களா? அதற்குரிய மரத்தை நீங்கள் உருவாக்கினீர்களா? அல்லது நாம் உருவாக்கினோமா?'

-குர்ஆன் 56:71,72

இந்த மூன்று வசனங்களையும் ஒரு மனிதன் ஆழ்ந்து சிந்தித்தான் என்றால் இறைவனின் ஆளுமையை உணரத் தொடங்கி விடுவான். நாம் பார்க்கும் விதைகள் அனைத்தும் கிட்டத் தட்ட இறப்பு நிலைக்கே சென்று விடுகிறது. பல மாதங்கள்: பல வருடங்கள் கழித்து நீங்கள் ஒரு விதையை பூமியில் போட்டு சிறிது தண்ணீரை ஊற்றினால், நிலத்தை பிளந்து கொண்டு செடிகளாகி பின்னர் மரங்கள் வெளியாவதை நாம்

பார்ப்போம். இது எவ்வாறு சாத்தியமாகிறது? இத்தனை நாளும் சூரிய ஒளி கூட படாது இருட்டறையிலே இருந்த இந்த விதைக்கு எவ்வாறு உயிர் வந்தது? யார் கொடுத்தது? என்றாவது சிந்தித்திருக்கிறோமா?

மரம் வளர்ப்பதை நன்மையை தேடிக் கொள்ளும் ஒரு வழியாக பெருமானார் (ஸல்) அவர்கள் நமக்குச் சொல்லிக் காட்டினார்கள்

எந்தவொரு முஸ்லிமாவது ஒரு மரத்தை நட்டால் அல்லது ஒரு பயிரை விளைவித்தால் அதிலிருந்து ஒரு மனிதனோ அல்லது பறவையோ அல்லது விலங்கோ உண்ணும் காலமெல்லாம் அவருக்கு அது தர்மமாக அமையும். (புகாரி 2320)

அடுத்து,

ஒரு முஸ்லிம் மரம் நட்டால் அதிலிருந்து உண்ணப்படுவது அவர் செய்த தர்மமாகும். அதிலிருந்து திருடப்படுவதும், அதிலிருந்து விலங்குகள் சாப்பிடுவதும் , பறவைகள் சாப்பிடுவதும் அவர் செய்த தர்மமேயாகும். அம்மரத்திலிருந்து ஒரு குச்சியை யாராவது ஒடித்துச் சென்றாலும் அதுவும் அவர் செய்த தர்மமே!

இந்த நபி மொழிகளை கேட்கிற போது நாம் ஒரு மரத்தையாவது வைத்து விடவேண்டும் என்ற எண்ணம் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் ஏற்படும்.

மரம் நடுவதற்கான கூலி – ஒரு மரம் நட்டதற்கான பணச் செலவு, நேரம் , உழைப்பின் அளவுக்கானது மட்டுமல்ல

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு மனிதர் ஒரு மரத்தை நட்டால் அம்மரத்தில் விளையும் மொத்தத்தையும் அவருக்கான கூலியாக அல்லாஹ் எழுதாமல் இருப்பதில்லை. ( அஹ்மது)

‘உங்களில் ஒருவரின் கையில் மரச்செடியொன்று இருக்கும் நிலையில் மறுமை வந்து விட்டது என்றிருந்தாலும் அவர் அச்செடியை நாட்டிவிடட்டும்’ (ஆதாரம் : அஹ்மத்)

மரங்களை பராமரிக்க பெருமானார் உத்தரவிட்டார்கள் அற்புதமாக மரங்களை பராமரிக்க பெருமானார் உத்தரவிட்டார்கள்

மக்கள் மரங்களிடமும் உடனடி பலனை எதிர்பார்க்கிறார்கள். பழ மரங்கள் நட்டாலும் பலன் தரும் வரை காத்திருக்கும் பொறுமை வேண்டும்.

ஒருவர் ஒரு மரத்தை நட்டு அதை பொறுமையுடன் பாதுகாத்து அது பழம் தரும் வரை பராமரித்தார் எனில் அந்த பழம் ஒவ்வொன்றிலிருந்தும் கிடைக்கிற நன்மைகள் அல்லாவிடம் அம்மனிதர் செய்த தர்மமாக கருதப்படும்

நேரடியாக மரம் வளர்க்க ஆர்வமூட்டியது மட்டுமல்லாது, மறைமுகமாகவும் மரங்களை வளர்க்க பெருமானார் (ஸல்) அவர்கள் அற்புதமாக ஆவலை ஏற்படுத்தினார்கள்

" சுப்ஹானல்லாஹில் அழீம் வ பிஹம்திஹி " என்று ஒருவர் சொன்னால், அவருக்காக சொர்க்கத்தில் ஒரு மரம் நடப்படுகிறது என்று கூறினார்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள்.

ர. ரா

**தாவரங்களின் உலகம் 7**

(பீகாரும். மரம் வளர்ப்பும் )




பீகாரின் பகல்பூர் மாவட்டத்தில் இருக்கும் கிராமம் தர்காரா. பிறக்கும் குழந்தை பெண்ணாக இருந்தால், குறைந்தது பத்து மாமரங்களை நடுவது இங்கே வழக்கம். இவ்வழக்கம் எப்போதிலிருந்து பின்பற்றப்படுகிறது என்று யாருக்கும் தெரியவில்லை. ஆனால் பரம்பரை பரம்பரையாக ஒரு சடங்காகவே மேற்கொள்ளப்பட்டு வருகிறது. ( நல்ல சடங்கு ! )

இக்கிராமத்தில் வசிக்கும் சுபாஷ்சிங் ஒரு சிறுவிவசாயி. இருபது ஆண்டுகளுக்கு முன்பு இவருக்கு மகள் பிறந்தாள். நிகாகுமாரி என்று பெயர் வைத்து, ஊர் வழக்கப்படி பத்து மாங்கன்றுகளை நட்டு வளர்த்தார்.

இந்த இருபது ஆண்டுகளில் மகள் திருமணத்துக்கு செலவு செய்யவேண்டுமே என்றெல்லாம் சுபாஷ்சிங் என்றுமே கவலைப்பட்டதில்லை. சமீபத்தில் நிகாகுமாரிக்கு ஜாம் ஜாமென்று திருமணம் நடந்தது. மாப்பிள்ளை அரசுப்பள்ளியில் வாத்தியார்.

"என் மகள் வளரும்போது அவளோடு சேர்ந்து, அவளுக்காக நான் நட்ட மாமரங்களும் வளர்ந்தது. மூன்றே ஆண்டுகளில் காய்க்க ஆரம்பித்தது. பழங்களை சந்தையில் விற்கத் தொடங்கினேன். இத்தனை ஆண்டுகளாக இதில் கிடைத்த வருமானம், எனது மகளின் திருமணச் செலவினை விட பன்மடங்கு அதிகம்" என்று பி.பி.சி. தொலைக்காட்சிக்கு அளித்த நேர்காணலில் சொன்னார் சுபாஷ்சிங்.

ஒரு நடுத்தர அளவிலான மாந்தோப்பு, ஒவ்வொரு வருடமும் ரூபாய் ரெண்டு லட்சம் வரை வருமானத்தை வழங்குகிறது.

அடுத்து ,

ஒற்றை ஆளாக 10 ஆயிரம் மரங்களை நட்டு குறுங்காட்டை உருவாக்கிய பீகார் மாநிலம் கயா மாவட்டத்தை சேர்ந்த சத்யேந்திர கவுதம் மஞ்சி, பால்கு ஆற்றின் தீவுப்பகுதியில் 10 ஆயிரம் மரங்களை நட்டு ஒரு குறுங்காட்டினை உருவாக்கியிருக்கிறார்.

பீகார் மாநிலம், கயா மாவட்டத்தின் பெலகஞ்ச் பகுதியில் உள்ள இமலியாச்சக் என்ற சிறிய கிராமத்தைச் சேர்ந்த சத்யேந்திர கவுதம் மஞ்சி, பால்கு ஆற்றிலுள்ள ஒரு தீவின் தரிசு நிலங்களில் பெரிய பழத்தோட்டத்தை சொந்தமாக நட்டு உருவாக்கியுள்ளார். 15 ஆண்டுகளுக்கு முன்பு 'மலை மனிதன்' தஷ்ரத் மஞ்சியால் ஈர்க்கப்பட்ட இவர், அப்போதிலிருந்து 10,000 மரங்கள், பெரும்பாலும் கொய்யாவைக் கொண்ட பழத்தோட்டத்தினை உருவாக்கும் வேலைகளைத் தொடங்கியதாக கூறினார்.

மலை வழியாக ஒற்றையடிப் பாதையை தனது கைகளாலேயே உருவாக்கிய தஷ்ரத் மஞ்சி ஒரு நாள் தனது வீட்டிற்கு வந்ததை நினைவு கூர்ந்த கவுதம் மஞ்சி. "தஷ்ரத் மன்ஜி இந்த பகுதியில் ஒரு பழத்தோட்டத்தை நடவு செய்யச் சொன்னார்.

அந்த நேரத்தில் இந்த இடம் தரிசாகவும், வெறிச்சோடியும் இருந்தது. அப்போது எல்லா இடங்களிலும் மணல் மட்டுமே இருந்தது. ஆரம்பத்தில் இது மிகவும் சிரமமாக இருந்தது. வீட்டிலிருந்து ஒரு தொட்டியில் தண்ணீர் கொண்டு வந்து செடிகளுக்கு தண்ணீர் ஊற்றினேன்"என்று அவர் கூறினார்.

மேலும்"ஆரம்பத்தில் விலங்குகள் தாவரங்களை அழித்தன, நான் காட்டில் இருந்து முள் புதர்களைக் கொண்டு வந்து வேலிகள் உருவாக்கினேன். அந்த வேலிகள் இன்னும் என் பழத்தோட்டத்தை பாதுகாக்கிறது.

பீகார் முதலமைச்சர் நிதீஷ்குமார் சுற்றுச்சூழல் பாதுகாப்புக்கு நான் செய்த பங்களிப்பு பற்றி அறிந்து, என்னை குழந்தைகள் பாதுகாப்பு ஆணையத்தில் உறுப்பினராக்கினார்" என்று தெரிவித்தார்.

சதேந்திர கவுதம் மஞ்சி மகத் பல்கலைக்கழகத்தில் எம்.ஏ. பட்டம் முடித்திருக்கிறார். சிறுவர் பாதுகாப்பு ஆணையத்தின் முன்னாள் உறுப்பினராக இருந்த இவர், தற்போது மகத் பல்கலைக்கழகத்தில் செனட்டில் உறுப்பினராக இருந்தபடியே தனது பழத்தோட்டத்தை தொடர்ந்து கவனித்து வருகிறார்.

இவர் நடவு செய்த கொய்யாக்களில் பெரும்பாலானவை அலகாபாத் கொய்யா வகையைச் சேர்ந்தவை, அவை உயர் தரமானதாகக் கருதப்படுகின்றன. தற்போது கொய்யாவை விற்பனை செய்வதன் மூலம் லாபம் ஈட்டத் தொடங்கியுள்ளதாக கூறும் அவர் "இந்த நாட்டு மரங்களை மக்கள் நடவு செய்யத் தொடங்குமாறு கேட்டுக்கொள்கிறேன்" என தெரிவித்தார்.

இஸ்லாமியர் செய்ய வேண்டிய அரும்பணியை சகோதர சமுதாயத்தவர்கள் செய்து முடித்திருக்கிறார்கள். காரணம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது .

இஸ்லாம் மரங்களை நட்டு வளர்ப்பதை ஓர் இபாத்த்தாகப் பார்க்கின்றது. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “அடுத்த கணம் மறுமை வருவதாக இருந்தாலும் உங்கள் ஒருவரின் கையில் ஒரு மர விதை இருந்தால் அதை நாட்ட முடியுமான சந்தர்ப்பமாக இருந்தால் அதை நாட்டி விடுங்கள்”

(புஹாரி, அஹ்மது)

இன்னுமொரு முறை “ஒரு முஸ்லிம் ஒரு மரத்தை நட்டு அதிலிருந்து ஒரு மனிதனோ அல்லது ஒரு உயிரினமோ உண்டால், அதனால் அவருக்கு ஒரு தர்மம் செய்ததற்கான நன்மை கிடைத்துவிடும்.” (முஸ்லிம்)

நாம் மரணித்தாலும் மரம் உயிர் வாழும் வரை நமது மண்ணறைக்கு ஸதகா - ஜாரியாவுடைய நன்மைகள் வந்து சேர்ந்துகொண்டே இருக்கும் இன்ஷா அல்லாஹ்!

மரம் மண்ணின் வரம், வளர்ப்பதே மனித அறம்.

ரஹ்மத் ராஜகுமாரன்

## தாவரங்களின் உலகம் 8

(சந்தன சாம்புராணி மரங்கள்)



சந்தன மரம் என்றாலே அதன் வாசனைதான் எல்லோர் ஞாபகத்துக்கும் வரும். ஆனால், சந்தன மரம் வளரும் விதத்தை அறிந்தால், அதுதான் இனிமேல் உங்களுக்கு ஞாபகத்தில் வரும்.

வேப்பம் மரம், புங்க மரம் என நீங்க விரும்பும் மரத்தை நினைத்த இடத்தில் தனியாக வளர்க்கிறீர்கள் இல்லையா? ஆனால், சந்தன மரத்தை இப்படித் தனியாக வளர்க்க முடியாது. சந்தன மரத்தை வேறு மரங்களுக்குப் பக்கத்தில்தான் வளர்க்க முடியும். காரணம் ....

சந்தன மரத்தின் வேர் ஒரு ஒட்டுண்ணி. அதனால், ஒரு மரத்துக்குத் தேவையான எல்லா ஊட்டச்சத்துகளையும், மண்ணிலிருந்து அவற்றால் நேரடியாகப் பெற முடியாது. நிலத்துக்கு அடியில் இதன் பக்கத்தில் உள்ள வேறு மரத்தின் வேரைத் தேடிச்சென்று ஒட்டிக்கொள்ளும்.

அப்படி ஒட்டிக்கொள்ளும்போது, இதன் வேரில் 'பௌஸ்டோரியா'என்னும் உறுப்பு வளரும். அது பக்கத்தில் உள்ள மர வேரைத் துளைத்துச் சென்று, உயிர் வாழத் தேவையான நைட்ரஜனையும் பாஸ்பரஸையும் எடுத்துக்கொள்ளும்.

அதோடு விட்டுவிடாது, தனக்கு ஊட்டம் தரும் அந்த மரத்தையும் பாதிப்படையச் செய்துவிடும். இதனால் சந்தன மரக்காடுகளில் உள்ள மற்ற மரங்கள் கொஞ்சம் நோஞ்சானாகவே இருக்கும்.

சந்தன மரம் மெதுவாக வளரும் தன்மைக்கொண்டது. அது ஓரளவு வளரும்வரை மற்றத் தாவரங்கள் எல்லாமே சந்தன மரத்தின் ஆக்கிரமிப்புக்கு உட்பட்டே ஆக வேண்டும். மூக்கைத் துளைக்கும் அளவுக்கு வாசம் வீசும் சந்தன மரக்கட்டையின் இந்தச் செயல், இயற்கையின் விந்தையல்லவா ?

அடுத்து, உலகத்திலே மிகச் சிறந்த சாம்பிராணி ஓமானிலேயே பெறப்படுகின்றது. இயேசு நாதரின் சிறுவயதில் அவருக்கு பரிசாகக் கொடுத்த சாம்பிராணி இங்கிருந்தே ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. அதனால் இந்த நாட்டுக்கு "சாம்பிராணியின் தேசம் " என்ற பெயரும் இருக்கிறது.

சாம்பிராணி யூத, கிறிஸ்த்தவ, இப்றாஹிமிய இஸ்லாம் மதங்களின் பண்பாடுகளுடன் நெருங்கிய தொடர்பை நீண்டகாலமாக (கிமு 300 ) கொண்டிருக்கின்றது. சாம்பிராணி மரத்தை அறபியில் அல் லுபான் எனறழைக்கிறார்கள் .

மரத்தில் வடிந்திருக்கும் இந்தப் பிசின்களை "கண்ணீர் " என அழைக்கிறார்கள். (காரணம் கடைசியில் புரிந்து கொள்வீர்கள் ) சந்தன மரத்தின் பட்டைகளில் கத்தியினால் சுரண்டி விடுவார்கள். பத்து நாட்களுக்கு பின்னர் மரப்பட்டைகளிலிருந்து கசிந்து கட்டியாகியிருக்கும், பிசின், றெசின் போன்றவைகளைச் சேகரித்து, குகைகளில் உள்ள அலுமாரிகளில் சுமார் 4 மாதங்களுக்கு முற்றாக உலர்ந்து கட்டியாவதற்கு விட்டுவிடுவார்கள்.

சாம்பிராணியை ஓமானியர்கள் ஒரு சிகிச்சை முறையாகவே கருதுகிறார்கள். காலையில் இந்த சாம்பிராணியை வாய்க்குள் போட்டு மெல்லுவதன் மூலம் பல்லுக்குறுதியும், மூச்சுக்கு புத்துணர்வும் கிடைக்கிறது எனவும், மூட்டு அழற்சியையும், மன இறுக்கத்தையும் நீக்குகின்றது எனவும் நம்புகின்றார்கள்.

நீரிழிவு, வயிற்று அழற்சி, இரைப்பை புண்கள் போன்றவற்றை நீக்குவதற்கு மருந்தாகவும் சாம்பிராணி பாவிக்கப்படுகின்றது. சாம்பிராணி எரித்து காற்றைத் தூய்மையாக்கி, நோய்களைத் தடுத்து, பாதுகாப்புணர்வையும், புத்துணர்ச்சியான நல்ல மனநிலையையும் தருகின்றது என ஓமானின் வாய்மொழி வழக்காறுகள் கூறுகின்றன.

இன்றைக்கு அண்ணலெம் பெருமானார் நபி (ஸல்) அவர்களின் ரவ்ளா ஷரீபில் சாம்பிராணி புகை தூபம் .

(ஹஜ் 2018 ஹஜ்ஜின் போது வெளியிட்ட என் பதிவு)

சாம்பிராணி வாடை மிகவும் அற்புதமாக இருந்தது. அந்த நறுமணத்தில் நபிகளாரின் கஸ்தூரி வாடையும் கலந்திருந்தது . தூபம் போடுபவர் மதீனாவாசியான அன்சாரி . அநேகர் தங்கள் முகத்திற்கு நேராக சாம்பிராணி புகையை படும்படி வீசிக் கொண்டனர் .நானும் தான்.

ஊரில் வீடுகளில் மௌலூது ஓதும்போது சந்தனம் கரைத்து, சாம்பிராணி தூபம் போடுவது வழக்கம் .சந்தனம் , சாம்பிராணி ஏன் என்றால் அதற்கு பின்னாடி ஒரு வரலாற்று பின்னணியே உள்ளது.

நபி ஆதம் (அலை) கோதுமைக்கனி தின்றதால், இறைவனின் கோபத்திற்கு ஆளாகி , அவர்களின் மறைவான இன உறுப்புகள் வெளியே தெரிய , சுவனத்தில் இருந்து பூமிக்கு இறக்கப்பட்டார்கள் . நிர்வாணமாக !

மற்ற மரங்களெல்லாம் நமக்கு ஏன் வீண் நம்பு .இறைவனின் கோபத்திற்கு ஆளாகப்பட்டவருக்கு எப்படி உதவுவது ?அவர் பாடு , அவர் அம்மணம் பாடு என்றிருக்க .....

ச்சே ...ச்சே நபியவர்களுக்கு உதவியே ஆகவேண்டும் என்று சாம்பிராணி மரமும் , சந்தன மரமும் ஆதம் (அலை) அவர்களின் முன், பின் மானத்தை மறைத்தன !

இறைவனின் கலீபாவிற்கு கண்ணியம் கொடுத்ததால் , அந்த இரு மரங்களும் மணம் பெற்றன......ஆனாலும்,

இறைவனின் கோபத்திற்கு ஆளானவருக்கு உதவியதால், சந்தனம் கல்லில் உரைத்தால்தான் மணம் பெறும் . சாம்பிராணி நெருப்பில் இட்டால்தான் மணம் பெறும் என்ற வரலாற்றைப் படித்தது என் ஞாபகத்திற்கு மணம் சேர்த்தது.

வீடுகளில் மௌலூது சபைகளில் மணத்திற்காக மட்டும் அல்ல . நம் ஆதி பிதா அவர்கள் செய்த பாவத்தையும், அதனால் சுவனத்திலிருந்து கீழிறங்கியதையும் , அவர்களின் நிர்வாண மானத்தை இவ்விரு மரங்கள் மறைத்ததையும் ஞாகப்படுத்தவே சாம்பிராணியும் , சந்தனமும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது !

நபிகளார் ரவ்ளாவில் நெருப்பில் இட்ட சாம்பிராணி மணம் கமிழ்ந்தது . கூடவே நம் ஆதி பிதா ஆதம் (அலை) அவர்களின் ஞாபகமும் சேர்ந்தே வந்தது.

**தாவரங்களின் உலகம் 9**

(தாவரங்களின் ஒவ்வாமை)




ஆங்கில மருத்துவத்திற்கு "அல்லோபதி. (நன்கு கவனிக்கவும் ) தாவர இயல் விஞ்ஞானத்திற்கு "அல்லேலோபதி " இது தாவரங்களைப் பற்றி ஆய்வு செய்யும் துறை.

தாவரங்கள் நம்மைப் போல் நட்பும் பாராட்டுகின்றன, பகைமையும் கொண்டும் விரோதிக்கின்றன.

கூஸ்ஃபுட் என்ற செடிக்கு அருகில் லூசான் என்ற செடியை நட்டால் அது பிழைக்காது.

முள்ளங்கி .முட்டைகோஸ், லாரஸ் ஆகியவற்றின் அருகில் திராட்சைக் கொடிகள் வளராது.

ஃபிளாக்ஸ் என்ற பயிரை அறுவடை செய்த பின் அந்த நிலத்தில் கோதுமையைப் பயிரிட்டால், நல்ல விளைச்சல் கிடைக்காது .அதே அந்த நிலத்தில் உருளைக் கிழங்குப் பயிரிட்டால் அமோக விளைச்சல் .

மற்ற உயிரினங்களுக்கு இருப்பதைப் போலவே தாவரங்களுக்கும் தீங்கு செய்யும் விரோதிகள் உண்டு. புலியைக் கண்டதும் மான்கள் ஓடிவிடுவதைப் போல தம் எதிரிகள் தாக்க வரும் போது தாவரங்கள் எழுந்து போக முடியாதுதான்; ஆனால் இருந்த இடத்திலேயே இரசாயன ஆயுதங்களை சுரக்கின்றன இதன் முலம் எதிரியை தாக்குகின்றன !

சில தாவரங்கள் வெளியிடும் ஆவி வடிவ மற்றும் திரவ வடிவச் சுரப்புகள் மூலம் பூச்சிகள் தம்மை தாக்காமல் கவசத்தை உண்டாக்கிக் கொள்கின்றன.

சில தாவரங்களின் விஷக் கனிகள் பார்வைக்கு அழகாக இருந்தாலும் அதை சாப்பிட்டதும் பிராணிகளின் உடம்பில் உடனே ஒவ்வாமையை உண்டாக்கிவிடும். இதனால் தொடர்ந்து மலக்கழிவுகளை வெளியேற்றி பின் மரணம் கூட ஏற்பட வாய்ப்புண்டு .எனவே பிராணிகள் அதனை மோப்ப விட்டே அதன் குணத்தை அறிந்து அதன் அருகில் செல்வதில்லை .

(உ-ம்) ஆடு தின்னா பாலை, எருக்கன் செடி , அரளிச் செடி போன்றவை அழகான பூக்களைப் பூக்கும். ஆனால் அத்தனையும் விஷம் .

ஆதம் (அலை) தம்பதியர்கள் சுவனத்தில் வசித்த போது மல ஜலம் கழிக்கும் மர்ம இன உறுப்புகள் உடலுக்குள் அமிழ்ந்து அங்கு உலாவி வந்தனர்.

சுவனத்தின் பழங்கள் உண்டதும் ஜீரணமாகி வியர்வையாக வெளிப்படும். இதனால் கழிவுகளை வெளியேற்றும் உறுப்புகளோ , இனச் சேர்க்கை உறுப்புகளோ

அத்தம்பதியரின் உடம்பில் இல்லை .

சைத்தானுக்கு தெரியும் இந்த மனிதர் உடலுக்குள் அமிழ்ந்து இருக்கும் இன உறுப்புகளை வெளிக் கொண்டு வர கோதுமை கனி (ஆப்பிள் மரமாக இருக்கலாம் ) என்கிற பூலோகத்து மரம் சொர்க்கலோகத்தில் வளர்ந்திருப்பதால் , இதன் கனிகளை உண்டால் நிச்சயமாக அப்பழம் செரித்து,மலம் ஜலம் கழிக்க வேண்டிய நிலை வரும் .

கழிப்பு உறுப்பு மற்றும் இன உறுப்பு அவர்களின் உடலிலிருந்து அப்போது வெளிப்பட்டே தீரும் . ஆனால் சுவனத்தில் மலம் ஜலம் கழிக்க முடியாது. எனவே சுவனத்தை விட்டு அவர்கள் கீழிறங்கி பூலோகத்திற்கு வந்ததாக வேண்டும்.

தீவிர யோசனைக்குப் பின் அதனை எப்படி செயலாக்கம் செய்ய என்று அவர்களிடம் ஆசை வார்த்தைகளைச் சொல்ல முடிவு செய்தான் .

அவர்களிடம் "இங்குள்ள இந்த மரத்தின் கனிகளை உண்டால் மனிதர்கள் வானவர்களாக ஆகலாம், மரணமற்றவர்களாக வாழலாம் குர்ஆன் ( 7: 20) , நிரந்தர வாழ்க்கையும் , அழிவில்லாத இராஜ்யமும் கிடைக்கும். குர்ஆன் (20 : 120) என்றெல்லம் பொய்யாக சைத்தான் கூறி சத்தியம் செய்துள்ளான் .

உண்மையில் அப்படிப்பட்ட தாவரங்கள் சுவனப்பதியில் இருக்கலாம் .ஆனால் கோதுமைகனி மரத்தின் கனி மர்ம உறுப்பை வெளிப்படுத்தும் என்பதை சைத்தான் அறிந்தே அத் தம்பதியரை உண்ணச் செய்தான் .

فَدَلّٰىهُمَا بِغُرُوْرٍ فَلَمَّا ذَاقَا الشَّجَرَةَ بَدَتْ لَهُمَا سَوْاٰتُهُمَا وَطَفِقَا يَخْصِفٰنِ عَلَيْهِمَا مِنْ وَّرَقِ الْجَـنَّةِ وَنَادٰٮهُمَا رَبُّهُمَاۤ اَلَمْ اَنْهَكُمَا عَنْ تِلْكُمَا الشَّجَرَةِ وَاَقُلْ لَّـكُمَاۤ اِنَّ الشَّيْطٰنَ لَـكُمَا عَدُوٌّ مُّبِيْنٌ

இவ்வாறு, அவன் அவ்விருவரையும் ஏமாற்றி, அவர்கள் (தங்கள் நிலையிலிருந்து) கீழே இறங்கும்படிச் செய்தான் - அவர்களிருவரும் அம்மரத்தினை (அம்மரத்தின் கனியை)ச் சுவைத்தபோது - அவர்களுடைய வெட்கத்தலங்கள் அவர்களுக்கு வெளியாயிற்று; அவர்கள் சுவனபதியின் இலைகளால் தங்களை மூடிக்கொள்ள முயன்றனர்; (அப்போது) அவர்களை அவர்கள் இறைவன் கூப்பிட்டு: "உங்களிருவரையும் அம்மரத்தை விட்டும் நான் தடுக்கவில்லையா? நிச்சயமாக ஷைத்தான் உங்களுக்கு பகிரங்கமான பகைவன் என்று நான் உங்களுக்கு சொல்லவில்லையா?" என்று கேட்டான். (அல்குர்ஆன் : 7:22)

قَالَا رَبَّنَا ظَلَمْنَاۤ اَنْفُسَنَا ٚ وَاِنْ لَّمْ تَغْفِرْ لَـنَا وَتَرْحَمْنَا لَـنَكُوْنَنَّ مِنَ الْخٰسِرِيْنَ

அதற்கு அவர்கள்: "எங்கள் இறைவனே! எங்களுக்கு நாங்களே தீங்கிழைத்துக் கொண்டோம் - நீ எங்களை மன்னித்துக் கிருபை செய்யாவிட்டால், நிச்சயமாக நாங்கள் நஷ்டமடைந்தவர்களாகி விடுவோம்" என்று கூறினார்கள்.

(அல்குர்ஆன்: 7:23)

قَالَ اهْبِطُوْا بَعْضُكُمْ لِبَـعْضٍ عَدُوٌّ‌ وَلَـكُمْ فِى الْاَرْضِ مُسْتَقَرٌّ وَّمَتَاعٌ اِلٰى حِيْنٍ

(அதற்கு இறைவன், "(இதிலிருந்து) நீங்கள் இறங்குங்கள் - உங்களில் ஒருவர் மற்றவருக்குப் பகைவராயிருப்பீர்கள்; உங்களுக்கு பூமியில் தங்குமிடம் இருக்கிறது; அதில் ஒரு (குறிப்பிட்ட) காலம் வரை நீங்கள் சுகம் அனுபவித்தலும் உண்டு" என்று கூறினான்.

(அல்குர்ஆன்: 7:24)

قَالَ فِيْهَا تَحْيَوْنَ وَفِيْهَا تَمُوْتُوْنَ وَمِنْهَا تُخْرَجُوْنَ

"அங்கேயே நீங்கள் வாழ்ந்திருப்பீர்கள்; அங்கேயே நீங்கள் மரணமடைவீர்கள்; (இறுதியாக) நீங்கள் அங்கிருந்தே எழுப்பப்படுவீர்கள்" என்றும் கூறினான்.

(அல்குர்ஆன்: 7:25)

சுவனத்தில் மரணமில்லா பெருவாழ்வு வாழ்ந்த அத் தம்பதியரை பாவம் செய்ய வைத்து, ஒருவருக்கொருவர் பகைவராக்கி , சுவனத்திலிருந்து கீழிறங்கச் செய்து மண்ணுலக வாழ்கைக்குப்பின் 624 துன்பங்கள் துயரங்கள் கொண்ட மரணத்தையும் கொடுத்தது அந்த கோதுமை கனி.

ரஹ்மத் ராஜகுமாரன்]

**தாவரங்களின் உலகம் 10**

தூபா மரம்




இது சுவனத்திலுள்ள மரம். சுவனத்தின் ஒவ்வொரு வீட்டிலும் தூபா மரத்தின் கிளை நீண்டிருக்கும். சுவனத்தின் மரங்கள் மற்றும் கிளைகள் தங்கத்தாலும், வெள்ளியாலும் இருக்கும் அவற்றின் இலைகள் காயாமலும், உதிராமலும் இருக்கும். அம்மரத்தில் உள்ள பல்வேறு வகைப்பட்ட கனி வர்க்கங்கள் பழுத்திருக்கும்.கனியை சுவனவாசிகள் பறிக்க பறிக்க அவைகள் குறையாமலிருக்கும்.

وَبَشِّرِ الَّذِيْنَ اٰمَنُوْا وعَمِلُوا الصّٰلِحٰتِ اَنَّ لَهُمْ جَنّٰتٍ تَجْرِىْ مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ كُلَّمَا رُزِقُوْا مِنْهَا مِنْ ثَمَرَةٍ رِّزْقًا ۙ قَالُوْا هٰذَا الَّذِىْ رُزِقْنَا مِنْ قَبْلُ وَاُتُوْا بِهٖ مُتَشَابِهًا وَلَهُمْ فِيْهَآ اَزْوَاجٌ مُّطَهَّرَةٌ ۙ وَّهُمْ فِيْهَا خٰلِدُوْنَ

(நபியே!) எவர்கள் (இவ்வேதத்தை) நம்பிக்கை கொண்டு (அதில் கூறப்பட்டுள்ளபடி) நற்செயல்களைச் செய்கின்றார்களோ அவர்களுக்கு (சுவனபதியில்) நிச்சயமாக சோலைகள் உண்டு என்று நீங்கள் நற்செய்தி கூறுங்கள். அவற்றில் நீரருவிகள் (தொடர்ந்து) ஓடிக்கொண்டேயிருக்கும். அவற்றிலிருந்து (அவர்களுக்கு) ஒரு கனி புசிக்கக் கொடுக்கப்படும்போதெல்லாம் முன்னர் நமக்குக் கொடுக்கப்பட்டதும் இதுதானே! என

(ஆச்சரியப்பட்டு)க் கூறுவார்கள். (ஏனென்றால்) பார்வைக்கு ஒரே விதமாகத் தோன்றக் கூடியவைகளையே கொடுக்கப் பெறுவார்கள். (எனினும் அவை சுவையில் விதவிதமாக இருக்கும்) பரிசுத்தமான மனைவிகளும் அங்கு அவர்களுக்கு கிடைப்பார்கள். அன்றி அவர்கள் அதில் என்றென்றும் தங்கி விடுவார்கள்.

(அல்குர்ஆன்: 2:25)

لَّا مَقْطُوْعَةٍ وَّلَا مَمْنُوْعَةٍ

அதன் கனிகள் (புசிக்க) தடுக்கவும் படாது. (பறிப்பதால்) குறைவுமுறாது. (ஒன்றைப் பறித்தால், மற்றொன்று அதே இடத்தில் காணப்படும்.) (அல்குர்ஆன் : 56:33)

قُطُوْفُهَا دَانِيَةٌ

அதன் கனிகள் (இவர்கள், படுத்திருந்தாலும் உட்கார்ந்திருந்தாலும், நின்று கொண்டிருந்தாலும், எந்நிலைமையிலும் கைக்கு எட்டக்கூடியதாக இவர்களை) நெருங்கி இருக்கும். (அல்குர்ஆன் : 69:23)

وَدَانِيَةً عَلَيْهِمْ ظِلٰلُهَا وَذُلِّلَتْ قُطُوْفُهَا تَذْلِيْلًا

அதிலுள்ள (மரங்களின்) நிழல்கள் அவர்கள் மீது தாழ்ந்து (சூழ்ந்து) கொண்டிருக்கும். அதன் கனிகள் (சுலபமாகப் பறிக்கக்கூடிய விதத்தில்) அவர்கள் முன் சாய்ந்து வரும்.

(அல்குர்ஆன்: 76:14)

ஒட்டகம் போன்ற பெரிய பெரிய பறவைகள் மரக்கிளையில் வந்து அமரும். சுவனவாசிகள் அப்பறவைகளை உண்ண விரும்பினால், பறவைகள் தானே பறந்து வந்து உணவு விரிப்பில் வந்து அமர்ந்து விடும். அப்பறவைகளின் சில பகுதிகள் வறுக்கப்பட்டும் ,சில பகுதிகள் பொரிக்கப்பட்டும் இருக்கும் சுவனவாசிகள் உண்டு முடித்ததும் மீண்டும் அப்பறவைகள் உயிர்பெற்று பறந்துவிடும் .

ஒவ்வொரு மரத்தின் அடியிலும் பறக்கும் குதிரைகள் இருக்கும். அக்குதிரைகளில் சுவனவாசிகள் விரும்பும் இடங்களுக்கு பறந்தே சென்று வரலாம் .

தூபா மரத்தின் இலைகளினூடே காற்று வீசுவதால் உராய்வு ஏற்பட்டு ராக கீதங்களும், இன்னிசை நாதங்களும் உருவாகும் . அதனை சுவனவாசிகள் அந்த இசையில் திளைத்தவர்களாக இருப்பார்கள் .

("அவதார் " ஆங்கில திரைப்படம் மனக்கண் முன் வருகிறதா? )

அண்ணல் நபி ஸல் அவர்கள் கூறியுள்ளார்கள் :

" தூபா மரத்தினை இறைவன் தன் கையாலேயே நட்டு அதன்மீது தன் ஆவியை ஊதினான் என்றும், அது சுவனவாசிகளுக்கான ஆபரணங்களையும், உடைகளையும் உற்பத்தி செய்கிறது "

நபி இத்ரீஸ் (அலை) அவர்கள் சுவனத்திற்குள் செல்ல ஆசைப்பட்டதும் , மலக்கு இஸ்ராயீல் (அலை) அவர்கள் நபியவர்களை விண்ணகத்திற்கு அழைத்து சென்று, சுவனத்தின் பெரும் காவலர் ரிளுவான் வரும் பாதையில் அமரச் செய்தார்கள் .

சற்று நேரத்தில் ரிளுவான் அவ்வழியே நம்முடைய ஊழியர்களுடன் வந்தார். இஸ்ராயீலையும் அவரருகே ஒரு புது மனிதரையும் கண்டதும், வியப்பு மேலிட்டவராய் " இவர் யார் ? " என்று இஸ்ராயீலிடம் வினவினார்.

இஸ்ராயீல் : " இவர் சுவனத்தை பார்க்க விரும்பினார். அதிலுள்ள இன்ப சுகங்களை கண்டறியின் முன்னே விட இறை வழிப்பாட்டில் அதிகமாக ஈடுபடுவார் " என்றார் .

அப்பொழுது இறைவனின் பேரொளி கம்பீரமாக முழங்கியது.

".... ரிளுவான் என்னுடைய அடியார் இத்ரீஸ் உடைய உள்ளத்தில் உள்ளதை நான் நன்கு அறிவேன் . தூபா என்னும் மரத்திற்கு நான் ஆணையிட்டுள்ளேன். அதன் கிளைகளில் ஒன்றை அவர்பால் தாழ்த்தி, அவர் அதனை பிடித்ததும் அது சுமந்து சென்று சுவனத்தினுள் கொண்டு போய் விடுமாறு கட்டளையிட்டுள்ளேன். அவர் சுவனம் சேர்ந்ததும் அவருக்கு சுவனத்தைச் சுற்றிக் காட்டி அவரை ஆங்கோர் உன்னதமான உயரிய இடத்தில் அமரச் செய்யும் இது என்னுடைய ஆணை" என்றான் .

وَاذْكُرْ فِى الْكِتٰبِ اِدْرِيْسَ اِنَّهٗ كَانَ صِدِّيْقًا نَّبِيًّا ۙ

(நபியே!) இவ்வேதத்தில் இத்ரீஸைப் பற்றியும் நினைவு கூர்வீராக! நிச்சயமாக அவர் ஸித்தீக்காக (மிக்க சத்தியவானாக) நபியாக இருந்தார். (அல்குர்ஆன் : 19:56)

وَّرَفَعْنٰهُ مَكَانًا عَلِيًّا

மேலும், நாம் அவரை ஓர் உயரிய இடத்தில் உயர்த்தினோம்.(அல்குர்ஆன் : 19:57)

**தாவரங்களின் உலகம் 11**

(வாழை மரம்)




فَدَلّٰٮهُمَا بِغُرُوْرٍ‌ فَلَمَّا ذَاقَا الشَّجَرَةَ بَدَتْ لَهُمَا سَوْاٰتُهُمَا وَطَفِقَا يَخْصِفٰنِ عَلَيْهِمَا مِنْ وَّرَقِ الْجَـنَّةِ‌ وَنَادٰٮهُمَا رَبُّهُمَاۤ اَلَمْ اَنْهَكُمَا عَنْ تِلْكُمَا الشَّجَرَةِ وَاَقُلْ لَّـكُمَاۤ اِنَّ الشَّيْطٰنَ لَـكُمَا عَدُوٌّ مُّبِيْنٌ

இவ்வாறு, அவன் அவ்விருவரையும் ஏமாற்றி, அவர்கள் (தங்கள் நிலையிலிருந்து) கீழே இறங்கும்படிச் செய்தான் - அவர்களிருவரும் அம்மரத்தினை (அம்மரத்தின் கனியை)ச் சுவைத்தபோது - அவர்களுடைய வெட்கத்தலங்கள் அவர்களுக்கு வெளியாயிற்று; அவர்கள் சுவனபதியின் இலைகளால் தங்களை மூடிக்கொள்ள முயன்றனர்; (அப்போது) அவர்களை அவர்கள் இறைவன் கூப்பிட்டு: “உங்களிருவரையும் அம்மரத்தை விட்டும் நான் தடுக்கவில்லையா? நிச்சயமாக ஷைத்தான் உங்களுக்கு பகிரங்கமான பகைவன் என்று நான் உங்களுக்கு சொல்லவில்லையா?” என்று கேட்டான்.

(அல்குர்ஆன்: 7:22)

அந்த மரம் கோதுமைக் கனி மரம் என்றும், மஞ்சனத்தி மரம் என்றும், எலுமிச்சை மரம் என்றும், அத்தி மரம் என்றும் , கொடிமுந்திரிச் செடி என்றும், துரியான் மரம் என்றும், வாழை மரம் என்றும் பல்வேறு விதமாக கூறப்படுகிறது.

இறைவன் அந்த மரத்தை அணுக வேண்டாம் என்று கூறினானே அன்றி, அதன் பழங்களை உண்ண வேண்டாம் என்று கூறவில்லையே என்று மற்றொரு வரலாறு கூறுகிறது.

அணுகாமல் எப்படி பழத்தை உண்ண முடியும் ... என்று கேட்காதீர்கள் மரத்தை அணுகாமல் மரத்திலிருந்து பழுத்து உதிர்ந்த பழத்தை உண்ணலாமே !

தாய் மரம் காய்த்து கனிந்ததும் அதன் இளங்கன்று மரம் அதன் அடியிலிலேயே துளிர் விட ஆரம்பித்து விடும். இது சுவனத்தின் மரங்களின் தன்மை என்பதாக ஆய்வாளர்கள் கருத்து தெரிவிக்கிறார் .

வாழை மரமே உலகத்தில் உள்ள மரங்களில் சுவனத்தின் மரம் போன்று எப்போதும் காய்த்து கனி தரக்கூடியது என்று நபிகள் நாயகம் ( ஸல் ) அவர்கள் கூறியிருப்பது இங்கு கவனிக்கத்தக்கதாகும்.

அண்மையில் ஒருவர் ஆய்வு செய்து அது வாழையாகவே இருக்க வேண்டும் என்றும், மற்ற மரங்களில் ஆண், பெண் மகரந்த சேர்க்கை தேனீக்கள் மூலமாகவோ, காற்று மூலமாகவோ , தண்ணீர் மூலமாகவோ , பறவைகள் , விலங்குகள் மூலமாகவோ , அல்லது மனிதர்களின் மூலமாகவோ ஏற்படுத்தப்பட வேண்டும்.

ஆனால் வாழைக்கு மகரந்தச்சேர்க்கை தானாகவே தன்னுள்ளே ஏற்பட்டு காய்த்து பழுக்கும் தன்மை வாழை மரத்திற்கு உண்டு என்றும் அதுவே மரங்களின் முதல் படைப்பாக இருக்கவேண்டும் என்றும் கூறி அதற்குரிய காரணத்தையும் விளக்குகிறார் .

அதாவது ஆதம் (அலை),ஹவ்வா (அலை) மனிதர்களின் முதல் படைப்பாக இருந்ததால், தாங்கள் பெற்றெடுத்த மக்களுக்கு இணை துணையாக தங்கள் பெற்றெடுத்த மக்களையே மணமகளாகவும் , மணமகனாகவும் தேர்ந்தெடுத்துக் கொண்டார்.

இதில் இறைச் சட்டம் என்னவெனில் ஹவ்வாவின் முதல் பிரசவத்தில் பெற்ற ஆணுக்கு தன் இரண்டாம் பிரசவத்தில் பிறந்த பெண்ணை மணமகளாக தேர்ந்தெடுக்கச் சொன்னான் . இது மாதிரியே வெவ்வேறு பிரசவத்தில் பெற்ற மக்களை ஜோடியாக்க இறைக்கட்டளை வகுத்தான் .

மேலும் வாழை இலையைக் கொண்டே ஒருவரின் உடலை மறைக்க போதிய விசாலம் உடையதாக இருக்கிறது என்றும் ,அதைக்கொண்டு ஆதமும், ஹவ்வாவும் தங்கள் உடலை மறைத்து இருக்கலாம் என்றும் கூறுகிறார்.

வாழை மரங்கள் உண்மையில் மரங்கள் இல்லை. அதாவது வாழை மரம் என்று நாம் கூறுவது தவறு. அது ஒரு தாவரம். ஏன் எனில் மரங்களில் உள்ளது போல் கடினமான தண்டுப் பகுதியோ, கிளைகளோ இம்மரத்திற்கு இருப்பதில்லை.

எனவே உலகிலேயே பெரிய தாவரம் வாழை மரம் என்று கூறப்படுகிறது.

வாழைப்பழம் முதலில் தோன்றியது ஆசியாவில்தான்.

கி.மு. 327-ல் அலெக்ஸாண்டர் இந்தியாவுக்கு படையெடுத்து வந்தபோது, வாழைப்பழத்தை விரும்பிச் சாப்பிட்டு இருக்கிறார். திரும்பிப் போகும் போது கிரேக்க நாட்டிலும் மேலை நாடுகளிலும் அறிமுகப்படுத்தியதாகக் கூறப்படுகிறது.

அரேபியர்கள் இதை விற்பனை செய்தனர். வாழைப்பழம் இப்போது போன்று அளவில் பெரிதாக அப்போது இருந்ததில்லை. விரல் நீளம்தான் இருக்கும். அரேபிய மொழியில் "பனானா' என்றால் விரல் என்று அர்த்தம். அரேபியர்கள் வாழைப்பழத்துக்கு "பனானா' என்று பெயரிட்டு அழைத்தனர். நாளடைவில் ஆங்கிலத்திலும் இந்த பெயர் பயன்படுத்தப்பட்டு, உலகம் முழுதும் இன்று "பனானா' என்று அழைக்கப்படுகிறது

வாழைப்பழம் விளைவிப்பதில் உலகிலேயே உச்சத்தில் நிற்பது நமது இந்தியாதான். இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் 170 லட்சம் டன் வாழைப் பழம் உற்பத்தி செய்யப்படுகிறது. காரணம் இந்தியாவும் இலங்கையும் ஒன்றாக இருந்த இடத்தில்தான் நம் பிதா ஆதம் (அலை) சுவனத்தில் இருந்து இறக்கப்பட்டார்கள் .

நபி ஆதம் (அலை) அவர்கள் பேசிய மொழி தமிழ். தமிழில் முக்கனிகளில் ஒன்றாக விளங்குவது வாழைப்பழம். வாழையிலையில் உணவு பரிமாறுவது தமிழர்களின் விருந்தோம்பல் கலாசாரத்தில் முதலிடம் வகிக்கிறது. திருமணம் போன்ற சுப காரியங்களுக்கு வாழை மரம் நாட்டப்படுகிறது.

தமிழர்கள் மணமக்களை வாழ்த்தும் போது, " வாழையடி வாழையாக வாழ்வாங்கு வாழ்க ! " என்றே வாழ்த்துகிறார்கள்.

**தாவரங்களின் உலகம் 12**

(இந்தியாவின் வாசனை)




ஒருநாள் அலீ (ரலி) அவர்கள் தம் தோழர்கள் நோக்கி,

"இந்தியாவின் மண் நறுமணமுள்ளதாக இருக்கிறதே அதற்கு என்ன காரணம்? என்று வினவினர்.

அதற்கு அவர்கள் "தெரியாது" என்று கூறவே ,

"ஆதம் அலை அவர்கள் பூமிக்கு வரும் பொழுது அவர்களின் உடலில் சுவனத்து இலைகள் ஒட்டிக்கொண்டு இருந்தன. அவை பூமியின் காற்றால் பரத்தப்பட்டு கீழே விழுந்தன. விழும் பொழுது, இவை எந்த மரத்தில் போய் விழுந்தனவோ அவை நறுமணம் பெற்றுவிட்டன" என்றார்கள்.

" அந்த சுவனத்து இலைகள் எவை?"

" இந்தியாவின் வாசனை பொருளான ஏலம், கிராம்பு, இலவங்கப் பட்டை..." ஆகியவற்றை குறிப்பிட்டார்கள்

وَالْحَبُّ ذُو الْعَصْفِ وَالرَّيْحَانُ

" உமியால் மூடப்பட்ட தானியங்களும், வாசனைப்புற் பூண்டுகளும் உண்டாகின்றன" _ (அல்குர்ஆன்: 55:12)

ஆண்கள் தினம் 2 ஏலக்காய் சாப்பிட்டால் போதும் .

தினசரி ஏதாவதொரு வகையில் அல்லது தினசரி டீயில் கூட ஏலக்காயை தட்டிப்போட்டு குடித்துவர இத்தனை நன்மைகளைப் பெறலாம்.

ஏலக்காய் நீரிழிவு நோயாளிகள், ஆஸ்துமா, இதய பாதிப்பு கொண்டவர்கள் என தீராத நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு பலன் அளிக்கிறது.

மனநலம் பாதிக்கப்பட்டவர்களுக்கு அவர்களின் மனநிலையை மாற்றும் சக்தி ஏலக்காய்க்கு உண்டு.

மேலும் படிக்க

பருவநிலை மாற்றத்தின்போது உண்டாகும் சளி, இருமல், காய்ச்சலுக்கு வீட்டு வைத்தியமாக இருக்கிறது.

அதேபோல் மனப்பதட்டம், குமட்டல் போன்றவற்றிற்கும் உதவுகிறது. அதோடு நோய் எதிர்ப்பு அழற்சி, பாக்டீரியாக்களை எதிர்த்துப் போராடும்.

உடல் பருமன் , உயர் இரத்த அழுத்தம், கொழுப்பு, போன்ற பிரச்னைகளுக்கும் ஏலக்காய் கைக்கொடுக்கிறது.

வாய் துர்நாற்றம், வாய் , பற்களின் ஆரோக்கியத்திற்கும் ஏலக்காய் உதவுகிறது. வாயில் உள்ள பாக்டீரியாக்களை அழித்து சொத்தைப்பல் உருவாக்க

ஆயுர்வேத வல்லுநர்களின் கூற்றுப்படி தினம் தூங்கும்முன் இரண்டு ஏலக்காய்களை சாப்பிடுவதால் செக்ஸ் வாழ்க்கையில் மாற்றம் கிடைக்கும் எனவே தினசரி ஏதாவதொரு வகையில் அல்லது தினசரி டீயில் கூட ஏலக்காயை தட்டிப்போட்டு குடித்துவர இத்தனை நன்மைகளைப் பெறலாம்.

கிராம்பு மருத்துவப் பயன்கள்

பல் வலி, தேள்கடி, விஷக்கடி, கோழை, வயிற்றுப் பொருமல் போன்றவற்றைக் குணமாக்கப் பயன்படுகிறது.

வயிற்றில் சுரக்கும் சீரண அமிலத்தைச் சீராக்கும்.

ஜீரண உறுப்புகளில் சுரக்கும் நொதிகளை ஊக்குவிப்பதால், ஜீரணக்கோளாறுகள் நீங்குகின்றன.

இரத்தத்தை நீர்த்துப் போகச்செய்து, கொழுப்பைக் குறைக்கும்.

வாயில் ஏற்படும் துர்நாற்றத்தைப் போக்க உதவும் என்பதாலேயே பற்பசைகளில் பயன்படுத்தப்படுகிறது.

உடலைப் பருமனடையச் செய்யவும், வளர்ச்சிதை மாற்றப்பணிகளுக்கும், சூட்டைச் சமப்படுத்தவும், இரத்த ஓட்டத்தை முறைப்படுத்தவும் உதவும்.

லவங்கப்பட்டையின் மருத்துவ பயன்

லவங்கப்பட்டை வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, சீதபேதி, இரத்த போக்கு ஆகியவற்றை குணமாக்கும் திறன் கொண்டது. மேலும் பிரசவ வலி குறைபாடு, மாதவிலக்கு பிரச்சனை, நாள்பட்ட இடுப்பு வலிகள், பல் வலி, வாதம் முதலியவற்றைக் குணப்படுத்தும்.

லவங்கப்பட்டையில் மாவுச்சத்து, புரதச்சத்து, நீர்ச்சத்து அடங்கியுள்ளது. உணவு பாதையில் ஏற்படும் புண்களை ஆற்றி செரிமானத்தை சீர் செய்கிறது. மாங்கனீஸ் எனும் தாது உப்பு அதிக அளவில் இருப்பதால் மூட்டு வலியை குணப்படுத்தும். எலும்புகளை பலப்படுத்தும்.

லவங்கப்பட்டை சர்க்கரை நோய்க்கு சிறந்த மருந்து. முக்கியமாக உணவு உண்டபின் அதிகரிக்கும் சர்க்கரையின் அளவை கட்டுப்படுத்துகிறது. லவங்கப்பட்டை தூளை தினமும் சிறிதளவு காலை மாலை உணவுக்கு முன் சாப்பிட்டு வந்தால் சர்க்கரையின் அளவு குறையும். ரத்த அழுத்தம் கட்டுப்படும்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

## தாவரங்களின் உலகம் 13

மூஸா (அலை) அவர்களின் அஸா




இந்த அஸா சுவனத்திலுள்ள "அவ்ஸஜ்" என்ற ஒரு முட்செடியினுள் கனிகள் காய்க்கும் கொம்புகளில் ஒன்று .

ஆதம் (அலை) அவர்கள் விண்ணிலிருந்து கொண்டு வந்தார்கள் என்றும் மண்ணகம் வந்த ஆதம் (அலை) அவர்களுக்கு தீங்கு இழைக்க வனவிலங்குகள் அவர்களை அணுகியபோது , அவற்றை விரட்டி அடிக்க அது இறைவனால் விண்ணிலிருந்து அனுப்பி வைக்கப்பட்டது என்றும் இரு வேறு விதமாகக் கூறப்படுகிறது .

மேலும் சுவனத்தில் கனிகள் நினைத்தவுடனே மரத்தில் இருந்து பறிக்காமல், கையில் வந்துவிடும் ! இது சுவன மரங்களின் சுபாவம் . ஆனால் பூமியில் அந்த மாதிரி எந்த மரமும் எந்த கனியும் கையில் தராது எனவே அதைப் பறித்து கையில் கொடுக்க சுவனத்தில் உள்ள மரக்கிளையால்தான் முடியும் என்பதை அறிந்து ஆதம் (அலை) அவர்கள் விண்ணிலிருந்து அதைக் கொண்டு வந்தார்கள் .

அந்த அஸாவிற்கு இரு கிளைகள் இருந்தன . அதன் அடிப்பாகத்தில் இரும்பாலான ஈட்டி இருந்தது .அதற்கு "மஸாஸூத் " என்றும் " நகாஆ " என்றும் " நபீஸா " என்றும் "அய்யத் " என்றும் " அத்தீக் " என்றும் " இயாத் " என்றும் "நபாஅ " என்றும் பல்வேறு பெயர்கள் உண்டு

ஆனால் இறைவனோ அதனை திருக்குர்ஆனில் அஸா என்றும் ஹையத் என்றும் ஸுஹ்பான் என்றும் ஜான் என்றும் கூறுகிறான் .

மூஸாவே உங்களது வலது கையில் இருப்பது என்ன ? " என்று இறைவன் கேட்டான்.

அதற்கு அவர் " இது என்னுடைய கைத்தடி இதன் மீது நான் சாய்ந்து கொள்வேன் இதைக் கொண்டு என்னுடைய ஆடுகளுக்கு தழை (குழை ) களை பறிப்பேன். இன்னும் இதில் எனக்கு வேறு பல பயன்களும் இருக்கின்றன " என்று கூறினார் .

அதற்கு இறைவன் " மூஸாவே நீங்கள் அதனை தரையில் எறியுங்கள்" என்று கூறினான். அதனை அவர் எறியவே அது பெரிய பாம்பாக ஓடிற்று. அப்பொழுது இறைவன் " நீங்கள் அதை பிடியுங்கள் பயப்படாதீர் . உடனே அதனை முன் போல் தடியாக ஆகிவிடுவேன்" குர்ஆன் ( 20 : 17 - 21 )

" உம் கைத்தடியினால் இந்த கடலை நீர் அடியும் "என்று மூஸாவுக்கு அறிவித்தோம். அவ்வாறு அவர் அடித்ததும் கடல் பிளந்தது குர்ஆன் (26: 63 )

" உமது கைத்தடியால் அப்பாறையில் அடிப்பீராக! என நாம் கூறினோம். அதிலிருந்து பனிரெண்டு நீரூற்றுகள் பொங்கி எழுந்தன குர்ஆன் ( 2 : 60 )

மூஸா அலை அவர்கள் கையிலுள்ள அஸா கம்பு வேறு என்னென்ன வேலை செய்யும் ?

1) மூஸா அலை அவர்களுக்கு களைப்பு மிகும் பொழுது அதன் மீது ஏறிக் கொள்வார்கள். அது அவர்களை சுமந்துகொண்டு அரபி குதிரை போன்று ஓடும் .

2) அஸாவிற்கு இரண்டு சிறிய கிளைகள் உண்டு. இருளில் அது விளக்கென அதன் ஒரு கிளை சூரியன் போன்றும் மற்றொரு கிளை சந்திரன் போன்று ஒளிரும்.

3) நபியவர்களுக்கு தாகம் ஏற்படும் போது, அதனை கிணற்றில் விட அது நீண்டு அதன் முடிவில் வாளி போலாகி தண்ணீர் மொண்டு கொண்டு வரும்

4) அவர்களுக்கு பசி ஏற்படும் மண்ணில் அதனை அடிக்க மண்ணில் இருந்து உணவு வெளிப்படும்.

5) அவர்களுக்கு கனி உண்ண விரும்பி அவர்கள் அதனை மண்ணில் நட்டுவார்கள். அது உடனேயே துளிர்த்து பூத்து காய்க்கும் பழங்களை் சொரியும் , பெரும்பாலும் அது பாதாம் பழங்களையே சொரியும்.

6) நபியவர்கள் நறுமணம் நுகர விரும்பின் அஸாவை தேய்த்ததும் அம்பரும், கஸ்தூரியும் பரிமளிக்கும்

7) அவர்கள் பயணம் போகும்போது மலையோ, ஆறோ குறுக்கிடின் அதனை கொண்டு அடிக்க அவைகள் பிளந்து வழிவிடும் பின் சேர்ந்துகொள்ளும்

😎சில பொழுது அதன் இரு

கிளைகளிலிருந்தும் தேனும் பாலும் வழிந்தோடும்

9) எதிரிகள் மீது அஸாவை வீச, அது கரும்பாம்பாக மாறி அவர்களை கொன்று குவிக்கும் பின் எதிரிகளின் முன்னாலேயே மீண்டும் அஸாவாக மாறும்

10) ஆடு, மாடுகளுக்கு குழை ஒடிக்கவும் பறித்து போடவும் ஏவுவார்கள் அது தானாகவே அவற்றை செய்யும்

11) பள்ளத்தாக்கு கடக்க அது நீண்டு பாலமாக மாறி பயன்படும்

12) பிரயாணத்தில் வழி மறந்து விடின் அது வழிகாட்டும் (ஜிபிஎஸ் மாதிரி)

13) பயங்கரமான பாதையில் அவர்கள் காலெடுத்து வைப்பின் அது அவர்களை செல்ல விடாமல் தடுக்கும்

14) அண்மையில் வரும் நச்சு பூச்சிகளை அது அப்புறப்படுத்தி விடும்

15) பிரயாணத்தின் பொருட்களை அதன் மீது மாட்டி தோளில் சுமக்கும் போது பொருட்களின் சுமையே தெரியாது

16) உறங்கும் பொழுது ஆடுகளை சுற்றிவந்து பாதுகாக்கும்

17) ஃபிர்அவ்ன் ரகசியமாக பேசும் பேச்சுக்களை அப்படியே மூஸா அலை அவர்களுக்கு தெரிவிக்கும் (வாய்ஸ் ரெக்கார்டர் மாதிரி)

18 ) ஒவ்வொரு வியாழன் மாலை மதீனா சென்று அண்ணல் நபி அவர்கள் அடங்க இருக்கும் இடத்தில் நின்று சலவாத்து ஓதி அவர்களின் உம்மத்துக்காக இறைவனிடம் இறைஞ்சி விட்டு மீண்டும் மூஸா அலை அவர்களிடம் வந்து சேரும்

அப்துல்லா இப்னு அப்பாஸ் ரலி அவர்கள் அஸாவைப் பற்றி எழுபது அற்புதங்களை குறிப்பிடுகிறார்கள்

ரஹ்மத் ராஜகுமாரன்.

## தாவரங்களின் உலகம் 14

(மதுவின் போதைக்குரிய காரணங்கள்)

ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தான் சுவனத்திலிருந்து கொண்டு வந்திருந்த தானியங்களை ஜிப்ரீல் (அலை) கூறிய வண்ணம் மண்ணில் விதைத்து நீர் பாய்ச்சி வளர்த்தனர்.

இதனைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த இப்லீஸ் தனக்கு ஆதமுடைய மக்களை கெடுப்பதற்கான

**அருமையான**

வாய்ப்பு கிடைத்தது என்று எண்ணி துள்ளிக் குதித்து எழுந்தான்.

ஓடோடிச் சென்று ஒரு மயிலை அறுத்து அதன் ரத்தத்தை ஆதம் (அலை) அவர்கள் திராட்சை விதை விதைத்த இடத்தில் சொட்ட விட்டான்.அடுத்த நாள் அது முளைத்து கண்டு பெரிதும் மகிழ்வுற்ற அவன்.

அடுத்த நாள் அவ்விடத்தில் ஒரு குரங்கு அறுத்து அதன் இரத்தத்தை கொட்டினான்.

மூன்றாம் நாள் அது இதழ் விரித்திருப்பதை கண்ட அவன் சந்தோஷப்பட்டு ,அங்கு ஒரு புலியை அறுத்து அதன் சென்னிற இரத்தத்தை அங்கு பாச்சினான்.

நான்காம் நாள் அது கிளைவிட்டு இருப்பதை கண்டு பூரிப்படைந்து அவன் ஒரு பன்றியை அறுத்து அதன் இரத்தத்தை அவ்விடத்தில் ஊற்றினான் . இதன்பின் " அது பூத்துக் காய்த்துப் பழுக்கட்டும் நான் இதன் மூலம் ஆதத்தின் மக்களை கெடுத்து விடுவேன்" என்று கூறி கூத்தாடினான்.

இதன் காரணமாகவே திராட்சைப் பழத்தில் இருந்து இறக்கப்படும் மதுவை உண்டதும் மனிதன் மயிலைப் போல் தன்னைப் பெரிது கண்டு பெருமை கொள்கிறான் என்றும்,

பின்னர் போதை ஏறியதும் குரங்கு போல் தாவி விளையாடுகிறான் என்றும் ,

அதன்பின் போதை அதிகமாகி புலி போன்று பாய்ந்து பிறருக்குத் தீமை பயக்கின்றான் என்றும்,

போதை தீர்ந்ததும் பன்றியே போல் ஒடுங்கி ஓரிடத்தில் படுத்து உறங்குகின்றான் என்றும் கூறுவர்.

ரஹ்மத் ராஜகுமாரன்

## தாவரங்களின் உலகம் 15

(நீங்க நல்லவரா? கெட்டவரா ? )




ஆதம் (அலை) மகன்கள் இருவரும் விவசாயிகள். உழுதுண்டு வாழும் விவசாயி காபீல். கழனியில் ஆட்டுப் பண்ணை வைத்திருப்பவர் ஹாபீல் .

ஆதம் ஹவ்வா தம்பதியர் ஒரே பிரசவத்தில் பல குழந்தைகள் பிறக்கும் . இத்தம்பதியரைத் தவிர வேறு மனிதகுலம் இல்லாததால், இவர்களுக்குள்ளே மணமுடிக்கும் முறை இருந்தது. ஒரே பிரவத்தில் பிறந்தவர்கள் அடுத்த பிரசவத்தில் பிறப்பவர்களை திருமணம் செய்து கொள்ள வேண்டும். இதுதான் இறை நியதி .

காபீல் தன்னுடன் பிறந்த பெண்ணை திருமணம் செய்ய முடிவு செய்தார் .இது இறை நியதிக்கு முரணானது .அந்த பெண்ணை ஹாபீலுக்கு திருமணம் செய்ய ஆதம் (அலை) விரும்பினார் . அண்ணன் - தம்பி இருவருக்குள் தகராறு ஏற்பட்டன .

இப்பிரச்சனைக்கு தீர்வாக ஆதம் (அலை) அவர்கள், "அவரவர்களின் பொருட்களைக் கொண்டு இறைவனுக்கு பலி (குர்பானி) கொடுக்க வேண்டும். யாருடைய பலிப் பொருளை இறைவனின் புகையில்லாத தீப்பிழம்பொன்று பறவை போன்று விண்ணிலிருந்து மண்ணை நோக்கி பறந்து வந்து அவற்றை விழுங்கி விடும்.

கஃபாவின் மினா மலையில் காபீல் தரம் குறைந்த தானியங்களையும் , மற்ற தாவரப்பொருள்களில் மிக மலிவானதையும் இறைவனுக்கு குர்பானியாகப் படைத்தார்.

ஹாபீல் தன்னுடைய ஆட்டுப் பண்ணையில் நன்கு கொழுத்த ஆட்டையும் , தூய பாலையும் , சுத்தமான வெண்ணையும் பயபக்தியுடன் இறைவனின் திருப்பலிக்குப் படைத்தார் .

வானிலிருந்து பறவை ரூபத்தில் பறந்து வந்த தீப்பிழம்பு

காபீலின் தாவரப் பொருட்களைப் பார்வையிட்டு விட்டு ஹாபீலின் பொருட்களை அந்த நொடியில் விழுங்கி விட்டது .

ஹாபீல் வெற்றிப் பெற்று இறை நியதிப்படி திருமணம் நடந்து முடிந்தது.

இதற்குப் பின் ஆதமின் மக்களுக்குள் சச்சரவுகள் ஏற்படின் மினா மலையில் அவரவர் பலிப்பொருட்களை வைக்க நல்லோரின் பலிப்பொருட்களை விண்ணிலிருந்து தீப்பிழம்பு வந்து விழுங்கும் என்று கூறப்படுகிறது .

.......................................................................................................

ஆதம் (அலை) மக்கள் நல்லோர் யார் ? தீயவர் யார் ? என்று பரிசோதனைக்கு புகையில்லா நெருப்பு வந்து தீர்பளித்தது .

ஆனால் நபி நூஹ் (அலை) அவர்கள் காலத்தில் இருவரிடையே சச்சரவு ஏற்படின் இருவரும் ஒருவரின் பின் ஒருவராக நூஹ் (அலை) அவர்களின் கப்பலில் கைவைப்பர் . அது ஆடாருந்தால், அவர் உண்மையாளர் என்றும் ,அக்கப்பல் ஆடினால் பொய்யர் என்றும் கருதப்பட்டது.

நபி யூசுப் (அலை) அவர்களின் காலத்தில் நபியவர்கள் தானியங்களை அளக்கும் மரக்காலில் ஒருவர் கையை வைத்து, அது சப்தம் செய்யாமல் இருந்தால் அவர் " மெய்யர் " அது சப்தம் செய்தால் அவர் "பொய்யர் " என்றும் கருதப்பட்டு வந்தது.

நபி தாவூத் (அலை) அவர்களின் காலத்தில் அவர்களின் அரண்மனையில் தொங்கிக்கொண்டிருந்த சங்கிலியை ஒருவர் தொட முயலின், அவர் உண்மையாளராக இருப்பின் அவரால் தொடர இயலும். அவர் பொய்யராக இருப்பின் அதனை அவரால் தொட இயலாது போய்விடும்.

நபி சுலைமான் (அலை) அவர்களின் காலத்தில் அவர்கள் நிர்மாணித்த பள்ளிவாயலில் ஒரு துளை இருந்தது. அதில் ஒருவரின் கால் மாட்டிக் கொண்டால் அவர் பொய்யர் என்றும், அத்துளையில் கால் மாட்டாவிட்டால் அவர் உண்மையாளர் என்று கருதப்பட்டு வந்தது.

நபி ஜகரியா (அலை ) அவர்களின் காலத்தில் இரும்பிலான பேனா ஒன்று இருந்தது அதனை எடுத்து ஒருவர் தாளில் தம் பெயரை எழுதி ஜோர்டான் ஆற்றில் போட்டு அது நீச்சல் அடுத்தால் அவர் உண்மையாளர் என்றும், அத்தாள் மூழ்கிவிட்டால் பொய்யர் என்றும் கருதப்பட்டது.

அண்ணல் நபி ஸல் அவர்களின் காலத்திலோ வழக்கில் சாட்சிகளை வைத்து விசாரித்து நீதி பகரும் வழக்கம் ஏற்பட்டது. இன்றும் வழக்கத்தில் உள்ளது .

ஐரோப்பா முழுக்க விசாரணை என்றாலே கொடுமைப்படுத்துதல்தான். விதவிதமாகக் கொடுமைப்படுத்தி ஒப்புக்கொள்ள வைத்துவிடுவார்கள். அவர்கள் நம்பிக்கை என்னவெனில், குற்றமுள்ளவனுக்கு வலி அதிகமாகத் தெரியும் என்பது. கொதிக்கக் கொதிக்க வெந்நீரை மேலே ஊற்றி சோதிப்பார்கள்

ஆஸ்திரேலிய மற்றும் ஆப்பிரிக்கப் பழங்குடிகளில் ஒரு பழக்கம் உண்டு. ஒரு நெருப்புக்கோழி முட்டையை கையில் பிடித்துக்கொள்ளச் சொல்லி கேள்விகள் கேட்பார்களாம். பொய் சொல்கிறான் என்றால் பதட்டத்தில் முட்டையை உடைத்துவிடுவானாம்.

பின் கொஞ்சம் கொஞ்சமாக அறிவியல் வளரவும், இந்த மூச்சு, இதயத்துடிப்பு இத்யாதியெல்லாம் பாதிக்கிறது எனக் கண்டுகொண்டார்கள்.

1921-ல் முதல் பாலிகிராஃப் கருவியை கலிஃபோர்னியாவைச் சேர்ந்த ஜான் அகஸ்டஸ் லார்சன் என்பவர் கண்டுபிடிக்கிறார்.

பின் அப்படியே முன்னேறி, 1990-களில் கணினி மயமாக்கப்பட்டது.

அமெரிக்காவில் இன்னமும் இதை வழக்குகளுக்காகப் பயன்படுத்துகிறார்கள்.

இந்தியாவில், 2008-ல் தனக்கு நிச்சயம் செய்யப்பட்ட பையனைக் கொன்றதாகக் குற்றம் சாட்டப்பட்ட பெண்ணிடம் இந்தச் சோதனை நடத்தப்பட்டது.

ஆனால், 2010-ல் உச்ச நீதிமன்றம், அரசியல் அமைப்புச் சட்டத்தின் ஆர்ட்டிகிள் இருபதின் மூன்றாவது உட்பிரிவான (Article 20(3) of the Indian constitution, Right against self incrimination) ஒருவரின் ஒப்புதல்களை, வாக்குமூலங்களை அவருக்கு எதிராகப் பயன்படுத்துதல் தவறு என்பதைச் சுட்டிக்காட்டி, பாலிகிராஃபுக்கு தடைவிதித்தது. ஆனால், குற்றம் சாட்டப்பட்டவர் விரும்பிக் கேட்டால், இந்தச் செயல்முறையை மேற்கொள்ளலாம் எனத் தீர்ப்பளித்தது.

இதன் கேள்வி கேட்கும் முறைமேல் அறிவியலாளர்கள் சந்தேகம் எழுப்புகிறார்கள். நிரபராதிகளின் பயத்துக்கும், குற்றவாளியின் பதட்டத்துக்கும் இந்தக் கருவிக்கு வேறுபாடு தெரியாது என்கிறார்கள்.

இதற்கு மாற்றாக, ஜப்பானில் guilty knowledge test அல்லது concealed information test என்று ஒன்றை மாற்றாகப் பயன்படுத்துகிறார்கள்.

"நீ கொலை செய்யப் பயன்படுத்திய கத்திக்கு மரக் கைப்பிடியா? ப்ளாஸ்டிக் கைப்பிடியா? போன்ற குற்றாவாளிக்கு மட்டுமே தெரிந்த கேள்விகளைக் கேட்டு, சரியான விடைகளுக்கு அவர்கள் உடலில் ஏற்படும் மாறுதல்களை பாலிகிராஃப் மூலம் அளவிடுகிறார்கள். இது ஓரளவு நேர்த்தியாக இருக்கிறது.

ரஹ்மத் ராஜகுமாரன் .

## தாவரங்களின் உலகம் 16

(யூதர்களைக் காட்டிக் கொடுக்காத மரம் கர்காத்)



Israeli Prime Minister Benjamin Netanyahu planted trees several times, which were later reported as the Gharqad tree. Among others, tree planting in February 1999 ago. Also tree planting in several other places in several settlements in Israeli occupation territory, sponsored by the Jewish National Fund (JNF).

உலக மதங்களில் எல்லாம் மரங்கள் பற்றிய ஏதோ ஒரு குறிப்பு ஏதோ ஒரு இடத்தில் சுட்டிக் காட்டப்பட்டிருக்கும். அம்மரத்தை அம்மதம் சார்ந்த மக்கள் தெய்வமாக வழிபடுவதும் உண்டு. எல்லாக் கடவுள்களுக்கும் ஏதோ ஒரு மரம் உகப்பானதாகவும், ஒவ்வொரு கோயில்களிலும் அவை ஸ்தல விருட்சங்களாகவும் நிறுவி நிற்பதை வைத்து அந்த கடவுளுக்கு அந்த மரம் உகந்தது என அறிந்து கொள்ளலாம் .

சிவனுக்கு வில்வம், மாரியம்மனுக்கு வேம்பு ,புத்தருக்கு அரசமரம் கிறிஸ்தவருக்கு ஓக் , சிடார், ஈச்சம் எல்ம் உட்பட ஐந்து மரங்கள். முஸ்லீம்களுக்கு பேரீத்த மரம் என தகுதி தகுதியாக சிலர் தங்களது புனித மரங்களாக சிலவற்றை வரையறை செய்துள்ளனர்.

முஸ்லிம்களைப் பொருத்தவரை நபி முஹம்மது (ஸல்) அவர்கள் ஒட்டக இறைச்சி கூட சிறந்த உணவு என கூறவில்லை. ஆனால் பேரீத்தம் பழத்தைதான் ஆகச் சிறந்த உணவாக கூறியுள்ளார்கள்.

அது முஸ்லிம்களின் புனித மரம் ஒன்றும் அல்ல ; அவர்களது நாட்டில் மிதமிஞ்சிய வெப்பத்தை தாங்கி நின்று வளரும் மரம் வறட்சியிலும் பழுத்துக் குலுங்கும் மரம். வேறு எந்த உணவு கிடைக்காவிட்டாலும் பத்து பேரீத்தம்பழம் தின்றால் உடலுக்கு தேவையான அந்நாளைய சக்தியைப் பெற்றுக் கொள்ளலாம்.

அதுபோல பேரிச்ச மரத்தை பராமரித்து வளர்க்க வேண்டிய அவசியமே இல்லை எல்லாம் போக அது அவர்களது தேசிய மரம், தேசியக்கொடியில் இடம்பெறும் மரம் அவ்வளவே.

தமிழர்களுக்கு பனைமரம் போல் யூதரின் புனித மரம் எது தெரியுமா ? அதுதான் கர்காத் (Ghargad) / அவ்ஸாஜ் எனப்படும் ஒரு வகை புதர் தாவரம். தாவர இயல் படி அதன் பெயர் Lycium Shawii என்றும், ஆங்கிலத்தில் Box thorn என்றும், அரபுகள் இந்த மரத்தை Awsaj என்றும் குறிப்பிடுகின்றனர் .

இந்த கர்காத் மரத்திற்கு 60க்கும் மேற்பட்ட துணை வகைகள் உண்டு. ஆனால் அரபுகள் படத்தில் காட்டப்பட்டுள்ள இந்த குறிப்பிட்ட மரத்தை மட்டுமே அவ்ஸாஜ் மரம் என்கின்றனர் .

சரி, இந்த அவ்ஸாஜ் மரத்திற்கு இப்போது என்ன ?

இந்த மரத்தை சில காலமாக யூதர்கள் அதிகம் அதிகமாக வளர்ந்து வரும் காரணம் என்ன தெரியுமா ?

ஆக்கிரமிப்பு பாலஸ்தீனிய பூமியில் அதிகமான மரங்களை 1999 முதல் இஸ்ரேல் அதிபர் நெதன்யாஹு முன்னின்று இந்த மரக்கன்றுகளை நட்டு அதனை யூத மக்களையும் செய்யுமாறு ஊக்கப்படுத்தும் நோக்கம் என்ன ?

குறிப்பிட்ட மரத்தை வளர்ப்பதற்கு அதன் உரிய உயரமான 12 அடியில் 4 அடிகளை அடைந்ததும் அதற்கு பாராட்டும் பரிசுகளும் வழங்கி உற்சாகப் படுத்துவது ஏன் ?

இவற்றைப் பற்றி விரிவாக காணும் முன் ஹதீஸ்களிலிருந்து கொஞ்சம் புரட்டிப் பார்க்கலாம் . முஸ்லீம்களை விட மேலதிகமாக சில விளக்கங்களை அறிவுரைகளையும் படிப்போர் யூதர்கள்தான். நமது தூதுச் செய்தியை அதீத கவனம் பெற்று அவற்றை எப்போதும் உற்றுநோக்கி வருபவர்களும் யூதர்களே ! இதற்கான ஒரு ஹதீஸ் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அதிகாரபூர்வமான அறிவிப்பு ஒன்று உள்ளது .

அதாவது இஸ்லாமிய - யூதர்களுக்கு இடையே போர் மூளும் போது , யூதர்கள் கற்குவியல்களுக்கும் , மரங்களுக்கும் பின்னால் ஓடி ஒளிவார்கள். அப்படி ஒளியும் சமயத்தில் மற்ற மரங்கள் முஸ்லிம்களுக்கு யூதர்கள் ஒளிந்திருப்பதை காட்டிக்கொடுக்கும்.ஆனால்...இந்த அவ்ஸாஜ் மரத்தைத் தவிர . இதனால் இது யூதர்மரம் என்படுகிறது.

யூதர்கள் அவ்ஸாஜ் மரத்திற்குப் பின்னால் மட்டுமே ஒளிந்து இருப்பார்கள் என தெரிந்து முஸ்லிம்களால் தேடித்தேடி அடித்து யூதர் கொல்லப்படுவார்கள்.

இது பற்றிய ஹதீஸ் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :-

"முஸ்லிம்களுக்கும் யூதர்களுக்கும் இடையே ஒரு பெரிய போர் நிகழும் வரை மறுமை நாள் வராது. இப்போரில் நபி ஈசாவும், மன்னர் மஹ்தியும் இணைந்து யூதர்களோடு போர் புரிவார்கள் என வரும் வேறு வேறு ஹதீஸ்கள் உண்டு.

அவற்றின் உண்மைத் தன்மையை பற்றி சந்தேகம் இருப்பதால் கீழே உள்ள ஹதீஸ் மட்டும் கட்டுரையில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"அப்போது முஸ்லீம்கள் யூதர்களை கொல்ல முயலும்போது யூதர்கள் மரத்தின் கற்களின் பின் சென்று ஒளிந்து கொள்வார்கள். அப்போது அந்த கற்களும், மரமும் அல்லாஹ்வின் அடியானே... என் பின்னால் ஒரு யூதன் ஒளிந்து கொண்டிருக்கிறான் என்று கூறும் .ஆனால் அந்த ஒரு மரத்தை தவிர ! காரணம் அது யூதர்களின் மரம் அறிவிப்பவர் அபூஹுரைரா (ரலி ) முஸ்லிம் 6985

ஆனால் இந்த மரத்தின் பெயர் நபி (ஸல்) அவர்களால் கர்காத் / அவ்ஸாஜ் " எனக் குறிப்பிட்டு கூறப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

கடந்த 50 ஆண்டுகளாக இந்த மாதம் அதிகமாக நடப்பட்டு இஸ்ரேலின் ராணுவத்தால் நிதி அளிக்கப்பட்டு வருகிறது. அவர்கள் நாட்டு செய்தி சேனல்களில் அடிக்கடி

நெயன்யாஹு தோன்றி, இந்தக் குறிப்பிட்ட மரத்தை அதிகம் வளர்க்க ஓர் அறிவிப்பு செய்வார் என்பது உண்மை.

2020 ஆண்டுக்குள் 100 மில்லியன் மரங்களை நட்டு விட வேண்டுமென்பது அவர்களது முக்கிய பிரச்சாரமாகும். இந்த மரத்தினுடைய பூ, மற்றும் சிவப்பு நிறப் பழங்கள் இரண்டும் ரோம வளர்ச்சிக்கும் தோலில் ஏற்படும் சரும நோய்களுக்கும் நல்ல நாட்டு மருந்து என எனவும் இதனை மருந்தாக உண்பதினால் தங்களது ஆய்வில் கூறுவதாகவும் யூதர்கள் நம்புகிறார்கள் சீனாவிற்கு இதனை ஏற்றுமதியும் செய்கிறார்கள் .

ரஹ்மத் ராஜகுமாரன் .

**தாவரங்களின் உலகம் 17**

(எங்களையும் வாழ விடுங்கள்)




ஒரு மரத்தின் மதிப்புப் பற்றி டெல்லி கிரீன்ஸ் அமைப்பு ஆய்வு செய்திருக்கிறது. ஒவ்வொரு மரமும் ஒரு வரம். ஒரு வளர்ந்த மரம் உற்பத்தி செய்யும் ஆக்சிஜன் அளவின் மதிப்பு மட்டும் ஆண்டுக்கு ரூ.23 கோடி என்று மதிப்பிடப் பட்டிருக்கிறது.

ஒரு வளர்ந்த ஆள் ஒரு நிமிடத்துக்கு 7-8 லிட்டர் காற்றைச் சுவாசிக்கிறார். அதாவது, ஒரு நாளைக்கு 11,000 லிட்டர் காற்றை. இதில் 20 சதவீதம் ஆக்சிஜன். அப்படியென்றால், ஒரு மனிதர் ஒரு நாளைக்கு 550 லிட்டர் ஆக்சிஜனை கிரகித்துக் கொள்கிறார். 2.75 லிட்டர் ஆக்சிஜன் சிலிண்டர் ஒன்றின் விலை ரூ.6,500. இதைக் கொண்டு கணக்கிட்டால் ஒரு மனிதன் ஒரு நாளைக்குச் சுவாசிக்கும் ஆக்சிஜனின் மதிப்பு ரூ.13 லட்சம்.

மரங்கள் தரும் சேவைகளை மதிப்பிட்ட ஆராய்ச்சிகளை ஒப்பு நோக்கும்போது , 2 வளர்ந்த மரங்கள், ஒரு நபருக்குத் தேவையான ஆக்சிஜனை உற்பத்தி செய்கின்றன. அந்த வகையில் ஒரு வளர்ந்த மரம் உற்பத்தி செய்யும் ஆக்சிஜனின் அளவு ஆண்டுக்கு ரூ.23 கோடி.

மரத்தின் மதிப்புப் பற்றி இன்னொரு புள்ளி விபரம்

மரத்தின் மதிப்பு 1981 -ம் ஆண்டு கணக்கின்படி , மாத்தூர் என்ற இந்திய தாவரவியல் அறிஞர் கூறுவது :

" 50 வருடங்கள் வயதுள்ள நடுத்தரமான அளவு உள்ள ஒரு மரம் 15 லட்சத்து 70 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ளது. அது எந்த மரமாக இருந்தாலும் சரி .அது இயற்கைக்கும், சுற்றுச் சூழலுக்கும் , மனிதனுக்கும் செய்யும் உதவிகளுக்கு கூலி கொடுப்பதாக இருந்தால் இவ்வளவு தர வேண்டியிருக்கும் "என்பது அவரது கணக்கு !

" மிஸ்டர் மாத்தூர் அந்த 15 லட்சத்து 70 ஆயிரம் ரூபாய்க்கு புள்ளி விபரம் கொடுக்க முடியுமா? "

" அந்த மரம் தன் வாழ்நாளில் வெளியிடும் ஆக்ஸிஜனின் மதிப்பு இரண்டரை லட்சம் . . ..... சரி .

காற்று மாசுபடுவதைக் கட்டுப்படுத்துவதற்கு ஐந்து லட்சம்....சரி

மண் அரிப்பைத் தடுத்து வளப்படுத்துவதற்கு இரண்டரை லட்சம்..... சரி

பறவைகள், பூச்சிகள், சிறிய கொடிகள் என பலவற்றுக்கு அடைக்கலம் கொடுப்பதற்கு இரண்டரை லட்சம்....சரி

பூமியிலிருக்கும் நீரைச் சுழற்சி செய்து, காற்றில் ஈரப்பத்தை தக்க வைப்பதற்கு மூன்று லட்சம்... அது சரி

தாவரங்களுக்கு உணவு தருவதற்கு

இருபதாயிரம்....அதுவும் சரி

யுத்தத்தை சந்திக்கச் செல்லும்போது கூட மரங்களை சேதப்படுத்தக் கூடாது என நபி (ஸல்) அவர்கள் தனது படையினருக்கு கட்டளையிட்டார்கள்.

"கியாமத் நாள் வந்தாலும், கையில் இருக்கும் விதையை பூமியில் ஊன்றிவிடுங்கள் ". - நபி (ஸல்) அவர்கள்

நபி ( ஸல் ) அவர்கள் இரு கபர்கள் வேதனை செய்யப்படுவதை அறிந்து பக்கத்தில் இருந்த மரத்தின் சிறு குச்சியை ஒடித்து அந்தக் கபர்கள்மீது செருகி வைத்தனர். இந்த குச்சியை ஈரம் காயும் வரை திக்ரு செய்யும். அது திக்ரு செய்யும் காலம் வரை கபர்களின் வேதனை நிறுத்தி வைக்கப்படும்.

யாரும் பயப்படாதீர்கள் . என்றைக்கும் எந்த மரமும் நம்மிடம் வந்து, " எனக்கு கூலி கொடு " என்று கேட்கப் போவதில்லை. பேசும் திறன் அவற்றுக்கு இருந்தால், குறைந்த பட்சம் அவை நம்மிடம் கேட்கப் போவது ' எங்களையும் வாழ விடுங்கள் '

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 18**

தாவரங்களின் இனப்பெருக்கம்



தாவரங்களின் ஆண்பாகம் என்பது மகரந்தத்தூள்கள்.

பெண்பாகம் என்பது சூல்முடிகள்.

பறவைகள், காற்று இவற்றின் உதவியால் மகரந்தத்தூள்கள் சூல்முடியில் போய் ஒட்டிக்கொள்கின்றன. சூல்தண்டு வழியாக மகரந்தத்தூள் இறங்கி, ஒரே ஒரு மகரந்தம் மட்டும் சூலகத்திற்குள் போய்ச்சேருகிறது. இதைத்தான் தாவரங்களில் கருவுறுதல் என்கிறோம்.

மகரந்தத்தூள்களை ஏற்பதா, மறுப்பதா என்பதை சூல்முடிகள் ஆராய்ந்து முடிவு செய்கின்றனவாம். இந்த முடிவுகள் எப்படி செய்யப்படுகின்றன? புரத மூலக்கூறுகள்தான் இந்தப்பணியை செய்யுகின்றன என்கின்றனர் மிசௌரி பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர்கள்.

தாவரங்களுக்கு கண்கள் இல்லை. காதுகளோ, மூக்கோ இல்லை. என்றாலும் மரபியல் பண்புகளை பாதிக்கும் இனப்பெருக்கத்திற்கு தாவரங்கள் இடம்கொடுப்பதில்லை. மனிதர்களைப்போல் இனப்பெருக்கத்திற்கான மகரந்தச்சேர்க்கை தாவரங்களில் அவ்வளவு எளிதாக நடைபெற்றுவிடுவதில்லை.

மகரந்தம் தான் யார் என்பதை மூலக்கூறுகள் வழியாக சூல்முடிக்கு தெரிவித்தல் வேண்டும். சூல்முடி இந்த அடையாளத்தை புரிந்துகொண்ட பிறகு மகரந்தச் சேர்க்கையை ஏற்கலாம் அல்லது மறுக்கலாம்.

மகரந்தங்கள் சூல்முடியை அடைந்ததும் அங்கே ஆண்-பெண் அறிமுகம் நடைபெறுகிறது. வார்த்தைகளுக்கு பதிலாக புரத மூலக்கூறுகளே இந்தப் பணியை செய்கின்றன. இவ்வாறு தாவரங்களின்

இனப்பெருக்க நடைமுறையில் கருத்தரித்தலுக்கு கட்டுப்பாடு விதிக்கப்படுகிறது. இதனால் தாவரங்களின் மரபுப்பண்புகள் காப்பாற்றப்படுகின்றன.

தாவரங்கள் இனச் சேர்க்கைக்கு வண்டுகள் , தேனீக்கள் , வண்ணத்துப் பூச்சிகள் போன்ற பூச்சி இனங்கள் இயற்கை பயன்படுத்தினாலும், பேரீச்ச மரத்திற்கு மனிதர்களே செயற்கையாக இனச் சேர்க்கை செய்கிறார்கள்.

தல்ஹா பின் உபைதில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

பேரீச்ச மரங்களின் உச்சியில் இருந்து கொண்டிருந்த (மதீனாவாசிகள்) சிலரைக் கடந்து சென்ற அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நானும் சென்றேன்.

அப்போது, "இவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்?" என்று கேட்டார்கள்.

அதற்கு மக்கள், "பெண் மரங்களுடன் ஆண் மரங்களை இணைத்து ஒட்டுச் சேர்க்கை செய்து (பெண் மரங்களை) சூல் கொள்ளச் செய்கின்றனர்" என்று கூறினர்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதனால் பயனேதும் ஏற்படும் என்று நான் கருதவில்லை" என்று சொன்னார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைப் பற்றி (மதீனா விவசாயிகளிடம்) தெரிவிக்கப்பட்டபோது அவர்கள் ஒட்டுச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டனர். (அந்த ஆண்டில் அவர்களுக்கு மகசூல் பாதிக்கப்பட்டது.)

இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அப்போது,

"அ(வ்வாறு செய்வ)தனால் அவர்களுக்குப் பயன் ஏற்படுமானால், அவ்வாறு செய்து கொள்ளட்டும். நான் எனது யூகத்தையே தெரிவித்தேன். யூகத்தை தெரிவித்ததை வைத்து என்மீது குற்றம் சாட்டாதீர்கள். ஆயினும், நான் உங்களிடம் அல்லாஹ்வைப் பற்றி ஏதேனும் சொன்னால் அதை நீங்கள் கடைப்பிடியுங்கள். ஏனெனில், நான் வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ்வைப் பற்றி பொய்யுரைக்கமாட்டேன்" என்று சொன்னார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 4711

ரஹ்மத் ராஜகுமாரன்

**Mohamed Mohideen Sathakkath**

அருமை, நான் வாசித்த ஹதீஸில் ஆண் பாளையுடன் பெண்பாளையினைச் சேர்த்து கட்டியதாகவும்,

அவ்வாறு செய்ய வேண்டாமென நபி (ஸல்) அவர்கள் கூறவே, அதனைச் செவியேற்ற மதீனா வாசிகள் அவ்வாறு செய்யாது விட்டுவிடவே, அவ்வருடம் பேரீச்சை நல்ல அறுவடை மிகவும் குறைந்தது,

இச் செய்தி நபி (ஸல்) அவர்கட்கு எட்டவே,

"மார்க்க விடயத்தில் நான் ஏதாவது கூறினால் அதனை அவ்வாறே கடைப்பிடியுங்கள், இவ்வுலக (வழக்கமான) செயற்பாடுகளில் ஏதாவது ஒன்றினை கூறினால், அதனைப்பற்றி நன்கு ஆராய்ந்து அறிந்து மேற்கொள்ளுங்கள் ஏனெனில் நானும் மனிதன் தானே " என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக பதியப்பட்டிருந்தது.

நானும் மனிதன் தானே... எனக்கூறியதானது மனித அறிவு தவறிழைக்கக்கூடியது என்பதனைக் கருப்பொருளாகச் சுட்டவே இச்சம்பவம் சுட்டிக்காட்டப்பட்டது.

இவ்வுலக விடயங்களில் மனிதர்களோடு மனிதனாகவும்.... ஹதீஸ்களினைக் கூறும் போது (சித்தீக் எனும் சித்ஹு) நபியாகவும், குர்ஆன் வசனங்கள் இறங்கும் போது றஸூலாகவும் இருந்தனர்.

குர்ஆன் வசனங்கள் இறக்கப்படும் போது, இறை தஜல்லியில் மனித அறிவு மாய்ந்து விடும்.

எனும் ஆத்மீக கருத்தாளத்தினையும் குறித்திருந்தனையும் படித்துள்ளேன்.

**தாவரங்களின் உலகம் 19**

(சுவனப்பாதையெல்லாம் மரங்களே)



அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நரகத்திலிருந்து விடுதலை பெறும் மனிதர் குறித்துப் பின்வருமாறு) கூறினார்கள்:

(நரகத்திலிருந்து வெளியேறி) இறுதியாக சொர்க்கத்தில் நுழையும் ஒரு மனிதர் சில சமயம் நடந்து வருவார். சில சமயம் தவழ்ந்தபடி வருவார். சில சமயம் நரக நெருப்பு அவரது முகத்தைத் தாக்கிக் கரித்தும்விடும். இந்நிலையில் அவர் நரகத்தைத் தாண்டியதும் அதைத் திரும்பிப் பார்த்து, "உன்னிடமிருந்து என்னைக் காப்பாற்றிய (என் இறை)வன் சுபிட்சமிக்கவன்; முன்னோர் பின்னோர் யாருக்கும் வழங்காத (பாக்கியத்)தை அல்லாஹ் எனக்கு வழங்கினான்" என்று கூ(றி இறைவனைப் போற்)றுவார்.

அப்போது அவருக்கு ஒரு மரம் காட்டப்படும். உடனே அவர், "என் இறைவா! அந்த மரத்தின் அருகே என்னைக் கொண்டு செல்வாயாக! அதன் நிழலை நான் பெற்றுக் கொள்வேன்; அதன் (கீழே பாயும்) நீரைப் பருகிக்கொள்வேன்" என்று கூறுவார்.

அதற்கு அல்லாஹ், "மனிதா! அதை நான் உனக்கு வழங்கினால், வேறொன்றை நீ என்னிடம் கேட்கக்கூடுமல்லவா" என்று கூறுவான்.

அதற்கு அவர், "இல்லை; இறைவா! வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்" என்று கூறி, வாக்குறுதி அளிப்பார்.

அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் காணும் அவருடைய இறைவன், அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அந்த மரத்தின் அருகே கொண்டுசெல்வான். அங்கு அவர் அந்த மரத்தின் நிழலைப் பெறுவார்; அதன் நீரையும் பருகிக்கொள்வார்.

பிறகு அவருக்கு மற்றொரு மரம் காட்டப்படும். அது முதலில் காட்டப்பட்ட மரத்தைவிட மிகவும் அழகாய் இருக்கும்.

(அதைக் கண்ட) உடன் அவர், "என் இறைவா! இதற்கருகே என்னைக் கொண்டு செல்வாயாக! நான் அதன் நீரைப் பருகி அதன் நிழலை அடைந்து கொள்வேன்! இதைத் தவிர வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்" என்று கூறுவார்.

அதற்கு இறைவன், "மனிதா! வேறெதையும் கேட்கமாட்டேன் என்று என்னிடம் நீ (முன்பு) வாக்குறுதி அளிக்கவில்லையா? அதன் அருகில் உன்னை நான் கொண்டுசென்றால், வேறொன்றை என்னிடம் நீ கேட்கக்கூடுமல்லவா" என்பான்.

உடனே அவர், வேறெதையும் கேட்கமாட்டேன் என்று வாக்குறுதி அளிப்பார்.

இறைவனும் அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் கண்டு அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அதன் அருகே கொண்டுசெல்வான். அவர் அதன் நிழலை அனுபவித்துக் கொண்டு அதன் (கீழே ஓடும்) நீரையும் அருந்துவார்.

பிறகு சொர்க்க வாசல் அருகே உள்ள மரம் அவருக்குக் காட்டப்படும். அது முதலிரண்டு மரங்களை விடவும் ரம்மியமானதாய் இருக்கும்.

உடனே அவர், "என் இறைவா! அந்த மரத்தின் அருகே என்னைக் கொண்டுசெல்வாயாக! நான் அதன் நிழலைப் பெறுவேன்; அதன் நீரைப் பருகிக்கொள்வேன்; இதைத் தவிர வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்" என்று கூறுவார்.

அதற்கு இறைவன், "மனிதா! வேறெதையும் நான் கேட்கமாட்டேன் என்று (முன்பு) என்னிடம் நீ வாக்குறுதி அளிக்கவில்லையா?" என்று கேட்பான்.

அதற்கு அவர், "ஆம்; என் இறைவா! இந்தத் தடவை (மட்டும்); இனி, இதன்றி வேறெதையும் உன்னிடம் கேட்கமாட்டேன்" என்று கூறுவார்.

இறைவனும் அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் கண்டு அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அதன் அருகே கொண்டுசெல்வான்.

அவர் அந்த மரத்தை நெருங்கும்போது சொர்க்கவாசிகளின் குரல் அவருக்குக் கேட்கும். உடனே அவர், "என் இறைவா! சொர்க்கத்திற்குள் என்னை அனுப்புவாயாக!" என்பார்.

அதற்கு இறைவன், "மனிதா! ஏன் என்னிடம் கோருவதை நிறுத்திக்கொண்டாய்? உலகத்தையும் அதைப் போன்ற இன்னொரு மடங்கையும் உனக்கு நான் வழங்கினால் உனக்கு மகிழ்ச்சி ஏற்படும்தானே?" என்று கேட்பான்.

அதற்கு அவர், "என் இறைவா! அகிலத்தின் அதிபதியே! நீயே என்னைப் பரிகாசம் செய்கிறாயா?" என்று கேட்பார்.

(இதை அறிவித்தபோது) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் சிரித்தார்கள். பிறகு "நான் ஏன் சிரித்தேன் என்று என்னிடம் நீங்கள் கேட்கமாட்டீர்களா?" என்று கேட்டார்கள்.

அப்போது மக்கள் "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள், "இவ்வாறுதான் (இதை அறிவிக்கையில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள். அப்போது நபித் தோழர்கள், "ஏன் சிரித்தீர்கள், அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள்

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அகிலத்தின் அதிபதியாகிய நீயே என்னைப் பரிகாசம் செய்கிறாயா?" என்று அந்த மனிதர் கூறும்போது அதைக் கேட்டு இறைவன் சிரிப்பான். (அதனால் தான் நான் சிரித்தேன்.) மேலும், "நான் உன்னைப் பரிகாசம் செய்யவில்லை. மாறாக, நாடியதைச் செய்கின்ற ஆற்றல் உள்ளவன் நான்" என இறைவன் கூறுவான் என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 310.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 20**

உலகிலேயே மிகப்பெரிய முந்திரி மரம்

உலகிலேயே 90 ஆயிரம் சதுர அடி அளவுக்கு நிழல் தரக்கூடிய மிகப்பெரிய மரம் குறித்த சுவாரஸ்ய தகவல்களை பார்ப்போம்.

பிரேசில் நாட்டில் பார்ப்பதற்கு அதிக மரங்களை கொண்ட பார்க்கை போல, காட்சியளிக்கிறது ஒற்றை முந்திரி மரம். இந்த மரம் கடந்த 1994ம் ஆண்டு உலகிலேயே மிகப்பெரிய முந்திரி மரம் என்பதற்காக கின்னஸ் புக்கில் இடம் பெற்றுள்ளது.

இது 90 ஆயிரம் சதுர அடி பரப்பளவு கொண்டு பரந்து விரிந்து காணப்படுகிறது. இந்த பிராங்கி முந்திரி பார்க்கினை காண ஒவ்வொரு ஆண்டும் பல்லாயிரக்கணக்கான சுற்றுலா பயணிகள் பிரேசிலுக்கு வருகை தருகின்றனர்.

இந்த மரம் ஒவ்வொரு ஆண்டும் சுமார் 7 ஆயிரம் முதல் 8 ஆயிரம் முந்திரி பழங்களை வழங்குகிறது. இவற்றை ஜாம், பழச்சாறுகளாகவும் சாப்பிடலாம். 140 ஆண்டுகள் பழமை வாய்ந்த இந்த மரத்தின் கிளைகள் உயரமாக வளராமல், பக்கவாட்டில் வளர்ந்துள்ளது.

இந்த கிளைகள் பூமியை தொட்டதும், அப்படியே தங்கி பரவ ஆரம்பித்துவிட்டது. மேலிருந்து பார்க்கும்போது சிறிய காட்டினை போலவே காட்சியளிப்பது குறிப்பிடத்தக்கது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. அதன் நிழலில் பயணிப்பவர் நூறு வருடங்கள் பயணித்தாலும் அதைக் கடந்து செல்ல முடியாது.

"சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. (அதன் நிழலில்) விரைந்துசெல்லும் கட்டான உடலுள்ள பயிற்சியளிக்கப்பட்ட உயர் ரகக் குதிரை நூறாண்டுகள் பயணித்தாலும் அதைக்கடக்க முடியாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்" என்றார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 5443.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 21**

எங்களுக்கும் மர வழிபாடு வேண்டும் !



சில இனத்தவர் மரங்களின் கீழ் இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கம் வைத்திருந்ததால் இம்மரத்தின் கீழ் மழை பொழியும் சடங்குகளை நிறைவேற்றினர். மரத்தின் கிளைகளை வெட்டி தண்ணீரில் நனைப்பதால் மரத்திலுள்ள தெய்வம் குளிர்ந்து மழை பொழிவிக்கும் என்று நம்பினர். ஐரோப்பாவில் பல இனங்கள் இந்த

நம்பிக்கை உடையனவாகவே இருந்தன. மரங்கள் குளிர்வதால் மழை பொழியும் பயிர் செழிக்கும் என்று ஐரோப்பிய விவசாயிகள் ஆழமாக நம்பி மரங்களில் தண்ணீரை ஊற்றினர்.

மரத்தில் தண்ணீர் ஊற்றுவதை போல மரத்தின் அடியில் சில மாற குச்சிகளை மட்டும் போட்டு நெருப்பு வளர்ப்பதும் உண்டு. அந்த நெருப்பின் புகையால் மேகம் சூழ்ந்து மழை பொழியும் என்று நம்பினர். இவை ஆதி சமயத்தின் போனமை சடங்குகள் ஆகும். மனிதன் தனக்கு என்ன நடக்க வேண்டும் என்று நினைக்கின்றானோ, அதையே அவன் செய்து காட்டுவதாகும். மழை வேண்டுமெனில் தண்ணீரைக் கொட்டுவதுபோல மேகம் திரள வேண்டும் என்றால் புகை உருவாக்குவது என அக்காலத்தில் செய்யப்பட்ட சடங்குகளை ஜேம்ஸ் பிரேசர் என்ற அறிஞர் போன்மை [போல செய்தல்] சடங்குகள் என்றார்.

ஒரு தெய்வ மரம் சாய்ந்து விட்டால் ஊருக்கு அழிவு என்று அஞ்சினர். உடனே அதிலிருந்து ஒரு கிளையை எடுத்து மறு மரம் வளர்த்தனர். புது மரம் தளிர் விட்டதும் தமக்கு புது வாழ்வு கிடைத்ததாக நம்பி மகிழ்ந்தனர். இன்றைக்கும் நமது கிராமங்களில் இந்த வழக்கம் இருந்து வருகிறது.

சாமி மரம் வாடக் கூடாது என்பது பொதுவான நம்பிக்கை. சாலைகள் அகலப்படுத்துவதற்காக மரங்களை வெட்ட நேர்ந்தால் உடனே, அதிலிருந்து ஒரு குச்சியை ஒடித்து எடுத்து நட்டு தழைக்க வைக்கின்றனர். வழிபாடுகள் மட்டுமல்லாது பொது மன்றமாகவும் மரத்தடிகள் விளங்கின.

வெல்டன் என்ற இனத்தவர்கள் புனித மரத்தின் கீழ் உட்கார்ந்து சண்டை சச்சரவுகளை பேசித் தீர்த்து வைத்தனர். இந்த மரத்தடி ஒரு பொது மந்தைபோல விளங்கியது. இன்றைக்கும் தமிழக கிராமங்களில் மரத்தினடியில் அமர்ந்து பஞ்சாயத்து பேசுவதும் அந்தப் பகுதியை மந்தை என்று அழைப்பதும் அங்கு மந்தையம்மன் என்ற பெயரில் தெய்வம் ஒன்றை வைத்து வழிபடப்பட்டதும் பின்னர் மந்தையம்மன் கோயில்கள் மாரியம்மன் கோயில்களாக உருமாறியதும் உண்டு.

இந்த மரவழிபாட்டின் தோற்றம் என்னவாக இருக்கும் என்று ஆராய்ந்தால் மக்கள் உயரமான வானத்தை நோக்கிச் செல்லும் மரங்களை நம்மை உயரே அல்லது மேலே அழைத்துச் செல்லும் ஒரு வாகனமாக நம்பினர்.

மேலே இருக்கும் அதீத சக்திகளிடம் அமானுஷ்ய சக்திகளிடம் மனிதர்களைக் கொண்டு போகும் சக்தி வாய்ந்தனவாக பிற்காலத்தில் ஸ்தூபிகள், கொடி மரம், கோயில் ஸ்தல விருட்சங்கள் நம்பப்பட்டன இந்த நம்பிக்கையே பின்னர் கோயில்களில் கொடி மரம் வைக்கும் பழக்கத்தையும் கொண்டு வந்தது.

ஆரம்பத்தில் மலை, மரம் போன்றவை தெய்வம் உறையும் சக்தி உடையவையாக நம்பப்பட்டு வந்த பின்னர் தானே கோயில் போன்ற உயரமான கட்டிடங்களை கடவுளுக்கு எழுப்பும்போது அதில் கொடி மரத்தையும் தூண்களையும் மனிதர்கள் அதாவது மன்னர்கள் எடுப்பித்தனர்.

பௌத்தம் பிரபலமாக இருந்த கேரளாவில் பல இடங்களில் மரங்கள் வெறும் மரங்களாகவே என்றும் வழிபடப்பட்டு வருகின்றன. அமிர்தபுரி என் அருகில் உள்ள ஊர் சேரி என்ற இடத்தில் பெரிய பெரிய மரங்களாக ஒரே இடத்தில் ஐந்து ஆறு மரங்கள் இருக்கின்றன. அவை தெய்வ சக்தி உள்ளவையாக பரம் பொருள் என்று அழைக்கப்பட்டு இன்றைக்கும் சிறப்பு வழிபாடுகள் தினமும் நடக்கின்றன.

ஹிஜ்ரி 8 ஷவ்வால் மாதம் சனிக்கிழமை பிறை 6 நபி (ஸல்) அவர்கள் 12000 வீரர்களுடன் மக்காவிலிருந்து ஹுனைனை நோக்கி புறப்பட்டார்கள். இதில் பத்தாயிரம் வீரர்கள் மதினாவில் இருந்து வந்தவர்கள் மீதம் இரண்டாயிரம் வீரர்கள் மக்காவாசிகள் இவர்களில் பெரும்பாலோர் புதிதாக இஸ்லாமை ஏற்றவர்கள் .

ஹுனைனை நோக்கிச் செல்லும் வழியில் முஸ்லீம்கள் பசுமையான மிகப் பெரிய இழந்தை மரம் ஒன்றைக் கண்டார்கள். அம்மரத்தை " தாத் அன்வாத்" சேர்ந்து அரபிகள் அழைத்தனர் .அக்காலத்தில் அதில் தங்களது வாட்களை தொங்க விடுவர். அங்கு தங்கி பிராணிகளை பலியிடுவர் தங்களின் சிலை வழிபாடுகளுக்கு அதை பாக்கியம் பொருந்திய ஒன்றாகக் கருதி வந்தனர்.

அம்மரத்தை பார்த்தவுடன் படையில் இருந்த சிலர் "அல்லாஹ்வின் தூதரே..! முஷ்ரிக்குகளுக்கு " தாத் அன்வாத்" இருப்பதைப் போன்று எங்களுக்கும் ஒரு " தாத் அன்வாத்" ஏற்படுத்தித் தாருங்கள் என்றனர்.

நபி (ஸல் ) அவர்கள் " அல்லாஹு அக்பர் ! முஹம்மதின் ஆத்மா எவன் கைவசம் உள்ளதோ, அவன் மீது ஆணையாக அவர்களுக்கு கடவுள்கள் இருப்பது போன்று எங்களுக்கும் ஒரு கடவுளை ஏற்படுத்தித் தாருங்கள்.. என்று மூஸாவின் கூட்டத்தினர் கேட்டது போலல்லவா கேட்கிறீர்கள் ! நிச்சயமாக நீங்கள் அறியாத கூட்டத்தினர். இதுதான் சென்று போனவர்களின் வழிமுறையாகும் . உங்களுக்கு முன் சென்றவர்கள் வழிமுறையே நிச்சயமாக நீங்கள் பின்பற்றுவீர்கள் " என்று எச்சரித்தார்கள்

(முஸ்னது அஹமது, ஜாமிவுத் திர்மதி)

சயீத் பின் அல்முசய்யப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

என் தந்தை (முசய்யப் பின் ஹஸன் - ரலி) அவர்கள் அந்த மரத்தின் கீழ் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்தவர்களில் ஒருவர் ஆவார்.

என் தந்தை கூறினார்கள்: (உறுதிப் பிரமாணம் நடந்து முடிந்த) மறு ஆண்டு நாங்கள் ஹஜ்ஜுக்குச் சென்றோம். அப்போது அந்த (மரம் இருந்த) இடம் எங்களுக்கு (அடையாளம்) தெரியாமல் போய்விட்டது. அப்படியிருக்க, உங்களுக்கு அந்த இடம் (தெரிந்திருக்க வாய்ப்பில்லை. அவ்வாறு உங்களுக்குத்) தெளிவாகத் தெரிந்தால் நீங்களே மெத்தவும் அறிந்தவர்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 3790

**தாவரங்களின் உலகம் 22**

வான் எல்லையில் ஓர் இலந்தை மரம்



இலந்தை **(Ziziphus jujuba)** என்பது முட்கள் உள்ள குறுமரம் ஆகும். இதன் தாயகம் இந்தியாவிலுள்ள தமிழ் நாடு அல்லது சீனா எனக் கருதப்படுகிறது. .

வெப்பம் அதிகமுள்ள இடங்களில், இத்தாவரம் நன்கு வளரும் தன்மை கொண்டது. இந்த மரம் 9 மீட்டர் உயரம் வரை கூட வளரும் இயல்புடையது ஆகும். இதன் பழங்கள் செம்பழுப்பு நிறத்தில் சற்று பெரிய

கொட்டைகளை உடையதாகவும், இனிப்பும், புளிப்பும் கலந்தச் சுவை கொண்டதாயும், சிறு உருண்டைவடிவத்தில் இருக்கும்.

இம்மரத்தின் பழங்கள் உண்ணக்கூடியவையே. மேலும் இம்மரத்தின் வேர், பட்டை மற்றும் கொழுந்து இலைகள் மருத்துவப் பொருட்களாகப் பயன்படுகிறது.இந்தியா எங்கும் அதிகம் பரவிக் காணப்படும்.

இதில் இருவகையுண்டு. ஒன்று காட்டு இலந்தை. மற்றொன்று நாட்டு இலந்தை எனவும் அழைக்கப்டுகின்றன. சீமை இலந்தை நாட்டு இலந்தையின் ஒரு பிரிவாகும். இதன் மருத்துவப் பயன்கள் அனைத்தும் ஒன்றே ஆகும். இது நமக்குத் தெரிந்த இலந்தை மரம் .

ஆனால் நபி (ஸல்) அவர்களின் மிஹ்ராஜ் என்னும் விண்வெளிப் பயணம் குறித்து ஸஹீஹ் முஸ்லிம் பாகம் 1 பக்கம் 211 ல் வான எல்லையில் உள்ள இலந்தை மரம் என்கிற சித்ரத்துல் முன்தஹா பற்றிய குறிப்பில மேற்கண்ட அத்தனை விஷயங்களை உண்மைப்படுத்தி நம்மை வியக்கச் செய்கிறது...

சித்ரத்துல் முன்தஹா என்பது வான எல்லையில் உள்ள ஓர் இடத்தின் பெயர்

சித்ரத் ' என்பதற்கு இலந்தை மரம் ( jujube ) என்று பொருள்

முன்தஹா 'என்றால் இறுதியானது என்று பொருள் இறுதி எல்லையில் உள்ள இலந்தை மரம் என்று பொருள் விரியும்...

வான எல்லையில் உள்ள பிரம்மாண்டமான இந்த மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் யானையின் காதுகளைப் போன்றும் பழங்கள் பெரிய கூஜாவைப் போன்றும் இருக்கும்...

6 வது வானத்தில் இதன் வேர் உள்ளது 7 வது வானத்திற்கும் மேல் வரை இம்மரம் நெடிதுயர்ந்து உள்ளது. பொன் வண்டுகள் அந்த மரத்தை மொய்த்துக் கொண்டிருக்கிறது அந்த மரம் பல வண்ணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது .அதன் அழகை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை

பூமியில் உள்ளவர்கள் புரியும் செயல்கள் பற்றிய குறிப்பு இங்குதான் செல்கிறது .பூமியில் கைப்பற்றப்படும் உயிர்களும் இங்கேதான் வந்து சேர்கின்றன...

இதற்கு மேலிருந்து வரும் இறைக் கட்டளைகள் இங்குதான் முதலில் இறங்குகின்றன.

வானவர்களின் அறிவு இந்த இடத்தோடு முற்றுப் பெறுவதாலேயே இதற்கு எல்லை (முன்தஹா ) எனும் பெயர் வந்தது.

இங்கிருந்து 4 ஆறுகள் ஓடுகின்றன இரண்டு உள் நோக்கி பாயும் சல்சபீல் மற்றும் கவ்ஸர் ஆகிய சுவனத்தின் ஆறுகள்.

மற்றது இரண்டும் வெளியே பாயும் நைல் மற்றும் யூப்ரடீஸ் நதிகளாகும்.

சித்ரத்துல் முன்தஹா வழியே நபி(ஸல்) அவர்களின் விண்ணுலக பயணத்தின் வழிபாதை இருந்திருக்கிறது !

ரஹ்மத்ராஜகுமாரன்

## தாவரங்களின் உலகம் 23

தாவரங்களின் அறிவு!





பேராசிரியர் ஸ்டீபனோ மங்குசா இன்று உலகிலுள்ள தாவரங்களுக்கான ஒரே சோதனைச்சாலையை நடத்தி வருபவர்!

தாவரங்களுக்கான ப்ளாண்ட் நியூரோ பயாலஜி எனப்படும் தாவர மூளை அறிவியல் துறையில் உள்ள இந்தப் பன்னாட்டுச் சோதனைச்சாலை இத்தாலியில் ப்ளோரென்ஸ் நகருக்கு அருகில் ஏழு மைல் தொலைவில் உள்ளது.

பிரச்சினைகளைத் தீர்ப்பது தான் அறிவு என்று அறிவிற்கான இலக்கணம் வரையறுக்கப்படுமானால் தாவரங்கள் நமக்குக் கற்பிக்க ஏராளமானவற்றைத் தங்கள் வசம் கொண்டுள்ளன என்கிறார் மங்குசா!

மூளை என்ற ஒரு அங்கம் இல்லாமலேயே அவை ஸ்மார்ட்டாக அற்புதமாக உணர்கின்றன! எப்படி வளர்வது, எப்படி சூழ்நிலைக்கேற்ப மாறிக்கொள்வது, எப்படி முன்னேறுவது என்பதையெல்லாம் இவைகள் காண்பிப்பது அலாதி ஆச்சரியத்தை நமக்குத் தருகின்றன என்று மேலும் அவர் கூறுகிறார்!

அறிவு என்பது மூளையினால் மட்டுமே அளக்கப்படும் ஒன்று இல்லை என்பது அவரது திடமான நம்பிக்கை.

உதாரணமாக இன்று இவர்களது சோதனைச்சாலையில் நடைபெறும் ஆய்வுகளை எடுத்துக் கொள்வோம். தாவர ஆராய்ச்சியின் விளைவாக இப்போது கண்டுபிடிக்கப்பட்ட ப்ளாண்டாய்ட் தான் செடியின் தண்டானது தகவலை அனுப்புவது போல இயந்திர வகையில் ஒன்றான பாட்ஸ் என்பவை செவ்வாய் கிரகத்தின் தரையில் போடப்பட்டு அங்கிருந்து பூமிக்கு தகவலை அனுப்ப முடிவதற்கான ஏற்பாட்டைச் செய்ய வழிவகை செய்தது என்பது குறிப்பிடத்தகுந்தது.

சிக்னல் அனுப்புவது, அனுப்பியதை உணர்வது ஆகியவை பற்றிய விஷயங்கள் மூளைக்கு இருக்கும் திறனில் உள்ள அறிவு போல தாவரங்களுக்கும் உள்ளது என்பது பற்றிய ஏராளமான ஆராய்ச்சி முடிவுகள் இப்போது வெளியாகி உள்ளன!

செடிகளின் மீது இசையின் தாக்கம் நிரூபணமான ஒன்று! இப்போது புவி ஈர்ப்பு விசையை உணர்வது, தொலைதூர தகவல்களை சிக்னல் மூலம் அனுப்புவது ஆகியவற்றில் தாவரங்களின் திறன் வியக்க வைக்கும் அளவில் உள்ளது நிரூபணமாகி விட்டது.

பேராசிரியர் மங்குசா தாவரங்கள் தங்களுடைய தகவல் தொடர்பை இரசாயனப் பொருள்கள் மூலம் பரிமாறிக் கொள்கின்றன என்கிறார்! எச்சரிக்கை அறிவிப்பு, ஆரோக்கிய உணர்வு போன்றவற்றை

அறிவதற்கு நம்மிடம் அகராதிச் சொற்கள் இருப்பது போல அவைகளிடமும் உள்ளன என்பது அவரது கணிப்பு!

ஆனால் மங்குசாவிற்கு முன்னாலேயே சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே நம் நாட்டைச் சேர்ந்த சர் ஜகதீஸ் சந்திர போஸ் தாவரங்களுக்கும் உயிர் உண்டு, உணர்ச்சிகள் உண்டு என்பதைச் சோதனைகள் வாயிலாகச் செய்து காட்டி நிரூபித்திருக்கிறார்!

இதற்காக அவர் ஒரு விசேஷ கருவியை உருவாக்கினார். இதற்கு ரெஸோனேட் ரிகார்டர் (Resonate Recorder) என்று பெயர். இந்தக் கருவி தாவரங்களுக்கும் நாடித்துடிப்பு உண்டு என்பதைத் துல்லியமாக நிரூபித்துக் காட்டியது! இந்தச் சோதனையை நடத்துவதற்காக மிகுந்த கவனத்துடன் அவர் ஒரு செடியை வேருடன் தோண்டி எடுத்து அதைத் தன் கருவியுடன் இணைத்தார். செடியை புரோமைட் அடங்கிய ஒரு பாத்திரத்தில் அப்படியே தண்டுடன் வைத்தார்.

கடிகாரப் பெண்டுலம் அங்கும் இங்கும் ஊசலாடுவது போல ஆடிய அந்தக் கருவியின் முள் திடீரென்று சீரற்றதாக மாறி வேகமாக அங்கும் இங்கும் ஆடியது. பிறகு வேகமாக நடுநடுங்கி ஆடத் துவங்கியது. சடக்கென ஆட்டத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து நின்றது. அதன் உயிர் போனதை இவ்வாறு அது தெரிவித்தது! விஷத்தால் அதன் உயிர் போனது.

وَاللّٰهُ اَنْۢبَتَكُمْ مِّنَ الْاَرْضِ نَبَاتًا ۙ

அல்லாஹ்வே உங்களை ஒரு செடியைப் போல் பூமியில் வளரச் செய்து வெளிப்படுத்தினான் (அல்குர்ஆன் : 71:17)

1900ம் ஆண்டு பாரிஸில் நடந்த ஒரு மகாநாட்டிலும் பிறகு இங்கிலாந்திலும் தனது சோதனைகளை அவர் நடத்திக் காட்டினார். செடிகள் வெட்டப்பட்ட போது அவைகள் துடிதுடித்து அழுவதை அவர் காண்பித்த போது உலகமே அதிசயித்தது!

போஸ் காட்டிய வழியில் இப்போது அறிவியல் வெகுவாக வளர்ந்து விட்ட இன்றைய உலகில் பல்வேறு விதமான அதிசய சோதனைகளை இன்னொரு விஞ்ஞானிச் செய்து காட்டி வருகிறார். இவர் பெயர் க்ளீவ் பாக்ஸ்டர். (Cleve Backster) இவர் அமெரிக்காவைச் சேர்ந்தவர்.

லை டிடெக்டர் (Lie Detector) என்ற பொய்யைக் கண்டுபிடிக்கும் கருவி பற்றி நாம் அனைவரும் அறிவோம். ஒரு நாள் இந்த லை டிடெக்டரை ட்ராகன் ட்ரீ (Dracaena) எனப்படும் அரக்க மரத்துடன் அவர் இணைத்துப் பார்த்தார். வேரில் தண்ணீர் ஊற்றப்படும் போது இலைகள் அதை எவ்வளவு நேரத்தில் உணர்கின்றன என்று கண்டுபிடிப்பதே அவர் ஆய்வின் நோக்கம்.

கொள்கை ரீதியாகப் பார்த்தால் ஒரு தாவரமானது நீரை உறிஞ்சியவுடன் தடையைத் (Resistance) தளர்த்திக் கடத்தலை (Conductivity) அதிகரிக்க வேண்டும். ரிகார்டரில் இதற்கான வளைவு மேல் நோக்கிச் செல்ல வேண்டும். ஆனால் உண்மையில் நடந்ததோ வளைவு ரிகார்டரில் கீழ் நோக்கிச் சென்றது!

அதாவது லை டிடெக்டரை ஒரு மனிதனுடைன் இணைத்துச் சோதனை செய்யும் போது அது அவனது மூட் எனப்படும் நிலைகளுக்கு ஏற்றார் போல கருவியில் வெவ்வேறு வளைவுகளைக் காண்பிக்கும்.

ட்ராகன் ட்ரீயில் ஏற்பட்ட விளைவு மனிதனிடம் ஏற்படும் நிலை மாற்றத்தால் உருவாகும் வளைவுகளைப் போல அமைந்திருப்பதைக் கருவி உணர்த்தியது! நீரை உறிஞ்சியவுடன் அது சந்தோஷமாக இருப்பதை அது காட்டியது!

ஈ.எஸ்.பி. (ESP - Extra Sensory Perception) எனப்படும் அதீத புலன் உணர்வு கூட தாவரத்திற்கு உண்டு. இதையும் நிரூபிக்கும் வகையில் அவர் பல சோதனைகளை நடத்திக் காட்டினார்!

ஒரு மனிதனை திடீரென பயமுறுத்தினால் அவனிடம் அது ஏற்படுத்தும் விளைவு அவனை நிலைகுலையச் செய்வதன் மூலம் காண்பிக்கும். உடனடி எதிர்விளைவைக் காண பயமுறுத்திப் பார்ப்பது ஒரு சிறந்த வழி

என்பதை பாக்ஸ்டர் உணர்ந்திருந்தார்.ஆகவே செடியினுடைய இலைகளை சூடான காப்பியில் அமுக்கிப் பார்த்தார்.

ஆனால் விளைவுகள் ஏதும் உடனடியாகத் தெரியவில்லை. சரி, இன்னும் சற்றுக் கடுமையான சோதனையைச் செய்து பார்க்க வேண்டும் என்று அவர் தீர்மானித்தார்.

இலைகளை எரித்து விட்டால் என்ன என்று எண்ணி அவர் ஒரு தீப்பெட்டியை எடுத்தது தான் தாமதம், லை டிடெக்டருடன் இணைக்கப்பட்டிருந்த கிராப் பேப்பரில் ஒரு வளைவு வேகமாகத் தோன்றியது! கொளுத்தப்பட்ட தீக்குச்சியுடன் அவர் இலைகளை நெருங்கியவுடன் இன்னொரு வளைவு இன்னும் வேகமாக உருவானது!

நிச்சயமாக ஒரு மனிதன் தன்னை எரிக்கப் போகிறான் என்ற உணர்வு செடிக்கு ஏற்பட்டு உறுதியானவுடன் அது தன் பயத்தை வேகமாகக் காட்டியது.

ஆனால் எரிப்பது போல பாவனை செய்தாலோ அல்லது சற்று தாமதப்படுத்தினாலோ அது தன் பயத்தைக் காண்பிக்கவில்லை! ஆகவே மனித மனதில் தோன்றும் உண்மையான எண்ணத்தை புலன் கடந்த அதீத புலனாற்றலால் அது உணர்கிறது என்பதை அவர் கண்டார். இந்த அதிசய அனுபவம் அவரை மேலும் பல சோதனைகளைச் செய்ய வழி வகுத்தது.

இதற்கும் மேலாக தாவரங்கள் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு சிரம் பணிந்து வணங்குகின்றன என்பதாக இறைவன் குர்ஆனில் ....

وَّالنَّجْمُ وَالشَّجَرُ يَسْجُدٰنِ

செடிகள், (கொடிகள்,) மரங்கள் (ஆகிய அனைத்தும் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டுச்) சிரம் பணிகின்றன

(குர்ஆன்: 55:6)

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 24**

(இலையுதிர் காலம்)

தாவரங்களுக்கு பருவ காலங்களில் போதுமான அளவு நீர் கிடைக்கும் . அப்போது அதிகப்படியான நீரினை , நீராவிப் போக்கின் மூலமாக அதாவது இலையில் உள்ள இலைத்துளைகள் மூலம் வெளியேற்றிவிடும்.

கோடை காலத்தில் அதிக வெப்பம் நிலவும் . எனவே நிலங்கள் அனைத்தும் வறண்டு விடும் , நிலத்தடி நீர் மட்டமும் அப்போது குறைவாகவே காணப்படும், வேர்கள் தண்ணீரை உறிஞ்சுவது குறைந்தப் பிறகு மரங்களுக்கு போதுமான அளவு நீர் கிடைக்காது. கிடைக்கும் சிறிய அளவு நீரினை சரியாக பயன்படுத்திக் கொள்ளவே இலைகளை உதிர்த்து விடுகிறது. அதாவது கோடைக்காலத்தில் நீராவிப் போக்கினை கட்டுப்படுத்துவதற்காகவே இலைகள் உதிர்கின்றன.

மேலும் தாவரங்களுக்கு தேவையான பொருட்கள் நைட்ரஜன் , பாஸ்பரஸ் , பொட்டாஷியம் , மக்னீஷியம் ஆகியவற்றை தாவரங்கள் இலைகளின் நரம்புகள் வழியாக அடிமரத்துக்கு அனுப்பி பாதுகாப்பாக வைக்கின்றன.

தேவையில்லாத கழிவுப்பொருட்களான சுண்ணாம்புச்சத்து, சிலிக்கா போன்றவற்றை இலைகளில் பதுக்கி பின் அந்த இலைகளை உதிர்த்து விடுகின்றன.

தாவரங்களின் கழிவுப் பொருட்களை வெளியேற்ற இலைகளை உதிர்ப்பது போன்று, மனிதர்கள் செய்த பாவங்களை உதிர்த்து விடுவதற்காக , இறைவன் அவருக்கு நோயை கொடுப்பதாக நபிகளார் இலையுதிர் உதாரணத்தைக் கொண்டு விளக்குகிறார்கள்

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டுக் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் சென்றேன். அவர்களை(ப் பரிவோடு) எனது கையால் தொட்டு, "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்படுகிறீர்களே!" என்றேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஆம்; உங்களில் இருவர் காய்ச்சலால் அடையும் துன்பத்தைப் போன்று நான் ஒருவனே சிரமப்படுகிறேன்" என்றார்கள்.

நான், "இத்துன்பத்தின் காரணமாகத் தங்களுக்கு இரு (மடங்கு) நன்மைகள் உண்டு தானே?" என்று கேட்டேன்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஆம்" என்று கூறிவிட்டுப் பிறகு, "ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் நோயாயினும், அது அல்லாத வேறு எந்தத் துன்பமாயினும் (அதற்கு ஈடாக), மரம் தன் இலைகளை உதிர்த்துவிடுவதைப் போன்று அவருடைய பாவங்களை அல்லாஹ் உதிர்க்காமல் இருப்பதில்லை" என்றார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 5023.

கோடையில் மரத்தின் இலைகள் உதிர்ந்து போச்சு ; நோயில் மனிதன் செய்த பாவமும் குறைஞ்சிப் போச்சு .

" பூமி மீது நாம் மழையை பொழியச் செய்தால், அதில் முளை கிளம்பிப் பசுமையாகி வளர்கிறது" . குர்ஆன் (41:39)

மனிதர்களும் பாவம் மன்னிக்கப்பட்டு புனிதர்களாகிறர்கள் .

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 25**

இலைகள் ஏன் உதிருகின்றன ?

மரங்களுக்கு வயதானாலும் ,இலைகள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு பழுத்து விழுவதைப் பார்த்திருப்பீர்கள். இது ஏன் தெரியுமா ?

இது என்ன கேள்வி , முதிர்ச்சியடைந்ததும் உதிர்கிறது என்பது உங்கள் பதிலாக இருக்கும் என்பது எனக்குத் தெரியும்.

இலைகள் முதிர்ச்சி அடைவதற்குரிய விஞ்ஞான காரணங்களை சொல்கிறேன்.

இலைகள் முதிர்ச்சி அடைவதற்கு அப்சிசிக் அமிலம் (Abscissik Acid) சுரக்கப்படுவதாலும் முதிர் இலைகளுக்கு செலஜர் நீர், கனிம பொருட்களின் வரத்து தடைபடுவதாலும் ,சென்ஸ்சின்ஸ் (senescence) என்ற நிகழ்ச்சி முதிர் இலைக்குள் நடைபெறுவதால் இலைகள் பழுத்து உதிர்கின்றன.

அப்சிசிக் அமிலம் ,செலஜர் நீர், கனிம பொருட்கள் , சென்ஸ்சின்ஸ் நிகழ்வு ... இதெல்லாம் பற்றி தெள்ளத்தெளிவாக ஏழாம் வானத்தில் உள்ள "லவ்ஹுல் மஹ்ஃபூல் " என்னும் மரகத பலகையில் பதிவு செய்துவிட்டு,

முதல் வானமான கீழ் வானத்திலுள்ள "பைத்துல் இஸ்ஸா" என்னும் கண்ணியமிக்க தளத்தில் உள்ள குர்ஆனில் இறைவன் இவ்வாறு பதிவு செய்தான்...

" அவன் அறியாமல் யாதொரு இலையும் உதிர்வதில்லை" குர்ஆன் (6:59)

இலைகள் உதிர்வது போன்றே மனிதர்களுக்கும் வயோதிகம் ஏற்பட்டு மரணித்துப் போகிறார்கள்

வயோதிகம் என்பது நம் டிஎன்ஏ-க்களில் நிகழும் ஒரு நிகழ்வாகும். நமது டி.என்.ஏ. கூறுகளின் முனைகளில் ‘டிலோமர்ஸ்’ (Telomers) என்னும் மூலக்கூறுகள் உள்ளன. இது டி.என்.ஏ. கூறுகளை காப்பாற்றவும் ஒழுங்குபடுத்தி வைக்கவும் உதவுகிறது.

எப்போதெல்லாம் நமது டி.என்.ஏ. பெருக்கம் அடைகிறதோ அப்போதெல்லாம் இந்த ‘டிலோமர்ஸ்’ சற்று அழிக்கப்படுகிறது. பல வருடங்களுக்குப் பின் ஒரு நிலைப்பாட்டில் இந்த ‘டிலோமர்ஸ்’ காணாமல் போகின்றது. அந்தக் கணத்தில், செல்கள் பெருகுவதை நிறுத்திக்கொண்டு மடிகின்றன.

எப்போதெல்லாம் செல்கள் தாம் பெருகுவது இயலாமல் போகின்றதோ அப்போது அதை முதிர் செல் (Senescent) என்று அழைப்பர். பொதுவாக கூறவேண்டுமானால் ‘டிலோமர்ஸ்’ நீளம் அதிகமாக இருப்பின் செல்களின் ஆயுள் காலம் அதிகமாக இருக்க வகை அது செய்கிறது.

ரஹ்மத் ராஜகுமாரன் .

**தாவரங்களின் உலகம் 26**

(தாவர வேர்களின் கட்டமைப்புகளின் யுக்தி)



ஒரு மரத்தின் வேர்களின் அமைப்புகளையும் அவ்வேர்கள் நிலத்தை துளைத்து தண்ணீரைத் தேடி வளைந்து , நெளிந்து, எத்தனை இடர்பாடுகளையும் கடந்து தண்ணீர் இருக்கும் இடத்தை அடைந்து விடும்.

ஆணிவேர் எனப்படும் மூல வேருக்கு பக்கபலமாக அதன் கிளை வேர்களும் நீரையும் , தாது உப்புக்களையும் தேடி கண்டு ஆணி வேருக்கு சமிக்ஞை அனுப்புகின்றன.

நிலத்திலிருந்து உறிஞ்சப்படும் நீர் வேர் மூலமாக மரம் எத்தனை அடி உயரமாக இருந்தாலும் எல்லா கிளை நுனி வரையிலும் தங்குதடையின்றி ஒரு வழிப் பாதையில் புவியீர்ப்பு சக்தியை மீறி மேலேறுகிறது.

இந்த வேர்களின் கட்டமைப்பு செயல்திறனை ஒப்பிடுகையில் பிரசித்தி பெற்ற அமெரிக்காவின் நியூயார்க் நகர போக்குவரத்து அமைப்பு விட மிக அற்புதமாக வேர்கள் செயல்படுவதை விஞ்ஞானிகள் வியந்து போயினர்.

பொதுவான மரத்திலுள்ள வேர்களின் கட்டமைப்பின் ஒழுங்கிலிருந்து இன்னும் கடினமான போக்குவரத்து சிக்கலுக்குரிய மிக எளிதான வழி கிடைக்கும் என்று எதிர்பார்க்கின்றனர்.

ஆனாலும் மற்ற தாவரங்களின் வேர்களில் புகுத்தப்பட்டுள்ள யுக்திகள் நவீன விஞ்ஞானத்தின் பல துறைகளுக்குரிய நவீன கண்டுபிடிப்புகளுக்கு முன்னுதாரணமாக இருக்கும் என்று அறிவியலாளர்கள் எதிர்நோக்கி காத்திருக்கின்றனர்.

தாவரங்களின் ஆதாரம் வேர்கள். பூமிக்கு அடியில் மட்டுமல்ல; பூமிக்கு மேலேயும், தாவரத்தின் பிற பாகங்களிலும் தோன்றும் வேர் வகைகளைப் பற்றி அறிந்துகொள்வோம்.

வேறிடத்துப் பிறப்பவை (Adventitious - அட்வென்டிடியஸ்)

தண்டு, இலை, கிளை, அடி மரம் ஆகிய பகுதிகளில் தோன்றுபவை. (கரும்பு)

முண்டு வேர்கள் (Stilt - ஸ்டில்ட்)

பிரதான தண்டில் இருந்து தோன்றி, தாவரத்தை நிலைநிறுத்த உதவுபவை. (மக்காச்சோளம்)

தாங்கு வேர்கள் (Prop - பிராப்)

கிளைகளில் உருவாகி, கீழ்நோக்கி வளரும். நிலத்தில் ஊன்றி கிளைகளைத் தாங்கும்.(ஆலமரம்)

மூச்சு வேர்கள் (Respiratory - ரெஸ்பைரேட்டரி)

ஊன்று வேர்களில் இருந்து செங்குத்தாக நீர் மட்டத்திற்கு மேலும், நிலத்திலும் வளர்பவை. (அலையாத்தித் தாவரங்கள் )

அண்டை வேர்கள் (Root Buttresses - ரூட் பட்ரெஸ்ஸஸ்)

பெரு மரங்களில், பட்டையாகத் தடித்து சுவர் எழுப்பியது போல உயர்ந்து, சுற்றிலும் வளர்பவை. (மருத மரம் - Buttress Tree)

மிதவை வேர்கள் (Floating - ஃப்ளோட்டிங்)

நீர்த் தாவரங்கள் மிதக்க உதவும். மென்மையாகவும், பருத்தும் காணப்படும். காற்று நிறைந்தவை. (ஆகாயத் தாமரை)

உறிஞ்சு வேர்கள் (Haustorial - ஹாஸ்டோரியல்)

தொற்றிப் படரும் தாவரங்களில் காணப்படும். கொடிகளுக்குத் தேவையான நீர், உணவு போன்றவற்றை உறிஞ்சும் வேர்கள்.

(கஸ்குட்டா - Cuscutta)

ஒட்டு வேர்கள் (Clinging - கிளிங்கிங்)

மரங்களில் தொற்றிப் படரும் தாவரங்களில் காணப்படும். மரப்பட்டைகளின் இடுக்குகளில் பதிந்திருக்கும்.

(மிளகுக் கொடி)

உறிஞ்சு கவச வேர்கள் (Velamen - வெலாமென்)

செடியின் அடியிலிருந்து உண்டாகி தொங்கிக்கொண்டு, காற்றில் உள்ள ஈரத்தை எடுத்துக்கொள்ளும்.

(ஆர்க்கிட் தாவரங்கள்)

ஆனால் இறைவன் தன் திருக்குர்ஆனில் வேர்களை உவமானமாக ....

وَمَثَلُ كَلِمَةٍ خَبِيْثَةٍ كَشَجَرَةٍ خَبِيْثَةِ اجْتُثَّتْ مِنْ فَوْقِ الْاَرْضِ مَا لَهَا مِنْ قَرَارٍ

(நிராகரிப்பவர்களின் குஃப்ரு, ஷிர்க்கான) கெட்ட வாக்கியத்திற்கு உதாரணம்: பூமியில் இருந்த வேர்கள் அறுபட்டு (உறுதியின்றி) நிற்கும் (பட்டுப்போன ஒரு) கெட்ட மரத்திற்கு ஒப்பாகும்; அது நிலைத்திருக்காது. (குர்ஆன் : 14:26)

என்கிறான் .

**தாவரங்களின் உலகம் 27**

(தாமரை இலை தண்ணீர் தொழில்நுட்பம்)

தண்ணீரில் மிதக்கும் தாமரை இலையின் மேற்பரப்பு சாதாரண இலையில் உள்ளது போல மென்மையாக இல்லாமல் மெழுகு தன்மையுடைய நுண் மேடு பள்ளங்கள் கொண்டதாக இருக்கும்.

அதன் விளைவாக அப்பரப்பில் விழும் நீர்த்துளி படிய முடியாமல் , திலை திவலையாக உருண்டோடும். தூசித்துகள்களும் நீர்த்திவலையுடன் ஒட்டிக்கொண்டு போய் விடும் .இதனால் எப்போதும் தாமரை இலை படுசுத்தமாக இருக்கும் .

"தாமரை இலை தண்ணீர் " என்ற சொற்றொடர் வழக்கு இதனை தான் குறிக்கிறது. நீரிலேயே இருக்கிறது ஆனால் தண்ணீர் அதன் மீது ஒட்டுவதில்லை.

இந்த தத்துவத்தை இறைஞானி ஒருவர் கடலில் பயணம் செய்த போது கடலிலுள்ள மீன் அவருக்கு ஒரு பாடத்தைக் கற்றுக் கொடுத்ததாம் ." உப்பு நீருக்குள்ளே இருக்கிறேன் இருந்தாலும், உப்பு என் உடலுக்குள் இருப்பதில்லை. நீ துனியாவில் முழ்கியிருந்தாலும் துனியா உன் சட்டைப் பையுடன் நிற்கட்டும் . அது ஈமானுக்குள் சென்று விட வேண்டாம்"

இந்த தாமரை இலை தொழில்நுட்பத்தை முதன்முதலில் "வில்ஹெல்ம் பார்த்லாட் " என்பவர் கண்டு உணர்ந்தார். இதனடிப்படையில் கட்டிடக் கலை அறிஞர்கள் சுவரும்,நீரும் ஒட்டாத நுண் பரப்புடைய சுவர் வண்ணங்களையும், தளஓடுகளையும் உருவாக்கினார்கள்.

காரின் முன் கண்ணாடியும், வைப்பரும் இந்த தொழில் நுட்பத்தைக் கொண்டு அமைத்தனர்.

இந்தத் தாமரை இலை தத்துவத்தின்படிதான் ராணுவ வீரர்களுக்கு உடை தயாரிக்கப்படுகிறதாம்.

ராணுவ வீரர்களுக்கான உடை தயாரிப்பதற்கான நூலிழைகளை நானோகெயா என்ற நிறுவனம்தயாரித்து வருகிறதாம்.

இவர்கள் " நீரெதிர் நூலிழைகள் " மூலம் தாமரை இலை பரப்பு போன்ற துணிகளை உருவாக்குகின்றனர்.இந்த வகையில் தயாரிக்கப்படும் துணிகள் மீது தண்ணீர் ஒட்டுவதில்லை.தேநீர் சிந்தினாலும் ஒட்டுவதில்லையாம்.உதறி விட்டுவிட்டால் போதும் .தேநீர் கறை இருந்த இடம் தெரியாமல் போய்விடுமாம்.

அடிக்கடி துவைக்கத் தேவை இல்லை. மனதிருப்திகாக எப்போதாவது தண்ணீரில் அலசிப் போட்டால் போதும் என்கின்றனர்.

மருத்துவத் துறையிலும் இத்தகைய தொழில்நுட்பத்தில் தயாரிக்கும் ஆடைகளுக்கு நல்ல வரவேற்பு உள்ளது என்கின்றனர் அந்த நிறுவனத்தினர்.

இயற்கை நமக்குக் கற்றுத் தந்து கொண்டிருக்கும் பாடங்கள் ஏராளம் என்பது நமக்குத் தெரியும். நவீன தொழில் நுட்பத்திற்கான ஆலோசனைகளும் தாவரத்தின் இயல்பிலிருந்தும் கிடைக்கிறது என்பதைக் கேட்கும்போது ஆச்சரியம் மேலிடத்தான் செய்கிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 28**

ராட்ச அல்லி இலை தொழில்நுட்பம்

விக்டோரியா அமேசோனிக்கா என்ற தாவரவியல் பெயர் கொண்ட ராட்சச அல்லி தென் அமெரிக்கா காடுகளில் நீர்ப்பரப்பில் மிகப் பெரிய கிளைகளை விரித்து பரந்து இருக்கும்.

அல்லி குடும்பத்தை சார்ந்தது இலை சுமார் 3 மீட்டர் முதல் பத்தடிக்கு மேல் கூட இடை விட்டம் கொண்டது ஆகும். அது மட்டுமல்ல அதிக எடையைத் தாங்கும் திறன் உடையது .

இவ்விலையில் ஏறி உட்கார்ந்தால் இது கிழிவது இல்லை. இதில் 20 முதல் 40 வரை பூக்கள் வரும். இப்பூக்கள் ஒரு அடி அகலம் கொண்ட வெள்ளை ரோஜா நிறமும் மிக வாசனையும் உடையது.

இவைகளில் 400 முதல் 600 விதைகள் வரை காணப்படும். விதைகளை வறுத்து உண்கிறார்கள்.

அமெரிக்காவிலும், அமேசான் ஆற்றிலும் வளர்கிறது. இதை முதன் முதலில் 1801 ஆம் ஆண்டு பிரேசில் நாட்டில் கண்டனர். பிறகு 1837ஆம் ஆண்டு ஐரோப்பாவிற்கு கொண்டு சென்றனர். இதற்கு புகழ் பெற்ற மகாராணி விக்டோரியாவின் பெயரை வைத்தனர்.

இந்த அரிய தாவரத்தின் மற்றொரு சுவாரஸ்யமான அம்சம். விக்டோரியா வருடத்திற்கு ஒரு முறை பூக்கும். இது இரவில் மட்டுமே பூக்கும்.

மாலையில், அந்தி தொடங்கியவுடன், ஒரு மொட்டு தண்ணீரிலிருந்து வெளியே வந்து அதன் இதழ்களை விரிக்கிறது. விடியற்காலையில், பூவின் இதழ்கள் சுருண்டு, அது தண்ணீருக்கு அடியில் செல்கிறது. இப்படியே இது 3 நாட்களுக்கு தொடர்கிறது.

முதல் நாளில் பூ முற்றிலும் பனி வெள்ளை நிறத்தில் இருக்கும்.

இரண்டாவது நாளில், இது வெளிர் இளஞ்சிவப்பு நிறத்தைப் பெறுகிறது.

அதன் வாழ்க்கையின் கடைசி மாலையில், பூ சிவப்பு நிறமாக மாறும். அதன் பிறகு, அவர் தண்ணீரில் மூழ்கும். அது மீண்டும் நீரின் மேற்பரப்பில் தோன்றாது.

இத்தகவல்கள் ஏதோ ஒரு விஷயத்தை சொல்ல வருகிறது என்பதாக தாவரவியல் விஞ்ஞானிகள் ஆய்வு செய்கின்றனர்.

126 பவுண்ட் எடை கொண்ட ஒரு தாயும் 4 வயது மகளும் அவ்விலைப் பரப்பின் மீது அமர்ந்திருக்கும் முடியும் .இந்த இலையின் பின்புறம் பெரிய நரம்புகள் கொண்ட அதன் கட்டமைப்பு விஸ்திரமாக அதிக எடையை தாங்கக் கூடியதாக இருக்கிறது.

இதன் அமைப்பை பார்த்துதான் 1851 இல் இங்கிலாந்தில் லண்டன் மாநகரத்தில் CRYSTAL PALACE என்ற மிகப்பெரிய கட்டிடத்தை வார்ப்பு இரும்பு மற்றும் கண்ணாடி கொண்டு Joseph Paxton என்ற தோட்ட கலைஞரின் சிந்தனை உருவாக்கியது !

இந்த கட்டடத்தில்தான் அந்நாளைய தொழில் புரட்சியின் பயனைக் காட்டும் விதமான உலகப் பொருட்காட்சி நடந்தது.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 29**

(விதையுரைத் தொழில்நுட்பம்)

1840 சுவிட்சர்லாந்தில் George de Mestral என்ற தொழில் வல்லுனர் என் செல்ல நாயுடன் Alps மலை அடிவாரத்தில் நடை போட்டுக் கொண்டிருந்த போது, நாயுருவிச் செடியில் உள்ள விதைகளின் நீண்ட கொக்கிகள் இவருடைய உடையிலும் நாயின் உடல் ரோமங்களில் பற்றிக்கொண்டு விதை பரவுதல் நடந்தன.

வீட்டுக்குச் சென்றவுடன் மாஸ்ட்ரல் ஒரு விதை யுறையை நுண்ணோக்கி அடியில் வைத்து ஆராய்ந்தார். அதில் நீண்ட கொக்கி போன்ற அமைப்பு இருப்பதையும், அது உடை நூல் வளையத்திலும் நாய் ரோம

வளையத்திலும் மாட்டிக் கொண்டு சிறிது தூரம் சென்ற பிறகு சிறு அதிர்வில் அக்கொக்கிகள் கழட்டிக் கொண்டு விதையை வேறு ஒரு இடத்தில் கடத்துவதும் அவருக்கு புரிந்தது.

இரண்டு பொருட்கள் ஒட்டவும் மீண்டும் பிரிக்கவும் இந்த கொக்கி - வளைய இணைவு

**அருமையான**

வழியை அவருக்கு தோற்றுவித்தது.

இந்த அடிப்படையில் அவரின் எண்ணத்தில் உருவானதுதான் தற்போது புகழ் பெற்றுள்ள Velcro என்ற அடையாளப் பெருடைய ஒட்டும் கச்சை தொழில்நுட்பம் !

Adidas காலணிகளிலும், வாட்ச்சை கையில் கட்டும்போது ஒட்டும் ஸ்ட்ரப் , ஜன்னல் கொசுவலைகளிலும், பைகள், உடைகள் ஆகிய எண்ணற்ற வீட்டு உபயோகப் பொருட்களிலும் நாம் இதை பயன்படுத்தி வருகிறோம்.

**தாவரங்களின் உலகம் 30**

(தாய்மரத்தோடு கிளை இணைப்பின் யுக்தி)




ஒரு மரக்கிளையானது ஒரு தாயின்கை, குழந்தைகளை ஏந்தி இருப்பது போல் , எண்ணற்ற இலைகள் , பூக்கள் , கனிகள் ஆகியவற்றை தாங்கி பிடித்து காற்று, புயல் ,பேய்மழை ஆகியவற்றிலிருந்து பாதுகாக்கும் திறன் பெற்றுள்ளது. அதற்கு காரணம் அதன் இணைப்பின் கட்டமைப்பும் தாய் மரத்தோடு அது இணைந்துள்ள நுட்பமும் தான்

وَ فِى الْاَرْضِ قِطَعٌ مُّتَجٰوِرٰتٌ وَّجَنّٰتٌ مِّنْ اَعْنَابٍ وَّزَرْعٌ وَّنَخِيْلٌ صِنْوَانٌ وَّغَيْرُ صِنْوَانٍ يُّسْقٰى بِمَآءٍ وَّاحِدٍ وَنُفَضِّلُ بَعْضَهَا عَلٰى بَعْضٍ فِى الْاُكُلِ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّعْقِلُوْنَ

பூமியில் பல தொகுதிகளை சேர்ந்தாற்போல் அமைத்து (அதில்) திராட்சை, தானியப்பயிர் நிலங்களையும், பேரீச்சந் தோப்புகளையும் ஆக்கினான்; கிளைகள் உள்ளதும், கிளைகள் இல்லாததுமான மரங்களையும் (உற்பத்தி செய்கிறான். இவை அனைத்திற்கும்) ஒரேவித நீர் புகட்டப்பட்டபோதிலும், சிலவற்றைவிட சிலவற்றை சுவையில் நாம் மேன்மையாக்கி வைத்தோம். இதில், அறிவுடைய மக்களுக்கு நிச்சயமாக பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 13:4)

மரத்தோடு கிளைகள் இணையும் கட்டமைப்பை Rud Thygesen மற்றும் Johnny sorensen இரண்டு டச்சு தச்சுக் கலைஞர்கள் தாய் மரமும், அதன் கிளையும் சந்திக்கும் இடத்தில் நீளவாக்கிலும் கிடைமட்டமாக உள்ள நார் அமைப்பை பார்த்து அதன் அடிப்படையிலேயே இணைப்பு சில்லுகள் ஏதுமின்றி இணைப்புகள் எதுவுமின்றி பின் தங்கி இருக்கை இரண்டையும் இணைத்து நாற்காலி செய்தனர்.

1969-ல் கோப்பன் ஹேகனில் நடைபெற்ற சர்வதேச கலைக் கண் காட்சியில் அந்த மர இருக்கை தொழில்நுட்பம் போட்டியில் அந்தக் கண்காட்சியில் அது முதல் பரிசு பெற்றது.

கிளைகள் இல்லா மரத்தின் யுக்தியில் இணைப்புகள் இல்லா மர இருக்கைகளை நவீன காலத்தில் செய்துள்ளனர்.

அபூ சயித் அல்குத்ரீ(ரலி) கூறியதாவது: தச்சு வேலை தெரிந்த அடிமை ஒருவனை வைத்திருந்த முஹாஜிர் பெண் ஒருவரிடம் நபி (ஸல்) அவர்கள் ஆளனுப்பி மிம்பருக்கு (மேடைக்கு)த் தேவையான மரச்சட்டங்களைச் செய்து தரும்படி உன் அடிமைக்குக் கட்டளையிடு என்று கூறினார்கள்.

அவ்வாறே, அப்பெண்மணி தன் அடிமைக்குக் கட்டளையிட, அவ்வடிமை (காட்டிற்குச்) சென்று, (இறகு போன்ற இலைகளை உடைய) தர்ஃபா எனும் ஒரு வகை மரத்தை வெட்டியெடுத்து வந்து நபி (ஸல்) அவர்களுக்கு மிம்பர் ஒன்றைச் செய்தார்.

அதைச் செய்து முடித்தபின் அப்பெண்மணி நபி (ஸல்) அவர்களுக்கு மிம்பரை அவர் செய்து முடித்துவிட்டதாகத் தகவல் சொல்லி அனுப்பினார்.

நபி (ஸல்) அவர்கள் அதைக் கொடுத்தனுப்புமாறு சொன்னார்கள். பின்னர் அதைக் கொண்டு வந்தனர். நபி (ஸல்) அவர்கள் அதைச் சுமந்து சென்று இப்போது நீங்கள் பார்க்கும் இடத்தில் வைத்தார்கள். ஸஹீஹ் புகாரி : 2569.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 31**

(மர உடல் அமைப்பில் கட்டிடங்கள்)




மனிதர்கள் தோன்றாத காலத்திலேயே தாவரங்கள் நெருக்கமாக வளர்ந்த சூழ்நிலையில், இடப்பற்றாக்குறை மற்றும் ஒளி, காற்று ஆகிய தேவைகளை சமாளிக்கும் விதமாக பல தாவரங்கள் ஓங்கி மிக உயரமாக வளரும் தன்மை பெற்றன.

இம்மரங்கள் 300 அடி உயரத்திற்கும் அவை வளர்ந்த பொழுது அதற்கு ஏற்ப உடல் கட்டமைப்பைப் பெற வேண்டியதாயிற்று நிலையான மேல் எடை (static Load) தாங்கும் திறன் , மேலே உள்ள இலைகளுக்கு நீரும் கனிமங்களும் கொண்டுசெல்லும் நுட்பம் (conduction Technology ) , பேய்காற்று, புயல் போன்ற இயக்க எடை தாங்கும் தன்மை (Dyanamic ) ஆகிய தாங்கும் தன்மைகளை மரங்கள் இயற்கையிலேயே பெற்றிருப்பதை அம்மரங்களின் குறுக்குவெட்டுத் தோற்றத்தில் இருந்து கண்டுகொண்டனர்.

உலகிலேயே மிகப் பெரிய மரமாக ஹைபெரியன் (Hyperion) அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. இதன் உயரம் 379.1 அடிகளாகும்.

இதுவரை மிக உயரமான மரமாக இருந்த கலிபோர்னியா ஸ்ட்ராடோஸ்பியர் ஜெயண்ட் (Stratosphere Giant) செம்மரத்தின் உயரம் 369 அடிகள். கிறிஸ் அட்கின்ஸ், மைக்கேல் டெய்லர் என்ற இரு ஆராய்ச்சியாளர்கள் கலிபோர்னியாவில் இதுவரை உயரமாக இருந்த Stratosphere Giant மரத்தை விட ஹைபெரியன் (Hyperion ) மரம் உயரமாக இருந்ததைக் கண்டறிந்தனர்.

ஹைபெரியனின் உயரம் குறைவான கிளையே 25 மாடி உயரத்துக்கு இருக்கிறது. உலகிலேயே மிக உயரமான மரம் ஹைபெரியன் என்று அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

இன்றும் இளைமையோடு வேகமாக வளர்ந்து வரும் ஹைபெரியனுக்கு வயது 600. இன்னும் 600 ஆண்டுகள் கூட வாழ முடியும். காரணம் இயற்கையிலேயே அதற்குக் கிடைத்த வலிமை .

பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு மக்கள் தொகை பெருக்கத்தால் அதே நெருக்கமான காற்றோட்ட வசதி குறைவான சூழ்நிலையை நாம் இன்று சந்திக்கிறோம்.

இடப்பற்றாக்குறையால் விவசாய நிலங்களையெல்லாம் அழித்து குடியிருப்புகள் கட்டியும், மாசுகட்டுப்பாடு சரியாக செய்யாமலும் இடர்பாடுகளை எதிர்கொள்கிறோம். இன்னும் சில ஆண்டுகளில் வீடு கட்ட நிலப்பரப்பே இல்லை என்ற நிலை உருவாகும் சாத்தியக்கூறு உள்ளது.

இந்த சூழ்நிலையில்தான் கட்டிடக் கலை அறிஞர்கள் நீண்டு வளரும் மர உடல் அமைப்பு நுட்பத்தை ஆராய்ந்தனர் .அதன் அடிப்படையில்தான் குத்துயரம் கட்டிடக்கலை தொழில்நுட்பம் (vertical Building Technology) என்ற முயற்சியில் இறங்கியுள்ளார்கள்.

இதனால் 100 வீடுகள் கட்டும் இடத்தில் ஆயிரம் வீடுகள் கட்ட முடியும் அதுவும் சுகாதாரத்தோடு அமைக்க முடியும் என்று உறுதி அளித்தனர் .

இந்த தொழில்நுட்பத்தை செயல்படுத்தி ஸ்பெயின் நாட்டு கட்டடக் கலைஞர்கள் ( Eloycelaya , Rasa cervera, Javier Gomez ) ஆகியோர் ஒரு லட்சம் பேர் வசித்து கூடிய குத்துயர குட்டி நகரத்தையே உருவாக்கும் முனைப்பில் உள்ளார்கள்.

அந்தத் குத்துயர நகரம் 4050 அடி உயரமும், 300 அடுக்கும் ஒவ்வொரு அடுக்கிலும் பல சுற்று தொகுப்பு வீடுகளும் இடம்பெற்றிருக்கும்.

ஹைபெரியன் மரத்தின் ஒவ்வொரு அடி உயரத்திலும் அதன் வலிமை சற்றும் குறையாமல் மேலுள்ள பாகத்திற்கு வலிமை அதிகப்படுத்திக் கொடுத்துக் கொண்டே இருப்பது போல் இவர்களின் குத்துயர குட்டி நகரத்தின் கட்டிடத்திலும் இதன் வலிமை நிரூபிக்கப்பட்டுள்ளது.

இந்த அமைப்பு நீண்டு உயரமாக வளர்ந்து கிளைகள் பரப்பி வளரும் மர உடல் அமைப்பில் இருந்து இந்த நுட்பத்தை முன்மாதிரியாக இந்த கட்டிடத்தில் பயன்படுத்தியுள்ளனர்.

அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

'ஒரு கட்டிடித்தின் ஒரு பகுதி இன்னொரு பகுதியை எப்படி வலுப்படுத்திக் கொண்டிருக்கிறதோ அது போன்றே ஒரு இறைநம்பிக்கையாளர் இன்னொரு இறைநம்பிக்கையாளர் விஷயத்தில் நடக்க வேண்டும்' என்று நபி(ஸல்) கூறிவிட்டுத் தம் விரல்களைக் கோர்த்துக் காட்டினார்கள். (புகாரி : 481)

ரஹ்மத் ராஜகுமாரன் .

**தாவரங்களின் உலகம் 32**

கிளாமிடான் ( அறிவியல் புனைக்கதை) by தமிழ் மகன்

(ஆழி பதிப்பகம் - அமரர் சுஜாதா அறக்கட்டளை நடத்திய போட்டியில் ரூ.20 ஆயிரம் பரிசு பெற்ற சிறுகதை)

யோசனையின் ஊடே ஜன்னலோர மரக்கிளை லேசாக ஆடுவதைக் கவனித்தார் பேராசிரியர் எழிலரசு. காற்று அடிக்காமலேயே மரக்கிளை ஆடுவது வினோதமாக இருந்தது. ஊன்றி பார்த்தபோது மரக்கிளை நகர்ந்தது மாதிரியும் தெரிந்தது. ஜன்னல் ஓரக் கிளையாக இருந்ததால் இன்னும் சற்று நெருங்கிப் பார்த்தார். நகர்ந்தது கிளையில்லை. கிளையின் மீதிருந்த ஓர் உருவம்.

மனிதன்.. பச்சோந்தி போல மரத்தின் நிறத்துக்கே மாறிப்போயிருந்தான். பேராசிரியருக்கு அதிர்ச்சியாக இருந்தது. “யாரப்பா அது?” என்றார்.

கிளையில் இருந்தவன் தன்னை யாரோ கவனித்துவிட்டார்கள் என்ற அச்சத்தில் மீண்டும் மரத்தின் நடுக்கிளைக்குப் போய் மறைந்து கொண்டான்.

“களவுக்காரனோ, கலகக்காரனோ. யாராக இருந்தாலும் அரசாங்கத்திடம் ஒப்படைக்க வேண்டியிருக்கும்... மரியாதையாக இறங்கி வா”

முகத்தை மட்டும் வெளியே காட்டி மிரள மிரள விழித்தான் மரத்தில் இருந்தவன்.

“ஓ.. நீ அந்தக் கிராமத்தான்தானே?... தப்பி வந்தவன் அல்லவா?” என்றபடி திரைக்காவலருக்குத் தகவல் தர எத்தனித்தார்.

திரைப் பொத்தானை அழுத்துவதற்குள் மரக்கிளையில் ஒரே தாவாகத் தாவி வந்து அவர் முன் வந்து நின்றான் அவன். கிராமத்தான் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாலும் இப்போதுதான் நேரில் பார்த்தார் எழிலரசு. நகரத்தானைவிட பெரிதும் மாறுபட்டிருந்தான்.

“நான் தப்பி வந்தவன் அல்ல. தெரியாமல் வந்துவிட்டவன். திரும்பி கிராமத்துக்குப் போக உதவுங்கள்” என்றான்.

அவனுடைய உச்சரிப்பும்கூட வேடிக்கையாக இருந்தது.

நகரத்து ஆடையோ, நகரத்தின் நிறமோ கூட இல்லாமல் இருந்தான். சொல்லப்போனால் சேற்றின் நிறத்தில் ஒரு கால் சட்டையும் மேல் சட்டையும் இருந்தது. தைக்கப்பட்டபோது அது வேறு ஏதோ நிறத்தில் இருந்திருக்க வேண்டும். சேற்றின் நிறம் அதற்கு அவர்களின் வேலை தந்த பரிசு. ஒரு வரலாற்றுப் பேராசிரியருக்கான அக்கறை விழித்துக் கொண்டது அவருக்கு. பார்த்ததுமே அவன் மீது பரிதாபம் பொங்கியது.

“மூன்று நாள்கள் ஆயிற்றே. சாப்பிட்டாயா?” என்றார் பரிவோடு.

“இல்லை. எனக்கு பசிப்பதில்லை...” மேற்கொண்டு ஏதோ சொல்ல தயாரானவன் மாதிரி இருந்தாலும் எதுவும் சொல்லவில்லை.

எதற்கும் இருக்கட்டும் என்று குடுவை நீரை அவன் பக்கம் திருப்பினார். அவன் அதைக் குடித்தான் எனக் கூறுவதைவிட வாய்வழியாக உடலின் மேல் ஊற்றிக் கொண்டான் என்பதுதான் சரியாக இருக்கும். படுக்கையில் தூங்குமாறு சொன்னபோதும் தரையில்தான் படுக்கும் பழக்கம் என்றான். விவசாயியாக இருப்பதால் உள்ள தரம்குறைந்த வாழ்க்கையையும் அவன் புரிந்து கொண்டவனாகத் தெரியவில்லை. என்னை கிராமத்துக்கு அனுப்பி வைத்துவிடுங்கள் என்றான் லூப் வாக்கியம் போல. அதைத் தவிர வேறு நோக்கம் அவனுக்கு இல்லை. நகரத்துக்கும் கிராமத்துக்கும் இருக்கிற வித்தியாசம் “பரங்கி’ திரைப்படத்துக்கும் “பரட்டை’ திரைப்படத்துக்குமான வித்தியாசம் போல இருப்பதாகச் சொன்னான்.

நகரத்தில் அந்த இரண்டு படமும் திரையிடப்படவில்லை. பிரமிக்க வைக்கும் வித்தியாசங்களோடு கூடிய இரண்டு கிராம திரைப்படங்களை அவன் ஒப்பிட்டுச் சொல்வதாகத் தோன்றியது.

“என்ன நடக்கிறது அங்கே? … விவரிக்க முடியுமா?” என்றார் எழிலரசு.

“எங்கே?” கேள்வியின் ஆதாரமே புரியாமல் கேட்டான்.

“இல்லையப்பா இங்கே நாங்கள் வசதியாக வாழ்கிறோம். ஆரோக்கிய உணவு உண்கிறோம். சுகமாக இருக்கிறோம். நீங்கள் இது எதுவும் இல்லாமல் வாழ்வதாகத் தோன்றுகிறது. நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்? உங்களை எப்படி நடத்துகிறார்கள்?” என்று விளக்கிக் கேட்டார் .

“நீங்கள் சொன்ன வாக்கியத்தில் எனக்கு சில சொற்கள் புரியவில்லை… வசதி, ஆரோக்கிய, சுகமாக.. இதெல்லாம் என்ன?”

அங்கு எப்படி நடத்துகிறார்கள் என்பது குறித்து அவனை எதையும் விவரிக்க வேண்டியதில்லை என்ற முடிவோடு வேறு விஷயங்களை எளிமையாகவும் ஒவ்வொன்றாகவும் கேட்க ஆரம்பித்தார்.

“நீ தினமும் என்ன வேலை செய்கிறாய்?”

“நெல் சாகுபடி பிரிவில்…” சற்றே வெறுமையாகப் பார்த்துவிட்டு

“நெல் சாகுபடி. நெல் சாகுபடி” என இருதரம் தனக்காகச் சொல்லிப் பார்த்துக் கொண்டான்.

“நெல் சாகுபடி சரி…. தினமும் வயலுக்குப் போய் என்ன செய்வாய்?”

ஆழ்ந்த யோசனையில் மூழ்கிப் போனான். நெல் சாகுபடி என்பதைத் தவிர வேறு விளக்கங்களை அவனிடம் யாரும் விசாரித்திருக்க மாட்டார்கள் போலும்.

பிறகு “பயிர் செய்கிறோம்” என்றான். திடீர் நினைவு ஏற்பட்டவனாக “நாங்கள் வயலுக்குப் போக மாட்டோம். வயலில்தான் நாங்கள் வசிக்கிறோம்”

“சரி. இங்கு எப்படி வந்தாய்?”

“ம். வந்து.. விளைபொருள் வண்டியில் மூட்டைகளை அடுக்கிவிட்டு.. வண்டியிலேயே தூங்கிவிட்டேன்… வண்டியை ஒரு இடத்தில் நிறுத்தினார்கள். நான் இறங்கிப் பார்த்தேன். கிராமம் காணாமல் போயிருந்தது. இது நகரம் என்று புரிந்தது. நான் தெரியாமல் வந்துவிட்டேன். தப்பி வந்தவன் அல்ல.”

வெளிச்சத்தில் அவனை உற்று நோக்கினார். அவனின் உடலின் நிறமும்கூட தண்ணீரில் ஊறி பிசுபிசுப்புப் படர்ந்து இருந்தது.

“நெல் மூட்டையை வண்டியில் ஏற்றுவதும் உங்கள் வேலைதானா?”

“ஆமாம். உழவு செய்வது.. நாற்று நடுவது.. களையெடுப்பது.. கதிர் அறுப்பது எல்லாமே நெல் சாகுபடியாளரின் வேலைகள்தான்.”

“காய்கறிகள்…?”

“நான் தப்பி வந்தவன் இல்லை. என்னை கிராமத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்..”

“அதற்காகத்தான் கேட்கிறேன்”

“காய்கறிகள் தோட்டப் பயிர் பிரிவில். தென்னை சாகுபடி, வாழை சாகுபடி, நீர் பாசனப் பிரிவு எல்லாம் தனித்தனியாக இருக்கிறது” .. என்னிடம் இருக்கும் அத்தனைத் தகவலையும் சொல்லிவிட்டேன், இதற்கு மேல் கேட்காதீர்கள் என்பதாக இருந்தது அவன் பேச்சு.

உ.நா. சபையின் மனித மேம்பாட்டு அமைப்பு போன்றவை கிராமங்களில் இல்லை என்று திட்டவட்டமாகத் தெரிந்தது. நகர உ.நா.சபையில் இதை முறையிட்டால் என்ன என்று ஆவேசம் கொண்டார். அவனைப் படுத்துக் கொள்ளச் சொன்னார். மிக சோர்வாக இருந்தபோதும்கூட அவன் நின்று கொண்டுதான் இருந்தான். அமரவும் மறுத்தான். படுப்பது, உட்காருவது போன்றவை அவனுக்கு ஆடம்பரமான விஷயமாகவும் உயர் அதிகாரிகள் சம்பந்தபட்டதாகவும் இருந்தது. கிராமத்தில் எல்லோருமே இப்படித்தானா இல்லை அதிலும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கிறதா என்று தெரியவில்லை.

உயிரி தொழில்நுட்பப் பேராசிரியர் அமர்நாத் அவனை எல்லா பக்கமும் சோதித்தார். அடையாள மச்சத்தைத் தேடுவது மாதிரி அங்குலம் விடாமல் தேடினார். அந்த இடத்தைப் பரிசோதிக்கும்போதும் அவன் தேவைப்படும் அளவுக்குக் கூச்சம் காட்டவில்லை. அறுத்துவிடுவார்களோ என்ற தயக்கம் கலந்த பயம்தான் அதில் இருந்தது.

தொலைவிசாரணைத் திரையில் என்னவோ நேரடியாக ஒளிபரப்பிக் கொண்டிருந்தார்கள். “எது எது நேரடி ஒளிபரப்போ எவையெல்லாம் ஒத்திகை பார்த்து உருவாக்கப்பட்டவையோ?’ மக்களை இளித்தவாயர்களாக நினைக்கிறார்கள்” என எழிலரசுவின் சலிப்பு தொடர்ந்தது.

“எல்லாவற்றையும் மீறி நேற்று ஒரு கிராமத்தான் நகரத்துக்கு வந்துவிட்டான். நீங்கள் எல்லாம் என்ன செய்கிறீர்கள்?” குடியரசுத் தலைவர் மிகுந்த ஆவேசத்தோடு கேட்டார்.

“கிராமத்திலிருந்து நகரத்துக்கு வரும் வழிகள் இரண்டுதான். அவை வாரத்துக்கு ஒரு முறைதான் திறக்கப்படும். அப்போது கண்காணிப்பு வாயிலில் தீவிரமான பரிசோதனை உண்டு. விளைபொருள்களைத் தவிர மனிதர்கள் யாரேனும் அந்த வழியாக வெளியேறினால் அவர்கள் கருகி இறந்து போய்விடுவார்கள். சக்தி வாய்ந்த மின்காணிகள் பொருத்தப்பட்டுள்ளன. யாரும் தப்பித்திருக்க வாய்ப்பே இல்லை”

“அப்படியானால் கிராமத்தில் ஒருவன் மூன்று நாள்களாக அடையாள அட்டை பதிக்காமல் இருக்கிறான். அவன் எங்கே போய் தொலைந்தான் என்று கிராமவாசிகளுக்கும் தெரியவில்லை. அவனுடைய பிரேதமும்கூட கிடைக்கவில்லை.”

“கிராம காவலர்கள்...?”

“அவர்களிடமும் விசாரித்துவிட்டேன். சல்லடைபோட்டுத் தேடிவிட்டார்கள். காணாமல் போனவன் “கிராமத்தான் நெ.சா. லட்சத்து பதிமூன்று’ துரிதமாகத் தேடுங்கள்”

“நாளைக்குள் நெல் சாகுபடிக்கு அவனை அனுப்பி வைக்கிறேன்.”

அந்த ஒளிபரப்பைப் பார்த்துவிட்டு கிராமத்தான் அதிர்ச்சியோடு தன் பழைய பல்லவியை ஆரம்பித்தான்.

“தப்பி வந்தவன் அல்ல, தெரியாமல் வந்தவன்”

கிராமவாசிகள் கிராமங்களிலேயேதான் இருக்க வேண்டும் என்றும் நகரவாசிகள் நகரத்திலேயே இருக்க வேண்டும் என்றும் சட்டம் கொண்டு வரப்பட்டபோதுகூட அதற்கு அமோக வரவேற்பு இருந்தது.

பிறகு நடந்தது அப்படி லகுவாக இல்லை. கிராமத்து மக்கள் நிலத்திலும் நீரிலும் வெயிலிலும் கிடந்து உழலுவதும் நகரத்தில் நிழலிலும் நல்ல ஆரோக்கியமான சூழலில் வாழ்வதும் தவிர்க்க முடியாததாகிவிட்டது.

“நகரத்தில் வேறு உணவும் கிராமத்தில் வேறு உணவும் இருப்பதாகச் சில சதிகாரர்கள் சொல்லுவதை நம்பாதீர்கள்” என்று குடியரசுத் தலைவர் ஆண்டுதோறும் விழிப்புணர்வு நாள் கூட்டத்தில் முழங்குவார். அதனாலேயே சிலருக்கு அதில் சந்தேகம் வலுத்தது. ஆனால் யாரும் வெளிக்காட்டிக் கொள்வதில்லை. எல்லோருக்கும் சந்தேகமும் எந்தச் சந்தேகமும் இல்லையே என்ற பாவனையும் பழகிப் போயிருந்தது.

அமர்நாத், கிராமத்தான் முதுகில் ஓரிடத்தைச் சுட்டிக் காட்டி, “இங்கே பார்த்தீர்களா?” என்றார். அவர் சுட்டிய இடத்தில் அவன் உடலில் திட்டுத் திட்டாய் தோலின் நிறத்தில் மாற்றமிருந்தது. கொஞ்சம் சமூக அக்கறையும் அரசு அதிருப்தியும் கொண்ட சொற்ப நபர்களில் அவரும் ஒருவர் என்பதால் அவரிடம் விசயத்தை விளக்க அழைத்திருந்தார் எழிலரசு.

“சூரிய ஒளியில் நின்றால் எப்படி இருக்கிறது உனக்கு?” என்றார் அவனிடம் உறுதிப்படுத்திக் கொள்ளும்விதமாக.

“நாள் முழுக்க எனக்குச் சூரிய ஒளி தேவைப்படுகிறது. வேறு உணவுகூட இரண்டாம்பட்சம்தான். கடந்த இரண்டு ஆண்டுகளாக எங்களுக்கு இப்படி இருக்கிறது. இதற்காக எங்களுக்குத் தினமும் ஊசி போடுவார்கள்.. நாங்கள் இனிமேல் சூரிய ஒளிமூலமாகவே வாழ முடியும் என்கிறார்கள். எங்களுக்குத் தனியாக ஆகாரம்கூட தேவையில்லை என்று கூறுகிறார்கள்.” வகுப்பில் எழுப்பிக் கேள்வி கேட்கப்பட்ட மாணவன் போல சொன்னான்.

“இதனால் உனக்குக் கடினமாக இல்லையா?” என்றார்.

அவனுக்கு அதில் சொல்வதற்குக் கருத்து எதுவும் இன்றி வார்த்தையைக் கிரகிக்க முடியாமல் பார்த்தான். தரையில் சரிந்து படுத்துக் கொண்டான். மிகவும் களைத்திருந்தான்.

எழிலரசு பக்கம் திரும்பி, “கிளாமிடாமோனாஸ் பற்றிப் படித்திருப்பீர்கள். நகரும் தன்மையும் சூரிய ஒளியால் ஸ்டார்ச் தயாரிக்கவும் முடியக் கூடிய ஒரு செல் உயிரினம் அது. அது தாவரமா, விலங்கினமா என்பதை அறுதியிட்டு வரையறுக்க முடியாததைப் போல ஆறறிவு மனிதனையும் மாற்றியிருக்கிறார்கள்.”

“அடக் கொடுமையே... மனிதர்களைப் பச்சையம் மூலம் ஸ்டார்ச் தயாரிக்கும்படி செய்திருக்கிறார்கள். குளோரோ ப்ளாஸ்ட் தன்மையை விலங்குகளுக்கு ஏற்படுத்தும் விபரீத முயற்சி. கிராமத்து மனிதர்களுக்கு சாப்பாடுகூட இல்லாமல் சூரிய சக்தி மூலமாகவே இயங்கும் ஆர்கனிக் இயந்திரமாக்கும் அநியாயம்.”

“ஐய்யய்யோ அது எப்படி சாத்தியம்?”

“சாத்தியம்தான். கடந்த நாற்பது ஆண்டுகளாக எங்களுக்கு உத்தரவிடப்பட்டுள்ள ஆராய்ச்சியே அதுதான். விலங்குகளுக்கும், தாவரங்களுக்கும் ஒரே மாதிதரிதான் செல் அமைப்பு. இரண்டுக்குமே நியுக்கிளியஸ், ப்ஸட்டோ ப்ளாஸம், டி.என்.ஏ., ஆர்.ஏ. மைட்டோ காண்ட்ரியா, கோல்கி எல்லாம் இருக்கிறது. பொது தோற்றத்தில் விலங்கு சமாசாரம் கொஞ்சம் வட்டமாக இருக்கும். தாவர செல் செவ்வகமாக இருக்கும். தோற்றத்தைப் பொருத்து இரண்டுக்கும் ஒரு சதவீத வித்தியாசம்தான். தாவர செல்லின் முக்கிய வித்தியாசம் அதில் உள்ள குளோரோ ப்ளாஸம். அந்த வித்தியாசத்தை உடைப்பதற்குத்தான் இவ்வளவு ஆராய்ச்சிகள்.”

“அநியாயம்”

“அதைத்தான் நானும் சொல்கிறேன்”

“இதனால் என்ன நடக்கும்?”

“ஒன்று சொல்லட்டுமா? ஐநூறு கோடி ஆண்டுகளுக்கு முன்னால் பூமியில் ஒரு “ஒரு செல்” விலங்கும் ஒரு “ஒரு செல்’ தாவரமும் தோன்றின. முதலில் தோன்றிய அந்த “ஒரு செல்’ தாவரத்தை அப்போது தோன்றிய “ஒரு செல்’ விலங்கு ஸ்வாகா செய்தது.. ஹேஸ்யம்தான். ஆனால் அதில் தர்க்கரீதியான வாய்ப்பு இருக்கிறது. எப்போதும் தாவரங்கள் விலங்குகளின் நலனுக்கானவை”

“இதனால் அரசுக்கு என்ன நன்மை?”

“புரியவில்லை? கார்களைச் சூரிய சக்தியில் இயக்குங்கள் என்றால் இவர்கள் மனிதர்களையே சூரிய சக்தியால் இயக்கி லாபமடைய பார்க்கிறார்கள்”

“அது புரிகிறது. அதற்காகப் பொன் முட்டை வாத்துக்களை இப்படி அறுத்துவிட்டால்.. இன விருத்தியைத் தொடர்வது எப்படி?”

“பதியன் போடுவார்களோ என்னவோ... எந்த அளவுக்குப் போயிருக்கிறார்கள் என்று தெரியவில்லை. கொஞ்ச நாள்களாகவே தாவர செல், விலங்கு செல் வித்தியாசத்தைப் பகுத்தாயும் ஆராய்ச்சிக்குத்தான் என்னைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆர்.என்.ஏ.வில்தான் அவர்களின் முழு கவனமும். எனக்கு எங்கோ உறைத்தது. ஆனால் இத்தனை மோசமாகப் போவார்கள் என்று யோசிக்கவில்லை. உ.நா. சபையும் இதற்கு உடந்தையாக இருக்குமா?”

“ஆமாம். பொல்லாத உலக நாடு சபை... ” என்றார் எழிலரசு. எப்போதும் போல அரசு முயற்சிகளின் மீது தன் வெறுப்பை வெளிக்காட்டினார்.

“காலப் போக்கில் தாவரத்தன்மை அதிகமாகிவிட்ட காரணத்தால்தான் சாகுபடி விளைபொருள்களோடு கலப்படமாகி மின்காணிக்குத் தப்பி நகரத்துக்கு வந்து சேர்ந்திருக்கிறான்” அமர்நாத் அவருக்கே தெளிவுபடுத்திக் கொள்வது போல பேசினார்.

“அப்படியானால் இவன் மூளை, நரம்பு மண்டலம், இருதயம். ரத்தமெல்லாம்...?”

“இயற்கை இப்படித்தான் தன்னை தகவமைத்துக் கொள்கிறது. மியூட்டேஷன் என்று வைத்துக் கொள்ளுங்களேன். தவளை நீரிலும் நிலத்திலும் வசிப்பதில்லையா? ஆம்பிபியன் போல. ஆல்டர்நேட் எனர்ஜி போல. இரண்டிலும் இயங்கக் கூடியவனாக மாற்றியிருக்கிறார்கள்.”

இவர்கள் அரசு கவனிப்பில் இல்லாதோர் பட்டியலில் இருந்ததால் அவர்களால் இவ்வளவு பேச முடிந்தது. இல்லையென்றால் இன்னேரம் நகரக் காவல் அதிகாரி வந்திருப்பார்.

நெ.சா. மனிதன் கண் இமைப்பது அசாதாரணமாக இருந்தது. வந்ததிலிருந்து இமைக்கவேயில்லையோ என்று நினைத்தார். இவனை எப்படியும் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தவர், பிறகு இவர்களை என்று திருத்திக் கொண்டார். கிராமத்துக்குப் போகும் மரபு மருந்துகளில் “குளோரோ ப்ளாஸின்’ அளவைக் குறைப்பதன் மூலம் இந்தக் கொடுமைக்கு விடிவு காணமுடியும் என்று தோன்றியது. மனித உடம்பில் ஒளிச்சேர்க்கை விகிதம் அதிகரிக்க, அதிகரிக்க இது சிரமம் என்றும் புரிந்தது. உலக கிராமம் முழுவதிலும் இப்படித்தானா? இங்குமட்டுமா? அல்லது தமிழ்க்குடியரசில் மட்டுமா?

நிலைகுலைந்து கிடந்த கிராமத்து நெ.சா. மனிதனை கவலையோடு பார்த்துவிட்டுப் புறப்பட்டார் அமர்நாத்.

“” இப்போது என்ன பெயரில் இருக்கிறீர்கள்?” என்றார் கதவுப்பிடியை அழுத்தியபடி.

“ஏன் கேட்கிறீர்கள்? ...எழிலரசு. பெயர் என்பது பதினாறு இலக்க எண் என்று ஆகிப் போனபின்பு இது நம் மனத்திருப்திக்காகத்தானே? பாஸ்வேர்ட் மாற்றும் சந்தர்ப்பங்களில் எல்லாம் பெயரையும் மாற்றிக் கொள்வேன். ஆனால் எங்கள் வீட்டில் யாருக்கும் பெயர் விருப்பம் இல்லை..”

“எனக்கும்கூடத்தான்... சொல்லப் போனால் நீங்கள் ஒருவர்தான் என்னை அமர்நாத் என்று ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள்... சரி வருகிறேன்”

காலை தேநீரோடு அவனை எழுப்ப முனைந்தார் எழிலரசு. அவன் இரவு கிடந்த வாக்கிலேயே படுத்துக் கொண்டிருந்தான் இன்னமும். அவனுக்கும் ஒரு பெயர் சூட்டலாம் என்ற ஆவல் எழுந்தது எழிலரசுவுக்கு. மெல்லத் தொட்டு உலுக்கிப் பார்த்தார். அவன் சில்லென்று நிலைக்குத்திப் போய் இருந்தான். நாடித்துடிப்பு சுத்தமாக இல்லை. தோல் மரத்துப் போய்... சரியாகச் சொல்வதானால் மரப்பட்டையாய்ப் போயிருந்தது.

அசைவற்றுக் கிடந்தான். இறந்துவிட்டான்... அப்படி அவர் முடிவு செய்த தருணத்தில் அவன் கண் பாவைகள் சற்றே அசைந்ததைக் கவனித்தார். திடுக்கிட்டுப் போனார். பிணம் பார்க்கிறது என்ற அச்சம் எழுந்து அடங்கியது.

“உயிர்.... இருக்கிறது’ நிதானமாக முணகினார்.

நேரம் கடத்தாமல் அவனை வேகமாக உலுக்கினார். அவனுடைய கரங்கள் மரத்தின் கிளைபோல ஆடியது. வேகமாக அவனைப் பற்றி இழுத்தபோது தரையில் பதிந்திருந்த அவன் முதுகுக்குக் கீழ் சல்லி வேர்கள் தென்பட்டன.

**தாவரங்களின் உலகம் 33**

(மனிதர்களுடன் பேசும் மரங்கள்)




மனித உடலில் மின்னோட்டங்கள் இருந்து கொண்டே இருக்கும். இந்த மின்னோட்டத்தால்தான் மூளையின் செய்திகள் தண்டுவடத்தின் வழியே உடலெங்கும் பரவுகிறது .

நாம் இயற்பியலில் படித்தது போல மின்னோட்டங்கள் காந்த மின்னோட்டங்களாக மாறும் போதுதான் (Electric energy into magnetic energy) இதயத்தின் வால்வுகள் திறக்கவும் மூடவும் செய்கிறது .

ஒவ்வொரு செல்களிலும் இந்த மின்னோட்டங்கள் பரவி இருக்கிறது. அதனால நமது உடலில் எங்கு தொட்டாலும் மூளைக்கு செய்தி உடனே போய் விடுகிறது.

இதன் மூலம் மனிதன் மொழி இல்லாமல் கூட உணர்வுகளைக் கொண்டே மற்றவர்களுக்கு புரிய வைக்க முடிகிறது.

மனிதனுக்கும் மற்ற உயிர்களுக்கும் செல் வடிவங்கள் மாறினாலும், எல்லா செல்களும் ஒரே வேலையத்தான் செய்யும் ஒரே குணங்கள் கொண்டவைதான்.

சரி அப்படி என்றால் நமது எண்ணங்களையும் மரங்களிடம் தெரிவித்தால் , அவைகள் புரிந்துகொள்ள முடியும் ஏன் மரங்களின் எண்ணங்களை கூட நம்மால் உணர முடியும் என்கிறார்கள் தாவரவியலாளர்கள் .

லூதர் பர்பாலிக் என்னும் ஒரு தோட்ட கலைஞர் புதுமையான கனி வகைகளையும் தாவரங்களையும் உண்டாக்கினார்.

அவர் உற்பத்தி செய்த ஆப்பிள் பழம் ஒருபுறம் இனிப்புச்சுவை மற்றொருபுறம் கசப்புச்சுவை கொண்டவையாக வளரச் செய்தார் . மாறுபட்ட இது தாவரங்களையும் ஒட்டுப்போட்டு இணைத்து ஒரு புதிய தாவர இனத்தையே உருவாக்கியுள்ளார்.

மூக்குத்தண்டு இல்லாத கற்றாழைச் செடியை உருவாக்கி இருக்கிறார் .

சில தாவரங்கள் வளரும் போக்கை லூதர் பர்பாலிக் மாற்ற விரும்பிய போது, அவர் அந்த தாவரங்களிடம் மண்டியிட்டு, அன்பை பொழிந்து, மாறுதல்களின் தேவையே அவைகளுக்கு உணர்த்துவார். தாவரங்கள் செவிசாய்த்து, உள்ளம் கசிந்து இசைவு தந்துவிடும். மாறுதலும் மலர்ந்து விடும் .

சில தாவரங்களின் முட்களை இடுக்கியால் அகற்றி விடுவார். அப்போது அந்த தாவரங்களிடம்,

" எதற்காக நீங்கள் முட்களை வைத்துக் கொண்டு இருக்கிறீர்கள்...? தற்காப்புக்காகவா ..? தேவை இல்லை நான் உங்களை பாதுகாக்கிறேன் " என்று கூறுவார் .

அவருடைய அன்பான குரலும் இனிமையான சொற்களும் கருணை உள்ளமும் தாவரங்களின் உள்ளத்திலே மாறுதல்களை உண்டுபண்ணி விடும். அவை தமது பிற்கால வளர்ச்சியில் கூட முட்களை முற்றும் துறந்துவிடும்.

" அவர்கள் #முள்ளில்லாத இலந்தை மரத்தின் கீழும், நுனி முதல் அடி வரையில் குலை குலைகளாகத் தொங்கும் #பூவில்லாத வாழை மரத்தின் கீழும், அடி சாயாத நிழலிலும் இருப்பார்கள் .அங்கு தொடர்ந்து நீரைக் கொட்டிக் கொண்டிருக்கும் ஊற்றுகளும், ஏராளமான கனி வர்க்கங்களும் உண்டு. அதன் கனிகள் புசிக்க தடுக்கவும் படாது. பறிப்பதால் குறைவும் ஏற்படாது .ஒன்றை பறித்தால் மற்றொன்று அதே இடத்தில் காணப்படும் "குர்ஆன் (56 : 27 - 33)

சுவன வாசிகளின் கருணை உள்ளத்திற்கு ஏற்ப சுவனத்தின் மரங்கள் முள்ளில்லாத மரமாகவும் , பூவில்லாத பழமாகவும் மாறி கொள்வதை இதன் மூலம் அறிய முடிகிறது

நபிகளாரிடம் பேசிய மரம்

அப்துர் ரஹ்மான் பின் அப்தில்லாஹ் பின் மஸ்ஊத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் மஸ்ரூக் பின் அஜ்தஉ (ரஹ்) அவர்களிடம், ஜின்கள் குர்ஆனைச் செவிமடுத்த அந்த இரவில் ஜின்களும் அங்கு இருந்தார்கள் என்பதை நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிவித்தவர் யார்? என்று கேட்டேன்.

அதற்கு மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் ஒரு மரம்தான் நபி (ஸல்) அவர்களிடம் ஜின்களைப் பற்றித் தெரிவித்தாக உங்கள் தந்தை அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள் என்று பதிலளித்தார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 770

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 34**

(சுரைச் செடி)



சுரைக்காய் புற்றுநோய் செல்கள் பெருகுவதை தடுக்கிறது என்று கர்நாடக மாநிலம் ஷிமோகாவில் உள்ள குவெம்பு பல்கலைக் கழக பேராசிரியர்கள் டாக்டர் பிரபாகர் மற்றும் பிரமோத் ஆகியோர் கொண்ட ஆய்வு குழு தனது ஆய்வு

முடிவுகளை சர்வதேச அறிவியல் இதழில் வெளியிட்டுள்ளது

சுரைக்காய் உடல் சூட்டை குறைக்கும். சுரைக்காயில் வைட்டமின் பி,சி சத்துக்களை அதிகம் கொண்டுள்ளது.

சுரைக்காயின் சதைப் பகுதியை வெட்டி ரசமாக்கி அதனுடன் ஒரு தேக்கரண்டி எலுமிச்சை ப்ழச்சார்றை சேர்த்து பருகி வர சிறுநீரக கோளாறு, சிறுநீர் கட்டு, நீர் எரிச்சல், நீர் கட்டு ஆகிய பிரச்சனைகளுக்கு ஒரே தீர்வு இந்த சுரைக்காய்.

அதிக உஷ்ணத்தால் வரும் தலைவலி போக்க சுரைக்காயின் சதைப்பகுதியை அரைத்து நெற்றியில் பற்று போட்டு வைத்தால் தலைவலி நீங்கும்.

அஜீரணக்கோளாறு இருப்பவர்களும் சுரைக்காயை சாப்பிடலாம். கோடை காலத்தில் சுரைக்காயை சாப்பிட்டு வந்தால் தாகம் ஏற்படாது. மேலும் உடலின் வறட்சியை போக்கும் நல்ல நிவாரணி.

கை, கால் எரிச்சல் உள்ளவர்கள் எரிச்சல் உள்ள பகுதியில் வைத்து கட்டினால் எரிச்சல் குறையும். உடலை குளிர்ச்சியாக வைத்துக்கொள்ள விரும்பினாலும் சுரைக்காயை கட்டி பயன்படுத்தலாம்.

நீரிழிவு நோய் இருப்பவர்களுக்கு அடிக்கடி தாகம் ஏற்பட்டு உடல் எடை குறையும். ஆகவே இதனை தவிர்க்க சுரைக்காயின் சதைப்பகுதியை சிறுசிறு துண்டுகளாக வெட்டி சாம்பாரில் இட்டு சாப்பிட்டு வந்தால் தாகம் அடங்கும்.இந்த காயை அடிக்கடி சாப்பிட்டு வர ரத்தத்தில் சர்க்கரையின் அளவு நன்கு குறையும்.

நபி யூனுஸ் (அலை) மீன் வயிற்றில் இருந்து வெளிவந்த போது வந்த போது நலிந்து நோய் வாய்ப்பட்டவர் போன்று இருந்தார் .உடலில் ரோமங்கள் இல்லை தளர்ந்து சோர்ந்து அவருடைய உடல் ஒரு பச்சை குழந்தையின் உடல் போன்றிருந்தது .

فَنَبَذْنٰهُ بِالْعَرَآءِ وَهُوَ سَقِيْمٌ

(அவர் துதி செய்திருப்பதன் காரணமாக) வெட்ட வெளியான பூமியில் (மீன் வயிற்றிலிருந்து) அவரை நாம் எறியச் செய்தோம். அச்சமயம் அவரோ மிக களைப்புடனும் சோர்வுடனும் இருந்தார்.

وَاَنْۢبَتْنَا عَلَيْهِ شَجَرَةً مِّنْ يَّقْطِيْنٍ

ஆகவே, அவருக்கு (நிழலிடுவதற்காக) ஒரு சுரைச் செடியை முளைப்பித்தோம். (அல்குர்ஆன் : 37:145,146)

அவருடைய பலவீனத்தின் காரணத்தால் ஓர் ஈ அவர் மீது பற்றுவதைக் கூட அவரால் தாங்க முடியவில்லை .

சுவரைக்  கொடியின் அருகில் ஈ நெருங்காததாலும் , அவருக்கு நிழலாகவும் அதன் காய்கள் அவருக்கு உணவாகவும் , தாகத்தை தீர்க்கும் தண்ணீர் போன்று ஆகிவிட்டது .

சுவரைத் தண்ணீர் விரைவாக சோர்வையும் , களைப்பையும் நீக்கி விடும் என்பதாக ஸப்வதுத் தப்ஸீரில் கூறப்பட்டுள்ளது .

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:

தையற்காரர் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைத் தாம் தயாரித்த உணவி(னை உண்பத)ற்காக அழைத்தார். நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அந்த உணவை உண்ணச் சென்றேன்.

அந்தத் தையற்காரர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அருகே தொலி நீக்கப்படாத (வாற்)கோதுமை ரொட்டியையும், சுரைக்காயும் உப்புக்கண்டமும் உள்ள குழம்பையும் வைத்தார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தட்டைச் சுற்றிலும் சுரைக்காயைத் துழாவுவதை நான் கண்டேன். அன்றிலிருந்து சுரைக்காயை நானும் விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன். ஸஹீஹ் முஸ்லிம் : 4147.

அதன் பின்னர் எனக்காகத் தயாரிக்கப்படும் எந்த ஓர் உணவிலும் சுரைக்காயைச் சேர்த்துக் கொள்ள என்னால் முடியுமானால் (அவ்வாறே) சேர்த்துக்கொள்ளப்படாமல் இருந்ததில்லை. ஸஹீஹ் முஸ்லிம் : 4148.

**தாவரங்களின் உலகம் 35**

பிரையன் ஃபிரவுட் (பிறப்பு 1947) ஒரு ஆங்கில கற்பனை விளக்குபவர் மற்றும் கருத்தியல் வடிவமைப்பாளர் ஆவார் . அவர் 1978 ஆம் ஆண்டு ஆலன் லீயுடன் ஃபேரிஸ் என்ற புத்தகத்திற்காகவும் , ஜிம் ஹென்சன் படங்களான தி டார்க் கிரிஸ்டல் (1982) மற்றும் லாபிரிந்த் (1986) ஆகியோரின் கருத்து வடிவமைப்பாளராகவும் மிகவும் பிரபலமானவர்.

மேதையான விசித்திரக் கலைஞரான பிரையன் ஃப்ரோட்டின் (தி டார்க் கிரிஸ்டல் மற்றும் லாபிரிந்த் போன்ற திரைப்படங்களின் கட்டிடக் கலைஞர்களில் ஒருவர்) பழம்பெரும் மரங்களை தன் கற்பனைக்கு தக்கவாறு அற்புதமான படைப்புகளாக மாற்றி வைத்திருக்கிறார் .

இது சிந்திக்க வைக்கிறது

**தாவரங்களின் உலகம் 36**

சிரிக்கும் மரமா ? நடுங்கும் மரமா ?

புது டெல்லி: மனிதர்களைப் போலவே மரம் செயல்பட முடியும் என்று நீங்கள் எப்போதாவது நினைத்திருக்கிறீர்களா? ஆனால் இன்று அத்தகைய மரத்தைப் பற்றி அறிந்து நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்.

இந்த விசித்திரமான மரம் உத்தரகண்ட் மாநிலத்தின் (Uttarakhand) கலதுங்கி வனப்பகுதியில் காணப்படுகிறது. இந்த அற்புதமான மரம் மனிதர்களைப் போலவே செயல்படுகிறது.

உத்தரகண்ட் மாநிலத்தில் உள்ள கலதுங்கி காட்டில் இதுபோன்ற இரண்டு மரங்கள் (Tress) உள்ளன, அவை மனிதர்களைப் போல செயல்படுகிறது. அதே நேரத்தில் ராம்நகரின் கியாரி காட்டில் நடுங்கும் மரம் உள்ளது. கடந்த 5 ஆண்டுகளாக, கலதுங்கியின் படுக்கையில் நடுங்கும் மரம் காணப்படுகிறது. கடந்த 5 ஆண்டுகளாக, கலதுங்கியின் இந்த இரண்டு மரங்களும் சுற்றுலாவுடன் கார்பெட் கிராம மேம்பாட்டுக் குழுவால் தொடர்புபடுத்தப்பட்டுள்ளன.

சுற்றுலாப் பயணிகள் (Tourists) இந்த விசித்திரமான மரத்தை சிரிக்கும் மரம் என்றும் அழைக்கிறார்கள். இந்த மரத்தின் தாவரவியல் பெயர் ராண்டியா டுமெட்டோரம். இந்த மரத்திறக்கு மனிதர்களைப் போல கூசுகிறது. இந்த மரத்தைத் தொட்டால், அது கூச்சப்படத் தொடங்கும். நீங்கள் அதன் தண்டுகளைத் தொட்டால், அதன் கிளைகள் நகரத் தொடங்குகின்றன. இந்த காரணத்திற்காக, இது சிரிக்கும் மரம் என்று அழைக்கப்படுகிறது.

உண்மையில், இந்த இனத்தின் இந்த மரங்கள் சுமார் 300 முதல் 1300 மீட்டர் உயரத்தில் காணப்படுகின்றன. இந்த மரம் குறித்து ஆராய்ச்சியாளர்கள் ஆய்வு செய்து வருகின்றன. இது குறித்து இதுவரை எந்த தகவலும் கிடைக்கவில்லை. இந்த அற்புதமான மரத்தின் இந்த விசித்திரமான இயக்கத்தைக் காணும் நோக்கத்துடன், பலர் இங்கு காட்டில் சுற்றித் திரிகிறார்கள்.

**தாவரங்களின் உலகம் 37**

விசித்திரமான 10 மரங்கள். no chapter only pictures

**தாவரங்களின் உலகம் 38**

தாவர விஷம்

தாவரங்களில் அரளி, மிசில்டோ போன்றவை "பைட்டோடாக்சின் " என்ற நஞ்சுகளை தாங்களே உற்பத்தி செய்கின்றன.

இவற்றின் இலைகளையோ , வேர்களையோ தின்றால் மரணம் உறுதி . புகையிலையில் உள்ள நிக்கோட்டின் வாசனை பட்டாலே வண்டுகள் செயலிழந்து போகும். இதே புகையிலையை மனிதன் புகைத்து இன்புறுகிறான் (?)

ஓக், பைன் போன்ற மரங்களின் இலைகளில் டானின் மற்றும் டான்னிக் அமிலம் பிராணிகளின் வயிற்றுக்குள் போனதும் ஜீரண மண்டலத்தையே குலைத்துவிடும். சில தாவரங்களின் விஷம், பூச்சிகளின் நரம்பு மண்டலத்தையே செயலிழக்கச் செய்யும் .

சிவப்பு ஆல்டர் , வில்லோ போன்ற மரங்களை புழுக்கள் தாக்குமானால் அவை சில எச்சரிக்கை வேதிகளைப் பரப்புகின்றன. உடனே சுற்றுவட்டாரத்தில் உள்ள மற்ற ஆல்டர் மரங்களும், வில்லோ மரங்களும் தமது இலைகளில் கூடுதலாக டான்னின் விஷங்களை நிரப்பிக்கொண்டு கம்பளிப் பூச்சிகளுக்கும், புழுக்களுக்கும் அவற்றின் இலையைக் கண்டாலேயே வெறுத்து ஓடுகின்றன.

இந்த மாதிரி விஷங்களை உமிழக்கூடிய விஷச் செடிகளை இறைவன் நரகில் அடிப்பாகத்திலிருந்து முளைப்பித்திருப்பதாக குர்ஆனில் அல்லாஹ் ...

اِنَّ شَجَرَتَ الزَّقُّوْمِۙ

நிச்சயமாக, ஜக்கூம் (கள்ளி) மரம் (அதுவே).

طَعَامُ الْاَثِيْمِ ۛ

பாவிகளுக்குரிய உணவு;

كَالْمُهْلِ ۛ يَغْلِىْ فِى الْبُطُوْنِۙ

அது உருக்கப்பட்ட செம்பு போல் இருக்கும்; வயிறுகளில் அது கொதிக்கும்.

كَغَلْىِ الْحَمِيْمِ

வெந்நீர் கொதிப்பதைப் போல். (அல்குர்ஆன் : 44:43 - 46)

" ஜக்கூமின் ஒரு துளி இவ்வுலகத்தில் விழுந்தால், இவ்வுலகத்தில் உள்ளவர்களின் வாழ்க்கையே அழிந்து போய்விடும் என்று கூறிய நபி ( ஸல் ) அவர்கள், இதை உணவாக உட்கொள்பவரின் நிலை எப்படி இருக்கும்..?" என்று கேட்டார்கள் - இப்னு அப்பாஸ் (ரலி) திர்மிதீ

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 39**

தேவதாரு (பைன்) மரம்

பெரும்பாலான நாடுகளில் காணப்படும் தேவதாரு (பைன்) மரங்களின் தண்டுகள் நேராகவே காணப்படுகின்றன .( படம் ) ஆனால் போலந்து நாட்டில் " க்ருக்குடு" எனும் வனப்பகுதியில் காணப்படும் மரங்கள் மாத்திரம் C வடிவில் காணப்படுகின்றன

பொதுவாக ஓரிரெண்டு மரங்கள் இது போல் வளைந்து காணப்படுவது சாதாரணமானது. ஆனால் இங்கு காணப்படும் நூற்றுக்கனக்கான மரங்கள் வளைந்து காணப்படுவது சாதாரணமானது அன்று. ஆகவே உலகிலுள்ள வினோதமான மரங்களில் க்ருக்குடு காட்டின் பைன் மரமும் ஒன்றாகும்.

க்ரூக் காட்டில் (உள்ளூரில் க்ரஸிவி லாஸ் என்று அழைக்கப்படுகிறது), பைன் மரங்கள் உண்மையில் 90 டிகிரி வளைவுகளுடன் வடக்கே வளைந்திருக்கும் தளங்களில் வளைந்து வளர்கின்றன. அவற்றின் தளங்களிலிருந்து சற்று மேலே, மரங்கள் ஒரு “சி” வடிவத்தில் வளைந்து மூன்றிலிருந்து ஒன்பது அடி வரை பக்கவாட்டாக வளைந்து, அங்கிருந்து நேராக வளர மீண்டும் வளைவதற்கு முன் அவை சுமார் 50 அடி உயரமாக வளரும்.

மற்றும் அவற்றின் தளங்களில் இயற்கைக்கு மாறான வளைவுகள் இருந்தபோதிலும் பொதுவாக ஆரோக்கியமாக இருக்கும். உலகெங்கிலும் ஏராளமான பிற ஒழுங்கற்ற மரங்கள் வளைவுகள் அல்லது பிற விசித்திரமான வடிவங்களை உருவாக்குவதாக அறியப்பட்டாலும், க்ரூக் காட்டில் உள்ள மரங்கள் வேறுபட்டவை. அவை மென்மையானவை, வளைந்திருக்கும் மற்ற மரங்களைப் போல அவை மரபணு மாற்றத்தால் பாதிக்கப்பட்டுள்ளன.

மேலும், நிச்சயமாக, க்ரூக் காடு தனித்துவமானது. ஏனென்றால் பல மரங்கள் மிகவும் விசித்திரமாகவும், ஒரே மாதிரியான வகையிலும் வளர்கின்றன. வினோதமான தோற்றமுடைய மரங்கள் அவை எவ்வாறு இந்த வழியில் வந்தன என்பது குறித்து பல்வேறு கோட்பாடுகளைத் தூண்டின.

அயல்நாட்டு கோட்பாடுகளில் ஒன்று என்னவென்றால், இந்த குறிப்பிட்ட பகுதியில் ஒருவிதமான தனித்துவமான ஈர்ப்பு விசை உள்ளது, இதனால் மரங்கள் நேராக மேலே செல்லாமல் வடக்கு நோக்கி வெளிப்புறமாக வளர காரணமாக அமைந்தது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

இறைநம்பிக்கையாளரின் நிலையானது, இளம் பயிர் போன்றதாகும். காற்றடிக்கும்போது அதைக் காற்று (தன் திசையில்) சாய்த்துவிடும். காற்று நின்றுவிட்டால், அது நேராக நிற்கும். சோதனையின்போது (இறை நம்பிக்கையாளரின் நிலையும் அவ்வாறே).

தீயவன், உறுதியாக நிமிர்ந்து நிற்கும் தேவதாரு மரத்தைப் போன்றவன். அல்லாஹ், தான் நாடும்போது அதை (ஒரேடியாக) உடைத்து (சாய்த்து) விடுகிறான் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 5644.

**தாவரங்களின் உலகம் 40** (திராட்சை உணவின் சிறப்பு)



ஊட்டச் சத்து நிறைந்த பழம் திராட்சையாகும். இதில் வைட்டமின் பி 1,2,3,6,12, சி,இரும்புச்சத்து, பாஸ்பரஸ் சத்து ஆகியன உள்ளன. பொட்டாசியம், மக்னீசியம் அதிகளவில் உள்ள பழம். இதயத்திற்கும் இரத்த ஓட்டத்திற்கும் பெரிதும் துணை செய்கிறது. மரியம் (அலை) அவர்களுக்கு உணவாக அல்லாஹ் அளித்த பழம்.

'ஜக்கரியா (அலை), அவள் (மரியம் (அலை) இருந்த மிஹ்ராபுக்குள் (தொழும் அறைக்கு) போகும்போதெல்லாம், அவளிடம் உணவு இருப்பதைக் கண்டார். "மரியமே! இது உனக்கு எங்கிருந்து வந்தது?" என்று அவர் கேட்டார்;

"இது அல்லாஹ்விடமிருந்து கிடைத்தது-நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவர்களுக்கு கணக்கின்றி உணவளிக்கின்றான்" என்று அவள் கூறினாள்." -அல் குர்ஆன் (3 : 37)

நபித்தோழர் குபைப் பின் அதி (ரலி) அவர்கள் பத்ர் போரில் பங்கு பெற்று குறைஷி தலைவர்களில் ஒருவனான அல் ஹாரித் இப்ன் ஆமிர் இப்ன் நவ்பல் என்பவனை கொன்றார்கள்.

பின்பு நபி(ஸல்) அவர்கள் அனுப்பிய சிறு குழுவில் பயணம் சென்றபோது மக்கத்து காபிர்களால் கைது செய்யப்பட்டு,

அல்- ஹாரித் வீட்டில் சிறை வைக்கப்பட்டார்கள். ஒரு நாள்

அல் ஹாரிதின் மகள் சிறை வைக்கப்பட்ட அறையை பார்த்து வியப்படைந்தாள்,

" அல்லாஹ்வின் மீது ஆணையாகக குபைப் அவர்களை விடச் சிறந்த ஒரு கைதியை நான் ஒருபோதும் பார்த்ததில்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் ஒரு நாள் தம் கையிலிருந்த திராட்சைக் குலை ஒன்றிலிருந்து (பழங்களை) எடுத்து உண்டுக்கொண்டிருந்ததைக் கண்டேன். அப்போது அவரின் கை இரும்புச்சங்கிலியால் கட்டப்பட்டு இருந்தது. அப்போது மக்கா நகரில் பழம் (விளையும் பருவம்) எதுவும் இருக்கவில்லை." அபூ ஹுரைரா (ரலி). நூல்: புகாரி 3045

அல்லாஹ் நாடியவர்களுக்கு அவன் புறத்திலிருந்து உணவு அனுப்புவான். ஏராளமான பழங்கள் இருக்கும்போது, அல்லாஹ் திராட்சையை தேர்ந்தெடுக்க காரணம் என்ன?

எதிரிகளால் கடுமையாக தாக்கப்பட்டு மிகப் பலஹீனமான நிலையில் இருந்த குபைப் (ரலி) அவர்களுக்கு திராட்சையின் மூலம் உடலை பலப்படுத்துகின்றான். அல்லாஹ் அறிந்தவன்.! உடல் வளர்ச்சிக்கும், தளர்ச்சிக்கும் திராட்சை மிக நல்ல உணவு என்பதற்கு இதற்குமேல் எந்த ஆதாரமும் தேவையில்லை.

ரஹ்மத் ராஜகுமாரன்

நீங்க என்ன சொல்றீங்க ?

பேரீத்த மரம்

(அல்குர்ஆன் 6:99)

2. மாதுளை மரம்

(அல்குர்ஆன் 6:99)

3. ஜைத்தூன் (ஒலிவம்) மரம்

(அல்குர்ஆன் 24:35)

4. இலந்தை மரம்

(அல்குர்ஆன் 34:16)

5. ஜக்கூம் (கள்ளி) மரம்

(அல்குர்ஆன் 44:43)

6. ஸித்ரத்துல் முன்தஹா (வானெல்லையிலுள்ள முள்ளில்லாத இலந்தை) மரம் (அல்குர்ஆன் 53:16)

7. வாழை மரம்

(அல்குர்ஆன் 56:29)

8. ஈச்ச மரம்

(அல்குர்ஆன் 69:7)

9. அத்தி மரம்

(அல்குர்ஆன் 95:1)

"தாவரங்களின் உலகம்" -என்கிற இத்தொடரில் பல தாவரங்கள் மரங்கள் பற்றி நான் சொன்னாலும் குர்ஆன் 9 மரங்களைப் பற்றி சொல்கிறது. ஹதீஸில் நிறைய தாவரங்கள், மரங்கள் ,மூலிகைகள் பற்றியெல்லாம் நபிகளார் சொல்லி இருக்கிறார்கள் .அதையெல்லாம் தொகுத்து ஆய்ந்தால் 250 பதிவுகளுக்கும் மேல் போகலாம். சுபஹானல்லாஹ் !

எனவே குர்ஆன் குறிப்பிடும் இந்த ஒன்பது மரங்களில் ஓரிரு மரங்களைப் பற்றி சொல்லி இருக்கிறேன் . விடுபட்ட மரங்களை முனைப்புடன் அடுத்தடுத்த பதிவில் சொல்லிவிட்டு இத்தொடரின் நிறைவுக்கு (50 பதிவுகள்) வரை உத்தேசிக்கிறேன் .

நீங்க என்ன சொல்றீங்க ?

**தாவரங்களின் உலகம் 41**

(ஒலிவம் என்ற சைத்தூன் -ஆலிவ் மரம்)




நபி நூஹ் (அலை) அவர்களின் கப்பல் வெள்ளத்திலிருந்து மீண்டது. கப்பல் ஜூதி மலை மீது தங்கியது.

உலகின் வெள்ளம் வடிந்து விட்டதா என்பதை பார்த்து வருமாறு நூஹ் (அலை) அவர்கள் புறாவை அனுப்பி வைத்தனர். அது தன் சின்னஞ்சிறு அலகில் ஒலிவ மரத்தின் இளந்தளிர்களை கொண்டு வந்தது. அதன் காலில் சேறும் ஒட்டியிருந்ததைக் அதை கண்டதும் நபியவர்கள் வெள்ளம் வடிந்துவிட்டது என்பதையும் ,பாக்கியம் பெற்ற ஒலிவ மரத்தை தவிர்த்து வேறு எல்லா மரங்களும் அழிந்து பட்டன என்பதையும் அவர்கள் விளங்கிக் கொண்டார்கள்.

விரைந்து சென்று இதனைக் கொணர்ந்தற்காக புறாவை வாழ்த்தி, அதன் மீது ஏற்பட்ட அன்பின் பெருக்கால் ,அதன் கழுத்தை சுற்றி வளையத்தை அணிவித்தார்கள்.அதன் காரணமாக புறாவின் கழுத்தை சுற்றி வளையம் போன்ற அடையாளம் காணப்படுகிறது என்றும் கூறுவர்.

அன்றிலிருந்து புறாவை அமைதியின் சின்னமாகவும் ,ஆலிவ் மரத்தை சமாதானத்தின் சின்னமாகவும் உலகம் ஏற்றுக் கொண்டது .

யாசர் அராபத் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தை தனது நாற்பதாவது வயதில் அந்த இயக்கத்தை நிறுவியிருந்தவர் பாலஸ்தீனத்தின் அசைக்க முடியாத சக்தியாக உருவெடுத்தவர்.

ஐ.நா.சபையில் 1974ல் யாசர் அராபத் ''என் ஒரு கையில் ஆலிவ் கிளை உள்ளது. மறு கையில் துப்பாக்கி உள்ளது'' அதாவது "நாங்கள் சமாதானத்தை விரும்புகிறோம் .நீங்கள் சண்டையை விரும்பினால் அதற்கும் நாங்கள் தயார் " என்று அதிர்ச்சியைக் கிளப்பியவர் யாசர் அராபத்.

وَشَجَرَةً تَخْرُجُ مِنْ طُوْرِ سَيْنَآءَ تَنْۢبُتُ بِالدُّهْنِ وَصِبْغٍ لِّلْاٰكِلِيْنَ

"தூர்ஸீனாய்" மலையில் முளைக்கின்ற (ஜைத்தூன் என்னும் ஒலிவ) மரத்தையும் (நாம் உற்பத்தி செய்கின்றோம்.) அது எண்ணையையும் புசிப்பவர்களுக்கு ஒரு சுவையையும் (குழம்பும்) தருகின்றது. (அல்குர்ஆன் : 23:20)

ஒலிவ மரம் ஒரு குழந்தையிடம் ,

நான் தான் ஆலிவ் மரம் பேசறேன். எனது தாவரவியல் பெயர் ஒலியா யூரோபியா என்பதாகும். நான் இஸ்ரேலிலும், பிற வளைகுடா மற்றும் ஐரோப்பிய நாடுகளிலும் அதிகமாகக் காணப்படுகிறேன். என் தாய் நாடு கிரேக்கம். என்னை தமிழில் "சைத்தூன்' என்றும். ஒலிவ மரம் என்றும் சொல்வாங்க. இறைவன் என் மீது குர்ஆனில் சத்தியம் செய்திருக்கிறான்

وَالتِّيْنِ وَالزَّيْتُوْنِۙ

அத்தியின் மீதும், ஒலிவத்தின் (ஜைத்தூன்) மீதும் சத்தியமாக-

(அல்குர்ஆன்: 95:1)

நான் எப்போதும் பசுமையாக இருப்பதுடன், 500, 1000 ஆண்டுகளுக்கும் மேலாக வளர்ந்து உங்களுக்கு பயன் தருவேன். ஆனால், ஒண்ணு குழந்தைகளே, நான் மெதுவாகத் தான் வளருவேன். மனிதர்களின் கலாசாரத்திலும், வரலாற்றிலும் மிகவும் முக்கிய இடம் வகிக்கும் மரங்களில் நானும் ஒருவன்.

என் கிளைகளும், இலைகளும் தழைத்து வளர்ந்து மேல் பாகத்தில் கரும்பச்சை நிறமாகவும், அடிப்பாகத்தில் வெள்ளை கலந்த பச்சை நிறமாக மினுமினுப்பாக இருக்கும். என் காய்கள் பழுத்து கருப்பு நிறமாகும் போது அவைகளை சேகரித்து செக்கிலிட்டு ஆட்டி எண்ணெய் எடுக்கிறார்கள்.

முற்காலத்தில் குழந்தைகளே, அப்போ எல்லாம் மின்விளக்குகள் இருந்ததா ? இருட்டுல விளக்குகளை எரிய வைக்க நிரந்தரமாக ஒளி கொடுப்பதற்காக இஸ்ரேல் மக்கள் என் தெளிந்த எண்ணெய்யைத் தான் பயன்படுத்தினாங்க. ஆலிவ் எண்ணெய்யை சமையல் எண்ணெய்யாகவும், மருந்தாகவும் இன்றும் பயன்படுத்தி வருகிறார்கள்.

குழந்தைகளே, உங்களுக்குத் தெரியுமா, "ஆலிவ்' என்னும் சொல்லை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது தான் "ஒலிம்பிக்' என்னும் சொல்.

குழந்தைகளே நான் உங்களுக்கு இன்னொரு செய்தியையும் சொல்லட்டுமா, நான் சமாதானத்தின் சின்னம் மற்றும் நட்பின் அடையாளமுமாகும். ஐக்கிய நாட்டு சபையின் சின்னத்தில் என் மரக்கிளைகள் தான் இடம் பெற்றுள்ளன.

பண்டைய காலத்தில் ஒலிம்பிக் விளையாட்டில் வெற்றி பெறுவோருக்கு என் மரத்தின் இலைகளால் பின்னப்பட்ட கிரீடம் சூட்டுவது வழக்கம். இதிலிருந்து என் முக்கியத்துவத்தை நீங்கள் உணரலாம்.

உணவுப் பொருள்களைப் பத்திரப்படுத்தும் தன்மை நான் கொடுக்கின்ற பழங்களுக்கு உண்டு. மத்திய கிழக்கு நாடுகளில் மான்டிநிக்ரோ என்ற நாடு இருக்கிறது. இந்த நாட்டில் உள்ள ஒரு ஆலிவ் மரத்தின் வயது 2,244 என்று சொல்றாங்க.

என்னை உள்ளூர்காரர்கள் "ஸ்டாரா மஸ்லீனா' என்று கூப்பிடறாங்க. என் எண்ணெய்யை அழகு சாதனப் பொருள்களிலும், மருந்து பொருள்களிலும், விளக்குகளில் எரிப்பொருளாகவும் பயன்படுத்தலாம். என் எண்ணெய்க்கு மதிப்பு அதிகம் என்பதால் "திரவத் தங்கம் " என்று சொல்லி மதிக்கிறாங்க.

என் காய் பச்சை நிறத்திலும், கனிந்த பின் பழுப்பு, சிவப்பு அல்லது கருப்பு நிறத்திலுமிருக்கும். இலைகளில் எண்ணெய் சத்து சற்று கூடுதல். இதுல, தாதுப் பொருள்களும், விட்டமின் ஏ, விட்டமின் சி போன்ற ஊட்டச் சத்துகளும் உள்ளன. உடலின் கொலாஸ்ட்ராலின் அளவை கட்டுப்படுத்தவும்,

இதயத்திற்கு ஏற்ற எண்ணெய்யாகவும் உள்ளதால் உணவுப் பொருள்களில் என்னை அதிகமாக பயன்படுத்தறாங்க. பெண்கள் தினசரி உண்ணும் உணவில் 10 ஸ்பூன் வரை ஆலிவ் எண்ணெய் சேர்த்துக் கொண்டால் மார்பக புற்றுநோயைத் தடுக்கலாம் என்று பார்சிலோனா ஆராய்ச்சி முடிவு தெரிவிக்கிறது.

ஸ்பெயின் நாட்டில் நடந்த இன்னொரு ஆராய்ச்சியில், ஆலிவ் எண்ணெய் பயன்படுத்தினால் புற்றுநோய் மட்டுமின்றி, இதய நோய், இரத்த தமனி பாதிப்பு ஆகியவற்றைத் தவிர்க்கலாமுன்னு ஆய்வாளர்கள் கண்டுபிடிச்சிருக்காங்க.

ஒலிவ மலை உங்களுக்குத் தெரியுமா குழந்தைகளே, ஒலிவ மலை என்பது ஜெருசேலம் பழைய நகருடன் கிழக்கிலிருந்து இணையும் மலைத் தொடராகும். இங்கு சரிவு பகுதிகளை ஒலிவ மரங்கள் மூடியிருந்ததால் இதற்கு ஒலிவு மலைன்னு பேர் வெச்சிருக்காங்க போலிருக்கு. இந்த ஒலிவ மலையில் இப்போதும் கெத்சமனே தோட்டத்தில் 2000 ஆண்டுகள் பழமையான மரம் இன்னைக்கும் இருக்கு. என்ன ஆச்சரியம், இப்போதும் இந்த மரங்களிலிருந்து துளிர் வந்து கொண்டிருக்கிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 42**

(ஈச்ச மரம்)



நமது நாட்டில் பராம்பரிய மரங்கள் பல உள்ளன. அவற்றில் ஈச்ச மரமும் ஒன்றாகும். அதை பற்றி இங்கு காண்போம்.

ரூடவச்சம் வறண்ட மற்றும் மிக வறண்ட நிலங்களில் அதிகம் காணப்படும் மரமாகும்.

இந்த மரமானது விதைகள் மூலமே இனப்பெருக்கம் செய்யப்படுகின்றன. அதாவது பறவைகள் மற்றும் பிற உயிரினங்கள் மூலம் இதன் விதைகள் பரவுகின்றன. இது வளர்வதற்கு மழைநீர் மட்டுமே போதுமானதாக இருக்கும்.

ஈச்ச மரத்தில் மூன்று ரகங்கள் உள்ளன. அதாவது உயரமாக வளரும் வகை, நடுத்தர உயரம் வளரும் வகை, மூன்றாவது வகை சிற்றீச்சை அதாவது இரண்டு அல்லது மூன்று அடி உயரம் மட்டுமே வளர்ந்து பின் காய்க்க ஆரம்பிக்கும்.

பொதுவாக மார்ச் மாதத்தில் பூக்கள் தோன்றி, ஜுன் மாதம் இறுதியில் பழங்கள் கிடைக்கும். தேனீக்கள் மற்றும் சிறு வண்டுகள் மூலம் மகரந்தச் சேர்க்கை நடைபெறும்.

முன்பெல்லாம் ஈச்ச மரத்தில் இருந்து கூடைகள், குறிப்பாக துடைப்பம், பாய்கள் போன்றவை தயார் செய்யப்பட்டன.

இந்த #ஈச்சம் பழங்கள் #பேரீச்சம் பழங்களுக்கு நிகரான சத்துக்கள் கொண்டவை. இதில் இரும்பு மற்றும் கால்சியம் பாஸ்பரஸ் போன்ற சத்துக்கள் அதிகமாக உள்ளன.

ஈச்ச மரத்தில் இருந்து இறக்கப்படும் கள் சுவை மிகுந்ததாகவும், அதிக சத்துக்களை கொண்டதாகவும் இருக்கிறது. மேலும் இந்த மரம் இயற்கை விவசாயத்தில் நுண்ணுயிர் பெருக்கத்திற்கு உதவிபுரிகிறது.

தற்போது அழிந்து வரும் மரங்கள் பட்டியலில் இந்த மரங்களும் உள்ளன என்பது வருத்தத்தை ஏற்படுத்துகிறது. அதேசமயம் இப்பழங்களை விரும்பி சாப்பிடுபவைகளாக பறவைகள் மற்றும் அணில்கள் போன்ற உயிரினங்கள் உள்ளன.

மேலும் பறவைகள் கூடு கட்டுவதற்கு தேவையான பஞ்சு போன்ற இழைகள் ஈச்ச மரத்தில் அதிகம் கிடைப்பதால் அந்த மரத்தில் கூடு கட்டி இனப்பெருக்கம் செய்கின்றன. அது பறவைகளுக்கு பாதுகாப்பாகவும் அமைகிறது.

இத்தகைய மரங்களை அழிப்பதனால் மரங்கள் அழிவதோடு மட்டுமல்லாமல் சில பறவைகள் மற்றும் விலங்கினங்களும் அழிந்து விடும் அபாயம் ஏற்படும்.

கஜுரா என்றால் ஈச்ச மரம் என்று பெயர். மத்தியபிரதேசத்தில் மிகப்பெரிய சுற்றுலா தலமாக கஜுராகோ கோவில்கள் இருக்கின்றன. இந்த பகுதியில் முன்பு ஏராளமான ஈச்ச மரங்கள் இருந்தன. எனவே, அங்கிருந்த கோவில்கள் "கஜுராகோ கோவில்கள்" என்று அழைக்கப்பட்டு வந்துள்ளன.

ஈச்சம் பழத்தில் பொட்டாசியம், கால்சியம், பாஸ்பரஸ் போன்ற மூல பொருட்கள் அதிகம் இருக்கின்றன. இது மனிதர்களின் உடலின் எலும்புகளின் தேய்மானத்தை குறைக்கிறது. மேலும் எலும்புகளுக்கு உறுதித்தன்மையையும் அளிக்கிறது.

உணவில் ஊட்டச்சத்து குறைபாடுகளால் சிலருக்கு கண்பார்வை மங்குதல், மாலைக்கண் நோய் போன்ற குறைபாடுகள் ஏற்படுகின்றன.தினமும் அல்லது இரண்டு நாட்களுக்கு ஒரு முறை ஈச்சம் பழங்களை சாப்பிடுபவர்களுக்கு கண்களின் பார்வை திறன் மேம்படும்.

கண்புரை போன்ற பிரச்சனை ஏற்படுவதையும் தடுக்கும்.

ஈச்சம் பழம் இரும்புச்சத்து அதிகம் நிறைந்த ஒரு இயற்கை உணவாக இருக்கிறது.

கருவுற்றிருக்கும் பெண்களும் ஈச்சம் பழங்களை அதிகம் சாப்பிட்டு வருவது வயிற்றில் வளரும் குழந்தைகளுக்கும் மிகவும் நல்லது.

நரம்பு தளர்ச்சியால் பாதிக்கப்பட்ட ஆண்களுக்கு தாம்பத்திய உறவில் ஆர்வம் இல்லாதது, மலட்டு தன்மை போன்ற பிரச்சனைகள் ஏற்படும் வாய்ப்புகள் அதிகம்.

தினமும் காலை மற்றும் இரவு வேளைகளில் சில ஈச்சம் பழங்களை நன்கு மென்று சாப்பிட்டு, சூடான பசும்பால் அருந்தினால் நரம்புகள் வலுப்பெற்று , ஆண்மை குறைபாடுகள் நீங்கும்.

அபூலஹப் அப்துல் முத்தலிபின் புதல்வர்களில் ஒருவர். நபி ( ஸல் ) அவர்களது சொந்த சிறிய தகப்பனார். இவரது மனைவியின் பெயர் உம்மு ஜமீல். இவள் ஹர்பு என்பவரின் புதல்வி. அபூஸுஃப்யானின் சகோதரி. முஆவியாவின் மாமி (முதலாம்) யஜீதின் சகோதரரி . இவள் நபிகளாருக்கு பல வழிகளிலும் தொல்லை கொடுத்தவள்.

பெருஞ் சீமாட்டி யான இவள் வறுமையால் வாடி காட்டில் சென்று விறகு கொண்டு வந்து விற்று வாழ வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. தங்க ஆபரணங்கள் அணிந்த கழுத்தில் விறகுக்கு கட்டுக்கு வேண்டிய ஈச்சங்கயிற்றை கழுத்தில் சுற்றிக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று.

ஒருமுறை விறகுக்கட்டை கட்டி தலையில் வைத்துக்கொண்டு மிஞ்சிய ஈச்சங்கயிற்றை கழுத்தில் சுற்றிக் கொண்டு வருகையில், தலையில் இருந்த கட்டு கீழே விழ, கழுத்தில் சுற்றியிருந்த ஈச்சங்கயிறு இறுகி அவள் கீழே விழுந்து, துடிதுடித்து இறந்து போனாள்.

فِىْ جِيْدِهَا حَبْلٌ مِّنْ مَّسَدٍ

அவளுடைய கழுத்தில் முறுக்கேறிய ஈச்சங்கயிறுதான். (அதனால் சுருக்கிடப்பட்டு அவளும் அழிந்துவிடுவாள்.)

(அல்குர்ஆன்: 111:5)

ரஹ்மத் ராஜகுமாரன் .

**தாவரங்களின் உலகம் 43**

(விளக்காக ஒளிரும் தாவரங்கள்)

சாலையோரம் இனி தாவரங்கள் நட்டு வைத்தாலே போதும் விளக்குகள் அமைக்க தேவை இல்லை. ஏனெனில் தாவரங்களே விளக்காக ஒளிரும் நுட்பம் அறிமுகமாகியிருக்கிறது.

"அவதார் "ஹாலிவுட் சினிமாவில் காட்டப்படும் அனைத்து தாவரங்களும் ஒளி வீசிக் கொண்டே இருக்கும். கற்பனை காட்சியான இதை நிஜமாக்கும் வகையில் தற்போது சாதாரண தாவரங்களையும் ஒளிர வைக்கும் நுட்பத்தை "பிக்குளோவ்" என்ற நிறுவனம் கண்டறிந்து உள்ளது.

1980-லிருந்தே நவீன தொழில்நுட்பங்களில் தாவரங்களை ஒளிரச் செய்யும் முறைகள் அறிமுகமாகிவிட்டன. ரசாயனங்களைச் சேர்த்தும் , தாவர இலைகள் வழியாக புற ஊதாக் கதிர்களை செலுத்தியும் இப்படி தாவரங்களை ஒளிரச் செய்தார்கள்.

இந்த முறையில் தாவரங்களைத் தொடர்ந்து ஒளிரச் செய்வதால், தாவரங்களுக்கும் அதற்கு நன்மை செய்யும் பூச்சி இனங்களுக்கும் பாதிப்பு ஏற்படும் என்று அறியப்பட்டது.

எனவே தாவரங்களை ஒளிரச் செய்யும் முறைக்கு தடைவிதிக்கப்பட்டிருந்தது.

ஆனால் இந்த நிறுவனம் ரசாயனங்களை சேர்க்காமலும், புற ஊதா கதிர்களை பயன்படுத்தாமலும் தாவரங்களை எப்போதும் ஒளிரச் செய்யும் வழியை முன்னர் கண்டறிந்துள்ளது .

இவர்கள் தாவரங்களின் ஜீன்களில் பாக்டீரியா நுண்ணுயிர்களைச் செலுத்தி ,அது காலம் முழுவதும் ஒளிரும் படி செய்துள்ளனர்.

புகையிலைச் செடியான "நிக்கோடியன டபாகம்" என்ற புகையிலைச் செடியின்"போட்டோ பாக்டீரியம் லெய்யோக்னதி என்ற கடல் பாக்டீரியா நுண்ணுயிர்களைச் செலுத்தி, அதன் ஜீன்களில் மரபணு மாற்றம் ஏற்படச் செய்கிறார்கள். இதனால் தாவரங்கள் தற்காலிகமா இல்லாமல் ,எப்போதும் ஒளிந்து கொண்டே இருக்கின்றன.

தாவர இலைகள் அதனுடைய பச்சை நிறத்திலும், பூக்கள் தங்கள் வண்ணங்களிலும் ஒளிர்வது பார்க்க மிக அழகாக காட்சி தருகிறது .

ஆனால் இதன் ஒளி ,விளக்கு போல பிரகாசமாக இருப்பதில்லை இருந்தாலும் அதிக அளவிலான தாவரங்களை நெருக்கமாக வளர்ப்பதன் மூலம் ஓரளவுக்கு ஒளி உண்டாக்க முடியும் எனவே எதிர்காலத்தில் சாலையோரங்கள் மற்றும் தெருக்களை இது போன்ற ஒளிரும் தாவரங்கள் மூலம் அழகும் வெளிச்சம் மிக்கதாக மாற்றம் செய்யலாம் என்கிறார்கள்.

இந்த நிறுவனம் தங்கள் விளக்கு தாவரத்திற்கு "ஸ்டார்லைட் அவதார் " என்று பெயர் சூட்டியுள்ளது. மேலும் ரசாயனம், புற ஊதாக்கதிர்கள் இன்றி நிரந்தர ஒளிரும் தாவர விளக்காக தங்கள் தொழில்நுட்பத்தை மேன்மையடையச் செய்திருக்கிறார்கள் .

குர்ஆனில் அல்லாஹ் வான் எல்லையில் உள்ள மிகப்பெரிய இலந்தை மரமான சித்ரத்துல் முன்தஹா வைப் பற்றி குறிப்பிடும் போது.நபி ஸல் அவர்கள் :

"சித்ரத்தைப் பார்த்தேன். வர்ணங்கள் அதனை மூடிக்கொண்டன. அது என்னவென்று அறிய இயலவில்லை. அல்லாஹ்வின் சிருஷ்டியில் எவரும் அவற்றை வர்ணனை செய்ய வர்ணனை செய்ய இயலாது - ஹதீஸ்

اِذْ يَغْشَى السِّدْرَةَ مَا يَغْشٰىۙ

ஸித்ரத்துல் முன்தஹா என்னும் அம்மரத்தை சூழ்ந்து கொண்டிருந்த வேளையில்,

مَا زَاغَ الْبَصَرُ وَمَا طَغٰى

(அவருடைய) பார்வை விலகவுமில்லை; அதைக் கடந்து (மாறி) விடவுமில்லை. (அல்குர்ஆன் : 53:16 ,17)

இன்னொரு ஹதீஸில் நபி (ஸல் ) அவர்கள்:

'சித்ரத்துல் முன்தஹா' வைப் பார்த்தேன். அதனைத் தங்கத்திலான ஈசல்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. (மூடிக்கொண்டிருந்தன ) இன்னும் ஒவ்வொரு இலையிலும் ஒரு மலக்கு நின்றுகொண்டு அல்லாஹ்வை தஸ்பீஹு செய்வதை நான் பார்த்தேன்"

இன்னொரு ஹதீஸில் நபி (ஸல் ) அவர்கள் :

"றஃப் றஃப் (அதாவது பச்சை பறவைகளின் கூட்டம்) அதனை மூடிக்கொண்டிருந்தன.

மற்றோரு ரிவாயத்தில் " அதனை தங்கத்திலான ஈசல்கள் அல்லது விட்டில்கள் மூடிக்கொண்டிருந்தன " _ முஸ்லிம் 1 - 279

இன்றைக்கு விஞ்ஞானம் கூறும் உண்மையை 1400 வருடங்களுக்கு முன் ஒரு தாவரம் ஒளிரச் செய்வதற்கும் நுண்ணுயிர்களுக்கும் இடையே சம்பந்தம் இருப்பதாக ஹதீஸ் குறிப்பிடுவது நம்மை ரொம்பவும் சிந்திக்க வைக்கிறது .

ரஹ்மத் ராஜகுமாரன்

## தாவரங்களின் உலகம் 44

(ஒளி வட்டம் அல்லது ஆரா)



நீங்கள் போட்டோ எடுத்து இருக்கிறீர்களா ? ரேஷன் கார்டுக்காக, வாகன லைசன்ஸ்க்காக , வாக்காளர் அட்டைக்காக, திருமணத்தின்போது மற்றும் எந்த சந்தர்ப்பத்திலும் போட்டோ எடுத்து இருக்கிறீர்களா ? உங்களது போட்டோவை சற்று உற்று நோக்கிப் பாருங்கள் உங்களது தலையைச் சுற்றி ஏதாவது ஒளிவட்டம் தெரிகிறதா ? இல்லை.

ஆனால் விஞ்ஞானம் ஒளிவட்டம் உண்டு என்றும், இதை 'ஆரா' என்று சொல்கிறார்கள்.இதை வெகு சிலர் பார்த்ததாகக் கூட சொல்கிறார்கள்.

உங்களைச் சுற்றி தெரியும் ஒளி வட்டத்தின் வர்ணத்தை வைத்துக்கொண்டு, நீங்கள் எப்பேர்ப்பட்ட மனிதர் என்று சொல்லலாம்.

தலைவர்களுக்கு பின் சிவப்பு நிற ஒளிவட்டம் தெரியுமாம் வைத்தியர்களை ஏமாற்றும் ஆசாமிகளுக்கு பின் பச்சை நிற ஒளிவட்டம் தெரியுமாம் , அடுத்த வாரத்திற்குள் மரணிப்பவர்களுக்கு பின் கருப்பு நிழல் போல வட்டம் தெரியுமாம் . இப்படியே நிறைய பேருக்கு பின்னாடி ஒவ்வொரு விதமான ஒளிவட்டம் ஒவ்வொரு விஷயங்களைப் பொறுத்து அமைகிறதாம் .

இன்றைக்கு ஏறக்குறைய 82 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது 1939 இல் ரஷ்ய நாட்டின் மின் பொறியாளரான வாலண்டினா கிரிலியன் (Kirlian) மற்றும் செம்யோன் (Semyon) இருவர்கள் புதுவகையான ஒளிப்பட முறையைக் கண்டுபிடித்தனர்.

ஒரு உலகத்தகட்டிற்கு மேலாக ஒளிப்படத் தாளோ அல்லது தட்டோ வைக்கப்பட்டு அதன்மீது பதிவு செய்யப்பட வேண்டிய பொருளை வைத்து, முழு இருட்டில் அவற்றின் மீது உயர் மின்னழுத்தம் கணம் நேரம் செயல்படுமாறு செய்ய, பொருளின் ஒரு வகையான பிம்பம் ஒளிப்படத் தட்டில் பதிவு செய்யப்படுகின்றது.

பொருளுக்கும் உயர் மின்னழுத்த தகட்டிற்கும் இடையே கரோனா (Corona) மின்னிறக்கம் ஏற்படுவதால் , இது நடைபெறுகிறது.

கிர்லியன் ஒளிப்படங்களைக் கொண்டு பலரும் விஞ்ஞானத்திற்கும் அப்பாற்பட்ட விளக்கங்களைத் தந்தனர். இவ்வொளியானது, ஒவ்வொரு பொருளும் படைக்கப்படும் போது பிரபஞ்ச வெளியில் இருந்து ஏதோ ஒரு தொடர்பு கிடைக்கிறது. அத்தொடர்பானது அப்பொருளின் ஒளியாக பதிவு செய்யப்படுகிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறும்போது, "அல்லாஹ் படைத்தவற்றில் முதலாவது என்னுடைய பேரொளியாகும். என் பேரொளிருந்தே எல்லா படைப்புகளும் வெளியாயின " - ஹதீஸ் குத்ஸி

விஞ்ஞானிகள் இந்த ஒளியானது ஒரு தாவரம் அல்லது ஒரு விலங்கிற்கு வரும் நோயை முன்கூட்டியே கிர்லியன் ஒளிப்படம் தெரிவிப்பதாகக் கூறுவதை குறிப்பிடலாம்.

இன்னும் சில விஞ்ஞானிகள் கிர்லியனின் ஆய்வு முடிவுகள் மிகவும் வியப்பளிப்பதாக இருக்கின்றன. உயிர் பொருட்கள் அனைத்தும் உயர் அழுத்தமும், உயர் அதிர்வெண் கூடிய மின்புலத்தில் ஒளிர்கின்றன என்றும்,

அவ்வாறு ஒளிர்வது முற்றிலும் உயிர் பொருளின் தனித்தன்மைகளை பொருத்தது என்றும், உயிர் பொருள் இறந்து கொண்டிருக்கும்போது மெல்ல மெல்ல மறைகிறது என்றும் தெரிவித்துள்ளனர்.

தாவரங்களின் உயிர்ப்புடன் இருப்பதற்கு அது பச்சையத்துடன் இருக்க வேண்டும் .

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனாவில் ஒரு தோட்டத்தின் அருகில் கடந்து சென்றனர். அப்போது தமது கப்ருகளில் வேதனை செய்யப்படும் இருவரின் சப்தத்தைக் கேட்டார்கள்.

"இவ்விருவரும் பெரும் பாவங்களுக்காக வேதனை செய்யப்படவில்லை. ஒருவர் சிறுநீர் கழிக்கும்போது மறைத்துக் கொள்ளாதவராக இருந்தார்; மற்றொருவர் கோள் சொல்லிக் கொண்டிருந்தார்" என்று கூறினார்கள்.

பின்னர் பேரீச்சை மட்டை ஒன்றைக் கொண்டு வரச் செய்து, அதை இரண்டாக முறித்து ஒவ்வொரு கப்ரிலும் ஒரு துண்டை வைத்தார்கள்.

"அல்லாஹ்வின் தூதரே! ஏன் இவ்வாறு செய்தீர்கள்?" என்று கேட்கப்பட்டது.

அதற்கவர்கள் "இது காய்வது வரை இவ்விருவரின் வேதனை இலேசாக்கப்படக் கூடும் "என்று கூறினார்கள். இப்னு அப்பாஸ் (ரலி)

நூல்: புகாரி 216, 218, 1361

இவ்வொளியானது நோய்வாய்ப்படும்போது , குறைந்தும் நோய் நீங்கப் பெற்றதும் மீண்டும் ஒளிர்கிறது என்கின்றனர்.

"மரணம் அடைந்த ஒருவனை நாம் உயிர்ப்பித்து எழுப்பினோம் - இன்னும் அவனுக்கு ஓர் ஒளியையும் கொடுத்தோம். அதைக்கொண்டு அவன் மனிதர்களிடையே நடமாடுகிறான்.

மற்றொருவன் இருள்களில் சிக்கிக்கிடக்கிறான்; அதைவிட்டு அவன் வெளியேறவே முடியாது - இவ்விருவரும் சமமாவாரா? இவ்வாறு காஃபிர்களுக்கு அவர்கள் செய்யக்கூடிய (பாவச்)செயல்கள் அழகாக்கப்பட்டுள்ளன." (குர்ஆன் : 6:122)

கிர்லியன் ஒளிர்வுக்கான காரணம் 'கரோனா மின்னிறக்கம்' என்று அமெரிக்க விஞ்ஞானிகள் கூறினாலும், ரஷ்ய விஞ்ஞானிகளின் விளக்கம் வேறு விதமாக இருக்கின்றது.

அதாவது இவர்கள் உயிரியல் பிளாஸ்வோடு இதைத் தொடர்பு படுத்துகின்றனர். ஒவ்வொரு உயிர் பொருளுக்கும் தன்னைச் சுற்றி ஒரு புலத்தை ஏற்படுத்திக் கொள்வதாகவும் , இதே உயிர் புலம் (L_ Field) என்றும் கூறுகின்றனர்.இதற்கு இவர்கள் இலைகளின் மாயத்தோற்றங்களை (phantom_Leaf) இதற்குச் சான்றாக காட்டுகின்றார்கள்.

ஒவ்வொரு உயிர்ப் பொருளும் தன்னைச் சுற்றி ஒரு ஒளிரும் புலத்தை ஏற்படுத்தினாலும், இந்த ஒளிரும் தன்மை அதிகமாக நபி (ஸல்) அவர்களுக்கு இருந்துள்ளது.

ஒருசமயம் ஆயிஷா (ரலி) அவர்கள், ஊசியில் நூலை கோர்ப்பதற்கு வெளிச்சம் குறைவாக இருந்ததால்,சற்று சிரமப் பட்டுக் கொண்டிருக்கும் போது , நபி (ஸல் ) அவர்கள் தன் பக்கம் வந்ததும் அவர்களின் உடலிலிருந்து வெளிப்பட்ட ஒளிர்வில் ஆயிஷா (ரலி) அவர்கள் ஊசியில் நூலை கோர்த்ததாக ஹதீஸ்களின் வாயிலாக அறிய முடிகிறது.

ஒளிவட்டமோ.கரோனாவோ உயிர்பொருளோ , தாவரத்தின் இலையோ ஏதோ ஒரு பொருள் இருந்தால் மட்டும் இந்நிகழ்வுகள் நடைபெறும்.

எந்தொரு பொருள் எதுவும் இல்லாமல் வெட்டவெளியில் ஒளி ஒளிர்வு நடைபெற்றதை நபிகளாரின் வாழ்வில் நடைபெற்றிருக்கிறது .

நபி (ஸல்) அவர்களை உஸைது இப்னு ஹிழாயிறு (ரலி) அவர்களும், அப்பாது இப்னு பிஷ்ரு (ரலி) ஆகிய இரு நபிதோழர்களும் மஸ்ஜித் நபவியில் சந்தித்து உரையாடுகிறார்கள்.

அவர்கள் இருவரும் திரும்பும் நேரம் ஆழ்ந்த இரவு பொழுதாக இருந்தது. எனவே அவ்விருவர்களுக்கும் வழித்தடம் தெரியவில்லை. அந்நேரத்தில் ஒரு ஒளிர்வு ஏற்பட்டு, அவ்விருவருக்கும் பாதை காட்டி முன் சென்றது.

நபித்தோழர்கள் அதனைப்பின் தொடர்ந்து செல்ல ஒரு தோழர் வேறு திசையில் செல்லும் போது , அவருக்கென தனியாக இன்னொரு ஒளிர்வு ஏற்பட்டு அது தனியாக வழிகாட்டியது. அவ்விருவருகளும் தத்தம் வீடு போய் சேர்ந்தனர் . (ஸஹீஹ் புகாரி : 465 - நபித்தோழர்களின் பெயர் குறித்து ஹதீஸ் அஹமது: 12511)

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 45**

மாதுளை



பெண்களின் உள்ளத்தில் பிறர் எளிதில் அறிய இயலாத வகையில் ரகசியங்கள் இருப்பது போல, மாதுளம்பழத்தில் விதைகள் மறைந்திருப்பதால் 'மாது+உள்ளம்+பழம்' என்பதே மாதுளம்பழமாக அழைக்கப்படுகிறது.

மாதுளை சிறுமர இனத்தைச் சேர்ந்த பழமரமாகும். 5000 ஆண்டுகளாக ஈரானிலும், ஆப்கானிஸ்தானிலும், பலுகிஸ்தானத்திலும் பயிரிடப்பட்டு வருகிறது. இருந்தாலும் இதன் தாயகம் ஈரான் என்றுசொல்லப்படுகிறது மாதுளையின் பூ, பிஞ்சு,மற்றும் பழம் நிறத்திலும் வடிவத்திலும் மிகுந்த அழகு மிக்கவை.

மாதுளை (Pomegranate, Punica granatum) வெப்ப இடைவெப்ப வலயத்திற்குரிய ஒரு பழமரமாகும்.மாதுளையில் இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு ஆகிய மூன்று ரகங்கள் உள்ளன. இனிப்பு மாதுளம் பழத்தைச் சாப்பிட்டால் இதயத்திற்கும், மூளைக்கும் மிகுதியான சக்தி கிடைக்கிறது. பித்தத்தைப் போக்குகிறது இருமலை நிறுத்துகிறது.

அல்குர்ஆனில் சூரா அல் அன்ஆமின் 99 ஆம் வசனத்திலும் அதே சூராவின் 141 ஆம் வசனத்திலும் அவ்வாறே சூரா அர்ரஹ்மானின் 68 ஆம் வசனத்திலும் மாதுளம் பழம் தொடர்பாக பேசப்பட்டுள்ளது.

இதில் சூரா அர்ரஹ்மானின் 68 ஆம் வசனத்தில் சுவனத்தில் இருக்கும் கனிகளைப் பற்றிக் கூறும்போது அல்லாஹ் மாதுளம் பழத்தையும் சேர்த்துக் கூறியுள்ளான். சுவனத்துக் கனிகளில் மாதுளையும் ஒன்று என்றால் அதன் முக்கியத்துவத்தை இங்கு எம்மால் விளங்கிக்கொள்ள முடியும்

(பார்வைக்கு) ஒன்றுபோலும் வெவ்வேறாகவும் தோன்றக்கூடிய ஒலிவம், மாதுளை (மற்றும் பலவகை கனிவர்க்கங்கள்) ஆகியவைகளையும் அவனே படைத்திருக்கின்றான். ஆகவே, அவை பலனளித்தால் அவற்றை (தாராளமாகப்) புசியுங்கள். (குர்ஆன் : 6:141)

மாதுளை, ஆலிவ் மரங்களின் இலைகள் ஒரே மாதிரி தோற்றம் உடையவை. ஆயினும் இம்மர கனிகள் வெவ்வேறான சுவை உடையன என்பதை (6-99)ஆவது வசனம் விளக்குகிறது

நபி (ஸல்) சொன்னார்கள்: மாதுளம் பழம் 40 நாட்களுக்கு

ஷைத்தானுடைய தீங்குகளிருந்தும் கெட்ட ஆசைகளில் இருந்தும் பரிசுத்தமாக்கும்.

மாதுளையின் பழம், பூ, பட்டை, ஆகியவை அனைத்தும் மருத்துவ குணங்கள் நிறைந்தவை. மாதுளம்பழங்களில் இரும்பு, சர்க்கரை சுண்ணாம்பு, பாஸ்பரஸ் மற்றும் அனைத்து வகையான தாது உப்புக்களும், உயிர்ச் சத்துக்களும் அடங்கியுள்ளன.மாதுளம்பழத்தைச் சாப்பிடுவதால் உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி அதிகமாகிறது.

உடலுக்குத் தீங்கு விளைவிக்கும் வைரஸ் கிருமிகளை மிகத் துரிதமாகவும், அதிக அளவிலும் அழித்து விடுகிறது. அதனால் நோய் நீங்கி ஆரோக்கியமும் சக்தியும் அளிப்பதில் மாதுளை சிறந்த பலனைத் தருகிறது. மாதுளையில் இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு ஆகிய மூன்று சுவைகள் உள்ளன. இனிப்பு மாதுளம் பழத்தைச் சாப்பிட்டால் இதயத்திற்கும், மூளைக்கும் மிகுதியான சக்தி கிடைக்கிறது.

பித்தத்தைப் போக்கி, இருமலை நிறுத்துகிறது.புளிப்பு மாதுளையைப் பயன்படுத்தினால் வயிற்றுக் கடுப்பு நீங்குகிறது. ரத்த பேதிக்கு சிறந்த மருந்தாகிறது. தடைபட்ட சிறுநீரை வெளியேற்றுகிறது. பித்தநோய்களை நிவர்த்தி செய்கிறது. வயிற்றுக்குள் ஏற்படும் தொந்தரவுகளை நீக்குகிறது. எந்த வகையான குடல் புண்ணையும் குணமாக்குகிறது. மாதுளம் விதைகளைச் சாப்பிட்டால் ரத்தவிருத்தி ஏற்படும். சீதபேதிக்குச் சிறந்த நிவாரணம் அளிக்கும்.

தொடர்ந்து நோயின் பாதிப்பால் பலவீனம் அடைந்தவர்கள் மாதுளம் பழத்தைச் சாப்பிட்டால் உடல் தேறும், உடல் எடை கூடும். தொண்டை, மார்பு, நுரையீரல், குடலுக்கு அதிகமான வலிமையை உண்டாக்குகிறது. ஆண் தன்மையில் பலவீனம் உள்ளவர்கள் மாதுளம்பழம் சாப்பிடுவதால் மிகுந்த சக்தியை அடைய முடிகிறது.

மாதுளம்பழத்தைச் சாப்பிட்டால் விக்கல் உடனே நிற்கும், அதிக தாகத்தைப் போக்கும். மாதுளம் பழச்சாற்றில் கற்கண்டு சேர்த்து சாப்பிட்டால் உடல் சூட்டு நோய்கள் நீங்கும். உடல் குளிர்ச்சியடையும்.

காய்ச்சல் தணியும். மாதுளம் பழச்சாற்றில் தேன் கலந்து காலை ஆகாரத்துக்குப் பின் தினமும் சாப்பிட்டால், உடல் ஆரோக்கியமும் தெம்பும் உண்டாகும். புதிய ரத்தம் உற்பத்தியாகும். மாதுளம் பூக்களை உலர்த்திப் பொடித்து வைத்துக் கொண்டு வேளைக்கு ஒரு சிட்டிகை வீதம் சாப்பிட்டால், இருமல் நிற்கும்.

அட , மாதுளம் பூக்களைத் தலையில் வைத்துக் கொண்டால் தலைவலி, வெப்பநோய் தீரும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 46**

அத்தி



யாருக்கும் தெரியாமல் ஒரு காரியம் செய்துவிட்டால் 'அத்திப் பூத்தாப்போல' என்று ஒரு பழமொழி கூறுவார்கள். காரணம் அத்தி மரத்தில் பூப் பூப்பதை நம்மால் இலகுவாக அடையாளம் காண முடியாது. பூக்கள் மரத்தின் அடியிலிருந்து உச்சிவரை மரத்தை ஒட்டியே பூக்கும். அப்பூக்கள் காயாகும் போதுதான் தெரியவரும் அத்தி பூத்திருக்கின்றது என்று.

விடுகதைகளில் இப்படியும் ஒரு கேள்வி உண்டு "காணாமல் பூப் பூக்கும் கண்டு கண்டு காய் காய்க்கும் அது என்ன?" வேறென்ன? அத்திதான்

அத்தியின் மீதும், ஒலிவத்தின் (ஜைத்தூன்) மீதும் சத்தியமாக-

(அல்குர்ஆன்: 95:1)

திருக்குர்ஆன் ஒரு படைப்பினத்தைப் பற்றிக் குறிப்பிடுமானால், அதிலும் அதன் மீது அல்லாஹ் சத்தியமிட்டுக் கூறியிருந்தால், அதற்குத் தனிச் சிறப்பு உண்டு. அல்லாஹ் திருக்குர்ஆனில் சத்தியமிட்டுக் கூறியவற்றின் வரிசையில் உள்ள மற்றுமொரு பிரதானமான தாவரம்தான் அத்தி.

அரபு மொழியில் அத்தீன் என்றும் தமிழில் அத்தி என்றும் ஆங்கிளத்தில் Fig என்றும் இது அழைக்கப்படுகின்றது.

உலர்ந்த அத்திப்பழத்தில் வைட்டமின் சத்துக்கள் அதிகம் நிறைந்துள்ளதால் கண் தொடர்பான அனைத்து பிரச்சனைகளும் தீர்க்கும். முதுமையின் காரணமாக ஏற்படும் பார்வை கோளாறுகளையும் சரி செய்யும்.

அத்திப்பழத்தை நேரடியாகவோ, தேனில் ஊற வைத்தோ, உலர்த்திப் பொடி செய்தோ சாப்பிட்டு வந்தால் தாது விருத்தியாவதுடன் ஆண்மை ஆற்றல் பெறும், மலட்டு தன்மை அகலும்.

உடல் எடையைக் குறைக்க விரும்புவோர்கள் இரவில் 2 முதல் 3 அத்திப்பழங்களை தண்ணீரில் ஊற வைத்து மறுநாள் காலையில் வெறும் வயிற்றில் சாப்பிட்டு உடல் எடை குறையும்.

மரத்தின் பட்டை சிறந்த மருந்தாகும், இதன் பட்டைகளை நன்கு உலர்த்தி பொடியாக செய்து காலையில் தண்ணீருடன் கலந்து குடித்து வந்தால், வாத நோய், மூட்டு வலி என அனைத்தும் மட்டுப்படும். எந்த நிலையில் உள்ள புண்களாக இருந்தாலும் வெளி மருந்தாக இதனை பயன்படுத்தலாம்.

அத்திப் பிஞ்சினை நாம் சமைத்து சாப்பிட்டு வந்தால் மூலக்கடுப்பு, வயிற்றுக் கடுப்பு, இரத்த மூலம் என அனைத்தும் காணாமல் போகும்.

நீரிழிவு நோயினால் உண்டாகும் அதிகப்படியான தாகம், நாவறட்சி, உடல் சூடு போன்றவற்றை நிக்கும். மேலும் நீரிழிவினால் உண்டாகும் புண்கள் போன்றவற்றை நீக்க வல்லது.

அத்திப் பழத்தில் பொட்டாசியம் சத்து மற்றும் நார்ச் சத்தும் அதிகம் நிறைந்துள்ளது. இதனால் இரத்த அழுத்தம் கட்டுப்படுவதுடன், உடல்பருமனும் குறைகிறது.

அத்தி இலையைச் சாற்றினை தொடர்ந்து பருகி வந்தால், சர்க்கரை நோயை கட்டுப்படுத்துவதுடன், சிலவகை புற்று நோய்களை தடுக்கும் என்று கண்டுபிடித்துள்ளார்கள் தினசரி அத்தி சாப்பிடும் பழக்கமிருந்தால் குறிப்பாக பெருங்குடல் புற்று நோயைத் தடுக்க முடியும் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறியிருக்கிறார்கள் இது ஒரு சிறந்த ஆன்டி ஆக்சிடென்டா (anti oxidant) ஆக செயல் படுகிறது.

பெண்களுக்கு மாதவிடாய் காலத்தில் அதிக ரத்தக்கசிவு குறையும். எலும்பு சம்மந்தமான அனைத்து பிரச்சனைகளுக்கும் அத்தி பழம் முற்றுப்புள்ளி வைக்கும் என்றால் நம்ப முடிகிறதா? அத்திப்பழத்தில் கால்சியம் சத்து அதிகமுள்ளது.எனவே தினமும் இரவு 2 அல்லது 3 அத்திப்பழத்தை தண்ணீரில் ஊற வைத்து விட்டு மறுநாள் காலையில் சாப்பிட்டு வந்தால் அனைத்து விதமான எலும்பு பிரச்சனைகள் தீரும்.

அத்திமரப்பால் மற்றும் இலைகளின் பாலினை மருக்கள் மீது தடவி வர அவை நாளடைவில் மறையும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 47**

மரபணு மாற்றம்



ஒவ்வொரு உயிரினத்திலும் இருக்கக்கூடிய இயல்பான பண்புகளை, ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் உயிர் அணுவின் பெயரே மரபணு என்னும் டிஎன்ஏ (DNA –Genes) ஜீன்கள்.

மரபணு மாற்றம் என்பது ஒரு உயிருள்ள விலங்கு, அல்லது தாவரம், அல்லது ஏதாவது நுண்ணுயிரின் மரபணு (Genome) கட்டமைப்பில் வேறு ஒரு உயிரினத்தின் மரபணுக்களை ( Transgenic) செயற்கையாக புகுத்துவது.

அறிவியலில் ஏற்பட்டுள்ள வானளாவிய வளர்ச்சியின் முக்கிய மைல் கல்லாக மரபணு தொழிற்நுட்பம் பார்க்கப்படுகிறது. காய்கறிகளிலும், தாவரப் பயிர்களிலும், விலங்குகளின் உடலிலுள்ள மரபணுக்களை வெட்டியெடுத்து தாவரங்களின் மரபணுக்களோடு ஒட்டி விடுகின்றனர்.

உதாரணமாக, மண்ணில் உள்ள "பேசில்லஸ் துரின்ஜின்சிஸ்" (Bacillus Thuringiensis) என்னும் நுண்ணுயிர் பாக்டீரியாவில் உள்ள "கிரை 1ஏசி" என்ற விஷ புரதத்தை (Protein) தனியாக பிரித்தெடுத்து கத்திரிக்காயின் மரபணுவுடன் சேர்க்கும்போது, ,டெல்டா என்டோ டாக்ஸிக்" என்ற பூச்சி தாக்குதலுக்கு கத்திரி செடி ஆளாவதில்லை.

இதுபோல் தக்காளியின் தோல் மென்மையாக இருப்பதால் எளிதில் உடைந்து விடுவதும் விரைவிலேயே அழுகிப் போவதும் நடக்கிறது. இந்தக் குறையை நீக்க, தவளையின் உடலிலுள்ள மரபணுவை வெட்டி எடுத்து தக்காளியின் மரபணுவுடன் இணைத்து தோலை தடித்ததாக மாற்றுகின்றனர். தக்காளி கீழே விழுந்தால் உடையாமல்...தவளை போன்று குதிக்கும்.

குளிர் பிரதேச நாடுகளில் வாகனங்களின் ரேடியேட்டரில் உள்ள தண்ணீர் உறையாமல் இருக்க எத்திலின் கிளைக்கால் என்கிற இரசாயனம் பயன்படுகின்றது. குளிர் பானங்கள் ஃப்ரீச்சில் உறைந்து கெட்டியாகாமல் இருக்க இந்த ரசாயனம் பயன்படுத்தப்படுகிறது. இதனால் கல்லீரல், பற்கள், எலும்புகள், சிறுநீரக பாதிப்புகள், மற்றும் பித்தப்பை கற்கள் உருவாக்க காரணமாகின்றன.

இது போல் அதிகக் குளிரில் உறையாமல் இருப்பதற்காக, ஆர்டிக் குளிர் பிரதேசக் கடலில் வாழும் ”பிளவுண்டர்” என்ற மீனின் மரபணுவை வெட்டியெடுத்து தக்காளி மரபணுவுடன் ஓட்டுகின்றனர்.

இரண்டு தாவரங்களுக்கு இடையே மரபணு மாற்றம் என்பதெல்லாம் மாறி, தற்போது சிலந்தி,தேள்,பாம்பு, போன்றவற்றின் மரபணுவை எடுத்து பயிர்களுடன் சேர்த்து, பூச்சி தாக்காமல் இருக்க முயற்சிகள் நடக்கின்றன.

மாடு அதிகப் பால் கொடுக்க, பன்றியின் மரபணுவை ஜெர்சி பசுக்களில் திணித்து பால் புரட்சி ஏற்படுத்தியது போல், பெண்களின் தாய்ப்பால் மரபணுவை எடுத்து நெல்லின் மரபணுவோடு சேர்த்து அதிக விளைச்சல் பெறவும் ஆய்வுகள் நடக்கின்றன.

இதே போல கத்திரிக்காய், அரிசி, சோயா பீன்ஸ், காபி மிளகு, காலி பிளவர் முட்டைக்கோஸ் பட்டாணி, முலாம்பழம், உருளைக்கிழங்கு, நிலக்கடலை, வெண்டை, வள்ளிக்கிழங்கு, கூவைக்கிழங்கு, ஏலக்காய், மொச்சை, மாதுளை பருத்தி, சணல், என்று 72 வகையான பயிர்கள் மரபணு மாற்ற தொழிற் நுட்ப ஆய்வுக்கு மத்திய அரசு அனுமதி கொடுத்துள்ளது.

இப்படிப்பட்ட விபரீதமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டு காய்கறிகளிலும் தாவரங்களிலும் விலங்குகளிலும் மரபணு மாற்றங்கள் செய்யப்பட்டு அவை மக்களின் பயன்பாட்டிற்காக சந்தையில் விடப்பட்டுள்ளன.

முதலில் மரபணு தொழில் நுட்பம் மிக முன்னேறிய தொழில் நுட்பம் என்றும் மனிதனுக்கு கிடைத்துள்ள வரப்பிரசாதம் என்றும் கூறப்படுகிறது. ஆனால் உயிர் வாழும் உரிமைக்கும் இயற்கைக்கும் எதிரானதாக மரபணு தொழில்நுட்பம் பயன்படுத்தப்படுகிறது.

மனிதனின் சுய நலத்திற்காக மரபணு மாற்று உயிரினங்கள் எல்லாமே இந்த உலகத்தைப் பொருத்தவரை புதிய உயிரினங்கள் அவை தன்னைச் சுற்றியுள்ள உயிரினங்களிடம் எப்படி நடந்து கொள்ளும்? தங்களை உண்ணும் விலங்குகளுக்கும், மனிதர்களுக்கும் அவை நல்லது செய்யுமா? அல்லது கெட்டது செய்யுமா? – யாருக்கும் தெரியாது. இது பற்றிய விரிவான ஆய்வு இன்னும் முடியவில்லை.

அல்லாஹ்வின் படைப்பில் எந்த ஒரு மாற்றமும் தேவைப்படாத அளவில் அவைகள் ஒவ்வொன்றையும் கணக்காக படைத்துள்ளான். எது எதற்கு எது தேவையோ அதை அல்லாஹ் அளவாக அமைத்துள்ளான். அல்லாஹ்வின் படைப்பில் மாறுதல் செய்ய நினைத்த அன்றைய ஜாஹிலிய மக்கள், ஆடு,மாடுகளின் காதுகளை அறுத்து அலங்கோலம் செய்தனர். இது ஷைத்தானுடைய செயல் என்று அல்லாஹ் கூறுகின்றான்.

وَّلَاُضِلَّنَّهُمْ وَلَاُمَنِّيَنَّهُمْ وَلَاٰمُرَنَّهُمْ فَلَيُبَتِّكُنَّ اٰذَانَ الْاَنْعَامِ وَلَاٰمُرَنَّهُمْ فَلَيُغَيِّرُنَّ خَلْقَ اللّٰهِ وَمَنْ يَّتَّخِذِ الشَّيْطٰنَ وَلِيًّا مِّنْ دُوْنِ اللّٰهِ فَقَدْ خَسِرَ خُسْرَانًا مُّبِيْنًا

அன்றி "நிச்சயமாக நான் அவர்களை வழி கெடுப்பேன். அவர்களுக்கு வீண் நம்பிக்கைகளை உண்டுபண்ணி (பிசாசு களுக்காக பிரார்த்தனை செய்துவிடப்பட்ட) ஆடு, மாடுகளின் காதுகளை அறுத்து

விடும்படியும் அவர்களை ஏவுவேன். அல்லாஹ்வின் படைப்பினங்(களின் கோலங்)களை மாற்றும்படியாகவும் நிச்சயமாக நான் அவர்களை ஏவுவேன்" (என்று கூறினான்.)

ஆகவே, எவன் அல்லாஹ்வையன்றி (இத்தகைய) ஷைத்தானை (தனக்கு) பாதுகாவலனாக எடுத்துக் கொள்கின்றானோ அவன் நிச்சயமாக பகிரங்கமான நஷ்டத்தையே அடைந்து விடுவான். (குர்ஆன் : 4:119)

அன்றைய அறியாமைக் கால மக்கள் கால்நடைகளின் காதுகளை வெளிப்புறமாக அறுத்து இயற்கை கோலத்தை மாற்றினார்கள். ஆனால் இன்றைய அறிஞர் பெருமக்கள் கால்நடையின் காதுகளை ஓட்டையிட்டு அதன் உட்புற மரபணு செல்லை எடுத்து வேறு ஒரு ஆட்டின் கர்ப்பத்தில் வைத்து "டோலி' என்னும் ஆட்டை குளோனிங் முறையில் உருவாக்கினார்கள். இயற்கையை மாற்றும் ஷைத்தானிய செயலை அல்லாஹ் ஒரு போதும் அனுமதிப்பதில்லை எனவே டோலி ஆடும் அற்ப ஆயுளில் வியாதியில் செத்து மடிந்தது.

உயிரினங்களின் இயற்கை ஒழுங்கு கட்டமைப்பை மாற்றுவது ஷைத்தானின் செயல்... இந்த ஷைத்தானிய செயலையே அமெரிக்காவின் "மான்சாண்டோ" போன்ற கார்பரேட் கம்பெனிகள் செய்து காசு பார்க்கின்றனர். .இதையே அல்லாஹ் கூறு கிறான்.

அவன் (உம்மை விட்டுத்) திரும்பியதும், பூமியில் கலகத்தையே உண்டாக்கவே முயல்வான். விளைநிலங்களையும், கால்நடைகளையும் அழிக்க முயல்வான்; கலகத்தை அல்லாஹ் விரும்புவதில்லை. – அல் குர்ஆன். 2;205.

மனிதனின் பேராசையின் காரணமாக உலகம் வெப்பமயமாகி வருகிறது. இதன் காரணமாக மழை, வெள்ளம், புயல் பஞ்சம்,வறட்சி, கடல் மட்டம் உயர்ந்து கரையோரம் அரிக்கப்பட்டும், தீவுகள் நீரில் மூழ்குவதும் நடந்து வருகிறது.

அடுத்ததாக மனிதர்களுக்கு உணவளிக்கும் விளைநிலங்களையும் மனிதனே செயற்கை உரங்களைப் போட்டு நஞ்சாக்கி விட்டான். அத்துடன் அதில் இயற்கையாக வளரும் பயிர்களின் மரபியல் பண்பை மாற்றி குழப்பம் ஏற்படுத்தி விட்டான். கால்நடைகளின் இயற்கைப் பண்பை மாற்றியமைத்தும் (GE – Gene editing) குழப்பத்தை ஏற்படுத்தி விட்டான்.

"அவனே எல்லாப் பொருட்களையும் படைத்தது, அவற்றை அதனதன் அளவுப்படி அமைத்தான் "– குர்ஆன்.25:2.

"நாம் ஒவ்வொரு பொருளையும் நிச்சயமாக குறிப்பான அளவின்படியே படைத்திருக்கின்றோம்."– குர்ஆன்.54:49.

அல்லாஹ் படைத்த அனைத்து உயிரினங்களான, நுண்ணுயிர்கள் தாவரங்கள், மிருகங்கள் அனைத்தும் குறை எதுமின்றி நிறைவாகவே உள்ளது. ஆனால் குறைமதி மனிதன் இதிலும் தலையிட்டு குழப்பி வருகின்றான்.

குழந்தைக்கு கொடுக்கும் தாய்ப் பாலில் அதிக சத்துக்கள் மற்றும் நோய் எதிர்ப்பு சக்தியும் நிரம்ப உள்ளது. மாட்டுப் பாலில் இந்தக் சக்திகள் கிடையாது. அர்ஜென்டினா நாட்டு பசுவின் கர்ப்பபையில் பெண்ணின் மரபணுவை வெட்டி ஒட்டி....அந்தப் பசு கரக்கும் பாலிலும் தாய்ப்பாலில் உள்ள சத்துக்களை உருவாக்கினர்.

பண்ணையில் வளர்க்கப்படும் பன்றிகள் சுவாசக் கோளாறு நோயின் காரணமாக ஏராளமாக இறந்தன. இந்த நஷ்டத்தை தடுக்க....இதற்குக் காரணமான ஜீன் மரபியல் பண்பை வெட்டி விட்டனர்.

பறவை காய்ச்சல் நோயின் காரணமாக ஏராளமான கோழிகள் அழிந்தன. இதற்கு காரணம் கோழியின் உடலில் உள்ள ஒரு மரபியல் ஜீன். ஆகவே அந்த ஜீனை வெட்டி எறிந்து....பறவை காய்ச்சல் தொற்றாத மரபியல் மாற்று கோழியை உருவாக்கினர்.

அமெரிக்காவின் மரபியல் மாற்று நிறுவனமான "AQUA BOUNTY " ஸால்மன் ரக மீனில் மரபியல் மாற்றம் செய்து மார்கெட்டிற்கு விற்பனைக்கு அனுப்பினர். சாதாரண ஸால்மன் மீனானது முழு வளர்ச்சியடைய 18 மாதங்கள் காத்திருக்க வேண்டும். மரபியல் மாற்றப்பட்ட மீனோ ஒன்பது மாதத்திலேயே நன்கு பெரிதாகி, விற்பனைக்கு வந்து விடும்.

இப்படி இறைவனின் படைப்பில் மனிதன் கை வைத்து....வெட்டுதல்.. ஒட்டுதல்...என்னும் குழப்பத்தை செய்து வருகிறார்கள். இதற்கு இவர்கள் சொல்லும் காரணம் குறைந்தசெலவு,அதிக உற்பத்தி,வறுமை ஒழிப்பு. ஆயினும் இவர்கள் சொல்லும் வறுமை ஒழிப்பிற்காக எந்த அரசாங்கமும் ஆய்வு செய்யவில்லை. மரபியல் மாற்று ஆய்வு செய்யும் நிறுவனங்கள் அனைத்தும் பெரும் கார்பொரேட் தனியார் நிறுவனங்களே! தங்களின் சுய லாபத்திற்காக ஆதாயத்திற்காக, மக்களின் ஆரோக்கியத்தை வைத்து சூதாடுகிறார்கள்.

ஆட்டைக் கடித்து,மாட்டைக் கடித்து,கடைசியில் மனிதனைக் கடித்த கதையாய்......மரபணு மாற்று ஆய்வு நுண்ணுயிர்களில் தொடங்கி, தாவரம்,மிருகம் என்று முடிந்து, தற்போது மனித கருவிலேயும் மாற்றங்கள் செய்யத் தொடங்கி விட்டனர்.

சீனாவின் ஷென்ஜென் நகரிலுள்ள "சதர்ன் அறிவியல் தொழிர்நுட்ப பல்கலை கழகத்தின்" பேராசிரியர். ஹீ ஜியான் குய், (He Jiankui) கடந்த வாரம் (26-நவம்பர்-2018) அவர், எச்.ஐ.வி.வைரஸ் தாக்காமல் தடுப்பதற்காக கருவில் மரபியல் மாற்றம் செய்து இரட்டை குழந்தைகளை பிறக்க வைத்துள்ளதாக அறிவித்தார்.

குறிப்பாக,பெண் சினை முட்டையையும் ஆணின் உயிரணுவையும் இணைத்து, கருத்தரித்த நிலையில், அந்தக் கருவில் இருந்த "சிசிஆர் 5" என்ற எய்ட்ஸை கடத்தும் மரபணுவை வெட்டி நீக்கி இந்தக் குழந்தைகளை பிறக்க வைத்ததாக அறிவித்தார். காரணம் இந்தக் குழந்தையின் தந்தை எய்ட்ஸ் நோயாளி.

மனிதர்களின் கருவில் மரபியல் மாற்று நடப்பது இதுவே முதல் முறை, இந்த ஆய்வை உலகிலுள்ள எல்லா விஞ்ஞானிகளும் கடுமையாக கண்டனம் செய்து,"இது பயங்கரமானது"என்று அறிவித்ததால், உடனடியாக தான் இந்த ஆய்வை நிறுத்திவிட்டதாக அந்த சீன விஞ்ஞானி அறிவித்துள்ளார்.

https://www.ndtv.com/.../chinese-scientist-he-jiankui...

சாதாரணமாக தனியொரு மனிதரின் நோயை நீக்க அந்த நோய் சம்பந்தப்பட்ட மரபணுக்களை வெட்டி நீக்குவதே இது வரை நடைபெற்று வந்தது. இதனால் ஏற்படும் சாதக,பாதகங்கள் அந்த தனி நபருடன் முடிந்து விடும், ஆனால் கர்ப்பத்திலுள்ளொரு கருவில் இம்மாற்றம் செய்தால், அதன் பின் விளைவுகள் அந்தக் குழந்தையின் சந்ததிகளிலும் தொடரும். அதன் பயங்கரம் எப்படி இருக்கும் என்று எவராலும் சொல்ல முடியாது.

பலருக்கு GM ற்கும், Hybrid ற்குமான வேறுபாடுகளில் குழப்பமும் அறியாமையும் நிலவி வருகிறது. இனக்கலப்பு (Hybridization) என்பது, இருவகையான ஒரே தாவரங்களுக்கிடையே நடக்கும் குறுக்கு மகரந்தச்சேர்க்கையின் (Cross Pollination) விளைவாக, ஒரு புதிய வகையான பயிரை உருவாக்குவது. இது இயற்கையாகவும் நடக்கும்.

செயற்கையாகவும் நம்முடைய தேவைக்கேற்றவாறும் உருவாக்கலாம். வீரிய ஒட்டு சேர்ப்பு நடத்துவது இயற்கையானது. பக்க விளைவுகள் இல்லாதது. நபி (ஸல்) அவர்கள், பேரிச்சை பாளையை எடுத்து பிற மரங்களில் உள்ள பூக்களில் அடித்து அயல் மகரந்த சேர்க்கை (Cross pollination) செய்வதை அனுமதித்துள்ளார்கள். (புஹாரி 2204,2206.)

பொதுவாக, தாவரங்கள்,மிருகங்கள், மனிதர்கள் எனும் எல்லா உயிரினங்களும் அதனதன் தேவைக்குத்தகுந்த மரபணுவின் அடிப்படையிலேயே வடிவமைத்து , அவைகளை அல்லாஹ் படைத்திருக்கின்றான். இந்த மரபணு பதிவானது ஒவ்வொரு தலைமுறைக்கும் கடத்தப்பட்டுக் கொண்டே இருக்கும். ஜீன் எனப்படும் இந்த மரபணுக்கள் அனைத்தும் புரதங்களால் ஆனது. ஒவ்வொரு புரதமும் பல்லாயிரக்கணக்கான குணாதிசயங்களைக் கொண்டிருக்கின்றன.

இந்த அடிப்படை புரதங்களை, செயற்கையாக இனம் விட்டு இனம் மனிதன் மாற்றியமைப்பதன் மூலம் உருவாக்கும் தானியங்கள் அல்லது இறைச்சிகளால், மனிதர்களுக்கு நோய்களும், மரணமும் ஏற்பட வாய்ப்புள்ளது. பயோ டெக்னாலஜி என்னும் உயிரியல் தொழிற்நுட்பத்தில், நமக்கு தேவையான புரதங்களை நம் விருப்பம் போல் தேர்ந்தேடுக்கின்றோம். இது இயற்கையுடன் விளையாடும் ஆபத்தான விளையாட்டு. நாம் சுயமாக வெட்டி ஒட்டி இணைக்கும் ஜீன்களால் என்னென்ன பாதிப்புகள் உருவாகும் என்று எவருக்கும் தெரியாது.

நம் சிந்தனைக்கு அப்பாற்பட்ட விசயங்களில் தலையிடுவது நம் கழுத்துக்கு நாமே வைக்கும் கத்தியாக மாறக்கூடும். ஏனெனில் ஒவ்வொரு புரதமும் ஏற்படுத்தக்கூடிய சங்கிலித் தொடர் (Chain reaction) நிகழ்வுகளை எவரும் கட்டுப்படுத்த முடியாது. இந்த அடிப்படை டிஎன்ஏ புரதங்களைப்பற்றி அறிவியலாளர்களுக்கு சுமார் 3.5% மட்டுமே தெரியும். 96.5% விகிதம் தெரியாத மர்மம்.

இந்நிலையில் புரதங்களின் விளைவு மோசமானதாக இருந்தால் அதை நம்மால் சரி செய்ய முடியாது. இன்று மார்க்கெட்டில் கிடைக்கும் பொருள்களில் எது இயற்கை எது செயற்கை என்று அறியாதவாறு மரபியல் மாற்று உணவுகள் நம்மை சூழ்ந்துள்ளன.

உதாரணமாக,நம் இந்தியஅரசு, பி டி பருத்திக்கு அனுமதி கொடுத்ததான் காரணம் பருத்தி என்பது உணவுப்பொருள் அல்ல. மனிதர்களுக்கு ஆடைகள் நெய்யவே பருத்தி. ஆகவே இதனால் மனிதர்களின் ஆரோக்கியம் பாதிப்படையாது. ஆனால் நடந்தது என்ன? பருத்தி ஆடைக்கும்... பருத்தி கொட்டை எண்ணெய் எடுப்பதற்கும், பருத்திக் கொட்டை பிண்ணாக்கு மாடுகளுக்கு உணவாக கொடுத்தனர். இந்த விஷ புரத பருத்தி கொட்டை புண்ணாக்கை சாப்பிடும் மாடுகள் கொடுக்கும் பாலை நாம் ஆவின் பாலாக ஆனந்தமாக பருகி வருகின்றோம்.

பருத்தி கொட்டையிலிருந்து எடுக்கப்படும் (Seed oil) சீட் ஆயில், எடிபில் (Edible oil) ஆயிலாக மாறி நாம் வாங்கும் நல்லெண்ணெய், கடலெண்ணெய்களில் கலந்து... சட்டபூர்வமாக விற்பனை செய்கிறார்கள். இப்படி கலப்பதை நமது உணவு மற்றும் கலப்பட தடை சட்டம் அனுமதிக்கிறது. எந்த ஒரு உணவுப்பொருளிலும் 20% மாற்று எண்ணெய் (FOOD SUBSTITUTES) சேர்த்துக் கொள்ளலாம் என்று சட்டமே சொல்கிறது.

பி டி என்னும் விஷப் பருத்தி இலைகளை சாப்பிட்டு ஆந்திராவில் ஆயிரக்கணக்கான மாடுகள் இறந்தது அனைவரும் அறிந்ததே! இன்று அதே பி டி விஷ பருத்திப் புண்ணாக்கு, பாலாகவும் எண்ணெயாகவும் நம் இல்லங்களில், நாம் அறியாமலே புகுந்து விட்டன. ஆடைகள் நெய்ய மட்டும் அனுமதிக்கப்பட்ட பருத்தி இன்று பசும் பாலாகவும் எடிபில் ஆயிலாகவும் வந்து... நம் ஆயுளை தீர்மானிக்கின்றன.

அல்லாஹ் அனுமதி அளித்துள்ள நல்ல பொருட்களையே புசியுங்கள். -அல் – குர்ஆன்.5:88

பூமியில் அமைதி உண்டாகி சீர் திருத்தம் ஏற்பட்ட பின்னர், அதில் குழப்பம் உண்டாக்காதீர். – அல் குர்ஆன். 7:56.

உணவு பொருள்களில் மரபணுவு மாற்றம் செய்ய கூடாது .அதே நேரத்தில் உணவு அல்லாத பிற காரியங்களுக்காக மரபணவு மாற்றம் செய்து கொள்வதில் இஸ்லாத்தில் தடை இல்லை. ஆண் குதிரையும், பெண் கழுதையும் இணைத்து கோவேறு கழுதை உண்டாகி கொள்வதை இஸ்லாம் அனுமதிக்கிறது . யாரும் கோவேறு கழுதையை உண்பதில்லை.

16:8. இன்னும், குதிரைகள், கோவேறு கழுதைகள், கழுதைகள் ஆகியவற்றை நீங்கள் ஏறிச்செல்வதற்காகவும், அலங்காரமாகவும், (அவனே படைத்துள்ளான்;) இன்னும், நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைக்கிறான்.

பெய்ஜிங்கில் உள்ள பயோ தொழில்நுட்ப நிறுவனத்தை சேர்ந்த விஞ்ஞானிகள் இந்த நாயை உருவாக்கியுள்ளனர். சாதாரண நாயில் உள்ள 'மயோஸ்டேடின்' என்ற மரபணுவை நீக்கி புதிய சூப்பர் நாய்களை உருவாக்கினர்.

சீனாவை சேர்ந்த லியாங்ஷியூ என்ற விஞ்ஞானி முதன்முறையாக மரபணு நீக்கப்பட்ட நாய்களை உருவாக்கினார். அதிவேகமாக ஓடும் திறனுடனும் இருந்தது. ஆனாலும் அந்த நாய்களால் சர்ச்சைகள் ஏற்பட்டன.

இவை அதிக பலம் வாய்ந்தவை. இவை அதிக எடை கொண்டதாகவும், மிக வேகமாகப் பாய்ந்து சென்று எதிரிகளை வேட்டையாடும் தன்மை கொண்டவை. இவற்றை பாதுகாப்புக்காகவும் போலீஸ் துறையிலும் பயன்படுத்தலாம்.

இதே மரபணு மாற்ற தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி சீனா அதிபயங்கர சக்தி படைத்த நாசகார சூப்பர் மனிதர்களை உருவாக்கக்கூடும் என்ற எதிர்பார்ப்பு நிலவுகிறது.(எஸ்.ஹலரத் அலி, பதிவிலிருந்து)

**தாவரங்களின் உலகம் 48**

'போன்சாய்' - (குட்டை மரக் கலை)

'போன்சாய்' என்ற குட்டை மர வளர்ப்புக் கலையை கண்டறிந்தவர்கள், சீனர்கள். ஆனால் உலக அளவில் போன்சாய் மரம் வளர்ப்பில் முன்னணியில் இருப்பவர்கள், ஜப்பானியர்கள். காரணம் போன்சாய் மரங்களும் அவர்களைப் போலவே குட்டையாக இருப்பதாலோ என்னவோ ? இந்த கலையை ஜப்பானியர்கள் "தட்டுத் தோட்டம்" என்கின்றனர் . பிற்காலங்களில் இது ஜப்பானின் கலையாகவே மாறிப்போனது.

பல வருடங்களாக ஜப்பானிலேயே முடங்கி இருந்த இந்தக் கலை ஜென் புத்த மதத்தினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, இன்று உலகம் முழுவதும் போன்சாய்க் கலை பரவி,எல்லா மக்களுக்கும் பிடித்ததாக மாறியிருக்கிறது.

சுமார் 1300 வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்த சீன மக்களை மகிழ்ச்சிப்படுத்த வேண்டுமெனில் அவர்களுக்கு போன்சாய் மரங்களை அன்பளிப்பாக கொடுத்தால் போதும். சீனர்களுக்கு போன்சாய் மரங்கள் என்றால் அளவில்லாத விருப்பம். அக்காலக்கட்டத்தில் சீனர்களின் மிக உயர்ந்த பரிசு பொருளாக இந்த மரங்களே இருந்து வந்திருக்கிறது

"நம் இந்தியாவில் இக்கலைகளுக்கெல்லாம் முன்னரே வாமண விருட்சம் எனும் குட்டை மரங்கள் இருந்தது" என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது.

போன்சாய் என்ற குட்டை மர வளர்ப்புக் கலை உருவானதற்கு இரண்டு விதமான காரணங்கள் சொல்லப்படுகின்றன.

பழங்காலத்தில் சீனர்கள் மருத்துவ சிகிச்சையில் ஏராளமான மூலிகை செடிகளை பயன்படுத்தினார்கள். மூலிகைகளை புத்தம் புதிதாக பயன்படுத்தி மருந்துகள் தயாரிக்க வேண்டும் என்பதற்காக ஒவ்வொருமுறையும் மலைப்பகுதிக்கு சென்று மூலிகைகளை பறித்து வந்து பயன்படுத்தினார்கள். இதில் அவர்களுக்கு பல்வேறு சிரமங்கள் ஏற்பட்டன. ஒரு முறை மலைக்கு சென்று மூலிகைகளை பறித்து வர பல நாட்கள் ஆனது. அத்தகைய சிரமங்களைப் போக்க பிற்காலத்தில் அந்த மூலிகை செடிகளை வீட்டிலேயே வளர்க்க முயற்சித்தனர்.

அவர்கள் வீடுகளில் தட்டையான தொட்டிகளில் மூலிகை செடிகளை வளர்த்தபோது அவை தானாகவே குட்டையாக வளரத் தொடங்கின. செடிகள் குட்டையாக வளர்வதைப் பார்த்து ஆச்சரியப்பட்ட சீனர்கள் பிற்காலத்தில் அதற்கான காரணத்தை கண்டறிந்தனர். செடிகளை தொட்டியில் வளர்த்து அவற்றின் வேர்களை சுருக்கிவிட்டால் வயதான மரங்களை கூட சிறிய தொட்டிகளில் வளர்க்கலாம் என்பதை தெரிந்து கொண்டனர். இப்படித்தான் போன்சாய் கலை சீனர்களுக்கு வசப்பட்டதாக சொல்கிறார்கள்.

ஆனால் எகிப்தில் அழகுக்காக வளர்ப்பது போல் காணப்படும், சட்டிகளில் வளர்க்கப்பட்ட மரங்களின் உருவப் படங்கள், 4000 ஆண்டுகளுக்கு முற்பட்ட எகிப்தியச் சமாதிகளில் காணப்படுகின்றன.

இதைத் தொடர்ந்து, நாடோடிகளின் வண்டிகள் விதவிதமான பாத்திரங்களில் மரங்களை ஆசியா முழுதும் கொண்டு சென்றதாக அறியப்படுகின்றது. இந்த மரங்கள் மருத்துவத் தேவைகளுக்கு வேண்டிய மூலப் பொருட்களை வழங்கியதாகத் தெரிகிறது.

போன்சாய் மரம் வளர்ப்பிற்கான அடிப்படை தத்துவம் என்னவென்றால், ஒரு மரம் எவ்வளவு உயரமாக வளருகிறதோ அந்த அளவிற்கு பூமிக்கு கீழ் அதன் வேர்கள் ஆழமாகவும், பல்வேறு பகுதிகளுக்கும் பரவி வளரும். ஆனால் மரத்தின் வேர் வளரமுடியாமல் போனால் அந்த மரம் உயரமாக வளராது.

இன்னொரு கருத்து.. மரங்களில் உட்காரும் பறவைகள் அந்த மரங்களில் உள்ள பழங்களை கொட்டையோடு சேர்த்து தின்றுவிடும். அந்த கொட்டைகள் பறவைகள் எச்சமிடும்போது வெளியேறுகின்றன. பறவைகள் பாறைகள் நிறைந்த பகுதி களில் உட்காரும்போது அங்கு விழும் கொட்டைகள் பாறை இடுக்குகளில் செடிகளாக வளருகின்றன.

ஆனால் அவை வளருவதற்கு போதுமான மண் அங்கு இருக்காது. அந்த இடத்தில் கையளவு மண் இருந்தால்கூட அதில் அந்த கொட்டை முளைத்து செடியாக வளரும். அவ்வாறு வளரும்போது அந்த செடிகளின் வேர்களால் பாறைகளை துளைத்துச் செல்ல முடியாது. பாறைகளின் மேல் தான் அந்த வேர்கள் வளர வேண்டும். வேர்கள் ஆழமாக வளர முடியாததால் அந்த செடியும் உயரமாக வளராது. இதனால் பல ஆண்டுகளாக அந்த செடி குட்டையாகவே இருப்பதை மக்கள் பார்த்துள்ளனர். இதை அடிப்படையாகவைத்துதான் குட்டை மரம் வளர்க்கும் கலை தோன்றியதாகவும் கூறப்படுகிறது.

புதிய செடியை சிறிய தொட்டியில் வளர்ப்பதைவிட இதுபோன்ற பழைய கட்டிடங்களில் இருந்து கொண்டுவரும் செடிகளை எளிதாக போன்சாய் வளர்ப்புக்காக பயன்படுத்தலாம். ஏனென்றால் ஏற்கனவே அந்த மரத்தின் வேர் குறுகி போன்சாய் வளர்ப்புக்கு ஏற்றவாறு மாறியிருக்கும்.

தென்னை மற்றும் பனை மரங்களை தவிர மற்ற மரங்கள் அனைத்தையும் போன்சாய் வளர்ப்புக்கு பயன்படுத்தலாம். தொட்டியில் ஒரு பங்கு மண், ஒரு பங்கு உரம், ஒரு பங்கு மணல் ஆகியவற்றை போட்டு அதில் நர்சரியில் இருந்து வாங்கப்பட்ட செடியை வளர்க்கலாம். சாதாரணமாக செடியை வளர்ப்பது போன்று அந்த செடிக்கு தினசரி தண்ணீர் ஊற்றி வளர்க்க வேண்டும்.

போன்சாய் மரங்களை பல்வேறு ஸ்டைல்களில் நம் விருப்பத்திற்கேற்ப வளர்க்கலாம். இயற்கையாக மரங்கள் கூம்பு போன்ற வடிவில் தான் வளரும். உதாரணத்துக்கு ஒரு அடி நீளம், ஒரு அடி அகலம் கொண்ட தொட்டியில் ஆலச் செடியை வளர்க்கும்போது அதன் வேர் ஆழமாக செல்ல முடியாது. தொட்டியை விட்டு வேர் வெளியே செல்ல முடியாது என்பதால் வேரின் வளர்ச்சி முடக்கப்படும். இதனால் வேருக்கு மேல் உள்ள தண்டு பகுதியும் உயரமாக வளராது. அந்த செடியின் இலைகளை வெட்டி விட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

மேலும் மிருதுவாக்கப்பட்ட அலுமினிய கம்பியை உள்ளே வைத்து செய்யப்பட்ட பிரத்யேக வயரை கொண்டு செடியின் கிளையை நமது விருப்பத்திற்கேற்றவாறு வளைத்து செடியை வளர்க்கலாம். இதற்காகவே தயாரிக்கப்பட்டுள்ள கத்திரியினால் செடியின் தண்டு, கிளை, இலையை தேவைப்படும் அளவிற்கு வெட்டிக் கொண்டே இருக்க வேண்டும். ஆனால் இதில் பல்வேறு நுணுக்கங்கள் உள்ளன. தாவரங்களின் மீது ஆர்வம் உள்ளவர்கள் தான் இதில் கவனமாக ஆர்வத்துடன் செயல்பட்டு குட்டை மரங்களை வளர்க்க முடியும்.

சாதாரண தாவரங்களை போன்று போன்சாய் மரங்களையும் தினமும் சூரிய ஒளியில் வைக்க வேண்டும். இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை தொட்டியிலிருந்து செடியை வேரோடு எடுத்து, தேவையில்லாத வேர்களை வெட்டி எடுத்துவிட்டு மீண்டும் தொட்டியிலேயே வைத்து விட வேண்டும்.

கத்திரிக்கோல் போன்ற அனைத்து கருவிகளும் இதற்காக தனித்துவமாக உருவாக்கப்பட்டுள்ளன. அவைகளைதான் பயன்படுத்த வேண்டும். இவை சற்று அதிகம் விலைகொண்டவை.

போன்சாய் மரங்கள் அனைத்தும் மற்ற மரங்களை போன்று பூக்கள் பூத்து காய் காய்த்து கனி தருபவை. அவற்றில் எந்த மாற்றமும் இருக்காது. சாதாரண மரம் காய்ப்பது போன்றே போன்சாய் மரங்களும் காய்க்கும். தோட்டம் போன்றும் நிறைய போன்சாய் மரங்களை வளர்க்கலாம்.

பெரிய ஆலமரம் ஒன்று ஆயிரம் சதுர அடி பரப்பளவிலும் வளரும் திறன் கொண்டது. அந்த பிரமாண்டத்தை அரை அடி தொட்டிக்குள் அடக்கிவிட முடியும். 100 வயதான மரங்களைகூட ஒரு சதுர அடி பரப்பளவு கொண்ட தொட்டியில் வளர்க்கும் அபூர்வ கலையான போன்சாய் மரம் வளர்ப்பிற்கு தாவரங்களை பற்றிய தெளிவான அறிவு தேவை. மரம் வளர்ப்பது மனதுக்கு அமைதியை தரும். அதனால் ஆரோக்கியமும், நிம்மதியும் கிடைக்கும்.

ஆல், அரசு, இச்சி, எலுமிச்சை, சவுக்கு, புளிய மரம் உள்பட அனைத்து விதமான மரங்களையும் போன்சாயில் வளர்க்கலாம்.

போன்சாய் மரம் போன்று போன்சாய் மரத்தைப் பற்றிய ஒரு வியப்பான செய்தி ஜப்பானின் 390 வயதுடைய போன்சாய் மரம் வியக்க வைக்கும் வரலாற்றை கொண்டுள்ளது.தற்போது உலகின் கவனத்தையே தன்பால் ஈர்த்துள்ளது.

அமெரிக்கா இரண்டாம் உலகப் போரின் போது, 1945, ஆகஸ்ட் 6ம் தேதி ஜப்பானின் ஹிரோஷிமா மீது லிட்டில் பாய் (Little Boy) அணு குண்டை வீசியது. அப்போது, குண்டு விழுந்த இடத்துக்கு இரண்டு 2 கி.மீ. தூரத்திலேயே போன்சாய் வெள்ளை பைன் மரம் இருந்தது.

குண்டு வீசப்பட்ட இடத்திலிருந்து பல மைல் தூரத்தில்

இருந்தவர்கள் பெரும் பாதிப்பிலிருந்து தப்பினார்கள். ஆனால், 2 கி.மீ. தூரத்தில் பெரும் பாதிப்புக்குள்ளாகி அழிந்த பகுதியில் இருந்த இந்த போன்சாய் வெள்ளை பைன் மரம் எவ்வித

சேதமில்லாமல் தப்பியது பிறகுதான் கண்டு பிடிக்கப்பட்டது.

மரத்தின் உயரத்துக்கு சுற்றுச்சுவர் மறைத்திருந்தாலும், வெளியில் கிளைகள் தெரிந்தபடியே இருந்தது. ஆனாலும் அணுக்கதிர் வீச்சால் பாதிக்கப்படவில்லை.

போன்சாய் ஆசிரியர் " மாசறு யமகி " என்பவரால், அமெரிக்காவின் தேசிய இரு நூற்றாண்டு விழாவை முன்னிட்டு 1976- ம் ஆண்டு அருங்காட்சியத்திற்கு இம்மரம் வழங்கப்பட்டது.

மாசறு யமகி இந்த போன்சாய் மரத்தை கொடுத்த போது, ஏன் இந்த மரத்தை பற்றிய ரகசியத்தை சொல்ல விரும்பவில்லை என்பது, இன்னும் புரியாத புதிராக அவர்களுக்கு இருக்கிறது.

“இன்னா செய்தாரை ஒருத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்” என்ற திருக்குறள் வரிகள் தரும் சிந்தனை யமகிக் குள்ளும் இருந்திருப்பதையே இந்த செயல் காட்டுகிறது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு அல்லது விதைவிதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது காய்கனிகளை) ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும் "

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார். -புகாரி : 2320.

போன்சாய் மரங்கள் அழகிற்காக வீட்டிற்குள்ளே வளர்க்கப்படுவதால்,ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும். நெருங்க முடியாமல் வீட்டுக்குள்ளே வளர்த்தால்.... ?

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 49**

மர மறு நடவு (டிரீ டிரான்ஸ்பிளான்ட்டிங் )



மரம் நடுவதை, இஸ்லாம் நன்மையாக கணக்கீடு செய்து, தர்மமாக ஊக்குவிக்கின்றது

"முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு அல்லது விதைவிதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது காய்கனிகளை) ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். புஹாரி : 2320, அனஸ் இப்னு மாலிக் (ரலி).

பருவநிலை மாற்றத்திற்கு முக்கியமான காரணமாக கருதப்படுவது மரங்களை அழிப்பதுதான். ஏனென்றால் மரங்களை அழிப்பதால் அவற்றின் மூலம் மறு சுழற்சி செய்யப்படும் கார்பன் டை ஆக்ஸைடு வாயு அளவு குறைகிறது. இதன் காரணம் வலி மண்டத்தில் இருக்கும் கார்பன் அளவு அதிகரித்து, பூமி வெப்பம் மயமாதல் மற்றும் சுற்றுச்சூழல் மாசு ஆகியவை ஏற்படுகிறது.

அத்துடன் பருவநிலை மாற்றத்தையும் இது உண்டாக்கும் தன்மை கொண்டுள்ளது. ஆகவே மரங்களை பாதுகாப்பது மற்றும் அவற்றை வெட்டினால், வேறு இடத்தில் மீண்டும் நடுவது போன்றவற்றில் அரசுகள் தீவிரம் காட்ட வேண்டும் என்று பலர் தெரிவித்து வருகின்றனர்.

சாலை விரிவாக்கத்துக்காகவும் புதிய திட்டங்களுக்காகவும் 25 ஆண்டுகளுக்கும் மேலாக வளர்ந்து நிற்கும் மரங்கள் கொத்து கொத்தாக சர்வ சாதாரணமாக வேராடு வெட்டி வீழ்த்தப்படுகின்றன. அரை மணிநேரத்தில் அரை நூற்றாண்டு கால மரத்தை பொக்லைன் இயந்திரங்கள் மூலம் அனாயாசமாக வீழ்த்துவதைக் கண்டு இயற்கை ஆர்வலர்கள் ரத்தக் கண்ணீர் விடுகின்றனர்.

இந்நிலையில் ஜார்க்கண்ட் மாநிலத்தில் வெட்டப்பட்ட மரத்தை மூங்கிலை வைத்து தூக்கி செல்லும் படம் ட்விட்டரில் வைரலாக தொடங்கியுள்ளது.

ஜார்க்கண்ட் மாநிலத்தில் வளர்ச்சி திட்டத்திற்காக வெட்டப்பட்ட மரம் ஒன்றை எந்தவித இயந்திரமும் பயன்படுத்தாமல் சில இளைஞர்கள் மூங்கில் உதவியுடன் தூக்கி செல்கின்றனர். இந்தப் படத்தை துணை ஆட்சியர் ஒருவர் தன்னுடைய ட்விட்டர் பக்கத்தில் பதிவிட்டுள்ளார். அந்தப் படத்துடன், "ஒரு படம் ஆயிரம் வார்த்தைகளுக்கு சமம்" எனவும் பதிவிட்டுள்ளார்.

ஜேசிபி வண்டி மற்றும் வேறு எந்தவிதமான இயந்திரமும் இங்கு பயன்படுத்தப்படாததால் பலரும் இளைஞர்களின் செயலை பாராட்டி வருகின்றனர். குறிப்பாக ஒருவர் தமிழில், "சமுதாய நலன் காக்கும் உணர்வும், ஆற்றலும் மிக்க பாராட்டிற்குரிய இளைஞர்கள், எதிர்கால சமுதாயத்தின் பாதுகாப்பிற்கு அடித்தளம் அமைத்த வீரர்கள்" எனப் பாராட்டி பதிவு செய்துள்ளார். அத்துடன் மேலும் சிலர் இந்த சிறுவரகள் தான் உண்மையான "க்ரீன் வாரியர்ஸ்" என்று பதிவிட்டு வருகின்றனர்.

மதுரை அருகே உள்ள திருநகரைச் சேர்ந்த இளைஞர்கள் சிலர் ஒன்று கூடி 'திருநகர் பக்கம்' என்ற அமைப்பை ஆரம்பித்தனர். எங்கு மரங்கள் வெட்டப்படுகிறதோ, அங்கு உடனே சென்று அந்த மரங்களை மரமாகவே மற்றொரு இடத்தில் நட்டு விடுகின்றனர். அரசு செய்யாவிட்டால் என்ன, அதை நாங்கள் செய்கிறோம் என்று களம் இறங்கியுள்ளனர் மரத்திற்கு வேரென இருக்கும் இந்த இளைஞர்களால் வீழ்ந்துவிடாது இருக்கின்றன மரங்கள்.

இவர்கள் ஒன்றிணைந்து 'பசுமை காவலர்கள்' குழுவை அமைத்து பெரிய மரங்களை வேரோடு அகற்றி, அவற்றை வேறு இடத்தில் நடுகின்றனர். அதாவது சாகக்கிடந்தவரை ஐசியூவில் வைத்து காப்பாற்றி தேற்றி உயிர் பிழைக்கச் செய்வதைப் போன்றது, இவர்களது முயற்சி. இவ்வாறு நடுவதற்கான பிரத்யேகப் பயிற்சியையும் அவர்கள் பெற்றுள்ளனர்.

அந்த குழுவின் ஒருங்கிணைப்பாளர் விஸ்வாவிடம் பேசினோம். ''எத்தனையோ மரக்கன்றுகளை இதுவரை நடவு செய்துள்ளோம், அதில் பல வளர்ந்து இன்று மரமாக நிற்கின்றன. சில மரக்கன்றுகள் மனிதர்கள், கால்நடைகள், காலநிலையின் தாக்கத்தால் மண்ணோடு மக்கி உரமானது. இந்நிலையில், வளர்ந்த மரங்களை பாதுகாக்கவும் அவற்றை வேறு இடத்தில் நட்டு பசுமையை உருவாக்கும் முயற்சியிலும் தற்போது ஈடுபட்டுள்ளோம்.

இதற்காக மதுரை அன்னவயல் அறக்கட்டளை நிறுவனரும் சுற்றுச்சூழல் ஆர்வலருமான காளிமுத்து மற்றும் அவரது குழுவினரிடம் மரங்களை மரமாகவே நடுவதற்கு பயிற்சி பெற்றோம். அதன் படி பல இடங்களில் வெட்டப்பட இருந்த மரங்களை காப்பாற்றி, அவற்றை வேரோடு எடுத்து, வேறு இடத்தில் நட்டு பராமரித் துள்ளோம்.

ஆலமரம், அரசமரம், பூவரசம், உதயம், லச்சக்கட்டை, முருங்கை ஆகிய மரங்களை மதுரை அருகே திருநகர் சேமட்டான்குளம் கண்மாய் கரையில் நட்டோம். தற்போது அந்த மரங்கள் துளிர்விட்டு வளர ஆரம்பித்துள்ளன.

இதுதவிர, மரத்தின் வளர்ந்த கிளையை (போத்து) சரியான முறையில் தேர்ந்தெடுத்து, 3 அடி ஆழ குழியில் நட்டு பராமரித்து வளர்க்கிறோம். முன்னதாக இந்த போத்தின் கீழ் மற்றும் மேல் முனைகளில் சோற்றுக் கற்றாழை பசையை நன்கு தடவி விடுவோம். இது நோய் தாக்குதல் ஏற்படாமல் தடுக்கும். மேலும், வளர்ச்சி ஊக்கியாகவும் செயல்படும்.

அதோடு, மாட்டின் சாணத்தையும் பூசுவோம். இதனால், போத்து விரைவில் ஈரப்பதத்தை இழக்காமல், உயிர்ப்போடு புது துளிர் விட உதவும். பின் வைக்கோலை எடுத்து கயிறு திரித்து, அதை போத்து முழுவதும் இடை வெளி விடாது மூடிவிடுவோம்.

நடும் முன்பு குழிக்குள் சிறிது காய்ந்த நாட்டு மஞ்சள் கிழங்கு அரைத்த பொடியை தூவுவோம். பின்னர், போத்தை மண்ணுக்குள் இறக்கி மண்ணை வாரி அணைத்து, நன்கு பாதம் கொண்டு அழுத்திட மண் இறுகி போத்துக்கு அசைவு கொடுக்காது. மூன்று நாட்களுக்கு ஒருமுறை தண்ணீர் ஊற்ற வேண்டும். சில நாட்களிலேயே கணுக்களில் இருந்து துளிர் விடத் தொடங்கும். ஓராண்டுக்குள் மரமாகி நல்ல பயன் தரும்'' என்றார்.

ஒரு கன்று மரமாகி நிற்க ஆண்டுக்கணக்கில் ஆகும். அதேநேரம் வெட்டப்படவிருக்கும் வளர்ந்த மரத்தின் உயிரை பறிபோகாமல் காத்து, அதை அப்படியே இடம்மாற்றி நட்டுவைத்து நன்கு பராமரித்து வளர்த்தெடுப்பது இங்கு

புதுமுயற்சிதான்.

மரத்தை மரமாகவே வளர்க்கும் நுட்பம் இன்று எல்லோரும் தெரிந்திருக்க வேண்டிய ஒன்றாக மாறியுள்ளது. ஏனெனில் பல பத்தாண்டு காலமாக வளர்ந்து நிற் கும் மரங்களுக்கு அத்தனை அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளது இப்போது.

"இறுதித் தீர்ப்பு நாள் வருகையில் கூட, ஒரு மரக்கன்றை ஒருவர் கையில் வைத்திருந்தால் அவர் விரைந்து அதனை மண்ணில் ஊன்றட்டும்" என்று இறைதூதர் (ஸல்) கூறினார்கள்

இறுதித் தீர்ப்பு நாள் வந்துவிட்டால் அதற்குப் பின் பூமி ஏது? பூமியில் வாழ்க்கை ஏது? அந்த நேரத்திலும் கூட கையில் இருக்கும் மரத்தை நட்டுவிட வேண்டும் என்று மனிதர்களின் வழிகாட்டி முஹம்மது (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்.

இது மனிதர்களுக்கு இயற்கை வளங்கள் மேல் உள்ள பொறுப்பையும், மனிதர்களுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவையும் சுட்டிக் காட்டுகிறது. உலகம் அழிவது போன்ற பேரிடர்கள் ஏற்பட்டாலும் மனிதர்கள் தங்கள் பொறுப்பில் கவனமற்று இருந்து விடக்கூடாது என்பதை தெளிவுபடுத்துகிறது.

மேலும் மரம் நடுவது ஒரு அறச் செயல். பணமாக, பொருளாக பிறருக்கு கொடுப்பதையே தர்மம் என்று நினைக்கும் மனிதர்களுக்கு, மனிதன் இன்னொரு மனிதனைப் புன்னகையுடன் எதிர்கொள்வதையும் தர்மம் என்கிறது இஸ்லாம்.

வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருந்த இருவருடைய கப்ருகளைக் கடந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சென்ற போது, "இவ்விருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள்; ஆனால் மிகப் பெரும் பாவத்திற்காக வேதனை செய்யப்படவில்லை. ஒருவர் சிறுநீர் கழிக்கும் போது மறைக்காதவர்; இன்னொருவர் கோள் சொல்லித் திரிந்தவர்'' எனக் கூறிவிட்டு,

ஈரமான ஒரு பேரீச்ச மட்டையை இரண்டாகப் பிளந்து இரு கப்ருகளிலும் ஒவ்வொன்றை நட்டார்கள். தோழர்கள், "அல்லாஹ்வின் தூதரே! ஏன் இவ்வாறு செய்கின்றீர்கள்?'' என்று கேட்டதும்,

"இவ்விரண்டின் ஈரம் காயாத வரை இவர்களின் வேதனை குறைக்கப்படக் கூடும்'' என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இப்னு அப்பாஸ் (ரலி) புகாரி 1361

ஈரம் காயாத வரை மண்ணறைவாசிகளுக்கு வேதனை குறைக்கப்படும் என்றால், அதை மரமாக நட்டு , அது பசுமையாக இருக்கும் காலமெல்லாம் அந்த நன்மை அந்த மரத்தை நட்டவருக்கு கிடைக்காமலா போகும் ?

மரம் நடுவதும், வெட்டிய மரத்தை மறு நடவு செய்வதும் தர்மம். ஒரு மனிதன் நடும் விதை வளர்ந்து மரமாகி பூவாக, காயாக, பலமாக, நிழலகாக மனிதர்கள் உள்ளிட்ட உயிர்களுக்கு பயன் தருகிற போது விதைத்தவனுக்கு தர்மமாக பலனளிக்கிறது என்கிறது இஸ்லாம்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 49**

மர மறு நடவு (டிரீ டிரான்ஸ்பிளான்ட்டிங் )




மரம் நடுவதை, இஸ்லாம் நன்மையாக கணக்கீடு செய்து, தர்மமாக ஊக்குவிக்கின்றது

"முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு அல்லது விதைவிதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது காய்கனிகளை) ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். புஹாரி : 2320, அனஸ் இப்னு மாலிக் (ரலி).

பருவநிலை மாற்றத்திற்கு முக்கியமான காரணமாக கருதப்படுவது மரங்களை அழிப்பதுதான். ஏனென்றால் மரங்களை அழிப்பதால் அவற்றின் மூலம் மறு சுழற்சி செய்யப்படும் கார்பன் டை ஆக்ஸைடு வாயு அளவு குறைகிறது. இதன் காரணம் வலி மண்டத்தில் இருக்கும் கார்பன் அளவு அதிகரித்து, பூமி வெப்பம் மயமாதல் மற்றும் சுற்றுச்சூழல் மாசு ஆகியவை ஏற்படுகிறது.

அத்துடன் பருவநிலை மாற்றத்தையும் இது உண்டாக்கும் தன்மை கொண்டுள்ளது. ஆகவே மரங்களை பாதுகாப்பது மற்றும் அவற்றை வெட்டினால், வேறு இடத்தில் மீண்டும் நடுவது போன்றவற்றில் அரசுகள் தீவிரம் காட்ட வேண்டும் என்று பலர் தெரிவித்து வருகின்றனர்.

சாலை விரிவாக்கத்துக்காகவும் புதிய திட்டங்களுக்காகவும் 25 ஆண்டுகளுக்கும் மேலாக வளர்ந்து நிற்கும் மரங்கள் கொத்து கொத்தாக சர்வ சாதாரணமாக வேராடு வெட்டி வீழ்த்தப்படுகின்றன. அரை மணிநேரத்தில் அரை நூற்றாண்டு கால மரத்தை பொக்லைன் இயந்திரங்கள் மூலம் அனாயாசமாக வீழ்த்துவதைக் கண்டு இயற்கை ஆர்வலர்கள் ரத்தக் கண்ணீர் விடுகின்றனர்.

இந்நிலையில் ஜார்க்கண்ட் மாநிலத்தில் வெட்டப்பட்ட மரத்தை மூங்கிலை வைத்து தூக்கி செல்லும் படம் ட்விட்டரில் வைரலாக தொடங்கியுள்ளது.

ஜார்க்கண்ட் மாநிலத்தில் வளர்ச்சி திட்டத்திற்காக வெட்டப்பட்ட மரம் ஒன்றை எந்தவித இயந்திரமும் பயன்படுத்தாமல் சில இளைஞர்கள் மூங்கில் உதவியுடன் தூக்கி செல்கின்றனர். இந்தப் படத்தை துணை

ஆட்சியர் ஒருவர் தன்னுடைய ட்விட்டர் பக்கத்தில் பதிவிட்டுள்ளார். அந்தப் படத்துடன், "ஒரு படம் ஆயிரம் வார்த்தைகளுக்கு சமம்" எனவும் பதிவிட்டுள்ளார்.

ஜேசிபி வண்டி மற்றும் வேறு எந்தவிதமான இயந்திரமும் இங்கு பயன்படுத்தப்படாததால் பலரும் இளைஞர்களின் செயலை பாராட்டி வருகின்றனர். குறிப்பாக ஒருவர் தமிழில், "சமுதாய நலன் காக்கும் உணர்வும், ஆற்றலும் மிக்க பாராட்டிற்குரிய இளைஞர்கள், எதிர்கால சமுதாயத்தின் பாதுகாப்பிற்கு அடித்தளம் அமைத்த வீரர்கள்" எனப் பாராட்டி பதிவு செய்துள்ளார். அத்துடன் மேலும் சிலர் இந்த சிறுவரகள் தான் உண்மையான "க்ரீன் வாரியர்ஸ்" என்று பதிவிட்டு வருகின்றனர்.

மதுரை அருகே உள்ள திருநகரைச் சேர்ந்த இளைஞர்கள் சிலர் ஒன்று கூடி 'திருநகர் பக்கம்' என்ற அமைப்பை ஆரம்பித்தனர். எங்கு மரங்கள் வெட்டப்படுகிறதோ, அங்கு உடனே சென்று அந்த மரங்களை மரமாகவே மற்றொரு இடத்தில் நட்டு விடுகின்றனர். அரசு செய்யாவிட்டால் என்ன, அதை நாங்கள் செய்கிறோம் என்று களம் இறங்கியுள்ளனர் மரத்திற்கு வேரென இருக்கும் இந்த இளைஞர்களால் வீழ்ந்துவிடாது இருக்கின்றன மரங்கள்.

இவர்கள் ஒன்றிணைந்து 'பசுமை காவலர்கள்' குழுவை அமைத்து பெரிய மரங்களை வேரோடு அகற்றி, அவற்றை வேறு இடத்தில் நடுகின்றனர். அதாவது சாகக்கிடந்தவரை ஐசியூவில் வைத்து காப்பாற்றி தேற்றி உயிர் பிழைக்கச் செய்வதைப் போன்றது, இவர்களது முயற்சி. இவ்வாறு நடுவதற்கான பிரத்யேகப் பயிற்சியையும் அவர்கள் பெற்றுள்ளனர்.

அந்த குழுவின் ஒருங்கிணைப்பாளர் விஸ்வாவிடம் பேசினோம். ''எத்தனையோ மரக்கன்றுகளை இதுவரை நடவு செய்துள்ளோம், அதில் பல வளர்ந்து இன்று மரமாக நிற்கின்றன. சில மரக்கன்றுகள் மனிதர்கள், கால்நடைகள், காலநிலையின் தாக்கத்தால் மண்ணோடு மக்கி உரமானது. இந்நிலையில், வளர்ந்த மரங்களை பாதுகாக்கவும் அவற்றை வேறு இடத்தில் நட்டு பசுமையை உருவாக்கும் முயற்சியிலும் தற்போது ஈடுபட்டுள்ளோம்.

இதற்காக மதுரை அன்னவயல் அறக்கட்டளை நிறுவனரும் சுற்றுச்சூழல் ஆர்வலருமான காளிமுத்து மற்றும் அவரது குழுவினரிடம் மரங்களை மரமாகவே நடுவதற்கு பயிற்சி பெற்றோம். அதன் படி பல இடங்களில் வெட்டப்பட இருந்த மரங்களை காப்பாற்றி, அவற்றை வேரோடு எடுத்து, வேறு இடத்தில் நட்டு பராமரித் துள்ளோம்.

ஆலமரம், அரசமரம், பூவரசம், உதயம், லச்சக்கட்டை, முருங்கை ஆகிய மரங்களை மதுரை அருகே திருநகர் சேமட்டான்குளம் கண்மாய் கரையில் நட்டோம். தற்போது அந்த மரங்கள் துளிர்விட்டு வளர ஆரம்பித்துள்ளன.

இதுதவிர, மரத்தின் வளர்ந்த கிளையை (போத்து) சரியான முறையில் தேர்ந்தெடுத்து, 3 அடி ஆழ குழியில் நட்டு பராமரித்து வளர்க்கிறோம். முன்னதாக இந்த போத்தின் கீழ் மற்றும் மேல் முனைகளில் சோற்றுக் கற்றாழை பசையை நன்கு தடவி விடுவோம். இது நோய் தாக்குதல் ஏற்படாமல் தடுக்கும். மேலும், வளர்ச்சி ஊக்கியாகவும் செயல்படும்.

அதோடு, மாட்டின் சாணத்தையும் பூசுவோம். இதனால், போத்து விரைவில் ஈரப்பதத்தை இழக்காமல், உயிர்ப்போடு புது துளிர் விட உதவும். பின் வைக்கோலை எடுத்து கயிறு திரித்து, அதை போத்து முழுவதும் இடை வெளி விடாது மூடிவிடுவோம்.

நடும் முன்பு குழிக்குள் சிறிது காய்ந்த நாட்டு மஞ்சள் கிழங்கு அரைத்த பொடியை தூவுவோம். பின்னர், போத்தை மண்ணுக்குள் இறக்கி மண்ணை வாரி அணைத்து, நன்கு பாதம் கொண்டு அழுத்திட மண் இறுகி போத்துக்கு அசைவு கொடுக்காது. மூன்று நாட்களுக்கு ஒருமுறை தண்ணீர் ஊற்ற வேண்டும். சில நாட்களிலேயே கணுக்களில் இருந்து துளிர் விடத் தொடங்கும். ஓராண்டுக்குள் மரமாகி நல்ல பயன் தரும்'' என்றார்.

ஒரு கன்று மரமாகி நிற்க ஆண்டுக்கணக்கில் ஆகும். அதேநேரம் வெட்டப்படவிருக்கும் வளர்ந்த மரத்தின் உயிரை பறிபோகாமல் காத்து, அதை அப்படியே இடம்மாற்றி நட்டுவைத்து நன்கு பராமரித்து வளர்த்தெடுப்பது இங்கு

புதுமுயற்சிதான்.

மரத்தை மரமாகவே வளர்க்கும் நுட்பம் இன்று எல்லோரும் தெரிந்திருக்க வேண்டிய ஒன்றாக மாறியுள்ளது. ஏனெனில் பல பத்தாண்டு காலமாக வளர்ந்து நிற் கும் மரங்களுக்கு அத்தனை அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளது இப்போது.

"இறுதித் தீர்ப்பு நாள் வருகையில் கூட, ஒரு மரக்கன்றை ஒருவர் கையில் வைத்திருந்தால் அவர் விரைந்து அதனை மண்ணில் ஊன்றட்டும்" என்று இறைதூதர் (ஸல்) கூறினார்கள்

இறுதித் தீர்ப்பு நாள் வந்துவிட்டால் அதற்குப் பின் பூமி ஏது? பூமியில் வாழ்க்கை ஏது? அந்த நேரத்திலும் கூட கையில் இருக்கும் மரத்தை நட்டுவிட வேண்டும் என்று மனிதர்களின் வழிகாட்டி முஹம்மது (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்.

இது மனிதர்களுக்கு இயற்கை வளங்கள் மேல் உள்ள பொறுப்பையும், மனிதர்களுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவையும் சுட்டிக் காட்டுகிறது. உலகம் அழிவது போன்ற பேரிடர்கள் ஏற்பட்டாலும் மனிதர்கள் தங்கள் பொறுப்பில் கவனமற்று இருந்து விடக்கூடாது என்பதை தெளிவுபடுத்துகிறது.

மேலும் மரம் நடுவது ஒரு அறச் செயல். பணமாக, பொருளாக பிறருக்கு கொடுப்பதையே தர்மம் என்று நினைக்கும் மனிதர்களுக்கு, மனிதன் இன்னொரு மனிதனைப் புன்னகையுடன் எதிர்கொள்வதையும் தர்மம் என்கிறது இஸ்லாம்.

வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருந்த இருவருடைய கப்ருகளைக் கடந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சென்ற போது, "இவ்விருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள்; ஆனால் மிகப் பெரும் பாவத்திற்காக வேதனை செய்யப்படவில்லை. ஒருவர் சிறுநீர் கழிக்கும் போது மறைக்காதவர்; இன்னொருவர் கோள் சொல்லித் திரிந்தவர்'' எனக் கூறிவிட்டு,

ஈரமான ஒரு பேரீச்ச மட்டையை இரண்டாகப் பிளந்து இரு கப்ருகளிலும் ஒவ்வொன்றை நட்டார்கள். தோழர்கள், "அல்லாஹ்வின் தூதரே! ஏன் இவ்வாறு செய்கின்றீர்கள்?'' என்று கேட்டதும்,

"இவ்விரண்டின் ஈரம் காயாத வரை இவர்களின் வேதனை குறைக்கப்படக் கூடும்'' என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இப்னு அப்பாஸ் (ரலி) புகாரி 1361

ஈரம் காயாத வரை மண்ணறைவாசிகளுக்கு வேதனை குறைக்கப்படும் என்றால், அதை மரமாக நட்டு , அது பசுமையாக இருக்கும் காலமெல்லாம் அந்த நன்மை அந்த மரத்தை நட்டவருக்கு கிடைக்காமலா போகும் ?

மரம் நடுவதும், வெட்டிய மரத்தை மறு நடவு செய்வதும் தர்மம். ஒரு மனிதன் நடும் விதை வளர்ந்து மரமாகி பூவாக, காயாக, பலமாக, நிழலகாக மனிதர்கள் உள்ளிட்ட உயிர்களுக்கு பயன் தருகிற போது விதைத்தவனுக்கு தர்மமாக பலனளிக்கிறது என்கிறது இஸ்லாம்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**தாவரங்களின் உலகம் 50**

தொல்லுயிர் மரம் ( Fossil Tree - கல் மரம்)




இயற்கையின் சீற்றத்தில் மண்ணில் புதையுண்ட மரங்கள், காலப்போக்கில் ஏற்பட்ட படிவமாதல் நிகழ்வினால் தொல்லுயிர் மரம் ( Fossil Tree - கல் மரம்) எனும் நிலையை அடைகின்றன.

காலத்தின் கோலத்தால் மரங்கள் கல்லான நிகழ்வுகள் புவியியல் வரலாற்றில் பூமியின் பல பகுதிகளில் பல்வேறு காலங்களில் நிகழ்ந்திருக்கின்றன. அப்படிக் கல்லாக மாறிய மரங்கள் தமிழ் நாட்டில் “கல்மரங்கள்” என்றே அழைக்கப்படுகின்றன. நம் நாட்டில் கல் மரங்கள் அதிகமாக உள்ள மாநிலம் நம் தமிழ்நாடுதான்.

உலகின் சிற்சில பகுதிகளில்தான் இத்தகைய கல்மரங்கள் காணப்படுகின்றன. இதில், விழுப்புரம் மாவட்டம், சங்கராபரணி ஆற்றின் கரையில் அமைந்துள்ள திருவக்கரை கல்மரங்கள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பிடித்துள்ளன. இங்குள்ள கல் மரங்களின் வயது இரண்டு கோடி ஆண்டுகள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

இந்திய அரசின், புவியியல் துறையினர், இப்பகுதியில் கல்மரப் பூங்கா அமைத்து இவற்றைப் பாதுகாத்து வருகின்றனர்.

சாத்தனூர் கல் மரம் (Sattanur) இந்தியாவின் தமிழ்நாடு மாநிலத்தில் அமைந்துள்ள பெரம்பலூர் மாவட்டத்தில் ஆலாத்தூர் ஊராட்சி ஒன்றியத்தில் உள்ள சாத்தனூர் கிராமத்தில் உள்ளது. இவ்வூரில் புகழ்பெற்ற தேசிய கல்மரப் பூங்கா உள்ளது.இது பெரம்பலூர் நகரத்திலிருந்து 23 கிமீ தொலைவில் உள்ளது.

120 மில்லியன் ஆண்டு பழங்கால மரம் கல்லாக மாறியிருக்கலாம் என நம்பப்படுகிறது, இது இந்த பகுதியில் உள்ள சுண்ணாம்புக்கல் காலத்தின் போது கடலில் இருப்பதற்கான ஆதாரமாகக் கருதப்படுகிறது.

சரி , மரம் எப்படிக் கல்லாக மாறுகிறது.?

சாதரணமாக மரம் மண்ணில் புதையுண்டு போகும் பொது, மண்ணில் உள்ள நுண்ணுயிரிகளால் அவை மட்கிப் போகும் வாய்ப்புகளே அதிகம். மாறாக, அந்த மரம் புதையுண்ட இடத்தில் மேலும் மேலும் படிவங்கள் படியும் போது அதனால் ஏற்படும் அழுத்தம் மற்றும் வெப்பம் காரணமாக மரம் தகன நிலைக்கு உட்பட்டு குமைந்துபோய் கரியாக மாறக் கூடும். நிலக்கரி, பழுப்பு நிலக்கரிப் படிவங்கள் இப்படித்தான் உருவாகியுள்ளன. இதனை CARBONAISATION அல்லது கரியாக மாறுதல் எனக் குறிப்பிடலாம்.

மூன்றாவதாக மண்ணில் புதைந்த மரம் மட்கிப் போவதற்கு முன்னால் அந்த மரத்திலுள்ள செல்களின் இடை வெளிகளிலும், செல் அடுக்குகளின் இடைவெளிகளிலும், நிலநீர் புகுந்து விடுகிறது. அந்த நீரில்

கரைந்துள்ள சிலிகா அந்த இடைவெளிகளை ஆக்கிரமித்து தாவரப் பொருளான செல்லுலோசை இடமாற்றம் செய்து சிலிகாவான தான் ஆக்ரவிடுகிறது.

இந்த நிகழ்வின் போது மரத்தின் அமைப்பு உருக்குலையாமல் அப்படியே காப்பாற்றப் படுகிறது. மரம் கல்லாக சமையும் இந்நிகழ்வு “PETRIFICATION” (PETRA MEANS ROCK) என்று அழைக்கப்படுகிறது. நிலநீரில் கரைந்துள்ள கனிமங்களின் தன்மைக்கேற்ப கல் மரத்தின் நிறம் மாறுபடுகிறது. சாத்தனூர் கல் மரம் சிலிகாவால் ஆனதால் இது பழுப்பு நிறத்தில் உள்ளது.

சாத்தனூர் அரியலூர் படுகையில் அமைந்துள்ளது. அரியலூர் படுகையிலுள்ள படிவப்பாறைகளில் பல்வேறு வகைப்பட்ட தொல்லுயிர் எச்சங்கள் ஏராளமான அளவில் கிடைக்கின்றன. இவற்றில் மிகப் பெருபாலானவை கடல்வாழ் உயிரினங்களின் எச்சங்களே ஆகும். இதன் வாயிலாக, தற்போது இப்பகுதிக்கு நூறு கி.மீ. கிழக்கில் உள்ள கடல், சுமார் 12 கோடி ஆண்டுகளுக்கு முன் இப்பகுதியில் இருந்திருக்கிறது என அறிய முடிகிறது.

“நீ கல்லாகப் போகக் கடவாய்”, தவறு செய்த (?) மனைவியை சபித்தார் முனிவர். உடனே முனிவரின் மனைவி கல்லாக மாறிவிட்டார். பின்னர் இராமர் காலடி பட்டு கல்லாக இருந்த அகலிகை மீண்டும் பெண்ணாக மாறினாள். இது இதிகாசக் கதை. கற்பனைக் கதைதான்.

ஆனால் குர்ஆனிலும் மனிதனைப் பார்த்து இறைவன்..

قُلْ كُوْنُوْا حِجَارَةً اَوْ حَدِيْدًا

(அதற்கு நபியே!) நீங்கள் கூறுங்கள்: நீங்கள் (உக்கி, மக்கி, மண்ணாவது என்ன?) கல்லாகவோ இரும்பாகவோ ஆகிவிடுங்கள். (அல்குர்ஆன் : 17:50)

மரமோ , மனிதனோ கல்லாக மாறுவது குறித்த நிகழ்வு நம்மைச் சற்று சிந்திக்க வைக்கிறது .

ரஹ்மத் ராஜகுமாரன் .

(இத்துடன் தாவரங்களின் உலகம் தொடர் பதிவு நிறைவு பெறுகிறது)

**பூச்சிகளின் உலகம் 1**

(பூச்சிகள் இன்றேல் மனிதனும் இல்லை!)




மனித குலத்தை விவசாயம் அழிவுப் பாதைக்கு அழைத்து செல்கிறது என்றால் நம்ப முடிகிறதா ? 'ஆம்' என்கிறது ஓர் ஆய்வு. ஆனால், நேரடியாக அல்ல.

இயற்கையின் சமநிலையில் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையவையாகும். அந்த தொடர்புதான் மனித இருப்பை கேள்விக்குள்ளாக்கப் போகிறது (?)

உலகெங்கும் பூச்சி இனம் மெதுவாக அழிந்து கொண்டிருக்கிறது என்கிறது ஓர் ஆய்வு.குறிப்பாக சொல்ல வேண்டுமானால், உலகில் உள்ள பூச்சி இனங்களில் 40 சதவீதம் வியத்தகு வழியில் குறைந்து வருவதாக எச்சரிக்கிறது இந்த ஆய்வு ! இந்த ஆய்வு முடிவானது 'பயோலாஜிக்கல் கன்சர்வேஷன்' என்ற சஞ்சிகையில் பிரசுரமாகி உள்ளது.

நம் வாழ்வில் அன்றாடம் கண்ட தேனீக்கள், எறும்புகள், மற்றும் வண்டுகள் போன்றவை பாலூட்டிகளை விட 8 மடங்கு வேகத்தில் அழிந்து வருவதாக கூறுகிறது அந்த ஆய்வு.

ஆனால் அதே நேரம், ஈ மற்றும் கரப்பான் பூச்சிக்கள் பெருகி வருவதாக அந்த ஆய்வு கூறுகிறது.

இந்த பூச்சிகளின் அழிவுக்கு விவசாயமும் மறைமுக காரணமாகிறது.அதனை நம்பித்தான் ஆக வேண்டும்.

தீவிரமாக விவசாயம் செய்வது,அதற்காக அதிகளவில் பூச்சி மருந்துகள் பயன்படுத்துவது மற்றும் பருவ நிலை மாற்றம் ஆகியவை இந்த அழிவுக்கு காரணமென சுட்டிக் காட்டுகிறது ஆய்வு.

பூச்சிகள் தானே ? அவை அழிந்தால் நமக்கென்ன ? என்ற எண்ணம் உங்களுக்கு இருந்தால், அதனை மாற்றிக் கொள்வது நல்லது.

மனித இனம் இந்த பூமியில் இருக்க வேண்டுமானால், பூச்சிகள் இருக்க வேண்டும். மனித இனம் உள்ளிட்ட பிற உயிரிகளின் வாழ்வுக்கு பூச்சிகள் இருப்பது மிக மிக முக்கியம்.உணவுச் சங்கிலியிலும், மகரந்தச் சேர்க்கையிலும் பூச்சிகள் முக்கிய பங்கு வகிக்கின்றன.

பறவைகள், வௌவால் மற்றும் சில பாலூட்டிகளுக்கு பூச்சிகள்தான் உணவு. உலகெங்கும் உள்ள 75 பயிர் வகைகளின் மகரந்தச் சேர்க்கைக்கு பூச்சி இனம் இன்றியமையாதது. மண்ணை வளமாக்க, பயிர்களுக்கு ஊறு விளைவிக்கும் உயிரிகளை கட்டுப்படுத்த பூச்சி இனங்கள் தேவை.

உலகெங்கும் அனைத்து பகுதிகளிலும் 40 சதவீத பூச்சிகள் அழியும் தறுவாயில் இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் சுட்டிக்காட்டுகிறார்கள்.

இந்த ஆய்வுக்கு தலைமை தாங்கிய சிட்னி பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆராய்ச்சியாளார் ஃப்ரான்சிஸ்கோ, "தீவிரமாக விவசாயம் மேற்கொள்வதால், நகர்மயமாக்கலால், காடுகள் அழிக்கப்படுவதால், பூச்சிகளின் வசிப்பிடங்கள் அழிந்து விட்டன. இவைதான் பூச்சிகளின் அழிவுக்கு முக்கிய காரணம்" என்கிறார்.

இரண்டாவது காரணம் பூச்சிகொல்லிகள்; மூன்றாவது காரணம் நோய்க்கிருமிகள்; நான்காவது காரணம் பருவநிலை மாற்றம் என்கிறார் அவர்.

பூச்சிகள் அழிந்தால் வேறென்ன நடக்கும்? மனித இனம் அழியும் என்பதுதான் சுருக்கமான பதில்.

சுற்றுச்சூழல் சமநிலைக்கும், உணவு வளையத்திற்கும் பூச்சிகள் மிகவும் இன்றியமையாதவை.பூச்சி இனத்தின் அழிவானது நேரடியாக மனித இருப்பை கேள்விக்குள்ளாக்கும்

நாம் விவசாயம் செய்யும் முறையில் நிச்சயம் மாற்றம் தேவை. பலவிதமான செடி கொடிகள் இருக்கும் காடுகளில் எந்த பூச்சி தொந்தரவும் இல்லை.ஒற்றைப் பயிர் செய்கை பண்ணும் இடங்களில்தான் பூச்சி பிரச்சினை உள்ளது.

பூச்சிகொல்லிகளை அதிகளவில் பயன்படுத்தும் போது, தீமை செய்யும் பூச்சிகளுடன் இணைந்து அதிகளவில் நன்மை செய்யும் பூச்சிகளும் அழிகின்றன.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு விவசாயம் செய்யும் முறையிலும் மாற்றத்தை கொண்டு வர வேண்டும். ஏனெனில் பூச்சிகளின் அழிவென்பது, மனித குலத்தை அழிவுக்கு இட்டு செல்லும்.

மனிதன் உட்பட ஜீவராசிகள் எல்லாம் ஓடியாடி தன் உணவைத் தேடி உண்ணுகின்றன. அதேபோல தன் இனத்தைப் பெருக்க இனச்சேர்க்கையும் ஓடியாடி நிறைவேற்றி சந்தோஷம் அடைகின்றன. ஆனால்... தாவரங்கள் நின்ற இடத்திலேயே நின்று கொண்டு தன் இனத்தை எப்படி பெருக்கிக் கொள்கிறது கவனித்தீர்களா ?

முதலில் மரங்களிலும் ஆண் - பெண் என்ற பேதம் உள்ளதை விஞ்ஞானம் சுமார் 17 ஆம் நூற்றாண்டில்தான் கண்டுபிடித்தது ஆனால் திருக்குர்ஆனோ 6 - ஆம் நூற்றாண்டிலேயே சொல்லி இருப்பது மிகப் பெரிய ஆச்சரியமான விஷயம்தானே...

" ஒவ்வொரு கனிவர்க்கத்தின் மரங்களையும் ஆண்-பெண் கொண்ட ஜதை ஜதைகளாக்கினான் " குர்ஆன் (13 : 03)

ஒவ்வொரு தாவரத்திலும் ஆண் பூக்கள், பெண் பூக்கள் என இரண்டும் தனித்தனியாக இருக்கும். ஒரு பூ , பழங்களையோ விதைகளையோ உற்பத்திசெய்வதற்கு பூவிலுள்ள மகரந்தத் தூள்கள் பெண் பூவிலுள்ள சூற்பையின் உள்ளேயுள்ள முட்டை அணுக்களை அடைய வேண்டும். இதுதான் இயற்கை நியதி.

கவிஞர் வைரமுத்து அழகாக இதைப் பாடியிருக்கிறார்.

"பூவுக்குள் ஒளிந்திருக்கும்

கனிக்கூட்டம் அதிசயம் "

ஆண் பூவிலுள்ள மகரந்தப் பைகள் முழுமையான அளவில் வளர்ச்சி அடைந்து ,முற்றியிருக்கும் போது அவைகள் வெடிக்கின்றன. மகரந்த பையில்லுள்ள மகரந்தத் தூள்கள் காற்று, நீர் , பூச்சிகளான தேனீ. வண்ணத்துப் பூச்சி ,வண்டுகள் போன்றவற்றின் உடலில் ஒட்டிக் கொண்டு பயணமாகி பெண் பூவின் சூற்பையின் பாகத்திற்கு வந்து சேர்கின்றன.

இவ்வாறு மகரந்தத்தூள் சூல் முடியின் மேல் விழும்போது, மகரந்தச் சேர்க்கை ஏற்படுகிறது. இப்படித்தான் தாவரங்களான மரங்கள், செடிகள், இனப்பெருக்கம் செய்கின்றன.

காதல் இல்லை, கடிதம் இல்லை ,கல்யாணம் கூட இல்லை நேரடி உடலில் உறவும் இல்லை. இருப்பினும், தாவர இனப்பெருக்கம் இனிதே நடந்தேறி, காயும் கனியுமாய் கழனி நிறைந்து விடுகிறது . இதையே திருக்குர்ஆனில் அல்லாஹ்

"அவனே வானத்திலிருந்து மழையை இறக்கினான். அதைக் கொண்டு எல்லா வகையான புற்பூண்டுகளையும் நாம் வெளியாக்கினோம்; அதிலிருந்து பச்சை(த் தழை)களை வெளிப்படுத்துகிறோம்; அதிலிருந்து நாம் வித்துகளை அடர்த்தியான கதிர்களாக வெளிப்படுத்துகிறோம்;

பேரீத்த மரத்தின் பாளையிலிருந்து வளைந்து தொங்கும் பழக்குலைகளும் இருக்கின்றன; திராட்சைத் தோட்டங்களையும், (பார்வைக்கு) ஒன்று போலவும் (சுவைக்கு) வெவ்வேறாகவும் உள்ள மாதுளை, ஜைத்தூன் (ஒலிவம்) ஆகியவற்றையும் (நாம் வெளிப்படுத்தியிருக்கிறோம்);

அவை (பூத்துக்) காய்ப்பதையும், பின்னர் கனிந்து பழமாவதையும் நீங்கள் உற்று நோக்குவீர்களாக - ஈமான் கொள்ளும் மக்களுக்கு நிச்சயமாக இவற்றில் அத்தாட்சிகள் அமைந்துள்ளன " (அல்குர்ஆன் : 6:99)

தாவரங்கள் பூச்சியினங்கள் மூலம் தங்கள் இனத்தைப் பெருக்கத்தை கொள்கின்றன என்பதை அறியும் போது , எவ்வளவு வியப்பாக இருக்கிறது ! இனப்பெருக்கத்திற்குரிய சல்லாபத்தையும் , உல்லாசத்தையும் பூச்சிகள் மூலம் பெற்று விடுகின்றன !

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 2**

(சிலந்தி வலைக்குப் பின்னே அல்லாஹ் நம்மோடு இருக்கின்றான்)



அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களும் மக்கத்து குறைஷிகளின் கொடூர தொல்லைகளை விட்டு,மதீனாவிற்கு ஹிஜ்ரத் பயணம் புறப்பட்டனர். மக்காவிற்குத் தெற்கே மூன்று மைல் தொலைவில் இருந்த தௌர் குகையில் தங்கினர்.

கோமான் நபி (ஸல்) அவர்களைக் கொல்ல நினைத்து ஏமாற்றம் அடைந்த கொலைகாரர்கள் பல குழுக்களாகப் பிரிந்து பல குன்றுகளிலும் தேடினர். ஒரு குழு தௌர் குகையை அடைந்து வாயிலில் நின்றது.

அவர்கள் உள்ளே சென்று பார்க்கலாமா? என்று பேசியதைக் கேட்ட அபூபக்கர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம், " நாம் இருவர் தானே இங்கு இருக்கிறோம். கொலை வெறியர் பெருங்குழுவாக நிற்கின்றனரே " என்றார்கள்.

ஏந்தல் நபி (ஸல்) அவர்கள் "நாம் இருவரல்ல. அஞ்ச வேண்டாம், கவலை வேண்டாம், நிச்சயமாக அல்லாஹ் நம்மோடு இருக்கிறான்" என்றுரைத்து அச்சம் தவிர்த்தார்கள். "லா தஹ்ஸன், இன்னல்லாஹ மஅனா" (அல்குர்ஆன் 9:40) என்று சொன்னதாக அல்குர்ஆன் கூறுகிறது.

தௌர் குகை வாயிலில் சிலந்தி வலையையும் புறா கூட்டையும் கண்டு உள்ளே மனிதர்கள் இருக்க மாட்டார்கள் என்று கொலை வெறி கூட்டம் திரும்பிய நிகழ்ச்சியைச் சிலந்தி நூற்ற வலையாலும் புறா கட்டிய கூட்டினாலும் அல்லாஹ் அளித்த பாதுகாப்பு உயர்ந்த கோட்டைகளைக் காட்டிலும் மேலான பாதுகாப்பாகி விட்டது என்று புர்தா ஷரீப் என்ற அரபி காவியத்தில் பூசரி இமாம் (ரஹ்) கவினுற காட்சி படுத்துகிறார்கள்.

சிலந்தி பற்றி சிந்திக்கும் போது முதலில் நினைவுக்கு வருவது அதன் வலைதான் இந்த வலைகள் அதிசயமான வடிவமைப்பை கொண்டுள்ளன. ஒரு சிலந்தி வலை அதற்கே உரிய கட்டிடக்கலை சார் திட்ட வரைபையும், நிர்மாணத் துறை சார் கணிப்பீடுகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது.

நாம் ஒரு சிலந்தியை ஒரு மனிதன் அளவுக்கு பெரிதாக்கி பார்ப்போமாயின், அது பின்னும் வலை சுமார் 150 மீட்டர் கொண்டதாக இருக்கும். இது 50 மாடிகள் கொண்ட கட்டிடம் ஒன்றின் உயரத்திற்கு சமமானது ஒரு சிலந்தி இந்த அளவு கொண்டதாயின் அது 50 மீட்டர் அகலம் கொண்ட வலையினை உருவாக்கம் சக்தி கொண்டதாக இருக்கும்.

அவ்வாறாயின் இச்சிலந்தி வலையானது ( jumbo jet) ஜம்பொஜெட் விமானத்தைக்கூட தடுத்து நிறுத்தும் வல்லமை கொண்டதாக இருக்கும்.

சிலந்தி வலை எப்படி அதிசயம் மிக்கதோ சிலந்தி பயன் படுத்தும் நூலும் அதிசயமானது. சிலந்தியின் பட்டு அதே கன அளவான இரும்பு நூலின் 5 மடங்கை விட பலமானது.

ஒரு சதுரமீட்டர்க்கு 150000 kg அந்த இழுவிசையை அது கொண்டுள்ளது. சிலந்தி பட்டினால் 30cm ஆரை உடைய கயிறாக தயாரித்தால் அதனால் 150 மோட்டார் கார்களின் சுமையை தாங்க முடியும்.

குண்டு துளைக்காத கவச அங்கி தயாரிக்க பயன்படுத்தப்படும் (kevlar) கெவ்லர் என்ற பதார்த்ததை தயாரிக்கும் போது, அதற்காக மாதிரியாக சிலந்தி பட்டினை விஞ்ஞானிகள் பயன்படுத்தினர்.

ஒரு துப்பாக்கி குண்டு ஒரு second க்கு 150m வேகத்தில் அதற்கு முன் எதிர் அநேகமான பொருட்களை கிழித்து கொண்டு செல்லக்கூடியது. ஆனால் (kevlar) கெவ்லர் மூலம் தயாரிக்கப்படும் துணியை அதனால் துளைக்க முடியாது.

சிலந்தி பட்டானது இந்த (kevlar) கெவ்லரைஜ விட 10 மடங்கு பலம்வாய்ந்தது. அதே நேரம் மனிதன் தலை மயிரை விட மெல்லியது. பருத்தி பஞ்சை விட பாரம் குறைந்தது.

ஆனால் உருக்கை விட பலம் மிக்கது.

உலகிலேயே சக்தி கொண்ட பதார்த்தம் என அந்த வலை இனம் காணப்படுகிறது. மனிதனிடம் உள்ள மிக சக்தி கொண்ட பொருட்களில் ஒன்றுதான் உருக்கு . இது இரும்பை பயன்படுத்தி பாரிய கைத்தொழில் மூலங்களை கொண்டு 1000 டிகிரிக்கு மேட்பட்ட உலைகளில் இட்டு தயாரிக்கப் படுகிறது. இவ்வுருக்கு விசாலமான பணிகள், உயர்ந்த கட்டிடங்கள், பாலங்கள் போன்றவற்றில் பயன்படுத்தப் படுகின்றது.

இதேப் பணிக்கு இரும்பு உருக்கை விட 5 மடங்கு சக்தி கொண்டதாக ஒரு பதார்த்ததினை எவ்வித உலைகளும் ,தொழில்நுட்ப அறிவும் இன்றி சிலந்தி தனக்குத்தானே தயாரிக்கின்றது.

இவ்வளவு ஆற்றலயும் சக்தியையும் கொட்டுத்த அல்லாஹ் அவன் திருமறையில் கூறும் போது

مَثَلُ ٱلَّذِينَ ٱتَّخَذُواْ مِن دُونِ ٱللَّهِ أَوْلِيَآءَ كَمَثَلِ ٱلْعَنكَبُوتِ ٱتَّخَذَتْ بَيْتاً وَإِنَّ أَوْهَنَ ٱلْبُيُوتِ لَبَيْتُ ٱلْعَنكَبُوتِ لَوْ كَانُواْ يَعْلَمُونَ

அல்லாஹ் அல்லாதவற்றை(த் தங்களுக்குப்) பாதுகாவலர்களாக எடுத்துக் கொள்பவர்களுக்கு உதாரணம் சிலந்திப் பூச்சியின் உதாரணம் போன்றது; அது (தனக்காக) ஒரு வீட்டைக் கட்டியது .ஆனால் நிச்சயமாக வீடுகளிலெல்லாம் மிகவும் பலஹீனமானது சிலந்திப்பூச்சியின் வீடேயாகும் – இதை அவர்கள் அறிந்து கொண்டிருப்பார்களாயின் (தாங்கள் இணையாக எடுத்துக் கொண்டவற்றின் பலஹீனத்தை ).

இதை சற்று அவதானித்தால் குர்ஆனும் விஞ்ஞானமும் முரண்படுகிற மாதிரி தெரிகிறதல்லவா ?

இந்த வசனத்தில் இத்தககதத் பைத்தன் (اتخذت بيتا ) அது வீட்டைக் கட்டியது' என்று இறைவன் ஆண்பாலில் துவங்கி 'கட்டியது' என்ற வினைச்சொல்லை பெண்பாலில் கூறியுள்ளான். இலக்கண மரபுப்படி ஆண்பாலுக்குப் பிறகு பயனிலையை ஆண் பாலாகத்தான் கூறவேண்டும். ஆனால் இங்கே பெண்பாலாகக் கூறியதைப் பார்க்கும் போது இலக்கணப்பிழையாகத் தோன்றலாம்.

இது மனிதன் இயற்றிய சொல்லாக இருந்தால் இலக்கணத்தில் தவறு நிகழ்ந்ததாக நினைத்து விட்டுவிடலாம். ஆனால் உலகின் அனைத்து உயிரினங்களையும் படைத்த இறைவன் அன்கபூத்தைப் பற்றிக் கூறும்போது அவனது சொல்லில் இலக்கணத்தவறு நிகழமுடியாது. அவ்வாறு அவன் கூறியிருந்தால் ஏற்கத்தக்க காரணங்கள் நிச்சயம் இருக்கவேண்டும் என ஆய்வு தொடர்ந்தது.

அவை என்ன என்பதை விரிவாகப் பார்ப்போம்.

1. அன்கபூத் என்ற சொல் இலக்கண ஆண்பாலிலும், பெண்பாலிலும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இதன் ஆண்பால் அன்கப் என்பதாகும். அன்கபூத் என்பது ஆண், பெண் இரு இனத்தையே குறிக்கும் பொதுவான சொல்லாகும். ஆகவே இதில் இலக்கணத் தவறு .

2. அன்கபூத்: ஆண் பெண் சிலந்தியில் ஆண் சிலந்தி வலை பின்னாது. பெண் சிலந்தி மட்டும்தான் அதன் வலையைப் பின்னமுடியும்; என்று இன்றைய விஞ்ஞானிகள் கண்டறிந்து கூறியுள்ளனர். காரணம் அதன் உடல் அவ்வாறு படைக்கப்பட்டுள்ளது.அதன் அடிவயிற்றில் பசை போன்ற திரவம் வெளியாகிறது. மாததந்திர ருது போன்ற ஒரு செயல் அதில் நிகழ்கிறது.

3. பெண்சிலந்தி பருவ வயதை அடையும் போது தனது உறவுக்காக இவ்வாறு வீட்டை எழுப்புகிறது. ஆண் சிலந்தி வலிமை பெற்றிருந்தும்; அதனால் வீடு கட்ட முடியாது.

4. பெண் சிலந்தியின் வயிற்றில் உற்பத்தியாகும் நூலில் பசை இருக்கும். எதிரிப் பூச்சிகள் அதன் மீது வந்து அமர்ந்தால், அதில் அவை ஒட்டிக் கொள்ளும். அவை அதற்கு உணவாக ஆகிவிடுகிறது.

எனவே வலைபின்னும் இச்செயல் பெண் இனத்தில் தான் நிகழ முடியும் என்பதால் தான் அல்லாஹ் பெண்பாலில் கூறியுள்ளான்.

நாம் சற்று ஆழமாக பார்போமாயின் சிலந்தியின் வீடு பெண்ணின் நிர்வாகத்திற்குள் வருவதால் சிலந்தியின் வீடு பலஹீனமான வீடு என்று அல்லாஹ் திருமறையில் கூறுகிறான் என்பதாக திருக்குர்ஆன் ஆய்வாளர்கள் கருதுகின்றனர் .

சிலந்தியின் இயல்புகள்

1) சிலந்தி தண்ணீரில் நடக்கும், நீருக்கு அடியிலும் சுவாசிக்கும் தன்மை கொண்டது.

2) சிலந்தி தான் பின்னிய வலையையே மறுசுழற்சி செய்ய உண்ணும்.

3) ஒரே எடையிலான சிலந்தி வலை மற்றும் இரும்புடன் ஒப்பிடுகையில், சிலந்தி பின்னும் வலை தான் இரும்பை விட வலுமையானது

4) சிலந்தி தன்னை தானே கோமா நிலைக்கு எடுத்து செண்டு நீருக்கு அடியில் சில மணி நேரம் உயிருடன் இருக்கும்.

5) சிலந்திகளுக்கு எறும்புகள் என்றால் பயமாம். இதற்கு காரணம் எறும்புகளிடம் இருக்கும் ஃபார்மிக் அமிலம் என ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

6) கடைசியாக சிலந்தி கடித்து மரணம் அடைந்த சம்பவம் கடந்த 1981-ம் ஆண்டு ஆஸ்திரேலியாவில் நடந்தது.

7) சிலந்திகளுக்கு ஆணுறுப்பு (Penis) இல்லை. இவை முகத்தை தான் இன உறுப்புகளாக பயன்படுத்துகின்றன.

😎கருப்பு பெண் சிலந்திகள் இனப்பெருக்கத்தில் ஈடுபட்டவுடன், ஆண் சிலந்தியை கொன்று உண்டுவிடுமாம். இதிலிருந்து தப்பிக்க கருப்பு ஆண் சிலந்திகள், கருப்பு பெண் சிலந்திகளின் பசியை மோப்பம் பிடித்து தப்பித்துக் கொள்ளுமாம்.

9) சிலந்திகள், நண்டு மற்றும் நத்தைகளுக்கு இரத்தம் நீல நிறத்தில் தான் இருக்கும். இதற்கு காரணம் இவற்றின் இரத்தத்தில் கலப்பு கொண்டுள்ள "hemocyanin" எனும் காப்பர்.

10) இதுவரை கண்டறியப்பட்ட 46,000 சிலந்தி வகைகளில். ஒன்றே ஒன்று மட்டும் தான் தாவரங்களை உண்டு வாழும் அசைவ வகையைச் சேர்ந்தாகும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**Rahmath Rajakumaran**

பண்டைய கிரீஸ் மற்றும் ரோமில் மருத்துவர்கள் தங்களிடம் வரும் நோயாளிகளுக்கு தோலில் கட்டுகளை போட பேண்டேஜ்ஜாக சிலந்தி வலைகளைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். சிலந்தி வலைகள் இயற்கையான கிருமி நாசினியாக செயல்படுவதோடு பூஞ்சை எதிர்ப்பு பண்புகளையும் கொண்டுள்ளன. சிலந்தி வலைகள் காயங்களை சுத்தமாக வைத்திருக்கவும் தொற்றுநோயைத் தடுக்கவும் உதவுமாம். சிலந்தி வலைகளில் வைட்டமின் கே நிறைந்துள்ளது என்றும் இது விரைவில் இரத்த உறைதலை ஊக்குவிக்க உதவுகிறது என்றும் கூறப்படுகிறது.

**பூச்சிகளின் உலகம் 3**

பட்டுப் பூச்சியும் சிலந்திப் பூச்சியும்




உலகுக்கு பட்டு வந்த விதமே வியப்பான விஷயம்.

சீன தேசத்தின் சக்கரவர்த்தி ஹுவாங் - டை - என்பவரின் மனைவி மகாராணி ஒருமுறை கையில் தேனீர் கோப்பையுடன் அரண்மனைத் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தார். சற்றே ஓய்வு எடுக்க அங்கிருந்த இருக்கை ஒன்றில் அமர்ந்தாள் கையில் சூடான தேனீர் கோப்பை,

அப்பொழுது அந்த கோப்பையில் மேலிருந்து ஏதோ ஒரு பொருள் விழுந்தது. அது என்னவென்று அவர் உற்றுப்பார்க்க,நிலக்கடலை அளவில் ஒரு பொருளின் பகுதிகள் கரைந்து நூல் நூலாக கோப்பைக்குள் சுழன்று கொண்டிருப்பதைக் கவனித்தார் .

மேலே பார்த்தார். அங்கிருந்த மல்பெரி மரத்தில் இருந்துதான் அந்தப் பொருள் விழுந்தது என்பதை புரிந்துகொண்டார். அரசரிடம் இதுபற்றிக் கூறினார் .

பிறகென்ன..? அரண்மனை அறிஞர்கள் எல்லோரும் சேர்ந்து மல்பெரி மரத்தை ஆராய்ச்சி செய்தார்கள். மரத்தில் பட்டுப்புழுக்கள் கூடு கட்டி இருப்பது தெரியவந்தது.

நீண்ட ஆராய்ச்சிக்குப் பிறகு இந்தப் பட்டுப்புழு சூடான நீர் பட்டதும் நூல் வடிவம் எடுக்கிறது என்பதை கண்டறிந்தார்கள். அதன்பிறகு மடமடவென்று வேலைகள் நடந்தன தானாக வளர்ந்த பட்டுப்பூச்சி முறையாக வளர்க்கப்பட்டது. சீன கைவினை கலைஞர்கள் இந்தப் பட்டுப்புழுவிலிருந்து பட்டு நூல் எடுக்கும் வித்தையை கற்றுக் கொண்டார்கள். பட்டின் அத்தியாயம் பட்டுப்போலவே தொடங்கிற்று.

ஒரு பட்டுப்புழுவின் கூட்டில் இருந்து 1,600 மீட்டர் நீளமுள்ள பட்டுநூல் கிடைக்கிறது. பட்டு நூல் உருக்கு இழையை விட உறுதியானது என்பது சோதித்து அறியப்பட்ட உண்மையாகும். பட்டு நூல் முக்கோணப்பட்டை அமைப்பை கொண்ட நீண்ட நூலாகும்.

பட்டுப்புழு ஓரிடத்திலும் நிலை கொள்ளாது மூங்கில் மரப் பொந்துக்குள் நுழைந்து "8" என்ற எண் வடிவத்தில் பட்டு நூல் இழை மூலம் கூடு கட்டுகிறது . இந்த "8" என்கிற எண் வடிவம் நம்மை சற்று யோசிக்க வைத்திருக்கிறது. அதாவது பட்டாடைகள் சுவனவாசிகள் அணிவதற்காக இறைவன் கொடுப்பது.சுவனவாசிகள் எட்டு வகையான சுவனத்தில் பிரவேசிப்பார்கள் அவர்கள் அணிவதெல்லாம் பட்டாடைகள் என்பதை நீங்கள் அறிவீர்கள்.

وَجَزٰٮهُمْ بِمَا صَبَرُوْا جَنَّةً وَّحَرِيْرًا ۙ

மேலும், அவர்கள் பொறுமையுடன் இருந்ததற்காக அவர்களுக்கு சுவர்க்கச் சோலைகளையும், பட்டாடைகளையும் அவன் நற்கூலியாகக் கொடுத்தான். (அல்குர்ஆன் : 76:12)

ஸுன்துஸ், இஸ்தப்ரக் போன்ற பச்சை நிற பூம்பட்டாடைகளை சுவனவாசிகள் அணிந்திருப்பார்கள் (அல்குர்ஆன் : 18:31)

அடுத்து வந்த சீனாவினுடைய ராணி, தனக்குப் பட்டுப்பூச்சியால் நெய்யப்பட்ட பட்டுப்புடவைபோல, சிலந்தி வலையால் பின்னப்பட்ட ஆடை வேண்டும் என்று அடம் பிடித்தார். அரசின்னா இப்படியெல்லாம் கேட்கணும்னு தோணும் போல.

எல்லோரை விடவும் தான் அதிகமான சிறப்பு வாய்ந்த பெண்மணியாக திகழ வேண்டும் என்பதற்காகவே அந்த ஏற்பாடு. அதைச் செயல்படுத்த சுமார் 8,000 சிலந்திப் பூச்சிகள் வலையிலிருந்து செய்யப்பட்டு உடை தயார் செய்யப்பட்டது. அப்போது ராணி அணிந்த ஆடை அவ்வளவு வரவேற்பு பெற்றது.

சிலந்தி வலை என்பது கூடு மட்டும்தானா என்றால் இல்லை அது பட்டுத் துணியாக மாற்றப்படுகிறது .

சிலந்திகள் குறைந்தபட்சம் முப்பது கோடி ஆண்டுகளாகக் கூடு கட்டிக் கொண்டிருக்கின்றன. மனித இனம் பத்தாயிரம் ஆண்டுகளாகத்தான் வீடு கட்டுகிறது.' பல ஆண்டுகளாகப் பயன்பாட்டில் இல்லாத உங்கள் வீட்டின் இடம் இது' என்பதை உங்களுக்கு உணர்த்த, சிலந்தி வலையை உங்கள் வீட்டின் ஒதுக்குப் புறத்தில் வலை பின்னுகிறது

இத்தனை கோடி ஆண்டுகள் பரிணாம வளர்ச்சியின் விளைவால் சிலந்தி வலைகள் பல சுவாரசியப் பண்புகளை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன. புரதத்தில் இருந்து பட்டுக்களை உருவாக்கும் பட்டுப்பூழுக்களைப் போலவே, சிலந்திகளும் புரதங்களில் இருந்தே வலைகளை உருவாக்குகின்றன. அறிவியல் புலத்தில் சிலந்தி வலை, 'சிலந்திப்பட்டு' என்று அழைக்கப்படுகிறது.

பட்டுப்புழு உருவாக்கும் பட்டு, கூடு கட்டி பூச்சியாக மாறும் காலம்வரைக்குமான பாதுகாப்புக்கு மட்டுமே. ஆகவே, அவற்றில் ஒரே வடிவ அமைப்புகளைக் கொண்ட புரதங்கள் மட்டுமே இருக்கும்.

ஆனால், சிலந்திப்பட்டுக்கோ இரைதேட, ஆபத்தில் இருந்து பாதுகாத்துக்கொள்ள, வசிப்பிடம் அமைக்க, வழி மறக்காமல் இருக்க என்று பல தேவைகள் இருப்பதால், ஒவ்வொரு வகை சிலந்திப்பட்டும் ஒவ்வொரு மாதிரியான வடிவ, வெவ்வேறு மூலக்கூறு அமைப்புகளைக் கொண்டிருக்கும். சிலந்திகளின் அடிவயிற்றில் இருக்கும் பிரத்யேக சுரப்பிகள், தனிப்பட்ட பண்பு கொண்ட சிலந்திப்பட்டை உற்பத்தி செய்கின்றன.

சிலந்தி ஒன்றின் வலைக் கட்டுமானம், குறைந்தது மூன்று அல்லது நான்கு வகை இழைகளைக் கொண்டு உருவாக்கப்படுகிறது. எல்லா சிலந்திப்பட்டும் ஒட்டும் தன்மையுடன் இருக்காது. அப்படி இருந்தால் சிலந்தியாலேயே வலையில் நடமாட முடியாது. எனவே, மிகவும் திட்டமிட்டு பலவகை தன்மைகளைக் கொண்ட இழைகளால் அவை வலை பின்னுகின்றன.

சிலந்திப்பட்டின் சில வகைகள் அதிர்வுகளைத் தாங்கக்கூடியதாகவும் அதிக மீள்விசைத்தன்மை (Elasticity) உடையதாகவும் இருக்கின்றன. இத்தனை பண்புகள் கொண்ட சிலந்திப்பட்டைப் பரவலாக்க முடியாததற்குக் காரணம், பட்டுப்புழுபோல் கொத்துக் கொத்தாகச் சிலந்திகளை வளர்த்து சிலந்திப்பட்டு தயாரிக்க முடியாது. அருகருகே இருக்கும் இரு சிலந்திகள், இரண்டில் ஒன்று இறக்கும் வரைச் சண்டையிடும். மொத்தமாக வளர்த்தால் மிகப் பெரிய போர்க்களம்தான்.

நேரடியாகச் சிலந்திகளை வளர்த்து அவற்றில் இருந்து சிலந்திப்பட்டு பெறுவது கடினம் என்பதால், ஆய்வாளர்கள் வேறு முறைகளைச் சோதித்த வண்ணம் இருக்கிறார்கள்.

சிலந்திப்பட்டு சுரக்கும் மரபணுவைப் பிரித்தெடுத்து, அதைப் பட்டுப்புழுக்களுக்குள் செலுத்தி, அவற்றில் சிலந்திப்பட்டின் பண்புகளைக் கொண்டுவர முயற்சிக்கிறார்கள்.

அடுத்து பாக்டீரியாக்களுக்கு இந்த மரபணுவைச் செலுத்தி அவற்றைச் சுரக்க வைக்க முடியுமா என்று சோதித்திக்கிறார்கள்.

செம்மறி ஆடுகளின் பால் சுரக்கும் செல்களில் சிலந்தி மரபணுக்களைச் செலுத்தி, செம்மறி ஆட்டுப் பாலில் இருந்து பிரித்தெடுக்கும் வழிமுறைகள் எனப் பல்வேறு ஆய்வுகள் இதுசார்ந்து நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன.

பாக்டீரியாக்களைச் சிலந்திப்பட்டு சுரக்கச்செய்யும் ஆய்வு நம்பிக்கையூட்டுவதாக இருக்கிறது. மொத்தமாக உற்பத்தி செய்யும் நிலை வந்துவிட்டால் ஆடை வடிவமைப்பு முதல் ராணுவப் பயன்பாடுவரை சிலந்திப்பட்டின் ஆதிக்கம் மேலோங்கும்!

வல்ல ரஹ்மான் நம் அனைவருக்கும் பட்டாடைகள் வழங்கட்டுமாக !

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 4**

பெண் சிலந்தியின் கொடூரம் .

சிலந்தியைப் பற்றி நண்பர்கள் நிறைய கேட்கிறார்கள். ஒவ்வொரு பூச்சியைப் பற்றியும் நிறைய தகவல்கள் எடுக்கிறேன். ஆனால் அதில் குர்ஆன், ஹதீஸ் சம்பந்தப்பட்ட தகவலைத்தான் பதிக்கிறேன். இருந்தாலும் நண்பர் ஒருவர் ,

" ஆண் சிலந்தியுடன் உடலுறவு கொண்டபின் பெண் சிலந்தி அதைக் கொன்று விடுவதற்கு என்ன காரணம்? ஆண் பாவம் இல்லையா ? கேட்கிறார் .

" பைசௌரி டே " என்ற ஆண் இன சிலந்தி தன்னுடைய வலையில் சிக்கிய பூச்சிகளைப் பிடித்து, மூட்டையாக கட்டி தன்னுடைய காதலிக்கு அன்பு பரிசாக கொடுப்பது உண்டு

போகம் முடிந்ததும் ஆணைக் கொல்கிற பழக்கம் பல பூச்சி இனங்களில் உண்டு. குறிப்பாக தேனீ . இந்த வகை பூச்சினங்களில் பெண்ணுக்கு உடல் ரீதியாக பலம் ஜாஸ்தி . உடல் பருமன் வேறு .

சிலந்திகளைப் பொறுத்தவரை அவை உறவு கொள்கிற வழிமுறையும் பொசிஷனும் வகைக்கு வகை மாறுபடுவதாக சொல்கிறார்கள். ( நீங்கள் வெட்கப்படாத அளவுக்கு படங்களை தந்திருக்கிறேன் ) சரி, உறவு முடிந்ததும் படுகொலை நடக்க என்ன காரணம் ? அன்பு பரிசு எல்லாம் கொடுத்துச்சே ...

ஆண் இனத்தின் ஒரே ஒரு தேவை பெண்ணை கர்ப்பமாக்குதே அது மங்களகரமாக முடிந்ததும் , ஆண் தொடர்ந்து உயிர்வாழ, நியாயம் போய்விடுகிறது. மேலும் ஆண் சிலந்தி பெண் சிலந்தி இடும் முட்டைகளை தின்றுவிடும். அதனால் " வேலை ஆயிடுச்சில்ல ? நல்லா இருந்திச்சில்ல ? போ சாவு ! " என்று போட்டுத் தள்ளிவிடும் பெண் சிலந்தி .

நல்ல வேளை ......

**பூச்சிகளின் உலகம் 5**

சிலந்தியின் விநோதங்கள்

அமெரிக்காவிலுள்ள கலிஃபோர்னியாவில் வசிக்கும் பியாடர் பல்வேறு காடுகளில் உள்ள விலங்குகளைப் பற்றி ஆய்வுகள் மேற்கொண்டுள்ளார். கடந்த சில ஆண்டுகளுக்கு முன்னர் தென் அமெரிக்காவில் உள்ள சதுப்பு நிலக் காடுகளில் பயணங்கள் மேற்கொண்டார்.

அப்போது ஒரு மரத்தின் அருகே நிலம் அதிர்வதையும் உணர்ந்துள்ளார். அதை உற்றுநோக்கியபோது நாய்க்குட்டி அளவில் சிலந்தி ஒன்று ஊர்வதைக் கண்டார். அந்தச் சிலந்தி மரத்தின் மீது இருந்த பறவையை தனது காலால் பிடித்து உணவாக எடுத்துக் கொண்டது. அந்தச் சிலந்தியின் நகங்கள் அனைத்தும் சிறு குழந்தையின் முழங்கை அளவு நீளம் இருந்தது. அதனைக் கண்டவருக்கு அதிர்ச்சியாக இருந்தது.

"ராட்சத சிலந்தி நடக்கும்போது அதன் காலடிச்சத்தம் குதிரையின் குளம்படிச் சத்தம் போல இருந்தது. இதுபோல சிலந்திகள் அந்தக் காடு முழுவதும் அதிகமாக இருந்தன. இதுகுறித்து எனது குழுவினர் ஆராய்ச்சி செய்து வருகின்றனர்.

இந்தச் சிலந்தி வகைகள் தெரபோ எனும் அறிவியல் பெயர்கள் கொண்டு அழைக்கப்படுகிறது. இதுபோல பல சிலந்திகள் இவ்வுலகில் உள்ளன. பறவை, பல்லி, பாம்பு உள்ளிட்டவற்றைச் உண்ணும் தன்மை கொண்டவை சிலந்திகள்.

2007-ம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்ட ஊனுன்னா எனும் சிலந்தியைத் தவிர, சில சிலந்திகள் சிறு சிறு பூச்சிகளை மட்டுமே எடுத்துக் கொள்ளும்" என்கிறார்.

அளவைப் பொறுத்தவரையில் வேறு வேறு தன்மை கொண்ட சிலந்திகள் காணப்படுகின்றன. கொலம்பியா நாட்டில் காணப்படும் மிகச்சிறிய பட்டு டிகுவா என்ற சிலந்தியின் உடல் நீளம் 03.37 மி.மீ ஆகும்.

மிகப்பெரிய டரன்டுலாஸ் என்ற சிலந்தியின் உடலமைப்பானது 90 மி.மீ அளவும், கால் அளவானது 250 மி.மீ நீளமும் காணப்படுகின்றன.

'மிக்காரியா சொசியாபிலிஸ் இனத்தைச் சேர்ந்த ஆண் சிலந்திகள் பெரிய பெண் சிலந்திகளை மட்டும் உணவாக எடுத்துக்கொள்ளும்' என செக் குடியரசின் மசாரைக் பல்கலைக்கழகத்தின் லென்கா செண்டன்ஸ்காவின் ஆய்வும் சொல்கிறது. மற்ற பூச்சிகளைப்போல இதற்கு உணர்வு இழைகள் கிடையாது. அளவில் சிறியதாக இருந்தாலும், காடுகளில் பல மீட்டர் நீளம் கொண்ட வலையைப் பின்னும் தன்மை சிலந்திக்கு உண்டு.

ஓர் இடத்தில் சிலந்தி வலை பின்ன ஆரம்பித்துவிட்டால் அதற்கு எத்தனை தடையூறுகள் வந்தாலும், மீண்டும் மீண்டும் வலையை அந்த இடத்தில் பின்னிக் கொண்டே இருக்கும். சிலந்தியைத்தான் கம்போடியா மக்கள் உணவாக உட்கொள்கிறார்கள் என்பது கூடுதல் தகவல்.

Deinopis என்ற சிலந்தியின் வேட்டை பாணியே தனி! கட்டிய வலைக்குள் வந்து விழுவதற்கு காத்திராமல், ஒரு வலையை பிண்ணி அகலமாக பிடித்துக்கொண்டு தயாராக இருக்கும். தக்க இரை தென்பட்டதும், அது பறந்தோ நெளிந்தோ எட்டும் தூரத்தில் வரும் வரை காத்திருந்து சட்டென வலையை அதன் மேல் வீசி கபளீகரம் செய்துவிடும் படத்தில் பார்க்கவும்.

ர.ரா

**பூச்சிகளின் உலகம் 6**

சிலந்தியின் விஷங்கள்




சிலந்திகளுக்கு அதிக அளவு விஷம் இருக்கிறது.பாம்பை விட அதிகமான அளவு விஷம் இருக்கிறது

உலகத்தில் 40 ஆயிரம் வகையான சிலந்திகள் உள்ளது அதில் சில சிலந்திகளுக்கு பாம்பை விட அதிகமான அளவு விஷம் இருக்கிறது. அதிலும் பெரிய சிலந்திகளை விட சின்ன சிலந்திகள் தான் மிகவும் ஆபத்தாக உள்ளது. இந்த சிறிய சிலந்திகள் கடித்தால் வெறும் 15 நிமிடத்திலேயே மனிதர்கள் இறந்து போய் விடுவார்கள் அந்த அளவுக்கு ஆபத்தான சிலந்திகளை நாம் இங்கு பார்ப்போம்.

Banana Spider:

இந்த சிலந்திகளை Banana Spider என்று சொல்லுவார்கள் காரணம் என்ன வென்றால் இந்த சிலந்தி அதிகமாக வாழை மரத்திலும் வாழைப்பழங்களிலும் ஒளிந்து இருக்கும். இதனால் வாழைப்பழம் சாப்பிடும் போது எப்பவுமே பார்த்து சாப்பிட வேண்டும். இதன் முன் கால்களை மட்டும் தூக்கிக் கொண்டு நிற்கும் எல்லாம் பூச்சிகளையும் வேட்டையாடிச் சாப்பிடும். இது கடித்த உடனே மனிதர்களின் நரம்பு மண்டலம் பாதிக்கப்பட்டு உடம்பெல்லாம் அதிக வலி எடுக்கும் வாந்தியும் மயக்கமும் ஏற்படும்.

**Black Widow Spider:**

இந்த சிலந்திகள் வெயில் பிரதேசங்கள் குளிர் பிரதேசங்களில் மற்றும் பாலைவன பிரதேசங்களில் வாழும். இதில் ஆண் சிலந்திகளை விட பெண் சிலந்திகள் பெரிதாக வளர்கிறது. அதிகபட்சமாக 1 1/2 அடி வரை வளர்கிறது. பாம்புகளுக்கு இருக்கிற விஷத்தை விட இரண்டு மடங்கு அதிகமா விஷம் இருக்கும். இது மிக சின்னதாக தான் கடிக்குமாம். இது கடித்த உடனே பயங்கரமான வலி ஏற்பட்டு பெரிய வீக்கமும் வாந்தி மூச்சுத்திணறல் ஏற்படும். இது சின்னதாக இருந்தாலும் குழந்தைகளும் வயதானவர்களும் இறந்து போய் விடுவார்கள். அந்த அளவுக்கு ஆபத்தான சிலந்தி இது. தேள் உடன் சண்டை போட்டு தேளை கொன்று விடுமாம். அதனால் இந்த சிலந்தியை பார்த்தால் அருகே மட்டும் போக வேண்டாம்.

**Yellow Sac Spider:**

இந்த சிலந்தி அமெரிக்கா, ஆஸ்திரேலியா, ஜப்பான் ஆகிய நாடுகளில் வளர்கிறது. இது அரை அடிதான் வளரும். இதில் Cytotoxin என்ற விஷம் உள்ளது இந்த சிலந்தி கடித்தால் பயங்கரமான தசைவலி மற்றும் வாந்தி ஏற்படும்.

**Whistling Tarantula Spider**

இந்த சிலந்திகள் ஆஸ்திரேலியாவில் மட்டும்தான் வாழ்கிறது. இது கடித்தால் 30 நிமிடத்தில் ஒரு பெரிய நாய் கூட இறந்து போய் விடுமாம். அந்த அளவுக்கு இதில் அதிகமான விஷம் உள்ளது. இது மனிதர்களை கடித்தால் பயங்கரமான வலி ஏற்பட்டு ஆறு மணி நேரத்திலிருந்து எட்டு மணி நேரம் வரைக்கும் வாந்தி வந்து கொண்டே இருக்கும்.

**Six Eyed Sand Spider**

இந்த சிலந்திகள் பாலைவன பகுதிகளில் மட்டும் தான் வாழும். இது கடித்து ஒரு ஐந்து மணி நேரத்தில் ஒரு பெரிய முயலே இறந்து விடுமாம். இது கடித்து சில மனிதர்களுக்கு கையை வெட்டி எடுத்து உள்ளார்கள். கடித்த உடன் தாங்க முடியாத வலி ஏற்படும். மருத்துவமனைக்கு உடனடியாக சென்று இதற்கு மருந்து எடுத்து கொள்ள இல்லை என்றால் உடம்பு முழுவதும் விஷம் ஏறி அவர் இறந்து போக வாய்ப்பு உள்ளது.

**The Chilean Recluse Spider**

இந்த சிலந்தி மிகவும் ஆபத்தானது. இது பன்னிரெண்டு அடி வரை வளர கூடியது. இது கடிக்கும் இடத்தில் நாளுக்கு நாள் புண் பெரிதாக வந்து கொண்டு இருக்கும். இந்த சிலந்தி கடித்த உடன் மருந்து எடுத்தாலும் புண் ஆற ஒரு மாதம் ஆகும். இது கடித்து விஷம் நன்றாக ஏறினால் கை கால்களை எடுக்க நேரிடும்.

**Northern Funnel Web Spider**

இந்த சிலந்திகள் அதிகமாக மரத்தில் தான் வாழ்கின்றன. இது மூன்று அடிதான் வளரும். ஆனால் இது கடித்தால் மனிதர்கள் இறந்து விடுவார்கள். அந்த அளவுக்கு இதில் விஷம் அதிகம் உள்ளது. இது மிகவும் வேகமாக வேட்டையாடும் இதுக்கு தேளுக்கு உள்ளது போல் விஷம் உள்ள இரண்டு கொடுக்குகள் இருக்கிறது. இது அதிகம் தண்ணீர் உள்ள ஓரங்களில் தான் இருக்கும். நீச்சல் குளங்களில் குளிப்பவர்கள் கவனம்.

**Sydney Funnel-Web Spider**

சிலந்திகளில் அதிகமாக விஷம் உள்ள சிலந்தி என்று இதற்கு கின்னஸ் சாதனையும் உள்ளது. இது கடித்தால் மனிதர்கள் வெறும் பதினைந்து நிமிடங்களில் இறந்து விடுவார்கள். அந்த அளவிற்கு இதில் ஆபத்தான Atracotoxin என்ற விஷம் உள்ளது இந்த விஷம் நம் உடம்பில் சென்ற உடன் நமது நரம்புகளை தாக்கி இரத்தத்தை உறைய வைத்து கொன்று விடும். பாம்புகள் கடித்தால் அதன் மொத்த விஷத்தையும் ஒரே கடியில் விஷத்தை செலுத்தாது. ஐந்துமுறை கடிக்கும் அளவுக்கு கொஞ்சம் கொஞ்சம் விஷத்தை செலுத்தும். சிலந்திகள் அப்படி அல்ல அதன் மொத்த விஷத்தையும் ஒரேடியாக செலுத்தி விடும். இந்த சிலந்திகள் பாம்புகளை விட பல மடங்கு ஆபத்தானது.

**Hairy Mystery Spider**

இந்த சிலந்திகள் மலை காடுகளில் தான் வாழ்கின்றன. இதிலும் மனிதனை கொல்லும் விஷம் இருக்கிறது. இது கூட்டம் கூட்டமாக வந்து தாக்கும். இந்த சிலந்தி கடித்து ஒரே நாளில் ஏழு பேர் இறந்து உள்ளார்கள். இது அதிகமாக இரவில் தான் வரும்.

**Mouse Spider**

இந்த சிலந்திகள் அதிகமாக ஆஸ்திரேலியாவில் தான் வாழ்கின்றன. இந்த சிலந்திகள் அதிகமாக எலிகளைத்தான் வேட்டையாடும். அதனால்தான் இதுக்கு Mouse Spider என்று சொல்கின்றனர். 20 சென்டிமீட்டர் முதல் 50 சென்டிமீட்டர் வரை வளரும். இந்த சிலந்தி கடித்தால் பயங்கரமான வலியும் ஐந்து மணித்தியாலம் தொடர்ந்து வாந்தி வரும்.

**Tarantula:**

ஓநாய் சிலந்திகள் குடும்பத்தைச் சேர்ந்த அரானோமாபிக் சிலந்திகள்.பாலைவனங்கள் போன்ற வறண்ட பகுதிகளில் முக்கியமாக வாழ்கின்றன. பிற்பகல், துளைகளில் மறைத்து, இரவில் வேட்டையாடும் . இத்தாலியில் தாரந்துலா என்ற இந்த வகை சிலந்திகடி நோய்க்கு அதிக நேரம் நடனமாடுவது ஒன்றே மருந்து. அவ்வாறு நடனமாடும் போதுவரும் வியர்வையில் சிலந்தியின் விஷம் வெளிவருகிறது.

சிலந்தி என்று சாதரணமாக நினைக்க வேண்டாம் நண்பர்களே முடிந்த அளவுக்கு வீட்டை சுத்தமாக வைத்து கொள்ளுங்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 7**

(மரண நிலையில் வெட்டுக்கிளிகள்)




பட்டாம்பூச்சிக்கும் வெட்டுக்கிளிக்குமான வேறுபாட்டை இறுதிவேதம் அல்குர்ஆன் அழகாக விளக்குகிறது.

பட்டாம்பூச்சி அங்குமிங்குமாக அலைபாயும் நேரத்தில், வெட்டுக்கிளி இலக்கை நோக்கி வரையறுக்கப்பட்ட ஒழுங்குடன் பயணிக்கிறது.

உலக முடிவுநாள் வரும்போது, மனிதர்களின் நிலை பட்டாம்பூச்சி போன்றாகி விடும்.

يَوْمَ يَكُوْنُ النَّاسُ كَالْفَرَاشِ الْمَبْثُوْثِۙ

"அந்நாளில் மனிதர்கள் சிதறடிக்கப்பட்ட ஈசல்கள் (பட்டாம்பூச்சிகள்) போல் ஆகிவிடுவார்கள்." (குர்ஆன் : 101:4)

மறுமையில் எழுப்பப்படும் போத, ஒன்றுகூடும் மைதானத்தை நோக்கி வெட்டுக்கிளி போல ஒழுங்குடன் செல்வார்கள்.

خُشَّعًا اَبْصَارُهُمْ يَخْرُجُوْنَ مِنَ الْاَجْدَاثِ كَاَنَّهُمْ جَرَادٌ مُّنْتَشِرٌۙ

"அவர்களின் பார்வைகள் கீழ் நோக்கிய நிலையில் பரவிக்கிடக்கும் வெட்டுக் கிளிகளைப் போல் அவர்கள் புதைகுழிகளிலிருந்து வெளியேறுவர்." (குர்ஆன் : 54:7) ( mustaba Qashime பதிவிலிருந்து )

மனிதர்களின் வாழ்வில் இம்மை மறுமை என்ற இரு நிலைகள் உள்ளதைப்போல்... வெட்டுக்கிளிகளின் வாழ்வில் இரு நிலைகள் உள்ளன.

சாதாரணமான வெட்டுக்கிளி வாழ்க்கை... ( Solitary Phase Locust), இதற்கு அடுத்த நிலை உடலின் நிறம்,உருவம் மாற்றமடைந்து கூட்டாக ஒன்று சேர்ந்து வெளியேறும் (Gregarious Phase Locust) நிலை.

பொதுவாக மத்திய கிழக்கு நாடுகளின் பாலைவனப் பகுதிகளில் வாழும் வெட்டுக்கிளிகள், நிலத்தை துளைத்து நூற்றுக்கணக்கான முட்டைகளை அக்குழிகளில் இடும்.

இந்த முட்டைகள் குஞ்சுகளாக வளரும் பருவத்தில்..

அப்பகுதியில் மழை பொழிந்து தாவரங்கள் பசுமையாக இருக்கும், அவைகளை உண்டு வளர்ந்த பின்பு அவைகளின் உடலில் ஏற்படும் சில இரசாயன மாற்றத்தால் (The Gregarisation pheromone of Locusts) என்ற நிலைக்கு மாறும்.

இப்படி நிறம் மற்றும் உருவம் மாறிய வெட்டுக்கிளிகள், கோடிக்கணக்கில் தம் புதை குழியிலிருந்து கூட்டாக வெளியேறும். ஐக்கிய நாடுகளின் உணவு மற்றும் வேளாண்மை அமைப்பு அளித்துள்ள தகவல்படி, ஒரு வெட்டுக்கிளிகளின் கூட்டம் சுமார் 60 கிலோமீட்டர் நீளமும் சுமார் 40 கிலோமீட்டர் அகலமும் இருந்ததாகக் கூறப்படுகிறது.

இது போன்றே இம்மை உலகில் இதுவரை வாழ்ந்து மடிந்த மனிதர்கள் அனைவரும் மறுமை வாழ்வுக்காக, புது உடல் எடுத்து புதைகுழியிலிருந்து கூட்டாக கோடிக்கணக்கில் வெட்டுக்கிளிகளைப் போல் வெளியேறுவார்கள்.

புதைகுழியிலிருந்து வெளியேறும் வெட்டுக்கிளிகளின் கண்கள் சிறுத்திருப்பதைப் போன்றே... கபர்ஸ்தானிலிருந்து வெளியேறும் மனிதர்களின் கண்களும் கீழ் நோக்கிய பார்வையுடனே இருக்கும் என்று குர்ஆன் ( 54:7 ) கூறுகிறது.

குறிப்பாக அமெரிக்கா நாடுகளில் காணப்படும் சில வகை வெட்டுக்கிளி இனங்கள், தொடர்ந்து 13 வருடங்கள் மண்ணில் புதையுண்டு மரண நிலையில் வாழ்ந்து வரும்.

இதில் வேறு ஒரு இன வெட்டுக்கிளிகள். 17 வருடங்கள் மண்ணுக்குள்ளேயே முட்டையுடன் அடங்கிக் கிடக்கும். சரியாக 13 வருடங்கள் முடிந்து பதினாங்காம் வருடத்திலல் அல்லது 17 வருடம் முடிந்து பதினெட்டாம் வருடத்தில்தான் மண்ணுக்கு மேல் வெளி வந்து பறந்து திரியும். இந்த வெட்டுக்கிளி இனத்திற்குப் பெயர். ( Periodical cicadas.Magiccicada is the genus of the 13 years and 17 year )

பதினேழு வருடங்கள் மண்ணுக்குள் மரண நிலையில் இருந்த இந்தவெட்டுக்கிளிகள் கடைசியாக 2007 ஆம் ஆண்டு அமெரிக்காவில் தென்பட்டது. இனி அதன் மரண மயக்கம் தெளிந்து விழித்து எழுவது 2024 ஆம் வருடமே!

அல்லாஹ்வின் படைப்பில் பல ஆச்சரியங்கள் உண்டு.இறந்த மனிதன் இறுதி நாளில் மீண்டும் உயிர் பெற்றெழுவது இறை மறுப்பாளர்களுக்கு நம்ப முடியாத செய்தியாக உள்ளது. ஆனால் ஒரு சிறிய வெட்டுக்கிளி முட்டையானது பதினேழு வருடம் பூமியில் புதையுண்டு மரண நிலையில் இருந்து பதினெட்டாம் வருடம் சிறகுகள் முளைத்து மண்ணுக்கு மேல் உயிருடன் பறந்து வருவது இன்றும் நம் கண்முன்னே நடக்கும் காட்சியாக உள்ளது.

பனிரென்று ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் குறிஞ்சி மலர் போல் 17 வருடங்களுக்கு ஒரு முறை மட்டுமே மண்ணறையிலிருந்து மேல் வரும் வெட்டுக்கிளிகள் உள்ளன. இவைகளின் உலக வாழ்வு ஐந்து வாரங்கள் மட்டுமே! அதற்குள் இனப்பெருக்கம் செய்து முட்டையிட்டு அதை மண்ணறையில் வைத்து தன் வாழ்வை முடித்து விடும்.

இந்த முட்டைகள் மீண்டும் வெட்டுக்கிளிகளாக வெளியுலகம் வருவதற்கு அடுத்த 13 அல்லது 17 வருடங்கள் மண்ணறை கப்ர்ஸ்தானிலேயே உறங்க வேண்டும். மரித்த மனிதர்கள் புதை குழியிலிருந்து வருவதற்கு உதாரணமாக அல்லாஹ் வெட்டுக்கிளியை உதாரணம் காட்டியதன் காரணம் இதுவாகவும் இருக்கலாம்.அல்லாஹ்வே அறிந்தவன்.!

(Read islam பதிவிலிருந்து)

ரஹ்மத் ராஜகுமாரன்

**Rahmath Rajakumaran**

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

(இறைத் தூதர்) அய்யூப்(அலை) அவர்கள் திறந்த மேனியுடன் குளித்துக் கொண்டிருந்தபோது தங்கத்தாலான வெட்டுக்கிளியின் கால் அவர்களின் மீது வந்து விழுந்தது.

உடனே அவர்கள் தங்களின் ஆடையில் அள்ளத் தொடங்கினார்கள்.

அப்போது அவர்களின் இறைவன் அவர்களை அழைத்து,

'அய்யூப்! நீங்கள் பார்க்கிற இந்தத் தங்கக் கால் உங்களுக்குத் தேவைப்படாத அளவிற்கு உங்களை நான் செல்வராக ஆக்கியிருக்கவில்லையா?' என்று கேட்க,

அவர்கள் 'ஆம். என் இறைவா! ஆயினும், உன் அருள்வளம் (பரக்கத்) எனக்குத் தேவைப்படுகிறதே!' என்று பதிலளித்தார்கள். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 7493.

**பூச்சிகளின் உலகம் 8**

வெட்டுக்கிளி வறுவல்

"மீன் வெட்டுக்கிளி இவை இறந்தாலும் தூய்மையானவை "

- இப்னு உமர் ரலி அறிவிக்கிறார்கள்

"இறந்தவற்றில் இரண்டு வகையும் அதாவது மீனும், வெட்டுக்கிளியும், இரத்தத்தில் இரண்டு வகை அதாவது ஈரலும், மண்ணீரலும் நமக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. (அஹ்மத், இப்னுமாஜா, பைஹகி)

இப்னு அபீ அவ்ஃபா(ரலி) கூறினார்கள்

"நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் 'ஏழு' அல்லது 'ஆறு' புனிதப் போர்களில் கலந்து கொண்டோம். நபி(ஸல்) அவர்களுடன் நாங்களும் வெட்டுக்கிளிகளைச் சாப்பிட்டு வந்தோம் ".

சுஃப்யான் அஸ்ஸவ்ரீ(ரஹ்) முதலானோர் கூறுகிறார்கள்:

மற்றோர் அறிவிப்பில், 'நபி(ஸல்) அவர்களுடன் ஏழு புனிதப் போர்களில் கலந்துகொண்டோம்' என (ஆறா, ஏழா என்ற சந்தேகமின்றி) இப்னு அபீ அவ்ஃபா(ரலி) கூறினார்.

ஸஹீஹ் புகாரி : 5495.

யுகாண்டா நாட்டின் தலைநகர் 'கம்ப்பாலா' .இங்கு டிசம்பர் மாதம் வந்தாலே பிள்ளைகளுக்கும் ஒரே கொண்டாட்டம்தான். மழை விட்ட பிறகு, ஆயிரக்கணக்கான வெட்டுக்கிளிகள் தெரு விளக்கை சுற்றி பறந்து கொண்டிருக்கும். உடனே சிறுவர்களும் பெரியவர்களும் ஆளாளுக்கு ஒரு வலைக் கூடையைக் விளக்கடியில் வீசி வெட்டுக்கிளியை பிடித்துவிடுவார்.

' அப்புறம் என்ன ...? இறக்கைகளையும், கால்களையும் பிய்த்து விட்டு, கடாயில் போட்டு அனலில் வறுத்து விடுவர் . மாலை நேரத்தில் தின்பண்டம் இந்த வெட்டிக் கிளிகள்தான் இது மொறுமொறுவென்று தின்னத் தின்ன தெவிட்டாத சுவை. புரதச்சத்து நிறைந்தது ; கருநீர்ச்சத்து (கார்போ ஹைட்ரேட் ) நிறைந்தது என்று நொறுக்குத் தீனிக்கு சான்றிதழ் வேறு வழங்குகின்றனர்.

வலைக் கூடை, கடாய் ரெடியா.. ?

வெட்டுக்கிளி இனங்கள் பற்றிய ஆய்வு "அக்ரிடாலஜி " என்று அழைக்கப்படுகிறது. ரொம்பவும் சுவராசியமான ஆய்வுத் துறை .ஒவ்வொரு வெட்டுக்கிளி இனத்தைப் பற்றி விண்ணை முட்டும் தகவல்களால் நிரம்பி வழிகிறது.

**பூச்சிகளின் உலகம் 9**

(ரெட் லிஸ்ட்டில் வெட்டுக்கிளி)




காட்டுச் செடிகளும் அரிய விலங்குகளும் நமக்கும் குழந்தைகளுக்கும் குதூகலத்தை தருபவை என்பதற்காக மட்டுமே அவற்றைக் காப்பாற்ற வேண்டும் என்று விஞ்ஞானிகள் சொல்லவில்லை . வாழ்க்கையின் சிக்கலான விதிகள் எல்லா உயிரினங்களையும் ஏதோ ஒரு மாய வலைப்பின்னல் மூலம் பிணைத்துள்ளது .

இதில் ஏதோ ஒரு உயிரினம் மறைந்து போனால் கூட அந்த வலைப்பின்னல் ஓரிடத்தில் அறுந்து போகிறது என்று அர்த்தம் இப்படி அறுவதால் மற்ற எல்லோருக்குமே... ஏன் மனிதர்களுக்கு கூட பிரச்சினைதான் !

அமெரிக்க மற்றும் ஐரோப்பிய வெள்ளையர்களுக்குத் தவளை கால்கள் சாப்பிட விருப்பம் அதிகம் .ஆனால் அங்கு தவளைகள் அதிகமில்லை ஏழை நாடான இந்தியாவில் தவளைகள் அதிகம் .ஆனால் யாரும் உண்பதில்லை. எனவே அந்நிய செலவாணி கிடைக்கும் என்பதற்காக 1983ஆம் ஆண்டு முதலில் டன் கணக்கில் தவளை கால்களை ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தது இந்தியா . அதற்காக காடு கழனிகளில் இருந்த தவளைகள் சகட்டுமேனிக்கு வேட்டையாடப்பட்டன.

தவளைகளுக்கு உணவு பூச்சிகளும் வண்டுகளும்தான் ! தின்று தீர்க்க தவளைகள் இல்லாததால் அவை ஏராளமாக பெருகின அவை பயிர்கள் மீது தடையில்லாமல் தாக்குதல் நடத்த விளைச்சல் வீழ்ச்சி அடைந்து விவசாயத்தை பாதித்தது. பின் விவசாயத்தை பாதுகாக்க 1987 ஆம் வருஷம் ஏப்ரல் முதல் தவளை கால்கள் ஏற்றுமதியை அரசு தடை செய்ய வேண்டியதாயிற்று.

உலக உயிரினப் பராமரிப்பு ஒன்றியம் ஒவ்வொரு ஆண்டும் அழியும் அபாயத்திலிருக்கும் உயிரினங்களின் பட்டியலை வெளியிடும் .(Redlist of Threatened speies ) எனப்படும் சிவப்பு பட்டியல் .இதில் ஒவ்வொரு ஆண்டும் இடம் பெறும் உயிர்களின் எண்ணிக்கைக் கூடிக் கொண்டே போகிறது !

ஒவ்வொரு ஜீவராசிகளின் அழிவும் பிரபஞ்சத்தில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்துகிறது .

கியாமத் நாளின் அதாவது உலகம் இறுதி நாளின் அடையாளமாக ஒவ்வொரு ஜீவராசிகளும் அழிக்கப்படும் இதில் முதன் முதலில் அழிக்கப்படும் ஜீவராசி 'வெட்டுக்கிளி ' என்பதாக நபி (ஸல்) கூறினார்கள் .

ஒரு சமயம் தாங்கள் வாழும் பகுதியில் வெட்டுக்கிளியைப் பார்க்கவில்லை என்ற போது அதனை நபி (ஸல்) அவர்கள் தேடச் சொன்னார்கள் . மதீனாவில் எங்கோ ஒரு குக் கிராமத்தில் வெட்டுக்கிளியைக் கண்டதாக நபித்தோழர்கள் தெரிவித்த போதுதான் நபியவர்கள் நிம்மதியடைந்தார்கள்.

உயிரியல் வல்லுநர்கள் தயாரிக்கும் Red list 1400 வருடங்களுக்கு முன்பே நபி (ஸல்) அவர்களுக்கு இறைவன் அறிவித்துக் கொடுத்திருக்கிறான்.

கொஞ்சம் நிதானமாக யோசித்துப் பாருங்கள் வாழ்வியல் சூத்திரம் நமக்கு புரியும். அதாவது எந்த உயிரினமும், மற்றவற்றைச் சாராமல் வாழ முடியாது.

ஒரு காடு ஒரு குளம் அல்லது கடல் என எதை எடுத்துக் கொண்டாலும் எல்லா குழல் மண்டலங்களிலும் உணவுச் சங்கிலி ஒன்று தெரியும் .உணவுக்கான தொடர்பு கிளை விட்டு படரும் போது , அதுவே ஒரு மாய வலை போல் விரியும். இறுக்கமாக பின்னப்பட்ட இந்த வலையில் எங்கோ ஓரிடத்தில் ஒரு முடிச்சி அறுந்து போனால் எப்படி வலையின் அமைப்பு குலைந்து போகிறதோ அப்படித்தான் ஒவ்வொரு உயிரினத்தின் அழிவையும் கருத வேண்டும் .

செடி கொடிகளைத் தின்று மான் வாழும் , அதைப் புலி அடித்துச் சாப்பிடும் ; புலி இறந்ததும் கண்ணுக்குத் தெரியாத நுண்ணுயிர்கள் அதைச் சிதைத்து மண்ணோடு மண்ணாக்கும் அது திரும்பவும் செடிக்கு உரமாகும்.

مَا خَلَقْنٰهُمَاۤ اِلَّا بِالْحَقِّ وَلٰكِنَّ اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ

".... நிச்சயமாக தக்க காரணத்திற்காகவே அன்றி, இவைகளை நாம் படைக்கவில்லை. எனினும், அவர்களில் பெரும்பாலானவர்கள் இதனை அறிந்துகொள்வதில்லை. (அல்குர்ஆன் : 44:39)

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 10**

(மின்மினிப் பூச்சி)



மின்மினிப் பூச்சி அல்லது கண்ணாம் பூச்சி (Firefly) என்பது வண்டு வகையைச் சார்ந்த ஒரு பூச்சியாகும். மின்மினி பூச்சிகளில், உலகம் முழுதும் சுமார் 2000 சிற்றினங்கள் உள்ளன.

தமிழில் "மின்மினிப் பூச்சிகள்' எனப்படுகின்றன. இதை இந்தியில் "ஜுகுனு' என்பர். ஆங்கிலத்தில் "ஃப்யர்ஃப்ளை', "லைட்னிங் பக்', "க்ளோ வேர்ம்' என்ற பெயர்களில் அவை அழைக்கப்படுகின்றன

தென் அமெரிக்க மாயர் நாகரிகத்தின் புராணக் கதைகளில் இப்பூச்சிகள் வானத்து நட்சத்திரங்களுக்கு நிகராகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அவர்கள் இப்பூச்சிகளைத் தேவர்களின் ஒரு பிரதிநிதியாகக் கருதிப் போற்றினர்.

மின்மினியின் உடலில் ஒளி உண்டாவதற்கு ஒருவித ரசாயனச் செயல் காரணமாகிறது. அவற்றின் உடலின் பின்புறம் அடியில் இரண்டு சுரப்பிகள். அவற்றிலிருந்து லூசிஃபெரிஸ், லூசிஃபெரின் என்ற இரு என்சைம்கள் வெளிப்படுகின்றன. அவை ஆக்ஸிஜனுடன் கலக்கும்போது அந்த இடத்தில் ஒளி உண்டாகிறது.

அந்த லூசிஃபெரிஸ் என்சைம் தடயவியல் மற்றும் மருத்துவ சிகிச்சையில் பெரிதும் பயன்படுகிறது.

மின்மினியின் உடலில் உண்டாகும் உயிர் சக்தியின் 90 சதவிகிதம் ஒளியாக மாறிவிடுகிறது என்பது சிறப்பு அம்சம். ஏனெனில் மின்சார பல்புக்குக் கிடைக்கும் மின் சக்தியின் 10 சதவீதம்தான் ஒளியாக மாறுகிறது. மீதி 90 சதவீத சக்தி வெப்பமாகி வீணாகி விடுகிறது என்பதைக் குறிப்பிட்டே ஆக வேண்டும். இயற்கையை என்றும் செயற்கை வெல்ல முடியாது என்பதற்கு இதுவே நல்ல உதாரணம்

இவை இரையைப் பிடித்துத் தின்னும் முறையே அலாதியானது. இரையைக் கண்டுபிடித்தவுடன் அதை முதலில் மயக்கமடையச் செய்துவிடும்.

இதற்கென்றே இதன் முகத்தில் ஒரு பிரத்தியேக அரிவாள் போன்ற கொடுக்கு நீட்டிக்கொண்டு இருக்கும். அதைக் கொண்டு இரையின் உடலினுள் மயக்கமடையச் செய்யும் வேதிப்பொருளை செலுத்திவிடும்.

பிறகு இரைக்குள் செரிமான நொதிகளை செலுத்தும். சில மணி நேரத்தில், இரையின் உடலினுள் உள்ள அவயங்கள் கூழ்மமாக மாறிவிடும். உடனே மின்மினி பூச்சிகளின் புழுக்கள் இரையைச் சுற்றி அமர்ந்து,

நீரைக் குடிப்பது போல உறிஞ்சிவிடும். அப்போது அதன் உடலில், அதாவது அடிவயிற்றின் முடிவில் விளக்கு எரிந்துகொண்டு இருக்கும்.

ஒரு சில பறவைகள்கூட, ஒளிக்காக இந்த புழுக்களைப் பிடித்து வந்து, தங்கள் கூட்டில் வைத்திருக்கும். தூக்காங்குருவி தன் துணைக்கு கூட்டோடு அதனையும் பரிசாக அளிக்கும்

ஆண் பூச்சி 5.8 விநாடிகளுக்கு ஒருமுறை ஒளியால் பெண் பூச்சிகளுக்கு சைகை செய்கிறது. ஆண்பூச்சி சைகைக்கு 2.1 விநாடிகளுக்கு பின் பதில் சைகை செய்கிறது பெண் பூச்சி. இதில் பெண் பூச்சி கொடுக்கும் ஒளி பிலிவு குறைந்து காணப்படுகிறது. இப்பூச்சிகள் பகலில் மட்டுமே இணை சேரும். இப்பூச்சிகளை, தவளைகள் அதிகமாக உணவாக உட்கொள்கின்றன. இப்பூச்சிக்கு பிடித்த உணவு நத்தை ஆகும்.

மேற்கிந்தியத் தீவுகளில் குகுயோ என்ற இனத்து மின்மினிகள் பெரிதாகவும் அதிக ஒளி வீசுவதாகவும் இருக்கும். அங்குள்ள பழங்குடி மக்கள் இருட்டில் நடமாடும்போது தம் கால் விரல்களில் மின்மினிகளை ஒட்டிக்கொள்வர்.

பிரேசில் நாட்டின் பழங்குடிப் பெண்கள் மின்மினிகளைத் தமது கூந்தலில் சூடிக்கொள்வார்கள்.

ஜப்பானில் மின்மினிகளுக்காக ஒரு திருவிழாவே கொண்டாடப்படுகிறது. பெண்கள் கூண்டுகளில் லட்சக்கணக்கான மின்மினிகளை வளர்த்து, கியோட்டா நகருக்கு அருகிலுள்ள ஏரிக்கு எடுத்துச் சென்று பறக்கவிடுவார்கள். அதைப் பார்த்து ரசித்து ஆரவாரிக்கப் பெரும் கூட்டமே திரளும்.

இஸ்லாமிய ஞானியும், சோழ இளவரசி குந்தவையின் வளர்ப்பு தந்தையுமான"ஹஜரத் தபலே ஆலம் பாதுஷா, நத்ஹர் வலியாரின்" அடக்க இடமான தர்காவிலேயே குந்தவையும் அடக்கம் செய்யப்பட்டு உள்ளார்!

குந்தவையின் சமாதியை "மாமா ஜிகினி" என்றபெயரிலும், "சோழ ராஜாகி பேடி' என்றும் அழைத்துவருகிறார்கள்!

"மந்தாகினி" என்ற குந்தவையின் மற்றொரு பெயரே, "மாமா ஜிகினி" என்று மருவி அழைக்கப்பட்டு வருவதாக நெல்லிக்குப்பம.'ஹைதர் அலி' என்ற இஸ்லாமிய அறிஞரும், பன்னூலாசிரியரும் கருத்து தெரிவிக்கிறார்!

"ஜிகினி" என்பதற்கு பிரகாசம், ஒளிரும் என்று பொருள் இந்தியில் மின்மினிப் பூச்சியை “ஜுகுனு’ என்றும், குந்தவை மிகவும் "பிரகாசமானவர்',"மிக பிரசித்தி பெற்றவர்" என்பதால், "மாமா ஜிகினி" என்ற பெயர் வந்தது என்றும் சிலர் கருதுகிறார்கள்!

**1998 -ஆம் ஆண்டு, திருச்சி நத்ஹர் தர்காவின் ஆயிரமாண்டு நினைவுநாள் நடத்தப்பட்டது! தர்கா வெளியிட்டுள்ள ஆயிரமாண்டு மலரில் "மாமா ஜிகினி"**

**என்பதற்கு காரணமான ஒரு நிகழ்ச்சி கூறப்பட்டு உள்ளது!**

**குந்தவை சிறுவயதில், நத்ஹரின் பாதுகாப்பில் குந்தவை வளர்ந்தபோது,ஒருநாள் மின்மினிப் பூச்சி ஒன்றைபிடிக்க குந்தவை முயன்று அது முடியாமல் போனாதால், அழுததாகவும், அவரது அழுகையைப் போக்க நத்ஹர் வலியார் அவர்கள்,குந்தவியைச் சுற்றிவருமாறு அந்த மின்மினிப் பூச்சிகளை செய்ததாகவும், அப்படி மின்மினிப் பூச்சிகள் சுற்றிவரும்போது ஏற்பட்ட வெளிச்சத்தைப் பார்த்து,குந்தவை வியந்து "மாமாஜிகினி மாமாஜிகினி" என்று கூறியதால், அவரை அப்படியே இஸ்லாமியர்கள் அழைத்துவந்தனர் என்கிறது.**

**மின்மினி வெளிச்சத்தில் மிகபிரகாசமாக குந்தவை தோன்றியதால், அவருக்கு அந்தபெயர் வந்தது என்றும் கூறுகிறார்கள்!**

## பூச்சிகளின் உலகம் 11

(வண்டுகள்)




பூச்சி இனங்களில் 40 சதவிகிதம் வண்டுகள்தான். 3,50,000 வகை வண்டு இனங்கள் உள்ளன. இன்னும் கண்டறியப்படாத வண்டு இனங்கள் ஏராளமாக இருக்கின்றன. பூமியில் தோன்றிய பழமையான உயிரினங்களில் வண்டுகளும் ஒன்று.

6 கால்களும் 4 இறக்கைகளும் வண்டுகளுக்கு உண்டு. தலையின் முன் பக்கத்தில் 2 உணர்கொம்புகள் இருக்கின்றன.

வண்டுகள் சுற்றுச்சூழலியலில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. தாவரங்கள், விலங்குகளின் கழிவுகளைச் சாப்பிடுவதன் மூலம் சூழலுக்கு நன்மை விளைவிக்கின்றன.

சாண வண்டுகள் விலங்குகளின் கழிவுகளைச் சாப்பிடுகின்றன. இதனால் கழிவு வேகமாக மறுசுழற்சி ஆகிறது.

லேடிபேர்ட் என்ற வண்டு தாவரங்கள், காய்கறிகளை உண்ணும் பூச்சிகளை உணவாக்கிக்கொள்வதால், மனிதர்களுக்கு நன்மை விளைவிக்கின்றன.

1 மில்லிமீட்டர் நீளம் கொண்ட மிகச் சிறிய வண்டுகளும் உள்ளன. கோலியாத் போன்று மிகப் பெரிய வண்டுகளும் இருக்கின்றன. தென் அமெரிக்காவில் உள்ள டைடனஸ் வண்டு 20 செ.மீ. நீளம் இருக்கும்.

சில வண்டுகள் அடர் நிறங்களில் காணப்படுகின்றன. சில வண்டுகள் பச்சை, நீலம், மஞ்சள், சிவப்பு போன்ற கண்கவர் நிறங்களில் காட்சியளிக்கின்றன.

எதிரிகளிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்வதற்காக வண்டுகள் பல வழிகளைக் கையாள்கின்றன. சூழலுக்கு ஏற்றவாறு உடலைப் பெற்றிருக்கின்றன, விஷத்தைச் செலுத்துகின்றன. தற்காப்புக்காகச் சண்டையிடுகின்றன. காய்ந்த இலைகளைப்போல் இருக்கும் இலை வண்டுகளை நாம் எளிதில் அடையாளம் கண்டுகொள்ள முடியாது.

உலகில் உள்ள உயிரினங்களில் வண்டுகளே மிகவும் வலிமையானவை. தங்கள் எடையைப்போல் 850 மடங்கு எடையைத் தூக்கிச் செல்லும் ஆற்றல் படைத்தவை!

மனிதர்கள் 300 வகையான வண்டுகளைச் சாப்பிடுகிறார்கள்.

பண்டைய எகிப்து மக்கள் இறந்தவர்களின் ராஜ்யத்திற்கு கொண்டு செல்லப்படும் வரை ஆத்மாக்களின் பாதுகாவலர்களாக வண்டுகள் இருக்கிறது என்று நம்பினர் .

எனவே, பண்டைய கல்லறைகளில் இறந்தவர்களைப் பாதுகாக்க இறந்தவரின் உடலில் எகிப்தியர்கள் ஒரு வண்டு சிலையை செருகினர்.

அந்த பண்டைய காலங்களில் கூட, ஒரு நபரின் வாழ்க்கை அவரின் இதயத்தைப் பொறுத்தது என்பதை மக்கள் புரிந்துகொண்டனர். ஆகையால், உடலை அடக்கம் செய்யத் தயாரிக்கும் போது, இதயம் அகற்றப்பட்டது, அதற்கு பதிலாக ஆத்மாவின் பாதுகாவலரான ஒரு வண்டு சிலை வைக்கப்பட்டது - அது இல்லாமல் ஒரு நபர் மரணத்திற்குப் பிறகு உள்ள வாழ்க்கைக்கு உயரமாட்டார் என்று நம்பப்பட்டது.

அந்தக் காலத்தில் எகிப்திய மன்னர்களும் கடவுள் மாதிரியே கருதப்பட்டார்கள். மன்னன் இறந்தாலும் அவன் ஆன்மா வாழ்ந்து கொண்டே இருக்கும் .அதற்கு சுகபோகங்கள் தேவைப்படும் என்று மன்னனின் உடமைகளையும் அவனோடு சேர்த்து வைத்து மூடுவார்கள்.

கட்டுப்பாட்டை மீறி பிரமிடுக்குள் யார் நுழைந்தாலும், அவர்கள் இறந்து போவார்கள் என்று நம்பினார்கள்.

1923ஆம் ஆண்டில் ட்யூடன் கமென் என்ற காரூனின் உடல் அடக்கம் செய்யப்பட்ட பிரமிடின் விஷயத்தில் இந்த நம்பிக்கை உண்மையாகி போனது.

ஹார்வட் கார்ட்டர் என்ற பிரமிடு ஆராய்ச்சியாளருக்காக பணம் கொடுத்து உதவிய கார்னர்வான் என்ற ஆங்கிலேயர் ட்யூடன் கமென் பிரமிடு உடைக்கப்பட்ட ஒரு சில மாதங்களுக்குள் அவர் இறந்து போனார்.

ஒரு விசித்திரம் என்னவென்றால், ட்யூடன் கமெனின் கன்னத்தில் எந்த இடத்தில் ஒரு சின்ன தழும்பு இருந்ததோ, அதே மாதிரி கார்னர்வான் கன்னத்திலும் அதே இடத்தில் ஒரு விஷ வண்டு கடிக்க, கார்னர்வான் மர்மமான முறையில் இறந்துபோனார். ட்யூடன்கமென் கை விரலில் தங்க வண்டு பதித்த மோதிரமும் இருந்தது .

முன்னால் கொல்லப்பட்ட ஆஸிம் (ரலி) அவர்களின் உடலின் ஒரு சில பகுதியையாவது எடுத்து வர குறைஷிகள் சிலரை அனுப்பினர். ஆஸிம் (ரலி) அவர்கள் குறைஷிகளின் மிக மதிக்கத்தக்க ஒருவரை பத்ரில் கொன்றிந்தார்.

ஆஸிம் (ரலி) பாதுகாப்பதற்கு அல்லாஹ் தேனியைப் போன்ற சில வண்டுகளை அனுப்பி, வந்தவர்களை விரண்டோடச் செய்தான். “தான் எந்த இணைவைப்பவனையும் தொடமாட்டேன்; எந்த இணைவைப்பவனும் என்னை தொட்டுவிடக் கூடாது” என்று ஆஸிம் அல்லாஹ்விடம் வேண்டி இருந்தார்.

அவரின் இந்த வேண்டுதலையும் உறுதியையும் அல்லாஹ் நிறைவேற்றினான். இச்செய்தியைக் கேள்விப்பட்ட உமர் (ரழி) “அல்லாஹ் முஃமினான (அல்லாஹ்வை நம்பிக்கை கொண்ட) அடியானை உயிருடன் இருக்கும் போது பாதுகாத்தது போன்று அவரின் மரணத்திற்குப் பின்னும் பாதுகாக்கிறான்” என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, இப்னு ஹிஷாம் )

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 12**

(கொசு)




பத்து பேர் இருந்தாலும் ஒருவரை மட்டும் கொசு கடிக்க என்ன காரணம் தெரியுமா?

கூட்டாக அமர்ந்து கொண்டிருக்கும்போது ஒருவர் மட்டும் கொசுவை அடித்துக்கொண்டு, கொசுக் கடியால் புலம்பிக் கொண்டிருப்பார். எங்களுக்கு கொசு தெரியலையே ஒருவேளை கொசுவுக்கு உன் ரத்தம்தான் பிடித்திருக்கு போல என விளையாட்டாக பேசுவோம்.

அப்படி விளையாட்டாக பேசியதை உண்மை என்று நிரூபித்துள்ளது ஆராய்ச்சிக் குழு. இதை " மெடிக்கல் எண்டொமொலஜி " - இதழ் வெளியிட்டுள்ளது. அதாவது கொசுக்களுக்கு 'o' வகை ரத்தம்தான் மிகவும் பிடிக்குமாம். மற்ற வகை ரத்தம் கொண்டோரை ஒரு முறைக் கடிக்கிறதென்றால் 'o' வகை இரத்தம் கொண்டோரை மட்டும் இரண்டு முறைக் கடிக்குமாம்.

அதுமட்டுமன்றி கொசுக்களுக்கு கார்பன்-டை- ஆக்சைடு ($CO_2$) மிகவும் அவசியம். அதை அதிகமாக எந்த உடல் வெளியிடுகிறதோ அதுதான் கொசுக்களுக்கான ரத்த வங்கி. அதாவது $CO_2$ வை அதிகமாக கொண்டோருக்கு நோய் எதிர்ப்புச் சக்தியின் ஆற்றல், ஜெனிடிக் போன்ற இதர சத்துக்கள் அதிகமாக இருக்குமாம்.

எனவே நீங்கள் எவ்வளவு அதிகமாக கார்பன் டை ஆக்ஸைடை வெளியிடுகிறீர்களோ அந்த அளவிற்கு கொசுக்களால் ஈர்க்கப்படுவீர்கள்.

அதேபோல் உடற்பயிற்சியின் போது தசைகள் இறுக்கமாகும். அப்போது உடல் இலகுத் தன்மைக்காக லாக்டிக் ஆசிடை தோல் வெளியேற்றும். அதுவும் கொசுக்களுக்கு இரத்தத்தை உறிஞ்ச சிறந்த சிக்னலாகும்.

இவற்றையெல்லாம் தன் கண்கள் வழியாகவே கண்டறிவதாக இதன் ஆராய்ச்சியாளர் எஃப். டே கூறுகிறார். கொசு அமர்வதற்கு முன் தரையில் அமர்ந்திருந்து உங்களை உற்று நோக்கிய பின்னரே கடிக்குமாம். அப்படி அடி மட்டத்திலிருந்து பார்க்கும் கொசுவிற்கு அடர் நிறங்கள்தான் தெளிவாகத் தெரியுமாம்.

அதனால்தான் கருப்பு, கருஞ்சிவப்பு என அடர் நிறம் கொண்ட ஆடைகளை அணிந்தால் விரைவில் உங்களை சூழ்ந்துகொள்கிறது. வெளிர் நிற ஆடைகளை அவ்வளவு எளிதில் கண்டறிய இயலாதாம். எனவே கொசு கடிக்க நீங்கள் அணியும் ஆடையும் முக்கிய காரணம்.

அதேபோல் வெப்பம் நிலை அதிகம் கொண்ட உடலும் கொசுக்களுக்குப் பிடிக்குமாம். அவர்களுக்கு இரத்தத்தின் அடர்த்தி அதிகமாகவும், தோலிற்கு மிக அருகிலும் இருப்பதால் இரத்தத்தை எளிதில் உறிஞ்சுவிடலாம்.

இவை தவிர அதிக உடற்பயிற்சியால் உடல் சூடானாலும் கொசுக்களுக்குப் பிடிக்குமாம். மது குடித்திருந்தாலும் அவர்களை கொசுவுக்கு மிகவும் பிடிக்கும்.

ரத்தத்தை உறிஞ்ச கொசுக்களுக்கு பற்கள் தேவையில்லை . ஆனால் கொசுவின் கண்களுக்கு கீழே நுட்பமான இன்ஜெக்ஷன் போன்ற ஊசி வைத்திருக்கிறது. உண்மையில் ஊசிகள் ! மொத்தம் ஆறு .

இதெல்லாம் ஒன்றாக இணைந்து "சிங்கிள் '' ஊசியாக உங்கள் தோலுக்குள்ளே இறங்கி ரத்தத்தை உறிஞ்சிக் கொள்கிறது . ரத்தம் உறைந்து போகாமல் இருக்க ஒரு கெமிக்கலை வேறு கொசு துப்பித் தொலைக்கிறது அந்த எச்சில் ரத்தத்துடன் கலக்கிறது உடனே சொரிகிறீர்கள் .

கொசு ஒரு 'பறக்கும் அற்புதம் ' தலைகீழாக கூட பறக்கும் . மழை பெய்யும் போது நனையாமல் இடுக்குகள் வழியாக கூட கொசுவால் பறக்க முடியும் என்று ஒரு பிரிட்டிஷ் ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்திருக்கிறார் .

நம்ரூது என்பவன் இறைத்தூதர் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலத்தில் வாழ்ந்த ஓர் கொடிய அரசன்.

ஷினார் (மெசப்பொட்டோமியா) பகுதியை ஆட்சி செய்தவன் என்று பைபிள் குறிப்பிடுகிறது.

பாபெல் கோபுரத்தைக் கட்டியவன் என்றும் பதிவுகள் உண்டு. நம்ரூது, நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கொண்டு வந்த இறைச் செய்தியை மறுத்ததுடன் அவர்களை நெருப்பினுள் இட்டுக் கொலை செய்யவும் முனைந்தவன். ஆணவத்தின் உருவமாய் வாழ்ந்தவன்.

முதன் முதலில் உலகத்தில் தலையில் கிரீடம் தரித்த கொடுங்கோல அரசன் நம்ரூது.

இவ்வளவு செல்வாக்கும் கர்வமும் பிடித்த நம்ரூத்தின் மூக்கின் வழியே அற்ப கொசுவை அனுப்பி அவன் மூளையை அது குதற , மண்டைக்குள் புகுந்த கொசுவை வெளியே விரட்ட செருப்பாலே அவன் தலையில் அடிக்கப்பட்டு அதனால் நம்ரூத் செத்தான் என்று குர்ஆன் விளக்கவுரைகள் பகர்கின்றன.

கிரீடம் தரித்த தலையை ஊரில் உள்ளவர்களின் செருப்புகளாலும் அடிக்கப்பட்டதாம் . ம்ஹூம்..கொசு அவன் மண்டையை விட்டு வெளியே வரவே இல்லை.

“வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்” என்று தமிழிலொரு பழமொழி உண்டு. அது ஓர் ஞான வாசகம். அதே கருத்தில், “எல்லாம் வல்ல இறைவனுக்குக் கொசுவும் ஒரு ஆயுதம்” என்று காட்டுவதாக இந்நிகழ்வை ஸூபியாக்கள் பார்க்கின்றனர்.

” நிச்சயமாக அல்லாஹ் கொசுவையோ அதனினும் அற்பமானதையோ உவமை உரைக்க நாணுவதில்லை” (குர்ஆன்: 2:26)

ரஹ்மத் ராஜகுமாரன்

## பூச்சிகளின் உலகம் 13

ஈ




"மனிதர்களே! ஓர் உதாரணம் சொல்லப்படுகிறது. எனவே செவிதாழ்த்திக் கேளுங்கள். நிச்சயமாக அல்லாஹ்வையன்றி (வேறு) எவர்களை நீங்கள் பிரார்த்திக்கின்றீர்களோ, அவர்களெல்லாம் ஒன்று சேர்ந்தாலும், ஓர் ஈயைக்கூடப் படைக்க முடியாது; இன்னும், அவர்களிடமிருந்து ஒரு பொருளை எடுத்துக் கொண்டு போனால் அவர்களால் அதனை அந்த ஈயிடத்திலிருந்து திரும்பக் கைப்பற்றவும் முடியாது; தேடுவோனும், தேடப்படுவோனும் பலஹீனர்களே "

(அல்குர்ஆன்: 22:73)

கொசுக்கள் குறித்து மரணபீதி கொள்ளும் நாம், ஈக்களைப் பற்றி அதிகம் அலட்டிக்கொள்வதில்லை. ஆனால் ஈக்களாலும் அதிகம் அபாயமே என்கிறார்கள் ஆய்வாளர்கள்

வீட்டில் பெரும்பாலும் காணப்படும் சாதாரண ஈக்களும், நீலநிற ஈக்களும், 600 விதமான பாக்டீரியாக்களை பரப்புவது, புதிய மரபணு ஆய்வில் தெரியவந்திருக்கிறது.

ஈக்களால் தனது இறக்கைகள் மற்றும் பாதங்கள் மூலமாக, வயிற்றுவலி, ரத்தத்தில் நச்சை ஏற்றுதல், நிமோனியா போன்ற நோய்களை பரப்பும் பாக்டீரியாக்களை ஓர் இடத்திலிருந்து மற்றோர்கள் இடத்துக்குப் தூக்கிச் சென்று பரப்ப முடியும். சொல்லப்போனால், அவை ஒரு 'பறக்கும் பாக்டீரியா விநியோகஸ்தர்களாக' இருக்கின்றன.

“ஈக்களால் நோய்க்கிருமிகளைப் பரப்ப முடியும் என்பது மக்களுக்குத் தெரிந்திருந்தாலும், அவை எந்த அளவுக்கு அபாயகரமானவை என்பதும், எவ்வளவு தூரம் அவை நோய்த்தொற்றுகளை ஏற்படுத்தும் என்பதும் பலருக்குத் தெரியாது” என பென் ஸ்டேட் பல்கலைக்கழக பேராசிரியர் டொனால்டு பிரையண்ட் கூறுகிறார்.

வீடு உள்ளிட்ட இடங்களில் காணப்படும் ஈக்களின் உடலின் மேலும், உடலின் உள்ளேயும் இருக்கும் நுண்ணுயிரிகள் குறித்து மரபணு ஆய்வுமுறை வழியாக ஆய்வு நடத்தப்பட்டது.

அதில், வீட்டில் பொதுவாக பார்க்கக்கூடிய ஈக்கள் 351 வகையான பாக்டீரியாக்களை பரப்புகின்றன எனத் தெரியவந்திருக்கிறது. வெப்ப காலங்களில் தோன்றும் நீலநிற ஈக்கள் 316 வகை பாக்டீரியாக்களை எடுத்துச் செல்கின்றன. இந்த இருவகை ஈக்களாலும்தான் அதிகப்படியான பாக்டீரியாக்கள் பரப்பப்படுகின்றன.இதைத் தான் திருக்குர்ஆன் இப்படி கூறுகிறாதோ ...?

"பாக்டீரியாக்களைத்தான் 'ஒரு பொருள்' என்று குர்ஆன் குறிப்பிடுகிறதா?" தெரியவில்லை

" இன்னும், அவர்களிடமிருந்து ஒரு பொருளை எடுத்துக் கொண்டு போனால் அவர்களால் அதனை அந்த ஈயிடத்திலிருந்து திரும்பக் கைப்பற்றவும் முடியாது; தேடுவோனும், தேடப்படுவோனும் பலஹீனர்களே" .

(அல்குர்ஆன்: 22:73)

...அல்லது ஈக்களுக்கு உணவை மென்று அரைத்துத் தின்னும் பற்கள் கிடையாது. ஆகவே ஈயானது திட உணவுப் பொருள்களை நேரடியாக வாயில் வைத்து மென்று தின்ன முடியாது.

திரவ நிலையில் உள்ள உணவுகளை தனது வாயில் உள்ள (Proboscis) ஸ்பான்ஜ் போன்ற உறுப்பால் ஒற்றி உறிஞ்சிக்கொள்ளும். திட உணவாக இருப்பின் தனது உமிழ்நீரை அப்பொருளில் உமிழ்ந்து அதைக்கரைத்து நீர்ம நிலையில் உறிஞ்சி நேரடியாக வயிற்றுக்குள் அனுப்புகிறது.

அதனால்தான் ஈக்கள் உட்கார்ந்த உணவுப் பொருட்களை சாப்பிடக்கூடாது என்கிறது விஞ்ஞானம்

இந்த அறிவியல் உண்மைகள் எல்லாம் பொருள்களை பெரிதாக்கிக் காட்டும் மைக்ராஸ்கோப் சுமார் 500 ஆண்டுகளுக்கு பின்பு கண்டுபிடித்ததன் பின்னரே அறிய முடிந்தது.

“அவர்களிடமிருந்து ஒரு பொருளை எடுத்துக்கொண்டு போனால் அவர்களால் அதனை அந்த ஈயிடமிருந்து திரும்பக் கைப்பற்றவும் முடியாது;” (அல்குர்ஆன்: 22:73)

ஈ எவ்வாறு திட உணவுப் பொருள் திரவமாக மாற்றி எடுத்துக்கொள்கிறது என்பதை இன்றைய அறிவியல் நமக்கு தெளிவாக விளக்குகிறது. ஈ ஒரு உணவுப்பொருளில் அமர்ந்து ஒரு வித (நொதியை) எச்சிலை உமிழ்ந்து திடப்பொருளை திரவமாக்கி உறிஞ்சி, நேரடியாக வயிற்றுக்குள் அனுப்பி விட்டால் நாம் அந்த திடப் பொருளை மீண்டும் கைப்பற்ற முடியாது.

இதைத்தான் அல்லாஹ் ஆயிரத்து நானூறு வருடங்களுக்கு முன்பு “ஒரு பொருளை எடுத்துக்கொண்டு போனால் அவர்களால் அதனை அந்த ஈயிடமிருந்து திரும்பக் கைப்பற்றவும் முடியாது;” என்று கூறுகின்றானா ?

ஈக்களைப் பற்றி இவ்வாறு கூறிப் பயமுறுத்தும் ஆய்வாளர்கள், அவற்றால் சில பயன்களும் இருக்கும் என்கிறார்கள். அவை, நோய்கள் வருவதற்கான முன்னெச்சரிக்கை அறிகுறிகளாக இருக்கலாம், அதேபோல, நுண்ணுயிரிகள் இருக்கும் இடத்தை கண்டறிய அவை பயன்படும் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

நாசா 2014 ம் ஆண்டில் சர்வேதேச விண்வெளி நிலையத்திற்கு பழ ஈக்களை அனுப்பியது. ப்ரூட் ப்ளை லேப் (Fruit Fly Lab) எனப்படும் ஆய்வகத்தில் வைக்கப்பட்டிருந்த ஈக்கள் மைக்ரோ க்ராவிட்டி, ஸ்பேஸ் ப்லைட் மற்றும் விண்வெளி கதிர்வீச்சில் ஏற்படும் நீண்டகால விளைவுகளை ஆய்வு செய்ய பயன்படுத்தப்படுகின்றன.

“இந்த ஈக்கள் உயிருள்ள தானியங்கி விமானங்களாக, மிகவும் குறுகிய இடங்களில்கூட உயிரியல் விஷயங்கள் உள்ளனவா என்பதைக் கண்டறிய அனுப்பப்படலாம்” என, சிங்கப்பூர் நான்யாங் பல்கலைக்கழக ஆய்வாளர் ஸ்டீபன் ஷஸ்டர் சொல்கிறார்.

குப்பைகளில் உட்காருதல், மக்கிப்போன உணவுகள், மிருகங்கள், அதன் கழிவுகளை உண்ணுதல் உள்ளிட்ட மோசமான விஷயங்கள் ஈக்களின் பொதுத்தன்மைகளாக கருதப்படுகின்றன. அவை, மனிதர்கள், விலங்குகள் மற்றும் செடிகளைத் தாக்கும் பல நோய்களை பரப்புவதாக சந்தேகிக்கப்படுகின்றன. குறிப்பாக, நீல நிற ஈக்கள், இறந்த மிருகங்களுக்கு அருகில் அதிகம் காணப்படுகின்றன.

கெடும் நிலையிலுள்ள உணவுப் பொருளும், கழிவுகளும் ஈக்களை ஈர்த்து இழுக்கிறது. அவற்றை அப்புறப்படுத்தினால் ஈக்களிடமிருந்து தப்பிக்கலாம்.

ஈக்கள் போரில் சண்டையில் ஈடுபட்டு இறந்தவர்களை விட அதிகம் பேரை கொன்றிருக்கிறதாம். ஸ்பானிஷ் அமெரிக்கா போரின் போது ஈக்களால் பரவிய டைபாய்டால் 5000 வீரர்கள் இறந்துள்ளனர். போரில் ஈடுபட்டு இறந்தவர்கள் 4,000 பேர் மட்டுமே.

இந்த ஈக்களைப் பற்றிய தகவல்களை வைத்து மனிதன் அதை படைத்திட முடியுமா ?

வெப்பமான பருவத்தில் ஒரு ஈ 30 நாட்கள் வாழும். ஆனால், சராசரியாக ஈக்கள் ஐந்து மாதங்கள் வரை வாழக்கூடியவை.

பிறந்த இடத்தில் இருந்து 13 மைல்கள் வரை ஈ பயணம் செய்யும்.8 கிலோமீட்டர் வேகத்தில் பறக்கும். காற்று புகும் சிறுதுளைகள் வழியே அறைகளுக்குள் நுழைந்துவிடும்.

ஈக்களின் கண்கள் கூட்டுக்கள் அமைப்பு கொண்டவை. கண்களில் 4000 லென்ஸ்கள் இருக்கின்றன.ஒளி அவற்றை கவர்ந்திழுக்கும். எனவே விளக்குப் பொறி அவற்றை எளிதில் கவர்ந்து அழிக்கிறது.

ஒரு பெண் ஈ, தன் வாழ்நாளில் குறைந்தது 21 முறை முட்டையிடும். ஒரு முறைக்கு ஏறத்தாழ 130 முட்டைகளை இடும்.அபரிமிதமாக இனப்பெருக்கம் செய்யும். 24 மணி நேரத்திற்குள் 100 குஞ்சுகளை பொரித்துவிடும்.

ஈக்களின் உணவு முழுவதுமே நீர்தான். அனைத்து உணவுகளையுமே ஈக்கள் நீராகவே அருந்துகின்றன.

ஈக்கள் சாப்பிடுவதற்கும், ருசி காண்பதற்கும் தன் கால்களையே பயன்படுத்துகின்றன.

ஈக்கள் தம் உணவை மணத்தை வைத்துதான் கண்டுபிடிக்கின்றன.

ஈக்கள் அனைத்துத் திசைகளிலும் நடக்கக்கூடியவை: நேராக, தலைகீழாக, பக்கவாட்டில்.

ஈக்கள் மிக வேகமாகச் செயல்படக்கூடியவை. நம் மூளை ஒரு விநாடிக்குள் 60 படங்களை ப்ராஸஸ் செய்கிறது. ஆனால் ஈ, ஒரு விநாடிக்கு 250 காட்சிகளை ப்ராஸஸ் செய்கிறது என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்!

மனிதர்களே! ஓர் உதாரணம் சொல்லப்படுகிறது. எனவே செவிதாழ்த்திக் கேளுங்கள். நிச்சயமாக அல்லாஹ்வையன்றி (வேறு) எவர்களை நீங்கள் பிரார்த்திக்கின்றீர்களோ, அவர்களெல்லாம் ஒன்று சேர்ந்தாலும் ஓர் ஈயைக்கூடப் படைக்க முடியாது . (அல்குர்ஆன் : 22:73)

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 14**

(நோயும், மருந்தும் ஈயில் இருக்கிறது)



ஈயைப்பற்றிய அடுத்த அறிவியல் உண்மையையை நபி (ஸல்) அவர்கள் அறிவித்த ஒரு ஹதீஸின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

“உங்களில் ஒருவரது பாத்திரத்தில் ஈ விழுந்து விட்டால் (முதலில்) அதை அவர் (அதிலேயே) முக்கி அமிழ்த்தட்டும் பிறகு அதை வெளியில் எடுத்துப் போட்டு விடவும்; ஏனெனில் ஈயின் இரண்டு இறக்கைகளில் ஒன்றில் நோயும், மற்றொன்றில் நிவாரணமும் உள்ளது.” -அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி). புஹாரி.3320.

பொதுவாக ஈயானது அசிங்கமான, சுகாதாரக்கேடான இடங்களிலும் கழிவுப் பொருள்கள் தேங்கும் இடங்களிலும் அதிகம் இருக்கும். கிருமி தாக்குதலுக்குறிய இடங்களில் வசித்தாலும் அவைகளினால் ஈக்கள் இறப்பதில்லை. மேலும் ஈயினால் சுமார் 100 வகையான நோய்கள் (Pathogens) பரவுவதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.ஆனாலும் ஈக்களின் உடலிலேயே அல்லாஹ் அதிகமான நோய் எதிர்ப்பு சக்தியை வைத்திருப்பதால் அவைகள் பாக்டீரியா, மற்றும் வைரஸ் கிருமிகளால் தாக்கப்படுவதில்லை.

ஆக, ஈயானது நோயை கொண்டு செல்லும் அதே நேரத்தில் அந்நோய்க்கான பரிகார நிவாரணத்தையும் தன்னகத்தே கொண்டுள்ளது. இதைத்தான் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் வஹியின் மூலம் அன்றே குறிப்பிட்டுள்ளார்கள்.

இவ்வுண்மையை இன்றைய நவீன அறிவியல் ஆய்வுகளும் ஏற்றுக்கொண்டுள்ளன. இந்த வார அறிவியல் (22,oct.2014) இதழ்களில் ஒரு ஆய்வுச் செய்தியை வெளியிட்டனர். அதாவது ஈயின் மரபணு முழுவதையும் ஆராய்ந்து பார்த்ததில் மனிதர்களை நோய் தாக்குவதிலிருந்து காப்பாற்றும் நோய் எதிர்ப்பு வழிமுறை ஈயின் மரபணுவில் இருப்பதாக அறிவித்தனர்.

இதுவரை அறியப்பட்டுள்ள மனித நோய்களின் மரபணுகளில் நான்கில் மூன்று பங்கு மரபணுக்கள் இந்த ஈயின் மரபணுக்களுடன் ஒத்துள்ளன. இந்த ஈக்கள் ஒவ்வொரு நாள் இரவிலும் உறங்கச் செல்கின்றன; மயக்க மருந்துக்கு மனிதர்களைப் போலவே எதிர்வினையாற்றுகின்றன.

அனைத்துக்கும் மேலாக மிக விரைவாக இனப்பெருக்கம் செய்கிறது. ஒரு பதினைந்து நாட்களுக்குள் முற்றிலும் புதியதொரு தலைமுறையை உருவாக்குகிறது.

அமெரிக்காவின் கார்னல் பல்கலைக்கழகம், ஆறு பெண் ஈக்களை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு அவைகளின் 15345 ஜீன்களை பிரித்து வகைப்படுத்தினார். இவற்றுள் நோயை பரப்பும் ஜீன்கள் (animal pathogens) மற்றும் நோய் எதிர்ப்பு ஜீன்களை (Immune system & Detoxification genes) ஆய்வு செய்தனர். வீட்டு ஈயின் குடும்பத்தைச் சார்ந்த பழ ஈ (Fruit Fly) ன் நோய் எதிர்ப்பு ஜீன்களைக்காட்டிலும் வீட்டு ஈயின் நோய் எதிர்ப்பு ஜீன்கள் மிக அதிகளவில் இருப்பது ஆய்வாளர்களை ஆச்சரியப்படுத்தியது.

Detoxification என்று சொள்ளப்படும் (cytochrome P450 genes) ஜீன்கள் பழ ஈயில் 85 மட்டுமே உள்ளது. நமது வீட்டு ஈயில் இந்த ஜீன்கள் 146 உள்ளது. அது மட்டுமல்லாமல் அளவில் ஐந்து மடங்கு மிகப்பெரியதாகவும் இருந்தது. ஈயின் நோய் எதிர்ப்பு ஜீன் மற்றும் விஷமுறிவு ஜீன்களை தனியாக பிரித்தெடுப்பதன் மூலம் மனிதர்களுக்கு வரக்கூடிய நோய்களை தடுப்பதற்கும் மற்றும் சுகாதாரக் கேடான இடங்களில் உருவாகும் கிருமிகளை கட்டுப்படுத்தவும் இவை பெரிதும் பயன்படும் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

அல்லாஹ்வின் தூதர் அன்று சொன்னது இன்று அறிவியல் அறிஞர்களால் நிரூபிக்கப்பட்டுள்ளது. 1400 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு சிறு ஈ உண்ணும் முறையை அதாவது உணவுப்பொருளை நீர்ம கூழாக்கி நேரடியாக வயிற்றுக்கு அனுப்பும் செய்தியையும், அதன் உடலில் நோய் எதிர்ப்பு மற்றும் விஷமுறிவு நிவாரணியும் உள்ளது என்பதை படைத்த இறைவனைத் தவிர வேறு எவரும் அறிவிக்க முடியாது.

“நிச்சயமாக இரவும், பகலும் மாறி வருவதிலும், வானங்களிலும், பூமியிலும் அல்லாஹ் படைத்துள்ள அனைத்திலும் பயபக்தியுள்ள மக்களுக்கு (நிரம்ப) அத்தாட்சிகள் இருக்கின்றன.” அல் குர்ஆன்.10:6. (Read islam பதிவிலிருந்து)

**பூச்சிகளின் உலகம் 15**

(உறவுகள் அற்ற ஈசல்கள்)




மழைக்காலம்தானே, ஈசல்களின் காலம். ஈசல்கள் பெருகும் இந்த நேரத்தில் அதன் அறிவியல் உண்மைகள், பெரும் ஆச்சரியத்தை ஏற்படுத்துகின்றன.

“கறையான் குடும்பத்து உறுப்பினர்தான் ஈசல். கறையான் புற்றில் இருந்து ஈசல்கள் வெளிப்படுவதைப் பார்த்திருக்கலாம். ஆரம்பத்தில், ஈசலை **(Winged white ants)** இறக்கை உள்ள வெள்ளை எறும்பு என்று ஆங்கிலத்தில் வகைப்படுத்தினார்கள். ஆனால், கறையான் எறும்பு இனத்தைச் சேர்ந்தது அல்ல ; அது ஆறு கால்களைக் கொண்ட பூச்சியினத்தைச் சேர்ந்தவை என்று பின் கண்டறியப்பட்டது.

முதலில் ஈசலுக்கும் கறையானுக்கும் உள்ள தொடர்பை சொல்றேன்.

கறையான், கூட்டமாக வாழும் சமுதாயப் பூச்சி வகையைச் சேர்ந்தது. ஒரு புற்றில் ஆயிரம் முதல் 5 லட்சம் கறையான்கள் கூட இருக்கலாம்.

தேனீக்களில் உள்ளது போலவே கறையான்களிலும் ராணி, ஆண், சிப்பாய், வேலைக்காரர்கள் என்று 4 வகை உறுப்பினர்கள் உண்டு. ஒரு நாளைக்குச் சுமார் 2 ஆயிரம் முட்டைகள் வரை இடும் திறன் பெற்றவை ராணிக் கறையான்கள். 4 வகைக் கறையான்களுக்கும் இதுவே தாய்.

ராணியை முனைப்புடன் கர்ப்பமடையச் செய்வதே ஆண் கறையான்களின் தலையாய பணி. புற்றை எதிரிகளிடம் இருந்து பாதுகாக்கும் பணியைச் சிப்பாய்க் கறையான்களும், உணவு சேகரிப்பு, புற்று கட்டுதல் போன்ற வேலைகளை வேலைக்காரக் கறையான்களும் செய்கின்றன.

ஒரே புற்றில் கறையான்கள் கட்டுக்கடங்காமல் பெருகினால், இடநெருக்கடி ஏற்படும். அருகருகில் வேறு புற்றுகளைத் தோற்றுவித்தாலும், உணவுப் போட்டி ஏற்பட்டுவிடும்.

எனவே இதைத் தவிர்ப்பதற்காக ராணிக் கறையான்கள் சில சிறப்பான முட்டைகளை இடுகின்றன. அதில் இருந்து வெளி வருபவைதான் ஈசல்கள். இலவம் பஞ்சு மரமும் எருக்கஞ்செடியும் பஞ்சைப் பறக்கவிட்டு, தங்கள் விதைகளைப் பரப்புவதற்கு ஒப்பானதுதான் ஈசல் பறப்பதாகும்

ராணி ஈசல் இடுகிற முட்டையில் இருந்து வெளியே வந்த ஈசல் குஞ்சுகள் வெள்ளை நிறத்தில், நான்கு இறக்கைகளுடன் காணப்படும். அவற்றுக்கு வேலைக்கார கறையான்கள்தான் உணவு கொடுத்துப் பராமரிக்கின்றன. வளர்ந்ததும், ஈசல்கள் புற்றில் இருந்து வெளியேறத் தயாராக இருக்கும்.

மழைக்காலம் தொடங்கியதும், ஈசல்கள் நான் முந்தி நீ பிந்தி என்று போட்டி போட்டுக்கொண்டு வெளியேறும். மற்ற பலஹீனமான ஈசல்களை காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணம் இருக்காது.

ஈசல்களுக்கு 4 இறக்கைகள் இருந்தாலும்கூட அவற்றால் காற்றை எதிர்த்துப் பறக்க முடியாது. அதனால், காற்றில்லாத அமைதியான நேரத்தையே, அவை பறக்கத் தேர்ந்தெடுக்கின்றன.

காற்றில்லாத சூழ்நிலையை தேர்ந்தெடுக்கும் ஈசல்கள் சுற்றி இருக்கும் ஆபத்தான எதிரிகளை கணிக்கத் தவறிவிடுகிறது. இதுதான் இயற்கையின் விளையாட்டு .

புற்றில் இருந்து வெளிவருகிற ஈசல்களில் சுமார் 80 சதவீதம் வரை பறவைகள், தவளைகள், பல்லி, ஓணான், உடும்பு போன்றவற்றுக்கு இரையாகிவிடுகின்றன. எஞ்சியவை இறகுகள் உதிர்ந்து கீழே விழுந்ததும், ஜோடி ஜோடியாக ஈர மண்ணைத் துளைத்துக்கொண்டு உள்ளே புகுகின்றன.

இப்படி இறகு உதிர்ந்து விழுகிற ஈசல்களைப் பார்த்துத்தான், அவற்றுக்கு ' அற்ப ஆயுசு ' என்ற தவறான கருத்து பரவியிருக்கலாம். இவ்வாறு மண்ணுக்குள் புகுந்த ஈசல்கள் புதிய கறையான் காலனியை உருவாக்குகின்றன.

அதெல்லாம் சரி, ஈசலின் உண்மையான ஆயுள்காலம் தான் என்ன? “கறையான்களில் 4 உறுப்பினர் வகைகளுக்கும் வெவ்வேறு ஆயுள்காலம் உண்டு. இதன்படி, ஈசலின் (இதுவும் ராணி கறையான்தான்) ஆயுள்காலம் 12 முதல் 20 ஆண்டுகள் ! நான்கு வகைகளில் வேலைக்காரக் கறையான்கள்தான் குறைந்த ஆயுள்காலம் கொண்டவை. அவை 4 முதல் 5 ஆண்டுகள் வரை வாழ்கின்றன.

இனிமேல் ஈசல் ஒரே நாளில் இறந்து போகும் என்று யாராவது சொன்னால், அவர்களிடம் இந்த உண்மையைச் சொல்லுங்கள்.

அரபியில் " பக்கா " என்றால் சுயப் பளு , சுயக் கனம் என்று பொருள்படும். இந்த சுயப் பளு ஜடப்பொருளான மலைக்கு இருக்கிறது. இதனால் மலைகள் இருந்த இடத்தை விட்டு அசையாமல் இருக்கிறது .

இந்த சுயப் பளு அகப் பளுவாக மனிதனுக்கும் இருக்கிறது. அதாவது நற்குண , நல்லொழுக்கம் , வீரம் , பொறுமை , சகிப்புத்தன்மை , யுத்த களத்தில் புறமுதுகுக் காட்டாத உறுதி இத்தன்மைகளைப் பெற்றவர்களை மலையைப் போல் அசையாமல் இருக்கிறார் என்று அரபிகள் கூறுவார்கள் .

அதே நேரத்தில் கெட்ட எண்ணம் கொண்டவர்களின் கெட்ட செயலை விட்டும் மாறாமல் இருப்பதையும் 'பக்கா' என்றே அழைப்பார்கள் .

ஆனால் குர்ஆனில் அல்லாஹ் …

يَوْمَ يَكُوْنُ النَّاسُ كَالْفَرَاشِ الْمَبْثُوْثِۙ

அந்நாளில் மனிதர்கள் சிதறிக்கிடக்கும் ஈசல்களைப் போல் ஆகி விடுவார்கள். (அல்குர்ஆன்: 101:4)

என்ற இந்த வசனத்தில் மனிதன் தன்னில் ஏற்படுத்திக் கொண்டுள்ளதும், பெருமை பாராட்டுவதுமான கனம் காணாமல் போய்விடும் .அன்றைய தினத்தில் வரும் சகிக்க முடியாத துன்பங்களை அவன் தனது பொறுமை, ஸ்திர புத்தி. சாந்தம் முதலியவற்றையும் இழந்துவிடுவான்.

இரவு நேரங்களில் விளக்குகளில் வந்து விழுந்து கரிந்து போகிற விட்டில்பூச்சியான ஈசல் போன்றவற்றைப் போல் மெய்மறந்து தன்னுணர்வு இல்லாமல் இங்கும் அங்குமிங்குமாக நிலையற்றவனாக தடுமாற்றத்துடன் அந்நாளில் அலைவான்.

அந்நாளில் ஸ்திரத்தன்மை கொண்ட மலைகளே பஞ்சைப் போல் பறக்கும் என்பதாக குர்ஆனில் ..

وَتَكُوْنُ الْجِبَالُ كَالْعِهْنِۙ

மலைகள் பஞ்சைப் போல் பறந்துவிடும்.

(அல்குர்ஆன்: 70:9)

மலைகளுக்கே இந்நிலை என்றால், மனிதனின் நிலை என்னவாகும் ? ஈசல்களைப் போல் சிதறி விடுவார்கள் .

இதற்கு இறைவன் ஈசல்களை ஏன் உவமானமாக காட்டுகிறான் ? .... அதாவது

فَاِذَا نُفِخَ فِى الصُّوْرِ فَلَاۤ اَنْسَابَ بَيْنَهُمْ يَوْمَٮِٕذٍ وَّلَا يَتَسَآءَلُوْنَ

சூர் (எக்காளம்) ஊதப்பட்டு விட்டால், அந்நாளில் அவர்களுக்கிடையில் பந்துத்துவம் (உறவுகள்) இருக்காது. ஒருவரின் (சுக துக்க) செய்தியை மற்றொருவர் விசாரிக்கவும் மாட்டார். (தத்தம் கவலையே பெரிதாக இருக்கும்.)

(குர்ஆன்: 23:101)

ராணி ஈசல்கள் ஒரு நாளைக்கு 2000 முட்டைகளை பெற்றெடுப்பதால் , வெளி வந்த ஈசல் குஞ்சுகளை உணவூட்டி வளர்ப்பது என்னமோ வேலைக்கார ஈசல்களே . இதனால் ராணி தாய் ஈசலுக்கும், ஈசல் குஞ்சுகளுக்குமிடையே எவ்வித பந்தமோ பாசமோ இருக்காது.

தாய் ஈசல்கள் ஒரு நாளைக்கு 2000 முட்டைகளை ஈன்றெடுப்பதற்கான சிறப்பு பணியை செய்து கொண்டிருக்கும் போது ,பெற்றெடுத்த குஞ்சை உச்சி முகர்ந்து வாஞ்சையுடன் எப்படி பார்க்க முடியும் ?

மேலும் வேலைக்கார ஈசல்களுக்கும் , வளர்த்த ஈசல் குஞ்சுகளுக்குமிடையே ஏதோ வேலை என்ற கடமை உணர்வு மட்டுமே இருக்குமே தவிர, அது பாசமாக இருக்காது .

எனவேதான் கியாமத் நாளின் பொழுதில் தான் பெற்றெடுத்த மக்களுக்கிடையே எவ்வித பந்தமோ பாசமோ இருக்காது என்பதற்காகத்தான் இறைவன் ஈசல்களை உதாரணம் காட்டினானேத் தவிர , அதன் வாழ்நாட்களை குறித்து அல்ல .

ரஹ்மத் ராஜகுமாரன்.

**Rahmath Rajakumaran**

ஈசல் உண்பது ஹலாலா ? தெரியவில்லை. விசாரிக்கவும்

ஈசலில் பல வகைகள் இருக்கின்றன. நெல் ஈசல். மாலைக்கண் ஈசல், கொழுந்தீசல், நாய் ஈசல் இவற்றில் நாய் ஈசலைத் தவிர மற்ற அனைத்தும் உண்ணத்தகுந்தவை.

எவ்வாறு சமைக்க வேண்டும் ?

ஈசலை சாக்குப் பையில் போட்டு இரண்டு புறமும் பிடித்துக் கொண்டு குலுக்கும் போது ஈசலின் சிறகுகள் உதிர்ந்துவிடும். பின்னர் சிறகுகளை நீக்கி விட்டு காய வைக்க வேண்டும். உண்ணுவதற்கேற்ற பகுதியை அரிசியோடு சேர்த்து வறுத்து சாப்பிடலாம்.நேரடியாக எண்ணெயில் பொரித்து மசாலா பூரி போன்றும் சாப்பிடலாம். தேனி, கம்பம், கோயம்புத்தூர் பகுதிகளில் கம்பு, கேழ்வரகு, தினை போன்ற சிறுதானிய மாவுடன், ஈசல் பூச்சி, வெல்லம் சேர்த்து உருண்டை செய்து சாப்பிடும் பழக்கும் உண்டு. ஈசலில் ஏகப்பட்ட மருத்துவ குணங்கள் உள்ளன.

ஈசலில் உள்ள மருத்துவக் குணங்கள் :

அவற்றைப் பற்றி சித்த மருத்துவர் செந்தில் கருணகாரனிடம் கேட்டோம் "சித்த மருத்துவத்தில் ஈசல் ‘இந்திர கோபப் பூச்சி’ என்று அழைக்கப்படுகிறது. இது பெரும்பாலும் ஸ்டார்ச் அதிகமாகக் கிடைக்கும் பகுதிகளில்தான் உயிர்வாழும். இதை நேரடியாகவோ அல்லது உணவுப் பொருள்களுடனோ சேர்த்து சாப்பிடலாம். இதில் செம்பு சத்து அதிகமாக உள்ளது. இதை உணவாக உட்கொள்ளும்போது உடலுக்கு பல்வேறு நன்மைகள் கிடைக்கின்றன. உதாரணமாக, உடலுக்கு சூடு கொடுக்கும். ஆண்மைத்தன்மையை அதிகப்படுத்தும். விந்தணுக்களை கெட்டிப்படுத்தும். பிராஸ்டேட் சுரப்பிகளின் வீக்கத்தை குறைக்கும். நரம்புகளை வலுப்படுத்தும் நெர்வைன் டானிக்காக (nervine tonic ) செயல்படுகிறது, ஈசலை எண்ணெயில் போட்டு காய்ச்சி அந்த எண்ணெயை தசைப்பிடிப்பு உள்ள பகுதிகளில் தடவினால் தசைப்பிடிப்புகள் நீங்கும். மேலும் இதை எரித்து சாம்பலாக்கி தண்ணீருடன் கலந்து குடிக்கும்போது கக்குவான் இருமல் சரியாகும். இதை ஜாதிக்காயுடன் சேர்த்து பயன்படுத்தினால் உடலில் ஏற்படும் தேவையற்ற வலிகள் (சூலை நோய்) நீங்கும்.

ஈசலை நன்றாக அரைத்து மாவாக்கி அதனுடன் தேன்மெழுகை உருக்கி எடுத்த எண்ணெயை கலந்து உறைய வைக்கவேண்டும். இந்த க்ரீமை மூட்டுவலி உள்ள இடத்தில் தடவினால் மூட்டுவலி குணமாகும். இளம்பிள்ளை வாதம், பக்கவாதம் (hemiplegia), முகவாதம் (facial paralysis) போன்ற நோய்களுக்கும் மருந்தாக இருக்கின்றது." என்கிறார்

இயற்கையின் படைப்பில் ஏராளமான அதிசயங்கள் கொட்டிக் கிடக்கின்றன. சிறிய செடிகள், பூக்கள், உயிரினங்களில் கூட ஏராளமான மருத்துவக்குணங்கள் நிறைந்திருக்கின்றன. பல லட்சம் செலவு செய்தாலும் தீர்க்க முடியாத வியாதிகளைக் கூடிய சிறிய மூலிகைகள், உயிரினங்கள் தீர்த்து விடுகின்றன. எனவே இயற்கையையும், நம் பாரம்பர்யத்தையும் காப்போம்! நலமோடு வாழ்வோம்!

## பூச்சிகளின் உலகம் 16

அட்டைப் பூச்சி




ثُمَّ جَعَلْنٰهُ نُطْفَةً فِىْ قَرَارٍ مَّكِيْنٍ

பின்னர் நாம் (மனிதனைப் படைப்பதற்காக) அவனை ஒரு பாதுகாப்பான இடத்தில் இந்திரியத் துளியாக்கி வைத்தோம்.

(அல்குர்ஆன்: 23:13)

ثُمَّ خَلَقْنَا النُّطْفَةَ عَلَقَةً فَخَلَقْنَا الْعَلَقَةَ مُضْغَةً فَخَلَقْنَا الْمُضْغَةَ عِظٰمًا فَكَسَوْنَا الْعِظٰمَ لَحْمًا ثُمَّ اَنْشَاْنٰهُ خَلْقًا اٰخَرَ فَتَبٰـرَكَ اللّٰهُ اَحْسَنُ الْخٰلِقِيْنَ

பின்னர் அந்த இந்திரியத் துளியை அலக் என்ற நிலையில் ஆக்கினோம்; பின்னர் அந்த அலக்கை ஒரு தசைப் பிண்டமாக்கினோம்; பின்னர் அத்தசைப்பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்; பின்னர் அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவித்தோம்; பின்னர் நாம் அதனை வேறு ஒரு படைப்பாக (மனிதனாகச்) செய்தோம். (இவ்வாறு படைத்தவனான) அல்லாஹ் பெரும் பாக்கியமுடையவன் - (படைப்பாளர்களில் எல்லாம்) மிக அழகான படைப்பாளன். (அல்குர்ஆன் : 23:14)

மேற்கண்ட குர்ஆன் வசனத்தில் வரும் அலக்கா (علقة) எனும் அரபிச் சொல்லுக்கு, மன்திக் என்ற அகராதிப் பொருள்படி 400 அர்த்தங்கள் அவற்றில் இந்த 3 வார்த்தைகள் உட்பட .

1) அட்டைப் பூச்சி.

2) தொடுக்கிக் கொண்டிருக்கும் ஒரு பொருள்

3) இரத்தக் கட்டி

இந்த அலக்கா (علقة) நிலையிலுள்ள கருவை அட்டைப் பூச்சி (Leech)-ன் புறத்தோற்றத்துடன் ஒப்பீடு செய்வோமானால், படத்தில் உள்ள உருவ ஒற்றுமையைக் காண முடிகின்றது

மேலும், இந்த அலக்கா (علقة) என்ற நிலையில் கருவானது தாயின் கருவறையில் ஒட்டிக் கொண்டிருக்கும் நிலையில் தாயின் இரத்தத்தை உறிஞ்சி தன் வளர்நிலைகளுக்கு சக்தியைப் பெற்றுக் கொள்கின்றது.

இந்த செயல்பாடு குளத்தில் காணப்படும் அட்டைப் பூச்சியானது பிற பிராணிகள் அல்லது விலங்கினங்களின் தோலின் மேற்பரப்பில் ஒட்டிக் கொண்டு, அந்த பிராணியின் இரத்தத்தை உறிஞ்சி

உயிர் வாழ்வதை ஒத்து இருக்கின்றது. ( Human Development as Described in the Qur'an and Sunnah, Moore and Others. P.36.)

அலக்கா (علقة) எனும் அரபிப் பதத்திற்கான இரண்டாவது பொருளானது தொட்டுக் கொண்டு அல்லது தொங்கிக் கொண்டிருக்கும் ஒரு பொருள் எனப்படும். தாயின் கர்ப்ப அறையில், கருவின் முதல் ஆரம்ப வளர் நிலையில் எவ்வாறு கரு அமைந்திருக்கும் என்பதையும், அது எவ்வாறு கர்ப்ப அறையில் தொடுத்துக் கொண்டிருக்கின்றது

மேலும் அலக்கா (علقة) எனும் பதத்திற்கான மூன்றாவது பொருளாக இரத்தக் கட்டி எனப் பொருள் கொள்ளப்படுகின்றது. கருவின் ஆரம்ப வளர்நிலையில் அதை நோக்குவோமானால், அதன் புறத் தோற்றமும் அதை மூடி இருக்கும் பை போன்ற சவ்வுத் தோற்றமும், உறைந்த நிலையில் உள்ள இரத்தக் கட்டி போன்ற அமைப்புடன் இருப்பதை காண முடியும்.

கருவின் ஆரம்ப நிலையில் அதிகப்படியான இரத்த ஓட்டம் கருவின் மீது பாய்ச்சப்படுவதால், அதன் புறத் தோற்றம் உறைந்த நிலையிலுள்ள இரத்தக் கட்டி போன்று தோற்றமளிக்கின்றது. (Human Development as Described in the Qur'an and sunnah, Moore and Others., Page.37-38).

மேலும் கருவின் வளர்நிலையில் அதனது மூன்றாவது வாரம் வரை இரத்த ஓட்டச் சுழற்சி செயல்படாதிருக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.(The Developing Human, Moore and Persuad, 5th ed., P.65).

மேற்கண்ட அலக்கா (علقة) எனும் அரபிப்பதத்திற்கான மூன்று அர்த்தங்களுமே அது தரும் பொருள்களுக்கான விளக்கத்திற்கு எந்த வித மாறுபாடும் இல்லாமல் ஒத்திருப்பதை நாம் காண முடிகின்றது.

சரி , அட்டைப்பூச்சியை பற்றி சொல்றேன்

...நிறுத்தி வைக்கப்பட்ட பூச்சி மருத்துவத்தை 1960 பிறகு சில பகுதிகளில் இந்த அட்டை பூச்சி தெரபியை மீண்டும் ஆரம்பிக்கின்றனர். இதில் பல்வேறு நோய்களை அட்டைப் பூச்சி தீர்க்கிறது. இந்த வைத்தியத்திற்கு " ஹிருடோதெரபி " என்று பெயர்.

எவ்வாறு செயல்படுகிறது?

அட்டைப்பூச்சியின் எச்சிலில் புரோடியேஸ் தடுப்பு என்ற என்சைம் மற்றும் ரத்த உறைதலை எதிர்க்கும் மூலக்கூறுகள் உள்ளன. இவை புற்று நோய் மருந்துகளாக மருத்துவத்துறையில் பயன்படுகின்றன.

அதேபோல், அதன் எச்சிலில் இருக்கும் கிலான்டென் என்ற பொருள் பல்வேறு புற்றுநோய்கள் உருவாவதை தடுக்கின்றன என மருத்துவ ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

ஹிருடின் என்ற புரதம் உள்ளது. அவை புற்று நோயை எதிர்க்கும் மருந்தாக செயல்படுகிறது. காது சம்பந்தப்பட்ட பிரச்சனைகளை குணப்படுத்தவும் அட்டைப் பூச்சிகள் பயன்படுத்தப்படுகின்றன.

பாதிக்கப்பட்ட இடங்களில் அட்டைப்பூச்சிகளை நேரடியாக விட்டுவிடுவார்கள். இவை இதய நோய்களுக்கு, இரத்தக்கட்டிகளை கரைப்பதற்கு, முகப்பரு, சொட்டை முடியில் முடி வளர என பல்வெறு நோய்களுக்கு பயன்படுத்தப்படுகிறது. அட்டைபூச்சியின் எச்சில் இரத்தத்தின் அடர்த்தியை குறைக்கிறது. இதனால் இதயக் குழாயினுள் இரத்தம் எளிதாக பாய்கிறது.

ஆறாத காயங்களை குணப்படுத்துகிறது. முக்கியமாக அறுவை சிகிச்சைக்கு பின் உண்டாகும் ரணங்களை வெகுவிரைவில் ஆற்றுகிறது. உடலில் செல்லிறப்பு அதிகமாக இருந்தால், அல்லது ரத்த ஓட்டம் குறைவாக இருக்கும்போது, இந்த அட்டைப் பூச்சிகள் அவைகளுக்கு தூண்டுதல் அளித்து, வேகமாக செயல்பட வைக்கிறது.

மூட்டு சம்பந்தப்பட்ட நோயான ஆஸ்டியோ ஆர்த்ரைடிஸை குணப்படுத்தவும் அட்டைபூச்சி பயன்படுத்தப்படுகின்றன. இந்த நோயில் சொல்லத்தகுந்த முன்னேற்றம் கொடுக்கிறது.

ஆனால் அட்டைப்பூச்சி தெரபியை தகுந்த அனுபவம் வாய்ந்த மருத்துவர்களே கையாள வேண்டும். ஏனெனில் இவை அலர்ஜி, தழும்பு, சரும எரிச்சல் போன்ற பக்கவிளைவுகளையும் கொடுக்கும் என ஆயுர்வேத மருத்துவம் சொல்கிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 17**

(தேன் கூட்டில் ஏன் அறுங்கோண வடிவம்? )



தேனீக்களோட அறிவியல் பெயர் ஆபிஸ் மெல்லிஃபெரா.

அதோட அடிவயிற்றுல சுரப்பிகள் இருக்கு. அந்த சுரப்பிகள்ல இருந்து சுரக்கிற மெழுகை வெச்சு தேனீக்கள் தேன்கூட்டை கட்டுது. அந்த மெழுகை விஞ்ஞானத்தால் உற்பத்தி செய்ய முடியலை அது வேற விஷயம் .

8 கிலோ தேனை சேகரித்தால் 1 கிலோ மெழுகு கிடைக்கிறது. அதனால் மெழுகை சிக்கனமாகவும் , மிகச் சிறந்ததாக தேன் கூட்டை அமைக்க வேண்டும் .அதற்கு எந்த மாதிரி டிசைன் அமைக்க வேண்டும் ?

வடிவியல் அடிப்படையில் வட்ட வடிவமே இந்தக் குறிக்கோளை அடைய உதவும். ஆனால் வட்டவடிவில் நெருக்கமாக அமைக்கப்பட்ட அறைகளின் இடையில் சிறு சிறு இடைவெளிகள் விட நேரும். இந்த இடைவெளிகளும் தேனீக்கள் நுழையமுடியாத அளவில் மிகச் சிறியவையாக அமைந்து விடுவதால் தேனீக்களாலும் பயன்படுத்த வழியின்றி போகும். இடம் விரயமாக அறைகளுக்கு இடையே இடத்தை அடைக்கும் வடிவங்களாக அந்த இடைவெளிகள் அமைந்துவிடும். எனவே அதிக சேமிப்பு குறிக்கோள் என்ற அடிப்படையில் வட்டவடிவம் சிறந்ததாக இருந்தாலும், அறைகளை நெருக்கமான வகையில் அமைக்க சரியான வடிவத் தேர்வாக இல்லாது போய் விடுகிறது. இட விரையத்தை ஏற்படுத்துகிறது.

முக்கோண வடிவமும், செவ்வக வடிவமும் ,சதுர வடிவமும் இடைவெளியற்ற நெருக்கமான முறையில் அறைகளைக் கட்ட அமைக்க உதவினாலும், கொள்ளளவு அடிப்படையில் அதிக ஆதாயம் கொடுக்க வழியற்ற வடிவங்களாக அமையும். மேலும் கூட்டின் எந்த பக்கத்தில் பாரம் அதிகமானாலும் சதுரமோ , செவ்வகமோ , முக்கோணமோ அதன் பக்கங்கள் வளையும். இதனால் கூட்டின் உறுதிக்கு பங்கம் விளைகிறது .

ஐங்கோண வடிவ அறைகளும் வடிவமைப்பிலும் தேவையற்ற இடைவெளிகள் அமையும். படங்களை பாருங்கள் .

எனவே வடிவியல் கணித முறையில் கணக்கிடும்பொழுது, குறைந்த பரப்பளவில், அதிக கொள்ளளவு கொண்ட அறைகளை, குறைந்த அளவு மெழுகு கொண்டு உறுதியுடன் அமைக்க உதவும் வடிவம் எங்கிருந்தோ செய்தி வந்தாற்போல அவைகள் அறுங்கோணத்தை தேர்வு செய்திருக்கிறது.

சரி அறுங்கோணம் என்று முடிவாகிவிட்டது . அறுங்கோணத்தின் வேறு என்ன சிறப்பியல்புகள் ?

சொல்றேன் .

அறுங்கோண வடித்தில் , ஆர்ச் தொழில் நுட்பம் உள்ளது . ஆர்ச் வடிவத்தில் இருந்தால் அதற்கு உறுதிச் சமநிலை அதிகமாகிறது .

உதாரணமாக இரண்டு டம்பளரை விலக்கி வைத்து அதன் மீது மெல்லிய பேப்பரை வைத்து , பேப்பர் மீது பாரமான பொருளை வைத்தால் பாரம் தாங்காமல் பேப்பரில் இருந்து பாரம் கீழே விழும் .

அதே சமயம் அந்த பேப்பரையே நீள வாட்டத்தில் பெண்கள் சேலை விரலால் கொசுவது மாதிரி அங்கும் இங்குமாக மடித்து இரண்டு டம்பளர் மீது ஆர்ச்களாக மடித்த பேப்பரை வைத்து , அதே பாரத்தை அதன் மீது வைத்தால் பேப்பர் பாரத்தை இப்போது தாங்குகிறது. காரணம் ஆர்ச்சின் உறுதி சமநிலை . எனவே அறுங்கோணத்தில் 3 ஜோடி ஆர்ச் . இதனால் எந்த பக்கத்தில் இருந்து பாரம் அழுத்தினாலும் உறுதியாக கூடு இருக்கும் . இதனால்தான் சர்ச். பள்ளிவாசல்கள் போன்றவற்றின் நுழைவு வாயில்கள் ஆர்ச் வடிவில் அமைக்கப்படுகிறது .

தேன்கூட்டின் அமைப்பு அமைந்திருக்கும் விதத்தால் தேனீக்களால் துல்லியமாகக் கோணங்களை அளக்க இயலும் என்பது நமக்குத் தெரிய வருகிறது. தேன்கூட்டின் அறுங்கோண அறைகளின் ஒவ்வொரு கோணத்தையும் சரியாக 120 பாகைகள் இருக்குமாறு ட்ரிக்னா மெட்ரி கணிதம் படிக்காமலேயே தேனீக்கள் கூடு கட்டுகின்றன.

தேன்கூட்டின் அமைப்பு மிக நெருக்கமாக அமைக்கப்பட்ட அறுங்கோண அறைகளைக் கொண்டது. ஒவ்வொரு அறையும் ஒரு தேனீ நுழையும் அளவிற்கும் அமைக்கப்பட்டதாகும். அத்துடன் அவை குறைந்த பரப்பளவில், இடமும் விரையமாகாமல் அதிக கொள்ளளவு இருக்கும் வகையில் அறுங்கோண அறைகள் உள்ளன .

இந்த விஷயத்தையெல்லாம் துல்லியமாக கவனித்து 1999-ல, கணித பேராசிரியர் தாமஸ் சி. ஹேல்ஸ் இதை நிரூபிச்சு காட்டுனார். தேன்கூட்டோட அறுங்கோண வடிவம்தான் சிறந்த வடிவம்... இந்த வடிவத்துல ஒரு இடத்தை சம அளவுல பிரிக்க முடியும்... குறைவான பொருள்களை வெச்சு நிறைய அறைகளை கட்ட முடியும் . கூடு மெக்கானிக்கலா மிக உறுதியாக இருக்கிறது என்பதை ஆராய்ச்சி மூலமா நிரூபித்தார் .

இன்னைக்கு விஞ்ஞானிகள் தேனீக்களோட கூட்டை காப்பியடிச்சு உறுதியான கட்டிடங்கள் கட்டுறதுக்கு... கொஞ்ச இடத்துல நிறைய அறைகள் கட்டுறதுக்கு முயற்சி செஞ்சிருக்காங்க.

உதாரணமா, தேன்கூட்டோட டிஸைனை பயன்படுத்தி, குறைஞ்ச எடையில உறுதியான ‘பேனல்களை’ (panels) வடிவமைக்கிறாங்க. அதை விமானங்களை தயாரிக்கிறதுக்கு பயன்படுத்துறாங்க, இதனால நிறைய எரிபொருள் செலவுகள் மிச்சமாகுது.

நீங்க என்ன நினைக்கிறீங்க? இந்த தேன்கூட்டோட டிஸைன் தானா வந்திருக்குமா? இல்ல வேற யாராவது டிஸைன் பண்ணாங்களா?

وَاَوْحٰى رَبُّكَ اِلَى النَّحْلِ اَنِ اتَّخِذِىْ مِنَ الْجِبَالِ بُيُوْتًا وَّمِنَ الشَّجَرِ وَمِمَّا يَعْرِشُوْنَۙ

உங்களது இறைவன் தேனீக்கு மலைகளிலும், மரங்களிலும், மக்கள் கட்டும் கட்டிடங்களிலும் கூடுகளை அமைத்துக் கொள்ளும்படி அறிவூட்டினான்.

(அல்குர்ஆன்: 16:68)

ثُمَّ كُلِىْ مِنْ كُلِّ الثَّمَرٰتِ فَاسْلُكِىْ سُبُلَ رَبِّكِ ذُلُلًا يَخْرُجُ مِنْ بُطُوْنِهَا شَرَابٌ مُّخْتَلِفٌ اَلْوَانُهٗ فِيْهِ شِفَآءٌ لِّلنَّاسِ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيَةً لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ

அன்றி "நீ ஒவ்வொரு புஷ்பத்திலிருந்தும் புசித்து, உனதிறைவன் உனக்கு அறிவித்த எளிதான வழியில் (உன்னுடைய கூட்டுக்குள்) ஒடுங்கிச் செல் (எனக் கட்டளையிட்டான்.) இதனால் அதன் வயிற்றிலிருந்து பல நிறங்களையுடைய ஒரு பானம் (தேன்) வெளியாகின்றது. அதில் மனிதர்களுக்கு நிவாரணமுண்டு. நிச்சயமாக இதிலும் சிந்திக்கக்கூடிய மக்களுக்கு ஓர் அத்தாட்சி இருக்கிறது.

(அல்குர்ஆன்: 16:69)

ர.ரா

## பூச்சிகளின் உலகம் 18

தேனீக்களின் நடன மொழியின் மர்மம்

தேன் சேகரிப்பதற்கான தகவல்களை தேனீக்கள் பகிர்ந்து கொள்ளும் முறை அட்டகாசமானது .

1688 ஆம் ஆண்டில் ஆங்கில மன்னர் சார்லஸ் II டி. ஈவ்லின் தோட்டக்காரரால் முதல் முறையாக நடனமாடும் தேனீக்கள் விவரிக்கப்பட்டுள்ளன. தனது நாட்குறிப்பில், அவர் எழுதினார்: “தேனீக்கள் வெவ்வேறு நடன அசைவுகளைப் பயன்படுத்தி ஒருவருக்கொருவர் பேசுகின்றன.

20 ஆண்டுகளுக்கும் மேலாக, ஆஸ்திரிய விஞ்ஞானி கார்ல் ஃபிரிஷ் தேனீக்களின் நடத்தை குறித்து ஆய்வு செய்தார்.

தேனீக்கள், விசித்திரமான இயக்கங்கள், சமிக்ஞைகளுடன், அதைப் பற்றி மற்ற தேனீக்களுக்கு தெரிவிக்க முடியும் என்ற முடிவுக்கு அவர் வந்தார்.

உணவுத் தேவை ஏற்படும் போது ' ஸ்கவுட்' தேனீக்கள் முன்னே சென்று பூக்கள் இருக்கும் இடத்தை கண்டுபிடித்து விட்டு கூட்டுக்குத் திரும்பும்.

கூட்டில் உள்ள மற்ற வேலைக்காரத் தேனீக்களுக்கு ஸ்கவுட் தேனீக்கள் , தாங்கள் கண்டுபிடித்த தோட்டம் அல்லது சோலை எந்த திசையில் எவ்வளவு தூரத்தில் உள்ளது என்பதை நடனமாடி தெரிவிக்கும்.

இதில் இரண்டு வித நடனங்கள் உள்ளன. வட்ட நடனம் மற்றும் வாலாட்டு நடனம்.

வட்ட நடனத்தில் வட்டமிட்டு வட்டமிட்டு பூக்கள் இருக்கும் தொலைவை மட்டும் குறிக்கும்.

வாலாட்டும் நடனத்தில் உயரப் பறந்து வாலை ஆட்டினால் சூரியன் இருக்கும் திசையில் உணவு உள்ளது என்றும், கீழே பறந்து வாலை ஆட்டினால் , சூரியனுக்கு நேர் எதிர் திசையில் தோட்டம் உள்ளது என்றும் அர்த்தம்.

வாலை வேகமாக ஆட்டினால், சோலை அருகில் உள்ளது என்றும். வாலை மெதுவாக ஆட்டினால் , சோலை தொலைவில் உள்ளது என்று அர்த்தம்.

சூரியன், சோலையின் திசை , தங்கள் கூட்டின் இருப்பிடம்... இந்த மூன்றையும் சம்பந்தப்படுத்தி நடன அசைவுகள் இருக்கும் . இந்த நுட்பமான நடன ரகசியத்தைக் கண்டுபிடித்த ஆஸ்திரிய விஞ்ஞானி கார்ல்வான் ஃப்ரிஸ்க்கு 1910-ல் நோபல் பரிசு கொடுத்தார்கள்.

وَمَا مِنْ دَآبَّةٍ فِى الْاَرْضِ وَلَا طٰٓـئِرٍ يَّطِيْرُ بِجَنَاحَيْهِ اِلَّاۤ اُمَمٌ اَمْثَالُكُمْ‌ مَا فَرَّطْنَا فِى الْـكِتٰبِ مِنْ شَىْءٍ‌ ثُمَّ اِلٰى رَبِّهِمْ يُحْشَرُوْنَ

பூமியில் ஊர்ந்து திரியக் கூடியவைகளும், தன்னுடைய இரு இறக்கைகளால் (ஆகாயத்தில்) பறக்கக் கூடியவைகளும் உங்களைப் போன்ற (உயிருள்ள) படைப்புகளே (சமுதாயங்களே) அன்றி வேறில்லை. (இவைகளில்) ஒன்றையுமே (நம்முடைய பதிவுப்) புத்தகத்தில் (லவ்ஹுல் மஹ்ஃபூளில்) குறிப்பிடாது நாம் விட்டுவிடவில்லை. பின்னர் (ஒரு நாளில்) இவைகளும் தங்கள் இறைவனிடம் கொண்டு வரப்படும்.

(அல்குர்ஆன்: 6:38)

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 19**

(தேன் ஆகுமானதுதான்)



ثُمَّ كُلِىْ مِنْ كُلِّ الثَّمَرٰتِ فَاسْلُكِىْ سُبُلَ رَبِّكِ ذُلُلًا‌ يَخْرُجُ مِنْۢ بُطُوْنِهَا شَرَابٌ مُّخْتَلِفٌ اَلْوَانُهٗ فِيْهِ شِفَآءٌ لِّلنَّاسِ‌ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيَةً لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ

அன்றி "நீ ஒவ்வொரு புஷ்பத்திலிருந்தும் புசித்து, உனதிறைவன் உனக்கு அறிவித்த எளிதான வழியில் (உன்னுடைய கூட்டுக்குள்) ஒடுங்கிச் செல் (எனக் கட்டளையிட்டான்.) இதனால் அதன் வயிற்றிலிருந்து பல நிறங்களையுடைய ஒரு பானம் (தேன்) வெளியாகின்றது. அதில் மனிதர்களுக்கு நிவாரணமுண்டு. நிச்சயமாக இதிலும் சிந்திக்கக்கூடிய மக்களுக்கு ஓர் அத்தாட்சி இருக்கிறது.

(அல்குர்ஆன்: 16:69)

வள்ளுஹா சூராவை ஒழுங்காக விளங்காதவர்கள்தான் 'அபஸவதவல்லா, யா அய்யுஹன்னபிய்யு லிம துஹர்ரிமு' போன்ற ஆயத்துக்களை தவறாக விளங்கிக் கொண்டு அண்ணல் நபியை அல்லாஹ் கண்டித்தான் என்பதற்கு மேற்கோள் காட்டுகிறார்கள். இதோ அந்த இரண்டு ஆயத்துக்களின் விளக்கத்தைக் காண்போம்.

يَا أَيُّهَا النَّبِيُّ لِمَ تُحَرِّمُ مَا أَحَلَّ اللَّهُ لَكَ ۖ تَبْتَغِي مَرْضَاتَ أَزْوَاجِكَ ۚ

ஓ மறைவானவற்றை அறிவிக்கக் கூடியவரே (நபியே) நீங்கள் உங்களுடைய மனைவிகளின் பொருத்தத்திற்காக அல்லாஹ் உங்களுக்கு ஆகுமாக்கி வைத்ததை உங்கள் மீது நீங்கள் ஏன் ஹராமாக்கிக் கொள்கிறீர்கள்?

-அல்குர்ஆன் 66:1

இந்த வசனம் இறங்க காரணமாவது ஹஜ்ரத் நபிகள் நாயகம் அவர்கள் அடிக்கடி தனது துணைவியார் ஹஜ்ரத் ஜைனப் பின்து ஜஹ்ஷ் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் இல்லம் சென்று அவர்கள் தரும் தேனை பிரியமாக அருந்துவார்கள். இதனால் ஆங்கே அதிக நேரம் தங்கும் நிலை ஏற்பட்டது.

இது ஹழ்ரத் ஆயிஸா ரலியல்லாஹு அன்ஹா, ஹழ்ரத் ஹஃப்ஸா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோருக்குப் பிடிக்கவில்லை. ரோஷம் ஏற்பட்டது. எனவே இருவரும் கூடிப்பேசி ஒரு முடிவெடுத்தனர்.

நம் இருவரில் யாரிடம் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வந்தாலும் நாம் இப்படிச் சொல்ல வேண்டும். 'யாரசூலல்லாஹ்! உங்கள் வாயிலிருந்து கருவேல பிசின் வாடை வீசுகிறதே அதைச் சாப்பிட்டீர்களா? என்று நாம் கேட்க வேண்டும்.

ஹழ்ரத் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முதலில் ஹழ்ரத் ஹஃப்ஸா ரலியல்லாஹு அன்ஹா இடம் வந்தார்கள். அப்போது திட்டமிட்டபடி ஹழ்ரத் ஹஃப்ஸா ரலியல்லாஹுஅன்ஹா கேட்டார்கள்.

'நான் கருவேல பிசின் சாப்பிடவில்லையே. ஜைனப் இடம் தேனைத்தான் சாப்பிட்டேன். (தேன் சாப்பிடுவதால் அதிக நேரம் நான் ஜைனப் அவர்களிடம் தங்குவது உங்களுக்குப் பிடிக்கவில்லை) எனவே இனி அந்த தேனை நான் சாப்பிட மாட்டேன்' என்று சத்தியம் செய்த நபிகள் நாயகம் அவர்கள் 'இந்த விஷயத்தை யாரிடமும் சொல்லாதே' என்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள். (நூல்: புகாரி ஷரீஃப் வால்யூம் 2, பக்கம் 729)

ஹழ்ரத் ஆயிஷா, ஹழ்ரத் ஹஃப்ஸா, ஹழ்ரத் உம்மு ஹபீபா, ஹழ்ரத் ஸவ்தா ரலியல்லாஹு அன்ஹும் ஆகிய ஐவரும் குறைஷி குலத்தைச் சார்ந்தவர்கள்.

ஹழ்ரத் ஜைனப் பின்த் ஜஹ்ஷ், ஹழ்ரத் மைமூனா, ஹழ்ரத் ஜுவைரிய்யா, ஹழ்ரத் ஸஃபிய்யா ரலியல்லாஹு அன்ஹும் ஆகிய நால்வரும் குறைஷி அல்லாதவர்கள்.

ஹழ்ரத் ஹஃப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் 'இனி நான் தேன் அருந்த மாட்டேன்' என்று சொன்னதோடு 'எனக்குப் பின்னர் ஹழ்ரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், உன் தந்தை ஹழ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் கலீஃபா ஆவார்கள்' என்றும் சுபச் செய்தி சொன்னார்கள்.

நூல்: தஃப்ஸீர் நூருல் இர்ஃபான் பக்கம் 894.

ஆக நான் தேன் அருந்தமாட்டேன் என்று எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சத்தியமிட்டபோதுதான் 'ஓ நபியே! (மறைவானவற்றை அறிவிப்பவரே) அல்லாஹ் உங்களுக்கு ஆகுமாக்கி வைத்ததை நீங்கள் ஏன் ஹராமாக்கிக் கொள்ளாதீர்கள்' (அல்குர்ஆன் 66:1) என்று நபியை பார்த்து அன்போடு கேட்கும் வசனத்தை அல்லாஹ் இறக்கினான்.

இந்த தஹ்ரீம் சூரா வந்த பிறகு பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஓர் அடிமையை உரிமையிட்டு சத்தியப் பரிகாரம் செய்து கொண்டார்கள்.

பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறைவனின் எந்த தடை உத்தரவையும் மீறவில்லை. எனவே இறைவன் அவர்களை கண்டிக்கவில்லை. நீங்கள் தேனை மீண்டும் பருகுங்கள் எனும் கருத்தை அன்புடன் அல்லாஹ் சொல்கிறான். யாரிடமும் சொல்லாதே என்று ஹஃபாஸாவிடம் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்ன இரண்டு ரகசியங்களை(தேன், கலீஃபாக்கள் விஷயம்) ஹழ்ரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் ஹழ்ரத் ஹஃப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் சொல்லி விட்டார்கள். அல்குர்ஆன் 66:3.

ஹழ்ரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, ஹழ்ரத் ஹஃப்ஜா ரலியல்லாஹு அன்ஹா ஆகிய இருவரும் ஒன்று கூடி 'யாரசூலல்லாஹ் உங்கள் வாயிலிருந்து கருவேலப் பிசின் வாடை வீசுகிறதே' என்று நாம்

நபியிடம் சொல்ல வேண்டும் – என்று திட்டமிட்டது, ஹழ்ரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, ஹழ்ரத் ஹஃப்ஜா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோரிடமிருந்து உருவான உண்மைக்குப் புறம்பான தகவலாகும். இதை அல்லாஹ் சொன்னபடி அம்மாதரசிகள் இருவரும் தவ்பா செய்து விட்டார்கள்.

ஸஹாபிகள் பாவமே செய்ய முடியாத நபிமார்களைப் போல பாதுகாக்கப்பட்ட மஃஸூமீன்கள் அல்ல. எனவே ஸஹாபிகளிடமிருந்து பாவம் ஏற்பட வாய்ப்புள்ளது. ஆனால் பாவத்தின் மீது நிலைத்திருக்க மாட்டார்கள். பாவம் செய்தால் உடன் இறைவனிடம் மன்னிப்புக் கேட்டு விடுவார்கள். ஏனெனில் அல்லாஹ் ஸஹாபிகளைப் பற்றி சொல்கிறான்:

" தக்வா என்னும் பரிசுத்த வாக்கியத்மை அவர்கள் மீது அல்லாஹ் உறுதிப்படுத்தினான்". (அல்குர்ஆன் 48:26) ஆதமின் மக்கள் அனைவரும் தவறிழைப்பவர்கள். தவறிழைப்பவர்களில் சிறந்தவர்கள், தவறை உணர்ந்து தவ்பா செய்பவர்கள்.

அறிவிப்பு: ஹழ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு நூல்: திர்மிதி, மிஷ்காத் பக்கம் 204.

எனவே ஹழ்ரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, ஹழ்ரத் ஹஃப்ஜா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோர்கள் மிகச் சிறந்தவர்களாவர்.

மேலும் ஹழ்ரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, ஹழ்ரத் ஹஃப்ஜா ரலியல்லாஹு அன்ஹா ஆகிய இருவரும் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நெருக்கம் தாங்களிருவருக்கும் அதிகமாக கிடைக்க வேண்டும் என்பதற்காகத்தான் நபி அவர்களிடம் தேன் விஷயத்தில் உண்மைக்குப் புறம்பான தகவலைத் தந்தனர்.

ரஹ்மத் ராஜகுமாரன்

## பூச்சிகளின் உலகம் 20

(வேதியல் மொழி பேசும் எறும்புச் சமுதாயம்)




எறும்பியல் (Myrmecology) என்பது, எறும்புகள் பற்றி அறிவியல் அடிப்படையின் ஆய்வு செய்யும் துறையாகும். இது பூச்சியியலில் கிளைத்துறை ஆகும்.

எறும்புகள் எவ்வாறு வரிசையாகச் செல்கின்றன அவற்றுக்கு கண் உண்டா அவை வரிசையில் செல்லும் போது சில மோதிக்கொள்வது போல் தோன்றுவது ஏன் ? இப்படி நிறைய கேள்விகளை கேட்கத் தோன்றும். சொல்றேன்.

ஓரிடத்தில் உணவு இருப்பதைப் பார்க்கும் முதல் எறும்பு, அதுகளின் அருகே சென்று தன் தலையில் உள்ள ஆண்டெனா போன்ற உறுப்பால் அதைத் தொட்டுப் பார்க்கிறது. அதன் பிறகு அங்கிருந்து திரும்பிச்செல்லும்போது,உடலின் பின்பகுதியிலிருந்து ஃபெரமோன் என்ற வேதிப்பொருளைத் தரையில் கோடுபோல இட்டுக்கொண்டே செல்கிறது.

இந்தக்கோடு அதன் கூடு வரை நீளும். இதை மோப்பம் பிடிக்கும் மற்ற எறும்புகளும் அந்தத் தடத்தை பின்பற்றிச் சென்று, உணவு இருக்கும் இடத்தை விரைவாகச் சென்றடைந்து விடுகின்றன.

அடுத்த தடவை எறும்பு வரிசையாக கியூவில் போகும்போது, ஒரு சந்தர்ப்பத்தில் அவற்றின் பாதையில் இடைவெளி கிடைத்தால், அந்த இடத்தில் தரை அல்லது சுவரை விரலால் அழிப்பது போல் அழுத்தித் தேய்த்து விடுங்கள். அந்த இடம் வந்ததும் அடுத்த எறும்புகள் தடுமாறும்."ஏய்... யார்றாவன் பாதையை அழிச்சது ?" என்று எறும்பு பாஷையில் சத்தம் போடும்.

உணவைச் சேகரித்து வைப்பது எறும்பின் வேலைகளில் மிக முக்கியமானது. ஆனால் இப்படி சேகரித்து வைக்கும் உணவு, மழைக்காலத்தில் பூசனம் பூத்து கெட்டுப்போய் விடாமல் இருக்க அவை ஒரு வேதிப்பொருளை பயன்படுத்துகின்றன. அந்த வேதிப்பொருளும், அதன் இயல்பும் தற்போது கண்டறியப்பட்டு மருந்து தயாரிப்பில், அது பயன்படுத்தப்படுகிறது.

உணவுப் பாதை போடுவது போலவே, ஆபத்து ஏற்படுவதையும் வேறொரு வேதிப்பொருளை வெளியிட்டு சிப்பாய் எறும்புகள் எறும்புக் காலனிக்கு எச்சரிக்கை அறிவிப்பை வெளியிடுகின்றன. அதேபோல ஆண் எறும்பை இனப்பெருக்கம் செய்ய ஈர்க்கவும் ராணி எறும்புகள் ஒரு வகை ஃபெரமோனை வெளியிடுகின்றன.

இப்படியாக வழிகாட்ட, ஆண் எறும்பை ஈர்க்க, எச்சரிக்கை செய்ய என பல்வேறு செயல்பாடுகளுக்காக எறும்பு வெளியிடும் எல்லாமே வேதிப்பொருளும் ஃபெரமோன்தான்.

ஆனால், ஒவ்வொரு செயல்பாட்டுக்கான ஃபெரமோனின் வகையும் வேறுபட்டிருக்கும். இந்த வேறுபாட்டை வைத்தே, மற்ற எறும்புகள் அந்தந்த விஷயத்தை புரிந்துகொள்கின்றன. இப்படியாக எறும்புகளின் வாழ்க்கையில் வேதியியல் மொழி மிகப்பெரிய பங்காற்றுகின்றது.

ஒவ்வொரு எறும்பின் காலனியில் முகப்பில் இருக்கும் காவலாளி எறும்பு, அங்கே வரும் ஒவ்வொரு எறும்பையும் முகர்ந்து பார்த்துவிட்டு, நீ அந்நியனா ? எங்கள் குழுவைச் சார்ந்தவனா ? என்று உறுதி செய்த பிறகே, உள்ளே செல்ல அனுமதிக்கும். எறும்புகள் நகர்ந்து செல்லும்போது சில நேரம் ஆண்டெனாவை, மற்றொரு எறும்பின் தலையில் வைத்து, தங்கள் கூட்டத்தைச் சேர்ந்ததுதானா என்று அடிக்கடி பரிசோதிப்பதையும் நீங்கள் பார்த்திருக்கலாம்.

துனீசியா நாட்டின் மத்திய தரைக் கடல் பகுதியில் வாழும் ஒருவகை கறுப்பு இன எறும்புகள் (Black Aunts) பாலைவனத்தில் கூடுகள் அமைத்து வாழந்து வருகின்றன. காலையில் சூரியன் உதயமாகி சிறிது நேரத்திற்கெல்லாம் வெப்பநிலை எழுபது டிகிரி சென்டி கிரேடு வரை உயரும் அந்த வெப்பநிலையில் உள்ள பகல் வேளையில் தனக்குத் தேவையான இரையைத்தேடி வீட்டைவிட்டு வெளியேறுகிறது.

அடிக்கடி நின்றும் திரும்பியும் வேகமாக ஊர்ந்து செல்லும் எறும்பு தனது கூட்டிலிருந்து 200 மீட்டர் (655 அடி) பரப்பளவுக்கு வளைந்தும் நெளிந்தும் ஊர்ந்து வெகுதூரம் வரை சென்று விடுகின்றன. பாதைகளை அறிவதற்கு அடையாளமாக அங்கே ஆற குளம் குட்டை ஏரி மரம் கட்டடம் என எதுவுமே இல்லை. அது தேடிய பருப்பொருட்களை சுமந்து கொண்டு என எந்தவகை அடையாளங்களும் இல்லாத பாலைவனத்தில் எப்படி துல்லியமாக தன் வசிப்பிடத்தைக் கண்டுபிடித்து வருகிறது என்பது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது.

எறும்புகளின் நீளம் உயரம் பருமன் எடை இவைகளை கருத்தில் கொண்டு அவைகள் பயணிக்கும் தூரத்தை கணக்கிட்டு மனித ஆற்றலோடு ஒப்பிடும் போது அதே பாலைவனத்தில் 35 முதல் 40 கிலோ மீட்டர் தூரம் வரை ஒரு மனிதன் பயணிப்பதற்கு சமமாகும். மனிதனால் நடைமுறையில் சாத்தியமே இல்லாத இந்த அற்புதச் செயலை சாதாரண எறும்புகள் GPS கருவிகள் , மேம்கள் எதுவும் இல்லாமல் வெற்றிகரமாக செய்து முடிக்கின்றனவே! இது எப்படி ? என சிந்திதாலே தலை சுற்றுகிறது.

எறும்புகளின் கண்களில் பிரத்தியேகமாக திசையை அறியக்கூடிய அற்புதமான ஒரு கருவியை இறைவன் பொருத்தியிருக்கிறான். மனிதனால் கண்டு பிடிக்கப்பட்ட திசைகாட்டும் கருவியைவிட பன்மடங்கு ஆற்றல் வாய்ந்தது. இந்த சிறப்புமிகு அம்சத்தால் மனிதனால் உணரமுடியாத ஒருவகை கதிர்களை எறும்புகள் உணர்கின்றன.

இந்த உணரும் கதிர்களால் வடக்கு தெற்கு என திசைகளை சரியாக அறிந்து கொள்கின்றன. இவ்வாறு திசைகளை அறியும் எறும்புகள் தங்களது கூடுகளையும் தவறாமல் அடையாளம் கண்டு கொள்கின்றன. ஒளியின் தத்துவத்தை மனிதன் அறிவதற்கு முன்னரே எறும்புகள் ஒளியைப்பற்றித் தெளிவாக தெரிந்து கொண்டு அதனைப் பயன்படுத்தி வருவது விந்தையிலும் விந்தையல்லவா? இது அல்லாஹ் வழங்கிய அற்புத ஆற்றல் அல்லவா?

தலைமைக்கு கீழ்படிந்த ஒழுங்கான பிரஜை. எல்லாமே ரொம்ப சினேகிதம். எறும்புகள் வீட்டில் பசு மாடு போல பூச்சிகளை கட்டி வளர்கின்றன. சில எறும்புகள் இன்னொரு எறும்பு காலனியில் இருந்து எறும்புகளை கடத்திக் கொண்டு வந்து அடிமைகளாக வைத்துக் கொள்கின்றன. அவற்றுக்குள் ஆக்கிரமிப்பும் உண்டு. படையெடுப்பு உண்டு.

சில ஆப்பிரிக்க, தென் அமெரிக்க எறும்பு வகைகள் ராணுவ அதிகாரிகள் வியக்கும்படி படைகளை எச்சரிக்கையுடன் நடத்திச் செல்கின்றன. முன்னணிப் படை, பக்கவாட்டு படை, ஒற்றர்கள் படை எல்லாம் உண்டு. இந்தப் படைகளைக் கண்காணிக்கவும், திடீர் என அதிரும் நில அதிர்வுகளை கேட்டதும் தன் கூட்டிற்கு என்ன ஆபத்து என்று எறும்புத் தலைவி அவ்வப்போது வெளிவந்து பார்வையிடும் .

அப்படி கண்காணித்த ஒரு தருணத்தில் நபி சுலைமான் (அலை) அவர்கள், தன் படைப்பலத்தை வழிநடத்தி வந்தார்கள்.

"மேலும் ஸுலைமானுக்கு ஜின்கள் மனிதர்கள் பறவைகள் ஆகியவற்றிலிருந்து அவரது படைகள் திரட்டப்பட்டு, அவை (தனித் தனியாகப்) பிரிக்கப்பட்டுள்ளன.

இறுதியாக, எறும்புகள் நிறைந்த இடத்திற்கு அவர்கள் வந்த போது ஓர் எறும்பு (மற்ற எறும்புகளை நோக்கி:) “எறும்புகளே! நீங்கள் உங்கள் புற்றுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள்; ஸுலைமானும் அவருடைய சேனைகளும், அவர்கள் அறியாதிருக்கும் நிலையில் உங்களை நசுக்கி விடாதிருக்கும் பொருட்டு (அவ்வாறு செய்யுங்கள்)” என்று கூறிற்று.

அப்போது அதன் சொல்லைக் கேட்டு, அவர் புன்னகை கொண்டு சிரித்தார் ". (அல்குர்ஆன்: 27:17 - 19)

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 21**

(ஏந்தல் நபியும், எறும்புச் சமுதாயமும்)




எறும்புகளின் வாழ்க்கையையினை அறிந்துகொள்ளும் ஆர்வம் நீண்ட காலமாகவே மனிதர்களுக்கு இருந்துள்ளது. பல சமுதாயங்களில் நாட்டார் ஆக்கங்களில் இது குறித்த செய்திகளைக் காணலாம். உள்ளுணர்வு, கற்றல், சமூகம் போன்ற எண்ணக்கருக்களில் ஆர்வம் கொண்டவரான, உளவியலாளர் "அக்சுத்தே ஃபோரெல் (1848–1931) "என்பவரே எறும்புகளின் வாழ்க்கையைக் கவனிப்பதன் மூலம் அறிவியல் அடிப்படையில் அவற்றை முதன்முதலில் ஆய்வு செய்தவர் ஆவார்.

1874 ஆம் ஆண்டில் சுவிட்சர்லாந்தில் " எறும்புகள் " என்னும் நூலை எழுதிய இவர் தனது வீட்டுக்கும் "எறும்புகள் குடியிருப்பு" என்று பெயர் இட்டார். ஃபோரெலின் தொடக்க ஆய்வுகள் எறும்புக் குடியிருப்பு ஒன்றில் உள்ள பல்வேறு எறும்பினங்களை கலப்பது தொடர்பிலானவை. ஒரு பரந்த பகுதியில் அமைந்த பல எறும்புக் குடியிருப்புகள் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டிருந்ததையும், சில பகுதிகளில் குடியிருப்புக்கள் தனித்தனி அரசாட்சியாகவே செயல்பட்டதையும் இவர் கவனித்தார். இதனை இவர் உலக நாடுகளின் அமைப்புக்களுடன் ஒப்பிட்டார்.

வில்லியம் மார்ட்டன் வீலர் (1865–1937) என்பவர், எறும்புகளைச் சமூக அமைப்பு என்னும் நோக்கில் ஆய்வு செய்தார். 1910ஆம் ஆண்டில், ஓர் உயிரினமாக எறும்புக் குடியிருப்புக்கள் என்னும் தலைப்பில் விரிவுரை ஒன்று நிகழ்த்தினார். இவ்விரிவுரையே பேருயிரினம் என்னும் எண்ணக்கருவுக்கான முன்னோடியாக விளங்கியது.

எறும்புக் குடியிருப்பில், உணவு பகிரப்படுவதை அடிப்படையான அம்சமாக மார்ட்டன் வீலர் கருதினார். உணவுக்கு வேதியல் சாயம் இடுவதன்மூலம் உணவு எவ்வாறு பரவுகிறது என்பதை ஆராய்ந்தார்.

ஓராசு தோனிசுத்தோர்ப் போன்றவர்கள், எறும்புகளின் தொகுதியியல் பற்றிய ஆய்வில் மனித சமுதாயத்தை விட எந்த வகையிலும் குறைவு இல்லா சமுதாயம் எறும்பு சமுதாயம் என உறுதி செய்தனர்.

உயிரியலின் பிற அம்சங்களில் வளர்ச்சி ஏற்படும் வரையில், இந்த மரபு உலகின் பல பாகங்களிலும் தொடர்ந்தது. மரபியலின் அறிமுகம், நடத்தையியல் தொடர்பான எண்ணக்கரு, அவ்வுயிரியலின் தனிப்பட்ட கௌரவம் ,அதன் வளர்ச்சி என்பன போன்ற எறும்புகள் தொடர்பான புதிய சிந்தனைகளுக்கு வித்திட்டன. இத்தகைய ஆய்வுப்பாதையில் முன்னோடியாக விளங்கியவர் ஈ. ஓ. வில்சன் என்பவர். சமூக உயிரியல் எனப்படும் துறையை நிறுவியவரும் இவரே.

மேற்கண்ட ஆய்வாளர்கள் எறும்புகளைப் பற்றி ஆராய்ந்து, இந்தப் பிரபஞ்சத்தில் ஒழுங்கான, கட்டுக்கோப்பான, தலைமைக்கு கீழ்படியும் மிகப் பெரிய சமுதாய வாழ்வை கொண்ட உயிரினமாக கருதப்பட்டது.

ஆகையால்....

ஜெர்மானிய நாட்டின் 1880 ஆம் ஆண்டின் சட்டப்படி Formica rufa எனும் தரிசு நில எறும்பை தீயிட்டோ அல்லது பூச்சிக்கொல்லி மருந்திட்டோ கொல்பவர்களுக்கு ஒரு மாதச் சிறை தண்டனையோ அல்லது 100 மார்க் பண

அபராதமோ விதிக்கப்படும். மேலும் எறும்புக் குடியிருப்புக்கு தொந்தரவு செய்தவர்களுக்கும் இந்த தண்டனை பொருந்தும் என்ற சட்டம் நிறைவேற்றப்பட்டது .

19- ஆம் நூற்றாண்டில் எறும்புக்கு ஆதாரவாக இச்சட்டம் ஏற்றியதை ஏந்தல் நபி (ஸல்) அவர்கள் 6-ஆம் நூற்றாண்டிற்கு முன்னமே எறும்புக்கு ஆதரவுக் கரம் நீட்டியதாக நபிமொழி ஒன்று தெரிவிக்கிறது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இறைத் தூதர்களில் ஒருவர் ஒரு (பயணத்தில்) மரத்தின் கீழே தங்கினார். அவரை எறும்பு ஒன்று கடித்துவிட்டது. உடனே, அவர் தம் (பயண) மூட்டை முடிச்சுகளை அப்புறப்படுத்தும்படி உத்தரவிட்டார். அவ்வாறே அவை மரத்தின் கீழிருந்து அப்புறப்படுத்தப்பட்டன.

பிறகு எறும்புப் புற்றை எரிக்கும்படி உத்தரவிட்டார். அவ்வாறே அது தீயிட்டு எரிக்கப்பட்டது. அப்போது அல்லாஹ் அவருக்கு, 'உங்களைக் கடித்தது ஒரேயொர் எறும்பல்லவா? (அதற்காக ஓர் எறும்பு கூட்டத்தையே எரிக்கலாமா?)' என்று வஹீ (இறைச்செய்தி) அறிவித்(து அவரைக் கண்டித்)தான்.

ஸஹீஹ் புகாரி : 3319. அத்தியாயம் : 59. படைப்பின் ஆரம்பம்

ரஹ்மத் ராஜகுமாரன்

**பெண்பாலின் நிஜமுகம்**

**(பூச்சிகளின் உலகம் 22)**

பெண் நண்பர் ஒருவர் நேற்று இரவு (9 மணி - 9.20 ) செல்போனில்....

" ர. ரா..நீங்கள் இதுவரை எழுதிய பூச்சிகளின் உலகம் தொடரில் தேனீக்கள் , கரையான்கள் , எறும்புகள் மற்றும் பல ஜீவராசிகள் பெண்ணே தலைமையேற்று, தம் சமுதாயத்தின் சர்வ அதிகாரத்தையும் தம் ஆற்றலால் சமயோகிதமாக நிர்வாகித்து, பெண் இனமே சக்தி இனம்தான் என பூச்சி இனங்கள் கூட நிரூபித்திருக்கிறது சரிதானே ர. ரா ? இதற்கு ஆதாரமாக இறைவனே தன் குர்ஆனில் "பெண் எறும்பு" என்று பெண் பாலினத்தை கௌரப்படுத்திவிட்ட குர்ஆன் வசனத்தையும் மேற்கோள் காட்டினார்.

" அவை எறும்புகள் வசிக்கும் ஓர் ஓடையின் சமீபமாக வந்தபொழுது அதிலொரு பெண் எறும்பு (மற்ற எறும்புகளை நோக்கி) "எறும்புகளே! நீங்கள் உங்கள் வீடுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள். ஸுலைமானும் அவருடைய ராணுவமும் (நீங்கள் இருப்பதை) அறியாது உங்களை(த் தங்கள் கால்களால்) மிதித்துவிட வேண்டாம்" என்று கூறியது.

(அல்குர்ஆன் : 27:18)

...ஆனால் ஆணாதிக்க சமூகத்தில் எங்களுக்கு அந்தமாதிரி முழு ஆட்சி இல்லாவிட்டாலும், கொஞ்சமாவது சுயாட்சி அதிகாரம் தராமல் மறுக்கப்படுகிறது ..... (பேச்சு இன்னும் தொடர்ந்தது)

என் பக்கத்தில் மனைவி ரஹ்மத் இருந்ததால் , 'ஆமா...ஆமா... ' என்று சொல்லிக் கொண்டே இருந்தேன். இருந்தாலும் என் ஆய்வு புத்தி இதை ஒத்துக் கொள்ளவில்லை . கொஞ்ச நாளுக்கு முன் " பெண்பாலின் நிஜமுகம் - by Dr N Shalini என்ற மாதர் குல மாதங்கம் எழுதிய கட்டுரை நினைவுக்கு வரவே, அதை அப்படியே பதிந்துள்ளேன். சகோதரி தாய்க்குலம் என் மீது வருத்தப்படாமல் இருக்க பெண்ணையும் படைத்த இறைபெரியோன் என்னை காப்பானாக ! - ர.ரா

பெண்பாலின் நிஜமுகம்.

by Dr N Shalini ஆனந்த விகடன் தொடர்

உலகெங்கும் இருக்கும் சர்வ ஜீவராசிகளின் பெண் பாலினத்தை கூர்ந்து கவனித்தால் வெட்டவெளிச்சமாக தெரிந்துபோகும் உண்மை, the female of the species is deadlier than the male அதாகப்பட்டது எல்லா உயிரிலும் பெண்பாலே மிக ஆபத்தானது.

காரணம் பெண்பாலுக்கு தான் ஆணைவிட அதிகபட்ச வேட்டுவகுணமும், பிழைக்கும் திறனும் இருக்கிறது. இப்படி இருந்தாகவும் வேண்டும், காரணம், குட்டிகளுக்கு இரை தேடுவதும், அவற்றுக்கு வேட்டையை கற்றுத்தருவதும் பெண்ணின் வேலை தானே....இவள் சிறந்த வேட்டுவச்சியாக இருந்தால் தானே அவள் குட்டிகள் பிழைக்கமுடியும். அதனாலேயே இயற்கை பெண்களை பிறவி வேட்டைகாரிகளாக படைக்கிறது. மனிதர்களிலும் அப்படித்தான், ஆனால் ஒரு சின்ன வித்தியாசம், பிற பெண்பாலினம் நேரடியாக தன் வல்லமையை வெளிபடுத்தும். தனக்கு வேண்டிய பவரை தானே போராடி பெற்றுக்கொள்ளும்.

ஆனால் மனித பெண்கள் தங்கள் பவர் தேவைகளை இப்படி நேரடியாகவோ பகிரங்கமாகவோ தீர்த்துக்கொள்வதில்லை. எல்லாமே மறைமுக தாய்வழி ஆதிக்கமாய்தான்.

காரணம் பிற ஜீவராசி தாய்கள் யாரையும் அண்டிப்பிழைப்பதில்லை, சுயமாக வாழ்கின்றன. ஆனால் மனித தாய்க்கு மட்டும் சமீபத்திய சில காலம் வரை யாரைவாவது, அண்டி பிழைக்க வேண்டிய நிர்பந்தம் இருந்தது, காரணம் நம் சமூக அமைப்பில் எல்லா அதிகாரங்களும் ஆண்களிடமே இருந்தன. அதனால் யாரையாவது ஒரு ஆணை பிடித்து, அவன் மேல் ஒரு ஒட்டுண்ணியாய் வாழ்ந்தாலே ஒழிய இவளுக்கென்று ஒரு வாழ்க்கையே இல்லை என்கிற நிலை தான் மனித பெண்களுக்கு.

ஆக இயற்கையின் விதிப்படி பெண் வேட்கையில் சிறந்தவளாய் இருந்தாக வேண்டும், ஆனால் மனித சமூக அமைப்பில் அவளுடைய வேட்டுவகுணம் வெளியே தெரிந்தால் ஆண்கள் ஆட்சேபிப்பார்கள். இந்த முரண்பாட்டை சரி செய்யவும் பெண்கள் பல வழிகளை வைத்திருந்தார்கள்.

முதல் வழி: மற்ற மிருக பெண்களை போல தானே வேட்டைக்கெல்லாம் போய் நேரத்தை விரயம் செய்யாமல் ஒரு ஆணை தேர்ந்தெடுத்து, அவனுக்கு பதி/புருஷன்/கணவன்/ பிராணநாதா/பிரபோ என்கிற பதவிகளையெல்லாம் கொடுத்து, அவனுக்கு கொம்பு சீவிவிட்டு, (கல்லானாலும் கணவன் , புல்லானாலும் புருஷன் என்று புகழாரம் சூட்டி ) அவனை வேட்டைக்கு அனுப்பி, அவன் மூலமாய் உணவு, ஆதாயம், ஆற்றல் என்று பல வசதிகளை பெற்றுக்கொள்வாள்.

இந்த ஆணும் லொங்கு லொங்கென்று இவளுடைய ஆசைகளை நிறைவேற்ற தன் ஒட்டு மொத்த வாழ்நாளையே அர்பணித்துவிடுவான். தன் பங்கிற்கு இந்த பெண் அவனுடைய மரபணுக்களை மட்டும் பரப்பித்தர தன் கர்பப்பையை பயன்படுத்துவாள். இந்த கொடுக்கல் வாங்கல் மனம் கோணாமல் திருப்தி கரமாய் இருந்தால், எல்லாம் ஒகே. ஏதோ காரணத்திற்க்காக, இந்த பெண் எதிர்பார்த்த அளவுக்கு இந்த ஆண் வேட்டையாடி வெற்றியை குவிக்கவில்லை என்றால் அடுத்து அந்த பெண் என்ன செய்வாள் தெரியுமா?

2) முன்பு தேர்ந்தெடுத்த ஆணை கழற்றிவிட்டு, இன்னொரு புதிய ஆணை அந்த பதவிக்கு உயர்த்திவிடுவாள். இப்படி பகிரங்கமாக இன்னொரு ஆணுடன் கூட தைரியம் இல்லாத பெண் என்ன செய்வாள்?

3) கள்ளத்தனமாக, ரகசியமாக வேறொரு ஆணுடன் கூடி, அவன் மூலமாய் தன் காரியங்களை சாதித்துக்கொள்வாள்.

4) இப்படி பகிரங்கமாகவோ, ரகசியமாகவோ தன் தேவைகளை தீர்த்துக்கொள்ள வாய்ப்புகள் அமையாத பெண் என்ன செய்வாள்? தன் மகனை வைத்தே தன் எல்லா nonsexual தேவைகளையும் தீர்த்துக்கொள்வாள். பல இந்திய குடும்பங்களின் நிலை இது தான்.

"இந்த மனிஷனை கட்டிக்கிட்டு நான் என்ன சுகத்தை கண்டேன்? இந்த ஆள் சுத்த வேஸ்ட்! நீயும் அப்படி இருந்துடாதேடா, அம்மா உன்னை நம்பிதான் இருக்கேன், என் பிள்ளை தான் என்னை கரைசேர்க்கணும்" என்று புலம்பி, அழுதுவைத்தால் போதும். என்னமோ உலகத்தில் இவனுக்கு மட்டும்தான் தாய்பாசம் பொத்துக்கொண்டு வந்துவிட்டது போல உடனே பையன் அம்மாவை "சந்தோஷமா வெச்சிக்கணும்" என்று சந்தனமாய் இழைய ஆரம்பித்துவிடுவான்.

” அம்மா கஷ்டப்படும் போது, நான் மட்டும் எப்படி என் பொண்டாட்டியோடு தனியா ஹனிமூன் போறது” என்று அங்கேயும் அம்மாவை மடியில் கட்டிக்கொண்டு போன மடசாம்பிராணிகள் நம்ம ஊரில் இருக்கிறார்கள்! இந்த ஆடவர் குல திலங்களுக்கு தெரிவதே தெரியாது, இவர்கள் இப்படி அரும்பாடுபட்டு வீடு, வசதி, புடவை, நகை, உணவு, ஊருலா என்று ஆற்றுவதெல்லாம் ஒரு மகன் தன் தாய்க்கு செலுத்தும் நன்றியை அல்ல, ஒரு கணவன் கொண்டவளுக்கு செய்யும் கடமையை என்று.

இப்படி தன் ஆண்குழந்தையை கணவன் ஸ்தானத்திற்கு உயர்த்தி அவன் மூலமாய் தன் பவர் தேவைகளை தீர்த்துக்கொள்ளும் பெண்கள் இந்தியாவில் ஏராளம். காரணம், மறுமணம் செய்துக்கொள்ளும் சுதந்திரமோ, கள்ள உறவு வைத்துக்கொள்ளும் தைரியமோ, நம்மூர் பெண்களுக்கு பெரும்பாலும் இருப்பதில்லை. அதனால் தங்கள் மகனை வைத்தே தங்கள் ஆட்டத்தை ஆடிமுடிக்க பார்க்கிறார்கள்.

5) சரி மகனே பிறக்கவில்லை, அல்லது பிறந்ததும் உதவாக்கரையாகிவிட்டதென்றால், அடுத்து அந்த தாய் என்ன செய்வாள்? தனக்கு பிறந்த மகளையே ஒரு மகன் மாதிரி வளர்த்து, அந்த பெண்ணை “the man of the family” என்கிற அந்தஸ்த்துக்கு உயர்த்தி, ஒட்டுண்ணி மாதிரி அந்த மகளை உறிந்து வாழ்வாள் தாய்.

6) இந்த எந்த வழியும் வேலை செய்யவில்லை, என்றால் கடைசி கட்டத்தில் பெண்ணே கோதாவில் குதித்து சுயமாய் போராட ஆரம்பித்துவிடுவாள். ஜான்சி ராணி மாதிரியும், கித்தூர் செங்கமா மாதிரியும். தங்கள் ஆக்ரோஷத்தை வெளிபடுத்தி பவர் தேவையை தானே சுயமாய் பூர்த்திசெய்துக்கொள்ளும் பெண்களை, கண்டு வியப்போம் அல்லது, ”சே, பொம்பளையா அடக்கமா இருக்கானு பார்றேன்” என்று மிக துச்சமாய் விமர்ச்சிப்போம்.

ஆனால் பால் வடியும் முகத்திற்கு பின்னால் அம்மா செண்டிமெண்ட் எனும் பிரம அஸ்திரத்தை தனக்கு சாதகமாய் பயன்படுத்தும் பெண்களை பார்த்தால், கை எடுத்து கும்பிடுவோம்.......அந்த அளவுக்கு கைதேர்ந்த வித்தகி பெண் என்று புரியாமலேயே.

இதில் பெரிய வேடிக்கை என்ன தெரியுமா? பெண்கள் எல்லா காலத்திலும் இந்த ஆறு வழிகளையும் பயன்படுத்திக்கொண்டே தான் இருக்கிறார்கள், தங்கள் ஆதிக்க ஆசைகளை தீர்த்துக்கொள்ள. ஆனால் நம் கண் முன்னாலேயே இது நடந்துக்கொண்டே இருந்தாலும் நமக்கு இது உரைப்பதே இல்லை. அதுவும் இந்த ஆட்டத்தை ஆடுவது நம் அம்மா என்றால் நம்மால் அதை உணரவே முடிவதில்லை.....லேசாய் பொறி தட்டினாலும் ”சே.. சே.. எங்கமா அப்படி இல்லப்பா” என்று நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம்.

by Dr N Shalini ஆனந்த விகடன் தொடர் பதிவிலிருந்து …

ரஹ்மத் ராஜகுமாரன் .

**பூச்சிகளின் உலகம் 23**

(பேன்)



பேன்கள் (**Phthiraptera, ஆங்கிலம்: Lice அல்லது fly babies)** எள்ளின் அளவு உள்ள ஒரு ஒட்டுண்ணியாகும். இதில் பழுப்பு நிறப் பேன்களும், கருமையான பேன்களும் அடங்கும். இவை உயிர் வாழ்வதற்காக ஒரு சிறு துளி இரத்தத்தையே மனிதனிலிருந்து உறிஞ்ச வேண்டியிருக்கும். இவை பெரும்பாலும் தலையின் பிடறிப் பகுதி, மற்றும் காதோரங்களிலும் உள்ள முடியில் முட்டை(ஈர்) இடும்.

தலையோடு தலை முட்டும் நெருக்கமான உறவுகளின் போது இலகுவில் ஒருவரிலிருந்து மற்றவருக்குத் தொற்றும்.ஆயினும் சீப்பு, தொப்பி, தலையணை போன்றவற்றிலும் பரவலாம், பேன்கள் பறக்கவோ தத்தவோ முடியாதவை. ஊர்ந்தே செல்பவை.

புற ஒட்டுண்ணி வகையைச் சேர்ந்த பேன்கள் இரண்டு வகையாக உள்ளன. மனிதனின் தலையில் வாழும் பேன்கள் தலைப் பேன் எனப்படுகிறது. இன்னொன்று உடைகளின் மடிப்புகளில் வசிக்கின்றன. இவை சீலைப்பேன் எனப்படுகிறது.

பேன்கள் மிக விரைவாக இனப்பெருக்கம் செய்யக் கூடியவை. ஒரு மாதத்தில் ஒரு பெண் பேன் முந்நூறு குஞ்சுகளை உற்பத்தி செய்துவிடக் கூடியவை. இவற்றின் கால்களில் உள்ள உகிர்களால் இறுகப் பற்றிக் கொள்ளக் கூடியது. இதனால் பேன்கள் தலை மயிர்களையும், உடைகளின் துணிகளையும் இறுக்கமாகப் பற்றிக் கொள்கின்றன.

பேன்களின் உறிஞ்சு குழல்கள் முனையில் சிறு கொக்கிகள் இருக்கின்றன. இதன் மூலம் மனிதனின் இரத்தத்தை உறிஞ்சுவதற்கு மனிதனின் தோலுடன் ஒட்டிக் கொள்கிறது. பேன்களுக்கு இறகுகள் எதுவுமில்லை.

மூஸா (அலை) அவர்களின் ஓரிறைக் கொள்கைப் பிரச்சாரம் தொடர்ந்தது. மூஸா (அலை) சொன்னதை அவருடைய சமூகத்தாரின் சந்ததியினர் சிலரைத் தவிர வேறு யாரும் நம்பிக்கை கொள்ளவில்லை. ஏனெனில், ஃபிர்அவ்னும் அவனுடைய பிரமுகர்களும் அவர்களைத் துன்புறுத்துவார்களே என்ற பயத்தின் காரணமாக இருந்தது.மேலும் பனூ இஸ்ராயீலர்களை அடிமைகளாக துன்புறுத்தினர்

மூஸா (அலை) அவர்களும், ஹாரூன் (அலை) அவர்களும் இறைவனின் கட்டளையின்படி வீட்டையே பள்ளிவாசல்களாக மாற்றி தொழுதார்கள். உலக வாழ்க்கை சுகங்களான செல்வங்களும் ஆடம்பரங்களும் ஃபிர்அவ்னுக்கும் அவனுடைய கூட்டத்தாருக்கும் இல்லாமல் போய், வேதனைகளை சுவைத்தால்தான் அவர்கள் இறைநம்பிக்கை கொள்வார்கள் என்று மூஸா மற்றும் ஹாரூன் (அலை) இறைவனிடம் பிரார்த்தித்தார்கள்.

இறைவன் அவர்களின் பிரார்த்தனைகளை ஏற்றுக் கொண்டு ஃபிர்அவ்ன் கூட்டத்தினர்களின் விளைச்சலில் பிரச்சனையை ஏற்படுத்தினான். இருப்பினும் அவர்கள் திருந்தவில்லை. அவர்கள் அது இறைவன் தந்த சோதனையாக எண்ணவில்லை, மூஸா (அலை) அவர்களின் சூனியத்தின் சூழ்ச்சியாக எண்ணினார்கள்.

கனமழையைப் பொழிந்து நைல் நதியின் நீர் மட்டத்தை உயர்த்தி வெள்ளப்பெருக்கு ஏற்படுத்தி எல்லாவற்றையும் அழித்தான் இறைவன். ஆனால் பனூ இஸ்ராயீலர்களின் பகுதியில் எந்தச் சேதமுமில்லை.

உடனே ஃபிர்அவ்னின் கூட்டத்தினர் மூஸா (அலை) அவர்களிடம் தங்களுக்காகப் பிரார்த்திக்கும்படியும், ஆபத்து நீங்கிவிட்டால் நிச்சயமாக அல்லாஹ்வின் மீது நம்பிக்கைக் கொள்வதாகவும் பனூ இஸ்ராயீலர்களை அவருடன் அனுப்பி வைப்பதாகவும் வாக்குறுதி அளித்தனர்.

அவர்களை நம்பிய மூஸா (அலை) அவர்களுக்காக இறைவனிடம் பிரார்த்தித்து, கனமழையை நிறுத்தி மக்களின் வாழ்க்கையை இயல்பு நிலைக்கு மாற்றினார்கள். ஆனாலும் அவர்கள் தம் வாக்குறுதியை நிறைவேற்றவில்லை.

அடுத்த சோதனையாக பெரும் படையாக வெட்டுக்கிளியை இறைவன் அனுப்பினான். அந்த வெட்டுக்கிளிகள் வீட்டுத் தூண்களையும் அரித்து வீடு இடிந்து விழுவதும், விளைச்சல்களை நாசமாக்குவதுமாக இருப்பதைக் கண்ட மக்கள் பீதியடைந்தனர்

மறுபடியும் மூஸா (அலை) அவர்களிடம் வந்து, இறைவனிடம் பிரார்த்திக்கும்படியும், இம்முறை வாக்கு மாறாமல் ஓரிறைக் கொள்கையை ஏற்பதாகவும் சொன்னதை நம்பி, மறுபடியும் மூஸா (அலை) அவர்களுக்காகப் பிரார்த்தித்தார்கள். வெட்டுக்கிளிகள் வந்த வழியே மறைந்தன. ஃபிர்அவ்ன் கூட்டத்தினரின் வாக்குறுதிகளும் மறைந்து போயின.

இன்னும் கொஞ்சம் காலம் சென்ற பிறகு இறைவன் பேன்களின் மூலம் நம்பிக்கையற்றக் கூட்டத்தாருக்கு வேதனையைத் தந்தான். எல்லா பக்கங்களிலும் பேன்கள் வழிந்து இயல்பு வாழ்க்கையை நாசமாக்கியது. சாப்பிட வாய் திறந்தாலும் வாய்க்குள் போனது. தூங்கவிடாமல் தொந்தரவு தந்தது.

فَاَرْسَلْنَا عَلَيْهِمُ الطُّوْفَانَ وَالْجَـرَادَ وَالْقُمَّلَ وَالضَّفَادِعَ وَالدَّمَ اٰيٰتٍ مُّفَصَّلٰتٍ فَاسْتَكْبَرُوْا وَكَانُوْا قَوْمًا مُّجْرِمِيْنَ

ஆகவே, அவர்கள் மீது (மழையுடன் கூடிய) புயல் காற்று, வெட்டுக்கிளி, பேன், தவளை, இரத்தம் ஆகிய தெளிவான இவ்வத்தாட்சிகளை (ஒன்றன் பின் ஒன்றாக) நாம் அனுப்பி வைத்தோம். (இதன்) பின்னரும் அவர்கள் கர்வம்கொண்டு குற்றம் செய்யும் மக்களாகவே இருந்தார்கள். (குர்ஆன் : 7:133)

மறுபடியும் ஃபிர்அவ்னின் சமூகத்தார் மூஸா (அலை) அவர்களிடம் மன்னிப்புக் கேட்டு, தங்களுக்காக பிரார்த்திக்கும்படி கெஞ்சினார்கள். அல்லாஹ்வை நம்புவதாகவும், பனூ இஸ்ராயீலர்களை உடனே அனுப்பிவிடுவதாகவும் சொன்னார்கள்.

எத்தனை முறை ஏமாற்றப்பட்டாலும் மூஸா (அலை) அவர்கள் மக்களின் கெஞ்சலுக்குச் செவிசாய்த்தார்கள்.

இம்முறை மக்கள் மூஸா (அலை) அவர்களை ஏமாற்றினார்களா, அல்லது ஃபிர்அவ்னை எதிர்த்து மக்கள் மனம் மாறினார்களா!?

அவர்களின் இருதயம் பூட்டப்பட்டதாக முத்திரையிடப்பட்டதாக இருப்பின், அவர்கள் 9 இறை அத்தாட்சிகளின் அதிசயங்களைக் கண்களால் பார்த்தும் நம்பிக்கை கொள்ளவில்லை .

"நிச்சயமாக நாம் மூஸாவுக்குத் தெளிவான ஒன்பது அத்தாட்சிகளை கொடுத்திருந்தோம்; அவர் அவர்களிடம் (அவற்றைக் கொண்டு) வந்தபோது (என்ன நடந்தது என்று) பனீ இஸ்ராயீல்களிடம் (நபியே!) நீர் கேளும்."

(அல்குர் ஆன்- 17: 101)

இறுதியாக செங்கடலை பிளந்து நபி மூஸா (அலை) வெளியேற, பிர்அவ்னும் அவன் கூட்டத்தாரும் செங்கடலில் சிக்கி மாண்டனர் .

(வெட்டுக்கிளி, பேன் போன்றவற்றை Ramesses எகிப்து கோவில் சுவற்றில் செதுக்கப்பட்டிருக்கிறது)

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 24**

(குளவி)

குளவியினங்களின் அதிசய கூடமைப்பு முறையும், அற்புத இனப்பெருக்க முறையும்

ஓநாய்த்தேனீ அல்லது ஓநாய்க்குளவி(Bee Wolf - Philanthus triangulum பொதுப்பெயர் Thread-waisted wasps) என்றழைக்கப்படும் இந்த வகையான குளவிகள், சிறிய வகை தேனீக்கள் மற்றும் பூச்சிகளை உணவாக வேட்டையாடி உட்கொள்ளுகிறது.

இவற்றின் பெண் இனங்கள், காணொளியில் உள்ளது போல் மண்ணிலே குழிதோண்டி தனது கூட்டை அமைத்துக் கொள்ளுகிறது.

குயவன் குளவி வகைகள் முட்டையிடும் காலம் வந்ததும் குளவியானது முதலில் தன் கூட்டுக்கான சரியான மண்ணைத் தேர்ந்தெடுத்து, சரியான ஈரபதத்தில் அப்படியே தனது வாயில் முடிந்தமட்டும் சேகரித்துக்கொண்டு வந்து பானைபோல குறுகிய கழுத்துப்பகுதியும், அகன்ற வயிற்றுப்பகுதியும், வளைந்த வாய்ப்பகுதியுமாக கூட்டை கட்டிமுடிக்கிறது.

மண்ணில் ஈரப்பதம் குறைவாக இருந்தால் தன் வாயினாலே தண்ணீரை மொண்டுவந்து, அதனுடன் தன் ஒட்டும் தன்மையுள்ள எச்சிலையும் சேர்த்து மண்ணை சரியான பதத்திற்கு கொண்டு வந்து கூடமைக்கிறது.

இப்படியாக இவை விதவிதமாக கூடமைப்பதே தம் முட்டைகளை இடவும் , மேலும் தம் இளம் தலைமுறையின் பாதுகாப்புக்காகவும்தான். அடுத்த பிறக்கப்போகும் தன் குஞ்சுகளுக்காக உணவு சேமித்து வைக்க குறிப்பிட்ட வகைச்செடிகளைத்தேடி அலைகிறது.

பின் தான் தேடிவந்த புழுக்கள், கரப்பான்பூச்சிகள், வெட்டுக்கிளி கிடைத்தவுடன் அப்படியே அவற்றை குளவி தன் விஷகொடுக்கால் கொட்டியுடன் இரையானது மயக்கநிலையில் இருக்கும்,

பின்னர் அவற்றை தூக்கியபடியே வானில் பறந்து தன் கூட்டிற்கு எடுத்துச்சென்று அந்த இரையின் மீது தங்களுடைய முட்டைகளை இடும். முட்டைகளில் இருந்து வெளிவரும் லார்வாக்கள் அப்புழுக்களையே உண்டு வளர்கின்றன.

குளவிகள் பூக்களில் உள்ள தேனை உண்டு வாழ்ந்தாலும், அவற்றின் லார்வாக்கள் பிழைப்பதற்கு புழுக்கள் தேவை. அந்த புழுக்கள் வாழ குறிப்பிட்ட வகை புதர்ச்செடிகளும், அந்த புழுக்களின் தாயான வண்ணத்துப்பூச்சிகளும் தேவை.

குளவிகள் இல்லையென்றால் வண்ணத்துப்பூச்சிகளின் புழுக்கள் கட்டுப்பாடின்றி பெருகி தாம் சார்ந்திருக்கும் தாவரங்களை அழித்து தாமும் அழிந்துபோகும். இவற்றில் ஒன்று குறைந்தாலும் இன்னொன்று இல்லை.

இறைவன் படைத்த உணவு சங்கிலியின் அற்புதத்தில் அவனின் அத்தாட்சி வெளிப்படுகிறது !

குளவியினங்கள் வெட்டுக்கிளிகளைக் கொன்று அதன் உடலில் முட்டைகளை வைக்கின்றன. குளவியின் லார்வாக்கள் வெளிவந்ததும் வெட்டுக்கிளிகளை உண்டு வளர்கிறது.

உயிருடன் உள்ள கரப்பான் பூச்சிகளின் முதுகிலும் முட்டைகளை வைக்கின்றன. முட்டைகள் பொரித்து குளவியின் புழுநிலை வடிவம் பெற்றதும், கரப்பான் பூச்சியை தின்று வளர்கிறது.

فَلْيَنْظُرِ الْاِنْسَانُ اِلٰى طَعَامِهٖۤ

மனிதன் தன்னுடைய உணவை (அது எங்கிருந்து எவ்வாறு வருகின்றது என்பதைச்) சிறிது கவனித்துப் பார்க்கவும்.

(அல்குர்ஆன்: 80:24)

وَكَاَيِّنْ مِّنْ دَآبَّةٍ لَّا تَحْمِلُ رِزْقَهَا اللّٰهُ يَرْزُقُهَا وَاِيَّاكُمْ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ

உயிர்வாழும் பிராணிகளில் எத்தனையோ இருக்கின்றன. அவை தங்கள் உணவைச் சுமந்து திரிவதில்லை. அவற்றிற்கும் உங்களுக்கும் அல்லாஹ்தான் உணவளிக்கிறான். (இவ்வாறிருக்க அதற்காக நீங்கள் ஏன் அதிகக் கவலைப்பட வேண்டும்.) அவனோ (அனைத்தையும்) செவியுறுபவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.

(அல்குர்ஆன்: 29:60)

இதுதான் இயற்கையில் குளவிகளின் உன்னதமான வாழ்க்கையின் அற்புதங்கள் .

காணொளியைக்காண

https://youtu.be/R2eyeYFHvjk

**பூச்சிகளின் உலகம் 25**

(பூச்சிகளின் மொழி)




(ஸுலைமான் மனிதர்களை நோக்கி) "மனிதர்களே! எங்களுக்குப் பறவைகளின் மொழி கற்பிக்கப்பட்டிருக்கிறது. (அல்குர்ஆன் : 27:16)

பறவைகளின் மொழி மட்டும் அல்லாமல் நபி சுலைமான் (அலை) அவர்களுக்கு பூச்சிகளின் மொழிகளும் தெரியும் என்பதற்கு ஆதாரமாக ...

“எறும்புகளே! நீங்கள் உங்கள் புற்றுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள்; ஸுலைமானும் அவருடைய சேனைகளும், அவர்கள் அறியாதிருக்கும் நிலையில் உங்களை நசுக்கி விடாதிருக்கும் பொருட்டு (அவ்வாறு செய்யுங்கள்)” என்று பெண் எறும்பு கூறிற்று. அப்போது அதன் சொல்லைக் கேட்டு, அவர் புன்னகை கொண்டு சிரித்தார். (அல்குர்ஆன் : 27:17,18)

நபி (ஸல்) அவர்களுக்கு இறைவன் குர்ஆன் வேதம் மணியடிப்பது போலவும், தேனீ ரீங்கார மொழியிலும் இறக்கியருளப்பட்டதுள்ளது.

எறும்புகளின் காதல் மொழிகள், அந்துப் பூச்சிகளின் ஆக்ரோஷ உரையாடல்கள், வண்ணத்துப் பூச்சிகளின் கட்டளைகள் ஆகியவற்றைக் நீங்கள் கேட்டிருக்கிறீர்களா?

இதெல்லாம் எப்படிச் சாத்தியமென்று நீங்கள் கேட்பது புரிகிறது. பொதுவாக இந்த வகைப் பூச்சிகளின் ஓசை மனிதக் காதுகளுக்கு எட்டாத அளவிற்குக் குறைந்த டெசிபலில் இருக்கும். எனவே இவற்றின் மொழி பரிமாற்றத்தை நம்மால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

பிரான்ஸ் தேசிய வேளாண் பொருளியல் ஆராய்ச்சி நிறுவனத்தைச் சேர்ந்த ஆண்ட்ரியோ மற்றும் டுமாடியே என்ற ஆராய்ச்சியாளர்கள் மிக நுட்பமான ஒலிப்பதிவுக் கருவிகளைப் பயன்படுத்தி, 50 பூச்சிகளின் ஒலி அலைகளை சி.டிகளில் பதிவு செய்துள்ளனர்.

இவை ஒரு இசை நாடகத்தைக் கேட்பது போலிருக்கும்.இந்த இசைத் தட்டுகளுடன் 200 பக்க விளக்கக் குறிப்பும், கூடவே வண்ணப்படங்களும் இணைப்பாக வெளியிடப்பட்டுள்ளன.

பிரான்ஸ் நாட்டில் பூச்சிகளின் இந்த காதல் கீதங்களுக்குப் பெரும் வரவேற்பு உள்ளதாம். எறும்பு “ஐ லவ் யூ’ சொல்வதும், அரக்குப் பூச்சி ஜொள்ளு விடுவதும், வண்ணத்துப்பூச்சி காதல் பாடலை ஆடி பாடுவதும் மனிதர்களுக்கும் சந்தோஷமான விஷயங்கள்தானே!

நவீன கால ஆராய்ச்சியாளர்கள் பூச்சிகள் இரசாயன மொழிகளிலும் உரையாடுகின்றன என்பதை கண்டுள்ளனர்.

பூச்சிகளின் உடலிலிருந்து " பெரமோன்கள் " என்னும் மணம் தரும் பொருள் தோன்றுகிறது. இப்பொருள் தரும் மணத்தின் மூலம் அவை ஒன்றோடு ஒன்று தகவல்களை பரிமாறிக் கொள்கின்றன. காதல் சமிக்ஞைகளைச் செய்து கொள்கின்றன. இவ்வாறு அது ஒரு இரசாயன மொழியாகவே பயன்படுகிறது.

உயிரியல் தொடர்புள்ள பல்துறை அறிஞர்கள் இந்த இரசாயன மொழியை புரிந்துகொள்ள பலவித ஆராய்ச்சிகளை நடத்தி வருகிறார்கள்.

பெரமோன் இரசாயனங்களில் நூற்றுக்கும் மேற்பட்ட வகைகள் அடையாளம் காணப்பட்டுள்ளன. பூச்சிகள் இம்மொழிக்கு மிகவும் கட்டுப்பட்டு நடக்கின்றன. மணத்தின் மூலம் வரும் ஆணைகளை அவை மீறுவதே இல்லை.

இத்தகைய இரசாயன சமிக்ஞைகள் பல கிலோ மீட்டர் தூரத்திற்கு கூட பரவும். ஒரு கன சென்டிமீட்டர் காற்றில் 10 மூலக்கூறுகள் என்கிற அளவுக்கு மிக குறைவாக இருந்தால், கூட பூச்சிகளால் இம்மணத்தினை மோப்பம் பிடித்து அதன் படி செயலாற்ற முடியும்.

வண்ணத்துப்பூச்சிகள், விட்டில்கள், சிலந்திகள், தட்டான் பூச்சிகள், எறும்புகள், சில வகை வண்டுகள் ,கொசுக்கள் ஆகியவை பெரமோன் மணத்தின் மூலம் காதலர்களுக்கு செய்தி அனுப்புதல், ஆபத்துகளைப் பற்றி எச்சரித்தல், உணவு இருக்கும் இடத்தை அறிவித்தல் போன்ற பல தகவல்களை பரிமாறிக் கொள்கின்றன .ஒரு குறிப்பிட்ட மணம் நுகரப்பட்டவுடன் உடனடியாகப் பூச்சிகள் விரைந்து செயலாற்றி அம்மணத்தின் ஆணைப்படி நடக்கின்றன.

இக்குணத்தைப் பயன்படுத்தி பூச்சிகளை செயற்கையான பெரமோன் மணம் அனுப்புவதன் மூலம் தீங்கு செய்யும் பூச்சிகளை கொல்ல முடியுமா என்று அறிவியல் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள்.

தீங்கு செய்யும் பூச்சிகளைக் கவரும் ஒரு வகை பெரமோன் மணம் தரும் பொருளைப் பொறிக்குள் வைத்துவிட்டால், எல்லா பூச்சிகளும் அம் மணத்தினை உணர்ந்து, அங்கு விரைந்து ஓடி வந்து பொறிக்குள் மாட்டிக்கொள்ளும். "வசமா சிக்கிக் கொண்டீர்களா ?"

பயிர்களைத் தாக்கும் பூச்சிகளை அழிக்க காதல் பெரமோன்களைப் பயன்படுத்தும் முறைகள் ஆராயப்பட்டு வருகின்றன. காதல்வயப்பட்டு விட்ட பூச்சிகளின் நடத்தை மிக எளிதானதே. இதன் மூலம் அவற்றை கவர முடியும்.

'பைன்சா 'என்னும் ஈ இனத்தில் ஒரு பெண் ஏற்படுத்தும் மணத்தை நுகர்ந்து ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட ஆண் ஈக்கள் வந்து குவிந்து விடும்.

' ஜிப்சிமாத்' என்னும் அந்துப்பூச்சி இனத்தில் ஒரு பெண் பத்து லட்சம் ஆண் பூச்சிகளை கவர்ந்து இழுக்கும். இம்முறையில் எல்லா வகை பூச்சிகளையும் நாம் அழித்து விட முடியும்.

பூச்சி மருந்து தெளித்து அழிப்பதை விட இம்முறை மிகவும் சிறந்தது. எப்படி எனில் பூச்சி மருந்து தெளிப்பதன் மூலம் தேனீ போன்ற பல நன்மை செய்யும் பூச்சிகளும் அழிந்து விடும்.அது மட்டுமல்லாது பூச்சியினங்கள்

நாளாவட்டத்தில் பூச்சி மருந்துகளுக்கு பழகி அவற்றை எதிர்ப்பு சக்தியினை தங்களது உடலிலேயே பெற்று விடுவதுண்டு . பின் பூச்சி மருந்துகள் இவற்றை ஒன்றும் செய்ய முடியாது.

ஆனால் காதல் பெரமோன்களால் பூச்சிகள் தூண்டப்படாமல் இருக்கவே முடியாது. காதல் உணர்ச்சிபூர்வமானது .அது பூச்சிகளுக்கும் பொருந்தும். இயற்கை அதை தவிர்க்க அனுமதிக்காது.

உலகின் மொத்த விளைச்சலில் ஐந்தில் ஒரு பங்கு பூச்சிகளே அழித்து விடுகின்றன என்ற நிலையில் பூச்சிகளை ஒழிக்கும் இம்முறை மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றது.

ஆணாளப்பட்ட மனிதர்களே மனுஷிகள் பேசும் காதல் மொழியில் தங்களை தாங்களே இழக்கும் போது , பூச்சிகள் எம்மாத்திரம்?

ரஹ்மத் ராஜகுமாரன்

**பூச்சிகளின் உலகம் 26**

(வண்ணத்துப்பூச்சி உடம்பில் ஓவியங்கள் அதிசயம்)



உடலில் வரிவரியாக பளிச்சென்ற வண்ணத்தில் இருக்கும் கம்பளிப் புழு, அதைவிட வனப்புமிக்க வண்ணத்துப்பூச்சியாக மாறுவதற்கு தன்னையே அழித்துக் கொள்கிறது. இந்த 'உருமாற்றம்', இயற்கையில் பொதிந்துள்ள எத்தனையோ ஆர்வத்தைத் தூண்டும் அம்சங்களில் ஒன்று மட்டுமே.

ஒரு வண்ணத்துப்பூச்சிக் கூடு. முட்டையிலிருந்து வெளிவரும் கம்பளிப் புழு, உணவாகக் கொள்ளும் தாவர இலைகளின் அடிப்புறத்தில்தான் வண்ணத்துப்பூச்சிகள் சாதாரணமாக முட்டையிடும்.

சாதாரணமாக வண்ணத்துப்பூச்சிகள் இடும் முட்டைகள், நிலவும் வெப்பத்தைப் பொருத்து 3 முதல் 12 நாட்களில் பொரிந்துவிடும். பிறகு, அதிலிருந்து உருவாகும் வண்ணமயமான முதல்நிலைப் புழு, தாவர இலைகளை வட்டவட்டமாகக் கடித்து உண்ணும்.

இருவாரங்கள் இலைகளை உண்ட பின், 2 அங்குல நீளமுள்ள கொழுகொழு கம்பளி புழுவாக அது வளர்ந்துவிடும். இந்த வண்ணமயமான கம்பளிப்புழுவின் பின் பாகத்தில், இரண்டு கொக்கிகள் போன்ற பகுதி இருக்கும். இதன்மூலம் வசதியான ஓர் இலையின் அடிப்புறம் ஒட்டிக்கொண்டு, கம்பளிப் புழு தலைகீழாக தொங்க ஆரம்பிக்கும்.

அதன் பிறகுதான் ஆரம்பிக்கிறது ரொம்ப முக்கியமான பகுதி. கம்பளிப்புழு உருமாற்றத்தின் முக்கிய கட்டத்தை எட்டப் போகிறது. தன்னையே அழித்துக் கொள்ளப்போகிறது. தன் தோலை சிறிதுசிறிதாக இழந்து கூட்டுப்புழுவாக மாறும். இந்த உருமாற்றம் சில மணி நேரங்களில் நடந்துவிடும்.

கவிழ்ந்த பூஞ்சாடி போன்ற இந்த கூட்டுப்புழுவைச் சுற்றி, மெழுகுபடலம் போன்ற மெல்லிய தோல் இருக்கும். நாளாகநாளாக, இந்த தோல் கண்ணாடி போல வெளிப்படையாகி, உள்ளிருப்பது தெளிவாகத் தெரிய ஆரம்பிக்கும்.

இரு வாரங்களில் இந்த கூட்டுப்புழு அழகான வண்ணத்துப் பூச்சியாக மாறிவிடும். அதன்பிறகு கூட்டின் தோல் பகுதியை கிழித்து வெளிவரும்.

தன் வயிற்றுப்பகுதியில் உள்ள ரத்தத்தின் மூலம் சத்தைப் பெறும் வண்ணத்துப்பூச்சி, இறக்கைகளை மெதுமெதுவாக விரிக்கும். உடலிலுள்ள கூடுதல் திரவப் பொருட்களை வெளியேற்றும். தன் இறக்கைகள் காயவும், உறுதியாக மாறவும் காத்திருக்கும். என்னதான் அதன் இறக்கைகள் எடை குறைவாக இருந்தாலும், உடனடியாக பறக்க முடியாது.

முட்டையிட்டது முதல் வண்ணத்துப்பூச்சி பிறக்கும் வரை மொத்த நடைமுறை நடந்து முடிய ஒரு மாதம் ஆகும்.

பட்டாம்பூச்சிகளில் 15,000 முதல் 20,000 வகையான பல்வேறு உள்ளினங்கள் உள்ளன. இவற்றில் மிகப்பெரியதான பட்டாம்பூச்சியானது பப்புவா நியூகினி நாட்டில் காணப்படும் 'குயின் அலெக்ஸாண்டிரா' என்பதாகும். அது தன் இறக்கைகளை விரித்திருக்கும் பொழுது 28 செ.மீ நீளம் இருக்கும்.

அமெரிக்காவில் காணப்படும் மேற்குக் 'குட்டி நீலம்' எனப்படும் பட்டாம்பூச்சி இறக்கையை விரித்திருக்கும் பொழுது 1 செ.மீதான் இருக்கும். பட்டாம்பூச்சியின் இறக்கைகளில் காணப்படும் நிறங்கள் மிகப்பலவாகும். அதில் காணப்படும் நிறவடிவங்களும் கோலங்களும் அழகு வாய்ந்தவை. பட்டாம் பூச்சிகள் உலகில் பெரும்பாலான இடங்களில் வாழ்கின்றன.

வண்ணத்துப் பூச்சிகள் பற்றி ஆய்வுகளை மேற்கொண்டு வரும் பேராசிரியர் ஹர்ஜிந்தர் சிங் ரோஸ். பஞ்சாபி பல்கலைக்கழகத்தின் முன்னாள் உயிரியல் துறையின் தலைவரான இந்த ரோஸ்,

'வண்ணத்துப் பூச்சிகளின் உதவியால் மகரந்தச் சேர்க்கை செய்யும் பூக்கள் மற்றும் பழங்களின் உற்பத்தியில் ஏற்பட்டிருக்கும் வீழ்ச்சியை வைத்துதான், இந்தப் பூச்சியினம் அழிந்து கொண்டிருப்பது கண்டறியப்பட்டுள்ளது. இதுவரை வண்ணத்துப் பூச்சிகளின் எண்ணிக்கை பற்றி நம் நாட்டில் எந்தக் கணக்கெடுப்பும் நடைபெறாததால், அவற்றின் அழிவு குறித்து புள்ளிவிவரமாகக் கூற முடியாது.

சில குறிப்பிட்ட செடிகளின் பூக்களில்தான் வண்ணத்துப் பூச்சிகள் முட்டைகளை இடும். இந்தச் செடிகளின் அழிவும் பூச்சிகளின் அழிவுக்கு ஒரு காரணம். அதோடு புவி வெப்பமயமாதலும் ஒரு காரணமாக இருக்கிறது'' என்று அடுக்கும் ரோஸ்,

''வனவிலங்கு பாதுகாப்புச் சட்டப்படி வண்ணத்துப் பூச்சியும் பாதுகாக்கப்பட்ட இனங்களில் ஒன்று. இதைப் பிடித்து அழிப்பதும், விற்பதும் சட்டப்படி தண்டனைக்குரியது. இந்தச் சட்டத்தில் சிறுத்தை, புலி, யானை போன்ற பெரிய விலங்குகளைப் பற்றி மட்டுமேதான் நாம் சிந்திக்கிறோமே தவிர, இப்படிப்பட்ட பூச்சிகளைக் கண்டுகொள்வதேயில்லை.

அதனால்தான் இங்கிருந்து, வண்ணத்துப் பூச்சி உட்பட பல வகையான பூச்சிகளை வெளிநாடுகளுக்கு கடத்தும் அவலமும் இங்கு நடக்கிறது.

இமயமலைப் பகுதியில் காணப்படும் 'அப்போலோ' வகை வண்ணத்துப் பூச்சி ஒன்று 25,000 ரூபாய் வரை வெளிநாடுகளில் விற்கப்படுகின்றன. இதன் இறக்கைகளை வெட்டி அழகுப் பொருளாக ஜப்பானியர்கள் பயன்படுத்துகிறார்கள். சில ஆண்டுகளுக்கு முன் 14 ஆயிரம் வண்ணத்துப் பூச்சிகளுடன் இமாச்சல பிரதேசத்தில் இரு மங்கோலியர்கள் பிடிபட்டனர்'' என்ற ரோஸ் நிறைவாக,

'பயிர்களின் வளர்ச்சிக்கு உதவும் வண்ணத்துப் பூச்சிகளுக்கு இணையாக ஐந்நூறுக்கும் மேற்பட்ட பூச்சி வகைகள் இந்தியாவில் உள்ளன. இவற்றைப் பற்றி ஆய்வு செய்ய நம் மத்திய அரசு நிதி உதவியும் செய்கிறது. ஆனால், ஆய்வுகள் மேற்கொள்ள உயிரியல் ஆய்வாளர்கள் மற்றும் அறிவியலாளர்கள்தான் போதுமான அளவில் இல்லை.

வெளிநாட்டவர்கள் இங்கிருந்து ரகசியமாக இந்த வகையான பூச்சிகளைப் பிடித்துச் சென்று பல்வேறு வகை ஆய்வுகள் செய்து, அவர்கள் நாட்டில் வெளியிடுகிறார்கள். அவற்றை வளர்ப்பதிலும் கவனம் செலுத்துகிறார்கள்.

வண்ணத்துப்பூச்சியின் வண்ண வண்ண இறக்கை ஓவியம் அழகுப்படுத்த மட்டும் அல்ல , அது இயற்கை சூழ்நிலையின் சில சேதிகளை மார்டன் ஆர்ட் மாதிரி மறைபொருளாக நமக்கு உணர்த்துகிறது என்கிறார்கள் ஆய்வாளர்கள் .

ஆனால், நம் நாட்டில் அவற்றைக் கண்டுகொள்வதுகூட கிடையாது. நாட்டில் விவசாய உற்பத்தியை அதிகரிக்க வேண்டுமென்றால், வண்ணத்துப் பூச்சிகள் மாதிரியான பூச்சிகளையும் பாதுகாக்க வேண்டியது அவசியம்' என்றார்

தொட்டாலே நம் கைகளில் ஒட்டிக் கொள்ளும் வண்ணத்துப் பூச்சியின் இறக்கையில் உள்ள வண்ணங்கள் மழை நீர் பட்டால் கரைந்து விடாதா ... என்ற கேள்வி உங்களுக்கு வரும்

வண்ணத்துப்பூச்சி இறக்கை வண்ணங்கள் பெயிண்ட் அடித்ததல்ல . செதில் செதிலாக இருக்கும் இறக்கைகளின் மேல் லேசாக ஒரு மெழுகு தடவி இருக்கும். மழையில் நனையாமல் இருக்க !

இயற்கையின் அந்த வண்ண கோலங்களை அவற்றை மலர்களாக எண்ணிக்கொண்டு, மற்ற பூச்சிகள் ஏமாந்து போவதற்கும், மற்றும் கவிஞர்கள் ஹைக்கூக்கள் எழுதுவதற்கும் அதன் இறக்கையின் ஓவியங்கள் உள்ளன.

" உதிர்ந்த மலர்

கிளைக்கு திரும்புகிறது....

அடடே.. வண்ணத்துப்பூச்சி! "

_ பாஷோ தமிழில் கவிக்கோ

" பூவுக்குள் ஒளிந்திருக்கும்

கனிக்கூட்டம் அதிசயம்

வண்ணத்துப்பூச்சி உடம்பில்

ஓவியங்கள் அதிசயம் "

- கவிஞர் வைரமுத்து:

இயற்கை எத்தனையோ அதிசயங்களை தன்னுள் பொதிந்து வைத்துள்ளது. அழகு மிகுந்த, நுணுக்கமான இதுபோன்ற வண்ணத்துப்பூச்சியை மனிதனால் உருவாக்க முடியுமா என்ற கேள்வியை, இயற்கை என்றென்றைக்கும் நம்மைப் பார்த்து எழுப்பிக் கொண்டே இருக்கிறது.

صِبْغَةَ اللّٰهِ ۚ وَمَنْ اَحْسَنُ مِنَ اللّٰهِ صِبْغَةً وَّنَحْنُ لَهٗ عٰبِدُوْنَ

“(இதுவே) அல்லாஹ்வின் வர்ணம் (ஞான ஸ்னானம்) ஆகும்; வர்ணம் கொடுப்பதில் அல்லாஹ்வைவிட அழகானவன் யார்? அவனையே நாங்கள் வணங்குகிறோம்” (எனக் கூறுவீர்களாக). (அல்குர்ஆன் : 2:138)

பிரேசில் நாட்டில் ஒருவகை வண்ணத்துப்பூச்சி உள்ளது. இது சாக்லேட் நிறத்தில் காணப்படும். இது பறந்து செல்லும்போது சாக்லேட் வாசனை அடிக்குமாம்!

ரஹ்மத் ராஜகுமாரன்

(பூச்சிகளின் உலகம் தொடர் பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது)

